நவம்பர் ௯ முதல் தமிழ் நாடெங்கும்

குதூகல ஆரம்ப விழா!

லாவண்யா பிக்சர்ஸ்

# பாரிஜாதம்

மஹாலிங்கம் · ராஜம்மா

சரோஜா · கிருஷ்ணன் · மதுரம்

நடித்தது

டைரக்ஷன்

K.S. கோபாலகிருஷ்ணன்

லாவண்யா பிக்சர்ஸ்

எழும்பூர் · சென்னை. 8.







G.H.RAO

January 1950

# இவ்வருஷத்திய மஹோன்னத
## திரைச்சித்திரம்



பக்ஷிராஜாவின்

# ஏழை படும் பாடு

நாகய்யா
லலிதா..பத்மினி
சாமா....பாலையா
துரைராஜ்..ஸீதாராமன்
கோபால கிருஷ்ணன்

டைரக்ஷன்
ராம்நாத்



நாராயணன் கம்பெனி
ரிலீஸ்


அம்பீஸ்
ஊறுகாய்கள்
எங்கும் கிடைக்கும்.
MANGO PICKLE
AMBI'S CAFE
6, BROADWAY, MADRAS.
AMBI'S CAFE,
MADRAS & VELLORE.


என்மேலே கோபித்துக் கொண்டு....
பாத்திரங்களைப் போட்டு ...


உடைக்க ஆரம்பித்து விட்டீர்களே ? ..


நல்ல வேளை !... உங்க கோபத்திற்கு


பயந்து கொண்டுதான் ........ நான்


ஸாம்ஸனிலிருந்து ஸ்டேபிரைட் பாத்திரங்களை வாங்கி வைத்து விட்டேன். அவைகள் உடையவே உடையாது. ஏன் உடம்பை கெடுத்துக் கொள்கிறீர்கள் ?

விலை குறைந்து விட்டது.



குறைந்த விலையில் இரு பிரபல மாடல்கள்

# வாக்ஸால்

வெலாக்ஸ் ரூ 10,600.

வைவர்ன் ரூ 9,650.

பம்பாய் விலை

சுந்தரம் மோட்டார்ஸ் லிமிடெட்,
மௌண்ட் ரோட், சென்னை.

டி. வி. சுந்தரம் அய்யங்கார் அண்டு ஸன்ஸ் லிமிடெட்
மதுரை, திருச்சிராப்பள்ளி, திருநெல்வேலி, புதுக்கோட்டை

1949-ல் இந்திய விற்பனையில் வாக்ஸாலுக்கே மறுபடியும் முதல் ஸ்தானம்.

TVSZ-15TM



# கெம்ப் & கோ., லிட்.

ஸ்தாபிதம் : 1868

## மருந்துகள் தயாரிப்பதில் புகழ்பெற்ற கெமிஸ்டுகள்

பார்மஸூடிகல் ஏஜன்டுகள் & வினியோகஸ்தர்கள்

க்ளுகோஸ்
நார்மல் ஸலேன்
கால்ஸியம் க்ளுகோனேட்
முதலிய
அஸெப்டிக் இஞ்செக்ஷன்
மருந்துகளைத் தயாரிப்பதில்
நிபுணர்கள்

கர, படை களிம்பு
சிக்கன் எஸென்ஸ்
மில்க் ஆப் மக்னீஷியா
க்ரைப் மிக்சர்
முதலிய வீட்டு வைத்திய
மருந்துகளைத் தயாரிப்பதில்
புகழ் பெற்றவர்கள்

கீழ்கண்ட கம்பெனிகளுக்கு ஏஜெண்டுகளும், வினியோகஸ்தர்களும்:

- எலி லில்லி & கோ., ஆப் இந்தியா, யு. எஸ். ஏ.
- வில்லியம் R. வார்னர் & கோ., யு. எஸ். ஏ.
- C. E. புல்போர்டு லிமிடெட், இங்கிலாந்து
- அல்லிடு லாபொரடரீஸ் லிமிடெட், இங்கிலாந்து
- காண்டினென்டல் லாபொரடரீஸ் லிட்., இங்கிலாந்து

மற்றும் பல அகில உலக மருந்து உற்பத்தி ஸ்தாபனங்கள்

இரவு பகல் எந்நேரமும் தொண்டாற்றுகிறோம்



Trade Mark

Kemp & Co. Ltd.

எல்பின் ஹவுஸ், பம்பாய்-28

கல்கத்தா - டெல்லி - மதராஸ்



# தீபாவளி வாழ்த்துக்கள்



உங்களுக்கு வேண்டிய
தருணத்திலும் இடத்திலும்
தவறாத வெளிச்சத்திற்கு

**EVEREADY**
TRADE-MARK

டார்ச் லைட்டுகள், பாட்டரிகள் & பல்புகளையே
நம்புங்கள்

நேஷனல் கார்பன் தயாரிப்புகள்

---

## ஒவ்வொருவரும் விரும்புவது!!








# வி.எஸ். & சன்ஸ்
## பெப்பர் மெண்டுகள்




*தயாரிப்பவர்கள்:*

**தென் இந்தியா பெப்பர்மெண்டு தொழிற்சாலை**
கும்பகோணம் (ESTD. 1925)

# முதல்
# கார்
# முற்றிலும்
# இந்தியாவில்
# தயாராவது



*the new*

# HINDUSTHAN

*built better throughout*

**ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் லிமிடெட்**

கீழ்கண்ட இடங்களில்

உரிமைபெற்ற டீலர்கள் உள்ளனர்:

அலகாபாத்; அம்பாலா; பெங்களூர்; பம்பாய்; கல்கத்தா; கட்டாக்; கட்ச்; திப்ருகார்; இந்தூர்; ஜெய்ப்பூர்; ஜோத்பூர்; ஜாம்ஷெட்பூர்; ஜாரியா; கான்பூர்; லக்னௌ; மதராஸ்; நாக்பூர்; நியூ டெல்லி; பாட்னா; ராஜ்கோட்; ஸெகந்திராபாத் (டெக்கான்); காஷ்மீர்; திருவனந்தபுரம்; நோவா கோவா; ரங்கூன் கொழும்பு

இது இந்தியாவிலேயே முற்றிலும் தயாரிக்கப்படுகின்றது. (பாகங்களை இதர நாடுகளிலிருந்து இறக்குமதி செய்து இங்கு சேர்க்கப்பட்டு தயாரிக்கப்படுவதில்லை). சுதந்திர இந்தியாவில் சுதேசிப் பண்டங்களுக்கே ஆதரவு அளிக்க வேண்டுமென்ற தேசிய அபிமானம் காரணமாக மட்டும் இப் புதிய ஹிந்துஸ்தான் கார்களுக்கு கிராக்கி ஏற்பட்டு விடவில்லை. அதன் மிக உயர் ரக இயந்திர அமைப்பு, மிக்கத் திருப்திகரமான உழைப்பு, நிர்வகிக்கும் செலவில் ஏற்படும் மிச்சம் ஆகிய அம்சங்களே முக்கிய காரணங்களாகும்.

உயர்ந்த ரக பெயிண்ட், சௌகரிய வசதி மற்றும் சகல விதங்களிலும் நவீனமாக நிர்மாணிக்கப்பட்டுள்ள இப் புதிய ஹிந்துஸ்தான் உங்களுக்குப் பரிபூர்ண பாதுகாப்பையும் நீடித்த உழைப்பையும் குறைந்த விலையில் அளிக்கின்றது.

**Rs. 9375/-**
**(EX-PLANT)**

# Index to Advertisers



# சமர்ப்பணம்

‘தமிழ் கூறும் நல்லுலக’த்தின் திருக் கரங்களில் இந்தத் தலை சிறந்த மலரைச் சமர்ப்பித்து விட்டுப் பெருமூச்சு விட எண்ணினோம். தமிழ் கூறும் நல்லுலகத்தைச் சேர்ந்த பெரியோர்கள், தாய்மார்கள், குழந்தைகள் அனைவரும் இந்த மலரைக் கையில் வாங்கியதும், "ஆஹா! அபாரம்!" என்று அத்தாட்சி தருவார்கள் என்பதில் ஐயமில்லை. அளவிலே யாகட்டும், அழகிலே யாகட்டும், மணத்திலே யாகட்டும், கனத்திலேதான் ஆகட்டும் இந்த மலருக்கு இணை ஏது! தேவலோகத்துப் பாரிஜாத மலரும், இந்திரன் விரும்பும் மந்தார மலரும், ஆயிரம் இதழுள்ள அதிசயத் தாமரை மலருந்தான் இதற்கு ஈடாகுமா! இப்படிப் பட்ட நமது "கல்கி" தீபாவளி மலரைத் துணிச்சலுடனே தமிழ் கூறும் நல்லுலகத்துக்குச் சமர்ப்பிக்கலாம் அல்லவா!

‘தமிழ் கூறும் நல்லுலகம்’ என்று தொல்காப்பியனார் சொன்னாரே, அது உண்மையில் மிகப் பொல்லாத உலகம்! தொல்காப்பியர் நாளில் அது வடவேங்கடம் முதல் தென் குமரி வரையிலேதான் பரந்திருந்தது. இப்பொழுதோ அதன் எல்லை வடக்கே புது டில்லியிலிருந்து தெற்கே திரிகோண மலை வரை பரந்திருக்கிறது. இந்த எல்லைக்குட்பட்ட பல இடங்களிலும் தமிழர்கள் வாழ்கிறார்கள். ஆனால் அவர்கள் மிகப் பொல்லாதவர்கள்! கதையாகட்டும், கட்டுரையாகட்டும், காவியமாகட்டும், ஓவியமாகட்டும், சிற்பமாகட்டும், சங்கீதமாகட்டும், — எல்லாம் அவர்களுக்கு மிக்க உயர்தரமாக இருக்க வேண்டும்.

இதை ஆரம்பமுதல் நாம் கண்டறிந்திருப்பதனாலேயே ஆண்டுதோறும் தீபாவளி மலர் வெளியிட்டே தீருவது என்று வைத்துக் கொள்ளவில்லை. வசதிக் குறைவு இருக்கும்போது அந்த வகை முயற்சியும் தொடங்குவதில்லை.

இந்த ஆண்டில் வசதிகள் இருந்தபடியால் வெளியிடத் தீர்மானித்தோம். வேலை முடிந்து கையில் எடுத்துப் பார்த்ததும் "மலர் அபாரம்; இதைத் தமிழ் கூறும் நல்லுலகத்துக்கு அவசியம் சமர்ப்பிக்கலாம்!" என்று தீர்மானித்தோம்.

"யாருக்குச் சமர்ப்பிக்கப் போகிறீர்! நான் ஒருவன் இருக்கிறேன் என்பதை மறந்து விட்டீரோ!" என்ற குரலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தபோது விநாயகப் பெருமான் மூஷிக வாகனத்தில் விரைந்து வந்து கொண்டிருந்தார்.

"விநாயகரே! பருப்பில்லாமல் கல்யாணம் உண்டா! தங்களுக்கு இல்லாத மலரும் உண்டா! தங்களுடைய அருளை முன்னிட்டுக் கொண்டுதானே எந்த முயற்சியையும்........."

"நிறுத்தும் ஆசிரியரே! நான் இப்போது இங்கே விக்ன விநாயகர் என்ற முறையில் வரவில்லை. ‘கல்கி’ பத்திரிகையின் முதல் சந்தாதாரர் என்ற முறையிலாக்கும் வந்திருக்கிறேன். ஆகையால் கையில் உள்ள மலரை இப்படிக் கொடும்!" என்று பிடுங்கிக் கொண்டார்.

மலரின் அட்டைச் சித்திர அழகிலேயே விநாயகர் மூழ்கி மெய் மறந்து விட்டதாக நமக்குத் தோன்றியது. "ஸ்வாமி! மலரை உள்ளே பிரித்துப் பார்ப்பதுதானே!" என்றோம்.

"இந்தப் பெண்களை யெல்லாம் எங்கேயோ பார்த்த ஞாபகமாயிருக்கிறது!" என்றார் பிள்ளையார்.

"பார்க்காமல் என்ன! எல்லாரும் தங்களிடம் ‘நல்ல கணவனை அருள வேண்டும்’ என்று பிரார்த்திக்க வந்திருப்பார்கள். தாங்களும் அப்படி ஆசீர்வதித்திருப்பீர்கள்!"

"நானும் ஒரு பிரம்மசாரிதான் என்பது ஒருவருக்கும் ஞாபகம் இருப்பதில்லை!" என்று விநாயகர் சொல்லிவிட்டு, "இருக்கட்டும்; மலருக்குள் என்னென்ன அம்சங்கள் இருக்கின்றன! நீர்தான் சொல்லுமே!" என்றார்.

"உள்ளே முதல் முதலில், தங்களுடைய தந்தையாகிய நடராஜப் பெருமான் ஆனந்தத் தாண்டவம் செய்கிறார். அவருடைய பொன்மேனியையும், ஆனந்த நடனத்தையும் பார்த்துக் கொண்டே யிருக்கலாம்......"

"பிறகு!"

"தங்கள் மாமாவைக் குறித்துக் கவிமணியின் பாடல் ஒன்று அழகிய சித்திரங்களுடன் வெளியாகிறது. பிறகு, தங்களுடைய பரம பக்தரான ராஜாஜி, மறு பிறவிக் கொள்கையை வைத்துக்கொண்டு, மக்கள் ஒருவரை யொருவர் துவேஷிப்பதன் அறியாமையை அழகாக விளக்கியிருக்கும் கதை வருகிறது. ராஜாஜிக்குப் புது டில்லியில் எத்தனையோ வேலைகள். பட்டேலுக்கும் நேருவுக்கும் சிநேக பந்தத்தை அடிக்கடி நிலை நிறுத்தி நாட்டையே காப்பாற்றி வருகிறார். ஆயினும், தமிழ்ப் பணியையும் கல்கி நேயர்களையும் அவர்கள் மறந்து விடுவதில்லை. பிறகு ரசிகமணி அவர்கள் பாலவனத்தில் இரு காதலர்களை நடக்கவிட்டு, அவர்கள் மனக் கண்ணின் வழியாக ஸ்ரீரங்கத்தைக் காட்டியிருக்கும் அற்புதமான காவியக் கட்டுரை இருக்கிறது. அப்புறம் கட்டுரைகள், கதைகள்,—காதற் கதைகள், சரித்திரக் கதைகள், சமூகக் கதைகள், ஹாஸ்யக் கதைகள், — எல்லாம் வருகின்றன. "குழந்தை வளர்க்காதது எப்படி!" என்பது பற்றிப் ‘பரதன்’ எழுதி யிருக்கிறார். ஆனால், அதைப் பற்றித் தங்களுக்குக் கவலையில்லை! ஆரம்பத்திலிருந்து இறுதிவரையில் ஒரே சித்திரமயமாக அமைந்திருக்கிறது மலர். சித்திர அம்சங்களைப் பற்றி ஒரு விமரிசனம் 60-ம் பக்கத்தில் வெளியாகி யிருக்கிறது. தாங்களே அதைப் படித்துக் கொள்ளலாம்........"

திடீரென்று விநாயகர், "மலர் எங்கே!" என்று கூவினார். அவர் கையிலே யிருந்த மலரைக் காணோம். எங்கே போயிருக்கும்! சுற்றுமுற்றும் பார்த்தார். ஒரு மூலையில் உட்கார்ந்து மூஷிகன் தீபாவளி மலரைப் படித்துக் கொண்டிருந்தான்!

விநாயகர் அதைப் பிடுங்குவதற்காக ஓடினார். மூஷிகனும் ஓடினான். அவர்கள் இருவரும் அவ்வளவு விரைவாக ஓடக் கூடியவர்கள் என்று அது வரையில் நமக்குத் தெரியாது!

* *

இந்தப் புனிதமான தீபாவளி தினத்தில் "கல்கி" நேயர்கள் அனைவருக்கும் மங்களம் கூறுகிறோம். அவர்கள் சகல வித நலன்களையும் அடையவேண்டும் என்று பிரார்த்திக்கிறோம்.





# கடைக்கண் பாராயோ?

கவிமணி
தேசிக விநாயகம் பிள்ளை







பல்லவி

கடைக்கண் பாராயோ — உள்ளம்
கனிந்தருளாயோ!

அநுபல்லவி

அடைக்கலம் புகுந்தேன் — துணையே(து)
ஆருமில்லை ஐயா! (கடைக்கண்)

சரணம்

1. பத்தரோடுன்னை — நித்தம்
பணிந்து போற்றாமல்
புத்தகக்காட்டில் — அலைந்து
பொழுதைப் போக்கிவிட்டேன்
(கடைக்கண்)

2. மாசத்துலகத்தின் — மகிமை
மனதில் ஓராமல்
காசுபணத்தையே — எண்ணிக்
காலம் போக்கிவிட்டேன் (கடைக்கண்)

3. மன்னர் சபையிலே — நின்று
மருகி ஓலமிட்ட
அன்னை பாஞ்சாலிக்கு — அபயம்
அளித்த மாமுகிலே! (கடைக்கண்)

4. ஆதிமூலமே — என்றழும்
ஆனைமுன் வந்த
நாதநாரணா — பதும
நாப கோவிந்தா! (கடைக்கண்)

5. வேதநாயகா — முகுந்தா
வேணுகோபாலா!
மாதவா கிருஷ்ணா — திருவாழ்
மார்ப கேசவா! (கடைக்கண்)









ஜனாதிபதி

பாபு ராஜேந்திர பிரஸாத்






“மறு பிறப்புக் கொள்கை ஒரு குருட்டு நம்பிக்கை தானே? இதற்கு ஸையன்ஸில் ஒரு ஆதாரவும் இல்லையே?” என்றார் ராமச்சந்திரபுரம் உயர்தரப் பள்ளியின் ஹெட்மாஸ்டர் சிவப்பிரகாச முதலியார் அவர்கள்.

“மறு பிறப்புக் கொள்கை ஒரு சமய நம்பிக்கையேதான். ஸையன்ஸ் அல்ல. சில விஷயங்களில் ஸையன்ஸ் பிரவேசிக்க நியாயமில்லை. ஸையன்ஸின் வரம்பாக ஒரு ‘ஐரன் கர்ட்டன்’ உண்டு. அந்த எஃகுச் சுவருக்கு அப்பாலுள்ள விஷயம் ஸையன்ஸுக்குச் சம்பந்தமில்லை. நம்பிக்கையைத் தவிர அதற்கு வேறு பிரமாணம் இல்லை. ஸையன்ஸுக்குள் சமயக் கொள்கைகள் பிரவேசிக்கவும் சமயக் கொள்கைகளுக்குள் ஸையன்ஸ் பிரவேசிக்கவும் அதிகாரம் கிடையாது” என்றார் மகாலிங்கம் பிள்ளை.

மகாலிங்கம் பிள்ளைக்குச் சுமார் எண்பது வயது. போலீஸ் இன்ஸ்பெக்டராக இருந்து இப்போது ‘பென்ஷன்’ வாங்கி வருகிறார்.

“சுத்தக் குருட்டு நம்பிக்கை ‘ஸுபர்ஸ்டிஷன்’களுக்கெல்லாம் நாம் ஆதரவு தந்து விட்டால் தேசம் பாழாகத்தான் போகும். பகுத்தறிவுக்கு இடமில்லாமல் வர வர எல்லாம் மிக மோசமாகப் போய்க் கொண்டு வருகிறது” என்றார் சிவப்பிரகாசம்.

“குருட்டு நம்பிக்கை என்றால் என்ன? எனக்கு விளங்கவில்லை. நம்பிக்கை என்று சொன்ன பிறகு கண்ணுள்ளதும் கண்ணில்லாததுமாக இரண்டு விதம் ஏது? பக்திக்கு வெளி நோக்கும் கண்கள் கிடையாது. எல்லாம் நம்பிக்கையே பொறிய வேறில்லை” என்றார் மகாலிங்கம் பிள்ளை.

“உம்முடைய அநுபவத்தில் ஏதேனும் மறு பிறப்புக் கொள்கைக்குச் சாதகமாக நீங்கள் கண்டிருக்கிறீர்களா, சொல்லுங்கள். வெறும் பேச்சும் பழைய கண்மூடி சாஸ்திரமும்தானே?” என்றார் சிவப்பிரகாச முதலியார்.

“இல்லை, சிவப்பிரகாசம், இல்லை. நீ சிறு வயது; நான் கிழவன். நான் சொல்லும் ஒரு கதையைக் கேள். அது சுயசரிதம். அந்தக் காலத்தில் நான் உத்தியோகத்திலிருந்தேன்.”

“சொல்லுங்கள், சொல்லுங்கள். கதை கேட்க நான் எப்போதும் தயார்” என்றார் சிவப்பிரகாச முதலியார்.

* * *

ஒரு சமயம் நான் திருப்பதிக்குப் போயிருந்தேன். அங்கே ஒரு பைராகியைக் கண்டேன். பேச்சு பல விஷயங்களைப் பற்றி நடந்தது. பைராகியின் வேஷம் எனக்குப் பிடிக்கவில்லை. ஆயினும் அவன் பேச்சு அன்பு நிறைந்த அமுதம் போல் இருந்தது; சொல்ல முடியாத ஒரு வகையில் என் உள்ளத்தைக் கவர்ந்தது. வெகு நேரம் பேசிக் கொண்டேயிருந்தோம். பைராகி என் கையை நீட்டச் சொன்னான். ரேகை பார்த்து ஜோஸியம் சொல்லுவானோ என்று எண்ணிக் கையை நீட்டினேன். அவன் தன் இடுப்பில் செருகியிருந்த ஒரு டப்பியை எடுத்துத் திறந்து ஒரு குளிகையை என் கையில் வைத்து, “வாயில் போட்டுக் கொள்” என்று சொன்னான்.

நான் தயங்கினேன். “உன் மாரடைப்புக்கு மருந்து. தைரியமாக மென்று விழுங்கு” என்றான்.

எனக்கு அக்காலத்தில் ஒரு கெட்ட வியாதி இருந்தது. திடீர் என்று மாரடைப்பு அவ்வப்போது வந்து கஷ்டப்படுவேன். இது முடிவில் உன்னைக் கொல்லும் என்று சில வைத்தியர்கள் சொல்லி வந்ததால் நான் அதைப்பற்றிக் கவலைப் பட்டுக் கொண்டிருந்தேன். ‘இதை எப்படி பைராகி அறிந்தான்? நான் ஏதும் சொல்லவில்லையே?’ என்று வியந்தேன். ஒரு வேளை என் முகக் குறியினால் கண்டு கொண்டானோ என்று சந்தேகப் பட்டேன்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

"யோசனைசெய்யாதே. வாயில் போட்டு மென்று விடு" என்று மறுபடியும் சொன்னான் பைராகி.

அவன் முகத்தில் வீசிய அன்பு என்னை வசீகரித்தது. குளிகையை வாயில் போட்டு மென்றேன். கசப்பினும் கசப்பு. அதைப் பொறுக்க முடியாமல் அவனை நிமிர்ந்து பார்த்தேன்.



"சொல்லுங்கள், சொல்லுங்கள். கதை கேட்க நான் எப்போதும் தயார்!"

அப்போது கல்லவெய்யில். பிற்பகல் மணிமூன்று. பைராகியின் நிழல் பாறையில் நன்முக நீண்டு கிடந்தது. விந்தையே விந்தை! நிழலில் பைராகியின் உருவமில்லை. என் தாய் இறந்து இருபது வருஷங்கள் ஆகியிருந்தன. அவள் தோன்றினாள் அந்த நிழலில்!

"அம்மா!" என்று என்னையும் அறியாமல் கதறி விட்டு மெய்ம்மறந்தேன்.

* * *

பிறகு நினைவு வந்ததும் அங்கேயே நின்றிருந்த பைராகி மறுபடியும் பேச ஆரம்பித்தான்.

"மாரடைப்பு தீர்ந்ததா?" என்று கேட்டான். வலி நின்று விட்டது என்று சமிக்ஞை செய்தேன்; பேச முடியவில்லை.

"அப்பனே! இந்த ஜென்மத்தில் நான் இந்த உடலில் இருக்கிறேன். சென்று போன பிறப்பில் நான் இருந்த உடலை நீ இப்போது கண்டாய். அது இந்த மருந்தின் சக்தி. தாய் யார்? மகன் யார்? உலகம் எல்லாம் ஆடும் நிழல்கள். பரம்பொருள் ஒன்றே உண்மைப் பொருள். அதுவே பலவாகக் காட்டிக் கொள்கிறது. மனம் கலங்காதே! இந்தா!" என்று மற்றும் நான்கு குளிகைகளை ஒரு வாழைப் பட்டையில் வைத்து மடித்துக் கொடுத்தான்.

"உன் மாரடைப்புக்கு இது மருந்து. மிக்க அவசியம் நேர்ந்தபோது வாயில் ஒரு குளிகை போட்டு மென்று விழுங்கிவிடு. வலி நின்று போகும். மருந்து வாயிலிருக்கும் வரையில் உன் முன் உள்ள நிழல்கள் அந்த அந்த உயிரின் முன் ஜென்மத்தைக் காட்டும். அதைப் பார்த்துக் கலவரப் படாதே. முன் ஜென்மங்கள் உயிர்களை நிழல் போல் தொடர்ந்தே வருகின்றன" என்றான்.

இதைச் சொல்லிவிட்டு அவன் அங்கிருந்து எழுந்து போனான். மறுபடி திரும்பி வந்து, "இந்த மாத்திரை உட்கொண்டபின் வியாதி முற்றிலும் நீங்கிப்போகும். ஒரு தடவை கண்டதை மறுபடி காணமாட்டாய். தொண்ணூறு வயது வரையில் 'பின்ஷன்' வாங்கி வருவாய்" என்று ஆசீர்வதித்து, பைராகிகள் கூட்டத்தில் மறைந்தான்.

வெகு நாட்கள்வரை மாரடைப்பு வரவில்லை. மருந்தையும் மறந்து விட்டேன். மத்தியானம் தூங்கி எழுந்ததும் குடிப்பதற்காக வேலைக்காரன் எனக்காக வைத்திருந்த பாலை ஒரு நாள் பூனை குடித்து விட்டது. குடித்து விட்டு நக்கி நக்கிக் கிண்ணத்தைக் கீழே உருட்டினதும் சத்தத்தைக் கேட்டு இன்ன தாயிற்று என்று தெரிந்து கொண்டேன்.

பூனையின் பேரில் அடங்காக் கோபம் கொண்டேன். கோபம் ஏறினதும் திடீர் என்று மாரடைப்பு வந்தது. அப்படியே நாற்காலியில் சாய்ந்தேன். கால்மணி ரொம்பவும் கஷ்டப்பட்டேன். பிறகு பைராகி தந்த குளிகை ஞாபகத்துக்கு வந்தது. எழுந்து அதைத் தேடி யெடுத்து ஒரு குளிகையை வாயில் போட்டுக் கொண்டு மென்றேன்.

அச்சமயம் பூனை தான் செய்த குற்றத்தைக் கொஞ்சமும் நினையாமல் என்னிடம் கொஞ்சிக் கொண்டு வந்தது. அதற்குள் என் கோபமும் தணிந்து விட்டிருந்தது. சிரித்தேன். குளிகையை வாயில் போட்டு மென்றதும் ஒரு விதக் குளிர் தட்டிற்று. எழுந்து வெளியே வெய்யிலுக்குச் சென்றேன். பூனையும் என்னுடன் "மியாவ்! மியாவ்!" என்று கூவிக் கொண்டு வந்தது. திரும்பிப் பார்த்து அதன் நிழலைக் கண்டேன்.

* * *

பூனையை அப்படியே எடுத்து அணைத்துக் கொண்டு முத்தமிட்டேன். நிழலில் நான் கண்ட உருவம் சிறுவயதிலேயே இறந்துபோன என் மனைவியின் உருவம். "எனக்கு வைத்திருந்த பாலைக் குடித்தாயா?" என்று மகிழ்ந்தேன். என் ஆனந்தத்தை யாருக்குச் சொல்வேன்? எப்படிச் சொல்வேன்?

* * *

கையிலிருந்த மூன்று குளிகைகளையும் மிக்க ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வைத்தேன். மறுபடியும் ஒரு குளிகை வாயில் போட்டு மென்று மிக்க ஆசையோடு பூனையின் நிழலைப் பார்த்தேன். பூனை நிழலே யன்றி என் காதல் மனைவியின் உருவம் காணாமல் வருந்தினேன்! பைராகி சொல்லியிருந்ததை மறந்து விட்டிருந்தேன். இப்போது நினைவுக்கு வந்தது. 'எந்த உயிரின் முற்பிறப்பையும் ஒரு தடவையே காண்பாய்; அதன்பின் குளிகையை வாயிலுள் போட்டுக் கொண்டாலும் ஒரு தடவை கண்டதை மறுபடி காணமாட்டாய்' என்று அவன் சொல்லியிருந்தது நினைவுக்கு வந்தது!

அன்றுமுதல் எனக்கு அந்தப் பூனையில் அதன் பூனை உருவம் மறைந்து விட்டது. அதன் குரலும் பார்வையும் என் உள்ளத்தை உருக்கும் அரசிக்

குரலும் பார்வையுமாகி விட்டன. பிறகு ஒரு வருஷம் கழிந்தது. பூனைக்கு நோய் கண்டு இறந்து விட்டது. பைத்தியக்காரனைப் போல் அழுதேன். என் புழக்கடையில் குழி தோண்டி அதை அடக்கம் செய்து அந்த இடத்தில் ஒரு வேப்பஞ் செடி நட்டு அந்தச் செடியில் என் காதல் மனைவியைக் கண்டு திருப்தியடைந்தேன்.

* * *

**ப**ல ஆண்டுகள் கழிந்து விட்டன. சம்பளப் பணத்திலிருந்து மிகுதி செய்து கொஞ்சம் சேர்த்து வைத்தேன். சேர்க்கச் சேர்க்கப் பண ஆசை அதிகரித்தது. காசி விசுவநாதன் என்ற ஒரு அயோக்கியனை நம்பினேன். நல்ல வட்டி நான் போட்டுத் தருகிறேன் என்று என்னை வசீகரித்து என் பணத்தைப் பெற்றுக் கொண்டு மோசம் செய்து விட்டான். பக்கத்து ஜில்லாக்கள் எல்லாம் தேடி அவனைக் கண்டு பிடித்தார்கள். 'அவனை அரெஸ்ட் செய்யாமல் ஆளை என் முன் கொண்டு வாருங்கள்' என்று என் போலீசு கண்பார்களுக்குச் சொல்லி யிருந்தபடி பிடித்துக் கொண்டு வந்தார்கள். எப்படியாவது பணத்தைத் திருப்பிக் கொடுக்கச் செய்யலாம் என்பது என் யோசனை.

"மன்னித்து விடுங்கள், மகாராஜா! நான் செய்தது பெரும் தவறு. ஆனால் என் குடும்ப நிலையே இதைச் செய்யத் தூண்டிற்று" என்று தன் குடும்பத் தொல்லைகளைச் சொல்ல ஆரம்பித்தான்.

எனக்கோ கோபம் ஆவேசமாகப் பொங்கிற்று. காலிலிருந்த செருப்பை எடுத்து அயோக்கியப் பயலை நன்றாகப் புடைக்க வேண்டுமென்று எழுந்தேன்.



அவன் ஓடினான். கான்ஸ்டேபிள்கள் துரத்திக் கொண்டுபோய் அவனைப் பிடித்தார்கள். நான் நான்கு அடி வைப்பதற்குள் பொறுக்க முடியாத மாரடைப்பு வந்து விட்டது. பைராகியின் குளிகையைத் தேடி எடுத்து வாயில் போட்டுக் கொண்டு மோசக்காரக் காசி விசுவநாதனைக் கான்ஸ்டேபிள்கள் பிடித்து நிறுத்தி யிருந்த இடத்துக்குப் போனேன். அவன் நிழலில் யாரைக் கண்டேன் என்று எண்ணுகிறாய்? என்னைப் பெற்ற தகப்பன் அந்த நிழலில் தோன்றினான். என் தலை இறுகிறு என்று சுழன்றது. என் தகப்பனார் என்னை மோசம் செய்தார்! தகப்பனுக்கு நான் தீர்க்க வேண்டிய கடனை இப்படியா தீர்க்கவேண்டும்!

"இந்தப் பயலை விட்டுவிடுங்கள், தொலையட்டும்!" என்று சொல்லிவிட்டுத் திரும்பினேன். தகப்பனார் நினைவு வந்ததும் நான் அவருக்குச் செய்த அபராதங்கள் எல்லாம் என் மனத்தை வாட்டின.

* * *

**நா**ன் ராமநாதபுரம் ஜில்லாவுக்கு மாற்றப் பட்டேன். அப்போது அந்த ஜில்லாவில் ஒரு பெருங் கலகம் நடந்து கொண்டிருந்தது. பல கிராமங்களில் முஸ்லிம்களும் மறவர்களும் ஒருவரை யொருவர் குத்தியும் கொன்றும் வீடுகளுக்குத் தீ இட்டும் அக்கிரமங்கள் செய்து வந்தார்கள். அதிகாரிகளுக்கு இது பெருங் கவலையை உண்டாக்கிற்று. கலகத்தை அடக்கும் கடினமான வேலையிலிருந்தார்கள். கலகக்காரர்கள் அடங்குவதற்கு ஒரு மாத மாயிற்று.

ஒரு நாள், அப்போது நான் சாத்தான்குளம் கிராமத்தில் இருந்தேன். ஜில்லா கலெக்டரும் அவ்விடம் முகாம் போட்டிருந்தார். சில கலகக் கேசுகள் விசாரணை நடந்தது. அடுத்த நாள் ஞாயிற்றுக்கிழமை யானபடியால் அந்தக் கிராமத்துப் பெரிய ஏரி உள்வாயில் கொக்கு வேட்டைக்குப் போகலாம் என்று கலெக்டர் சொன்னார். நான் சுத்த சைவம். ஆனாலும் கலெக்டர் சொன்னதை எப்படி மறுக்க முடியும்? 'சரி' என்று ஒப்புக் கொண்டேன்.

காலை ஏழு மணிக்கு, காப்பி பலகாரம் செய்துவிட்டுப் புறப்பட்டோம். மேலே பறந்து கொண்டிருந்த ஒரு கொக்கைக் கலெக்டர் சரியாகக் குறி வைத்துச் சுட்டார். நானும் சுட்டேன். நான் சுட்ட கொக்கு கீழே இறங்கி ஒரு புதருக்குள் மறைந்தது. சேவகன் உள்ளே புகுந்து அடிபட்ட கொக்கைப் பிடித்து எடுத்து வந்தான். உயிருடனே இருந்தது. குண்டு அதன் சிறகு ஒன்றைக் காயப்படுத்தி யிருந்தது. என் கையால் ஒரு பறவையைச் சுட்டது இதுவே முதல் தடவை. அதன் கண்களைப் பார்த்தேன். உள்ளத்தில் எனக்குப் பொறுக்க முடியாத வேதனை உண்டாயிற்று.

"மா நிஷாத ப்ரதிஷ்டாம் த்வமகம:
சாச்வதீஸ் ஸமா!"

"துஷ்ட வேடனே! நீ ஆயுள் முழுதும் ஓய்வும் சுகமும் இன்றி அலைந்து திரிவாயாக" என்று வால்மீகி ரிஷி பறவையைச்சுட்ட வேடனுக்கிட்ட சாபம் என்மேல் பாய்ந்தது போல் உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது!

அன்று காலையிலிருந்தே என் உடம்பு சரியாக இருக்கவில்லை. மாரடைப்பு வரும் என்று பயந்து கொண்டே இருந்தேன். கிராமத்துக்குத் திரும்பினோம். சேவகன் நாங்கள் கட்ட கொக்குகளை ஒரு மூங்கில் தடியில் மாட்டித் தோளின்மேல் வைத்துக்கொண்டு முன்னாலே சென்று கொண்டிருந்தான். ஒற்றையடிப் பாதையில் நாங்கள் அவனைத் தொடர்ந்து பின்னால் நடந்துசென்று கொண்டிருந்தோம்.



நான் காலையில் பயந்தபடியே மாரடைப்பு வந்து விட்டது. வரவர வலி அதிகமாகி, பொறுக்க முடியாமல் தரையில் உட்கார்ந்தேன். ஜோபியில் குளிகை வைத்திருந்ததை எடுத்து வாயில் போட்டுக் கொண்டு மென்றேன். என் சேவகன் முன்னால் சென்று கொண்டிருந்தவன் என்னைப் பார்த்து, "என்ன, என்ன?" என்று பக்கத்தில் வந்து விசாரித்தான். அப்போது அவன் நிழல் என்முன் நீண்டு கிடந்தது. அதை நான் கவனிக்கவில்லை. அவன் தோளில் நீட்டிய மூங்கில் நிழலைத்தான் பார்த்தேன். குற்றுயிரா யிருந்த பறவையின் நிழலைக் கண்டேன். எனக்கு உயிர் போகும்படியான துக்கம் மேலிட்டது.

* * *

எனக்கு இருந்தது ஒரே குழந்தை. அதன் முகத்தையும் சிரிப்பையும் கண்டு என் அருமை மனைவி மறைந்த துக்கத்தை ஒருவாறு மறந்திருந்தேன். குழந்தையை நானே தாயும் தகப்பனுமாகி வளர்த்து வந்தேன். நான்காவது வயதில் அந்தக் குழந்தைக்கு விஷ சுரம் கண்டு ஒரு மாதம் படுத்த படுக்கையாகக் கிடந்தது. மருந்தெல்லாம் செய்து பார்த்தும் பயனில்லாமல் போயிற்று. கடைசி ராத்திரி நினைவு தப்பி வெகு நேரம் கழித்து மெதுவாகப் பேசினான். "அப்பா" என்றான்.

"என் கண்மணி!" என்றேன்.

"யாரோ இழுத்துப் போகிறார்களே!" என்றது.

"அம்மா, ஒன்றுமில்லை; பயப்பட வேண்டாம்" என்று சொல்லிக் குழந்தையை முத்தமிட்டேன். அடுத்த நாள் உயிர் நீத்தது.

என் அருமைக் குழந்தை கால்கள் கட்டப்பட்டு, சேவகன் கோலில் தொங்குவதை நிழலில் கண்டேன்! தலைகீழாகத் தொங்கியிருந்தும் என்னைப் பார்த்துக் கொண்டே யிருந்தது குழந்தை. அதன் கண்களில் அப்போதும் கோபம் இல்லை. அன்பே நீராகப் பெருகிக் கொண்டிருந்தது. ஜுரத்தில் நான் கண்ட கண்களாகவே இப்போதும் கண்டேன்.

"ஐயோ, என் தங்கமே!" என்று உன்மத்தன் போல் கத்தினேன். தரையில் படுத்துப் புரண்டேன்.

"என்ன இன்ஸ்பெக்டர்? என்னவாயிற்று?" என்று கலெக்டர் கவலையுடன் விசாரித்தார்.

"ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை" என்று சொல்லி எழுந்தேன். அதற்குள் நிழலில் கண்ட காட்சியும் கலைந்து மறைந்து போயிற்று. பறவை இறந்துவிட்டது.

என் மாரடைப்பு வலி தீர்ந்தது. ஆனால் என் அருமைக் குழந்தையை மறுபடியும் கொன்றேன். என்ன தண்டனை என் பாவத்தைக் கழுவி அலம்பக் கூடும்?

* *

ஒரு மாதம் கழித்து ஒரு பொதுக் கூட்டம் போடப்பட்டது. முகம்மதியர்களும் மறவர்களும் எல்லோரும் கூடி யிருந்தார்கள். நானும் ஜில்லா கலெக்டருடன் மேடையில் உட்கார்ந்திருந்தேன்.

"அன்பர்களே! என் பேச்சைக் கேளுங்கள்" என்று ஒரு முஸ்லிம் கிழவனார் முதலில் பேசினார். "சண்டை பிடிப்பதில் ஒரு பயனும் இல்லை. நாம் அனைவரும் அண்ணன் தம்பிகள். நடந்துபோனது நடந்து போயிற்று. அதை மறந்து விடுவோம். ஆண்டவன் செயலை யாரே தடுக்க முடியும்?"

பிறகு மறவர் இனத்தைச் சேர்ந்த ஒரு வயோதிகரும் பேசினார்.

"ஐயன்மீர்! முன் ஜென்மத்தில் நாம் யாராக இருந்தோமோ, அடுத்த ஜென்மத்தில் யாராகப் பிறப்போமோ? யாருக்கும் தெரியாது. யாரும் எந்தக் குலம், எந்த ஜாதி என்பது நிச்சயமில்லை. நாம் அனைவரும் ஆண்டவன் மக்கள். சண்டை வேண்டாம்" என்றார் மறவக் கிழவனார்.

குளிகை வாயிலாக நான் கண்டதும், படிப்பும் பண்பாடும் இல்லாத இந்தக் குடியானவக் கிழவர் சொன்னதும் ஒன்றாகவே இருந்தன.

'கிழவர் சொன்னது முற்றிலும் என் கண்ணாலேயே பார்க்கப்பட்ட உண்மை' என்று எழுந்து சொல்ல எண்ணினேன். ஆனால் என் கையில் இருந்த குளிகைகள் தீர்ந்து போய் விட்டபடியாலும், என் பேச்சை யாரும் நம்பமாட்டார்கள் என்று தெரிந்திருந்த படியாலும், அந்த எண்ணத்தை அடக்கிக் கொண்டேன்.

அடுத்த மாதம் லீவு வாங்கிக் கொண்டு திருப்பதிக்குப் போனேன். எவ்வளவு தேடியும் அந்த பைராகி சிக்கவில்லை.

* * *

"சிவப் பிரகாசம்! உங்கள் படிப்புக்கு அடங்காத விஷயங்கள் உண்டு" என்றார் மஹாலிங்கம்.

"ஆம்! ஷேக்ஸ்பியர் கூட அப்படியே ஒரு இடத்தில் சொல்லியிருக்கிறான்" என்றார் ஹெட்மாஸ்டர்.

# இதோ வந்து விட்டது ஸ்ரீரங்கம்





டி.கே.சி.

உண்மைகளை அறிவதற்கு நம்முடைய மனம் எவ்வளவோ ஆத்திரப்படுகிறது. அதற்காகவே கண், காது முதலிய புலன்களை நம்முடைய சரீரத்தில் வகுத்திருக்கிறது என்று சொல்ல வேண்டும். ஐம்புலன்களின் உதவி அன்றி ஒன்றுமே விளங்குவதில்லை. எத்தனைக்கு எத்தனை புலன்கள் ஒத்துச் சொல்லுகின்றனவோ, அத்தனைக்கு அத்தனை விஷயம் தெளிவு. இதை மறந்து விடுகிறோம் சில வேளை.

இந்த மறதி காரணமாக நமக்குச் சந்தேகங்கள் அடிக்கடி வந்து விடுகின்றன.

வாத்தியங்களுடனும் தபேலாவுடனும் வடநாட்டுப் பெண் ஒருத்தி நடனம் ஆடுகிறாள். ஜோராய் இருக்கிறது பார்க்க. அப்போது சொல்லத் தோன்றுகிறது: நடனத்துக்கு எதற்காக வேண்டும் வார்த்தையும் பாட்டும் என்பதாக.

அதே போல் ஸித்தார் என்ற வட நாட்டு வாத்தியத்தில் ஒருவர் சுகமாய் வாசிப்பதைக் கேட்கிறோம். 'தனி சங்கீதமே போதும், அதற்குமேல் சாஹித்யம் என்னத்திற்கு?' என்று சொல்லி விடுகிறோம்.

கொஞ்சம் யோசனை பண்ணுவோமானால் நாம் சொன்னது அவ்வளவு சரி அல்ல என்று மனசுக்குப் பட்டு விடும்.

“தாயே யசோதா” என்ற பாட்டோடு நடனம் நடக்கும் போது எவ்வளவு பரவசம் ஆகிறோம் நாம். “ஆரார் ஆசைப் படார்” என்ற பாடலை நம்மோடு உடன் பிறந்த நாதநாமக்கிரியை ராகத்தில் கேட்கும் போது மெய் மறந்த நிலையில் இதயம் உருகி விடுகிறது.

ஆனால் இந்த ஆழ்ந்த அனுபவம் நமக்கு ஞாபகத்தில் இருப்பதில்லை.

கண்ணுக்கும் காதுக்கும் புலனாகிற காரியங்களிலேயே மறதி ஏற்படும்போது ஐம்புலனுக்கும் அப்பாலாயுள்ள விஷயத்தில் எவ்வளவு மறதி ஏற்படும் என்று சொல்லவும் வேண்டுமோ?

* * *

கடவுள் தத்துவமானது அணுவுக்குள் அணுவாய், இறுதியற்ற வியாபகமாய், எல்லாமாய், பேதம் அற்ற ஒரு தன்மையதாய் இருக்கிறது என்பது நமக்குத் தெரிகிற விஷயம்தான்.

தற்காலத்து ஸயன்ஸ் வல்லாரும் (விஞ்ஞானிகள்) மேலே சொன்ன விஷயத்தைக் கண்டறிந்து முடிவு கட்டி இருக்கிறார்கள்.

நம்முடைய முன்னோர்கள், பல்லாயிர வருஷத்துக்கு முன்னிருந்த முன்னோர்கள் இதே விஷயத்தைச் சந்தேகத்துக்கு இடமில்லாமல் முடிவு கட்டினார்கள்; பாடியும் இருக்கிறார்கள்.

அப்படி யெல்லாம் முடிவு கட்டியவர்களுக்குக் கடவுளை, “எல்லாமாய் எங்குமாய் உள்ளவன்” என்று சொல்லுவதில் ஒரு ஆனந்தம் இருந்தபோதிலும், அந்தக் கடவுளை மூர்த்தி வடிவத்தில் (Symbol) வைத்துப் பேசும் போதும், துதிக்கும் போதும்தான், பக்தி - ஆனந்தம் உச்ச நிலையை அடைகிறது.

இந்த உண்மையைத் தமிழில் உள்ள பக்திப் பாடல்களில் பரந்து கிடக்கக் காணலாம். இனி:

சர்வ வியாபகமான வஸ்துவை விட்டு விட்டு, மூர்த்தியைப் பற்றிப் பேச ஆரம்பிக்கிறார்கள். மேலும் மூர்த்தியை விட்டுவிட்டு ஸ்தலத்தையே பக்திக்குரிய லக்ஷ்யமாகக் கருதி அனுபவிக்கிறார்கள்; பாடவும் செய்கிறார்கள்.

அப்படிக் கருதிப் பாடும்போது பக்தி ரஸமானது பிரவாகம் எடுத்து வருவதையும் பார்க்கிறோம்.

* * *

கடவுளின் மேலுள்ள பக்தியைக் கொஞ்சம் விட்டுவிட்டு ஆழ்வார்கள் மேலுள்ள பக்தி எப்படி உருவெடுக்கிறது என்பதைப் பார்க்கலாம்.

ராமானுஜர் பெரிய பக்தர். அவரால் வைஷ்ணவ சமயத்திலுள்ள அடிப்படையான அரிய உண்மைகள் பல இடங்களிலும் பரவ ஏற்பட்டது.

* * *

ஸ்ரீ பெரும்பூதூர் தான் ராமானுஜர் பிறந்த ஊர். சமஸ்கிருதத்தில் உள்ள நூல்களையும் சாஸ்திரங்களையும் அபார முயற்சி எடுத்துக் கற்றார்.

அந்த சமஸ்கிருத நூல்களிலுள்ள உண்மைகளை எல்லாம் அனுபவித்தார்.

பிறகு ஒரு சம்பவம் நேர்ந்தது: நம்மாழ்வார் பாடிய திருவாய் மொழிப் பாடல்களைப் பார்த்தார்.



அவைகளில் உள்ள மிக நுட்பமான சமய தத்துவங்களை அனுபவித்தார்.

அனுபவிக்க அனுபவிக்க நம்மாழ்வார் மேல் அபூர்வமானபக்தி ஏற்பட்டுவிட்டது. அந்த பக்தியானது பாடல்களோடு நிற்கவில்லை; மறைந்துபோன நம்மாழ்வாரோடும் நிற்கவில்லை; நம்மாழ்வார் இருந்த ஸ்தலத்தைப் பார்க்க வேண்டுமென்ற ஆசையை உண்டாக்கி விட்டது.

ஆழ்வார் திருநகரியில் இருந்து வந்த பக்தர்கள் கோயிலைப் பற்றியும், ஊரைப் பற்றியும், கோயிலின் அருகாமையில் தெள்ளத் தெளிந்தோடும் தாம்பிரவர்ணி நதியைப் பற்றியும் பலபடப் புகழ்ந்து பேசினார்கள்.

அப்படிப் பேசுவதை யெல்லாம் ராமானுஜர் கேட்டுக் கேட்டுப் பரவசமானார். ஆழ்வார் திருநகரிக்குப் போய்விட வேண்டும் என்று எண்ணினார். பக்த கோஷ்டியோடு ஸ்ரீ பெரும்பூதூரிலிருந்து புறப்பட்டார்.

திருவல்லிக்கேணிக்குப் போனார். பார்த்தசாரதிப் பெருமானைச் சேவித்தார். ஸ்ரீரங்கத்துக்குப் போனார். பிறகு ஸ்ரீவில்லி புத்தூருக்குப் போனார். கடைசியாக திருநெல்வேலி மார்க்கமாக ஆழ்வார் திருநகரி நோக்கி நடந்தார்.

ஆழ்வார் திருநகரிக்கு இரண்டு மைலுக்கு இப்பால் வந்தபோது ஊர் தென்பட்டது. தாம்பிரவர்ணிக் கரையோரமாக நடந்து கொண்டு வந்ததால் அதன் அழகும் தெரிய வந்தது.

கோயிலும் தெரிந்தது. கோயிலுக்குள் நம்மாழ்வார் மூர்த்தியாக எழுந்தருளியிருக்கிறார் என்பதும் ஞாபகத்துக்கு வந்தது.

ராமானுஜரது உள்ளத்தில் ஆனந்தமும் பக்தியும் பொங்கி வருகின்றன.

> இதுவோ திருநகரி,
>   ஈதோ பொருநை,
> இதுவோ பரமபதத்(து)
>   எல்லை — இதுவோதான்
>
> வேதம் பகர்ந்திட்ட
>   மெய்ப்பொருளின் உட்பொருளை
> ஓதும் சடகோபன்
>   ஊர்!

[திருநகரி: ஆழ்வார் திருநகரி: பொருநை: தாம்பிரவர்ணி; சடகோபன்: நம்மாழ்வார்.]

* * *

ஒரு ஸ்தலத்தைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை பக்தருக்கு எப்படி உண்டாகும் என்பதைப் பார்த்துக் கொண்டோம்.

இந்த ஆசையைக் கவிஞர் பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் எப்படிச் சித்திரிக்கிறார் என்பதையும் பார்க்க வேண்டும்.

திருச்சிராப்பள்ளியில் உள்ள உச்சிப் பிள்ளையார் கோயிலின் மேலிருந்து பார்த்தால், காவேரி ஓடுகிற அழகோடு, காவேரியினால் வளம்பட்ட தோட்டங்களும் தோப்புகளும் சோலைகளும் ஒரே பச்சையாய்க் காட்சி அளிக்கும்.

திருச்சிக்குத் தெற்கேயுள்ள மணப்பாறையிலிருந்து வறண்ட பிரதேசத்தின் வழியாக வெய்யிலில் நடந்து வருபவர்கள் எவ்வளவு கஷ்டப்படுவார்கள் என்பதும் நமக்குத் தெரியும்.

இப்போது ஒரு நாடகக் காட்சியைப் பார்க்கலாம்:

கொடும் பாலைவனப் பிரதேசத்தின் வழியாக ஒரு இளைஞனும் அவனுடைய காதலியும், பெண்ணின் தாய் தந்தையர்களுக்குத் தெரியாமல், ஒளிந்து வருகிறார்கள். வெய்யில் கொடுமையாய் அடிக்கிறது.

காதலி கஷ்டப்படுகிறாள். நடக்க முடியவில்லை. தள்ளாடித் தள்ளாடி உடல் சோர்ந்தவளாய் நடக்கிறாள். காதலன் அவளைத் தேற்றுகிறான்.

"சூரியன் காய்கிற வெய்யிலினால் உன்னுடைய பூரண சந்திரன் போன்ற முகத்தில், அடடா! முத்து முத்தாய் வேர்வை அரும்பி இருக்கிறதே. கொஞ்சம் உன்னைத் தைரியப்படுத்திக் கொள். இனி ஒரு காத தூரம் போனால் இந்தப் பாலைவனப் பிரதேசத்தைத் தாண்டி விடுவோம்.

"அதற்குப் பிறகு அரைக் காத தூரம் தான் எம்பெருமான் கோயில் கொண்டருளிய ஸ்ரீரங்கம்.

> "முன்னமேழ் புரவியார்
>   இரவிகாய் வெயிலினால்
> முத்தரும் பியகளை
>   முழுமதித் திருமுகத்(து)
>
> அன்னமே! இன்னும்ஓர்
>   காவதம் போதுமேல்
> அகலும்இப் பாலை; அப்
>   பால்அரைக் காவதம்
>
> என்னையாள் உடையவன்
>   துயில்அரு அமலியான்
> இலகுபொற் கோயிலும்."

மேலும் சொல்லுகிறான்:

"அந்த ஸ்ரீரங்கத்தில் தான் சந்திர புஷ்கரணி என்ற தடாகம் இருக்கிறது; புன்னை மரமும் அதன் தண்ணிய நிழலும் இருக்கின்றன.

"உயர்ந்த அழகிய மதில்கள் வரிசை வரிசையாய் நிற்கின்றன. இவைகளை ஒட்டித்தான் வண்டுகள் தங்கும் பூங்காவை உடைய காவிரி ஆற்றுப் படுகைகளும் இருக்கின்றன.

> தானன தானன
>   தானன தானன
>
> முன்னமேழ் புரவியார்
>   இரவிகாய் வெயிலினால்
> முத்தரும் பியகளை
>   முழுமதித் திருமுகத்(து)

அன்னமே! இன்னம்ஓர்
காவதம் போதுமேல்,
அகலும்இப் பாலை;அப்
பால்அரைக் காவதம்,
என்னையாள் உடையவன்
துயில்அரு அமளியான்
இலகுபொற் கோயிலும்,
இந்துவின் பொய்கையும்,
புன்னைவாழ் நீழலும்,
புரிசையும், மதுகரம்
பூவிரித்(து) உறையும்அக்
காவிரித் துறையுமே."

[முன்னம் எழு புரவியார் இரவி: ரதத்தில் பூட்டிய எழு குதிரைகளைக் கொண்ட சூரியன்; அன்னமே: அருமைப் பெண்ணே; என்னை ஆளுடையவன் துயில் அரு அமளியான்: என்னை ஆட்கொண்டவனை, சர்ப்பசயனத்தில் சதா துயிலும் ஸ்ரீரங்க நாதரது: இலகு பொற்கோயிலும்: தூரத்தில் வரும் போதே பிரகாசமாய்த் தெரியும் கோயிலும்; இந்துவின் பொய்கையும்: சந்திர புஷ்கரணியும்; புன்னை வாழ்நீழலும்: புன்னஞ் சோலையின் குறையாத நிழலும்; புரிசையும்: கல் மதில்களும்; மதுகரம் பூவிரித்து உறையும்: வண்டானது பூ இதழ்களை விரித்து உள்ளே தங்கும்; அக் காவிரித் துறையுமே: அந்தக் காவிரி ஆற்றுப் படுகைகளும்; எல்லாம் அரைக் காதம் தான்.]

அரூபமான, எங்கும் நிறைந்த, ஏக வஸ்துவான, கடவுளைத் தியானிப்பதற்கு மூர்த்தி அவசியம் என்று தமிழர்கள் கண்டு கொண்டார்கள்.

மூர்த்தி வழிபாட்டுக்காகச் சைவக் கோயில்களும், வைஷ்ணவக் கோயில்களும் நூற்றுக்கணக்காக எழுந்தன. அந்தக் கோயில்களை அழகான பூஞ்சோலைகளைக் கொண்டு பொதிந்து வைத்திருக்கிறார்கள்.

அத்தகைய புண்ணிய க்ஷேத்திரங்களில் மக்களுக்குள்ள ஈடுபாடு இன்னதென்பதை அறிய உத்ஸவங்களைப் பார்க்க வேண்டும்.

ஆயிரக் கணக்கான பேர் உத்ஸவங்களைக் கண்டு அனுபவிக்கிறார்கள். வெகு தூரங்களில் இருந்தும் யாத்திரிகர்களாக நடந்து வருகிறார்கள்.

அப்படி யாத்திரை வருகிறவர்களுக்கு வழி நெடுக எத்தனையோ சத்திரங்கள்.

இவைகள் எல்லாம் தமிழ் மக்களது உள்ளத்தில் ஊறிக்கிடக்கும் பக்தியைக் காட்டுகின்றன. பக்திக்குரிய லக்ஷ்யங்களில், கோயில், குளம், சோலை எல்லாம் சேர்ந்த ஸ்தலம் ஒரு முக்கியமான அம்சம். பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் ஒரு காதல்க் கவியின் மூலமாக ஸ்தல மகிமையை அழகாய் விளக்குகிறார்.

அருமையான தமிழ்ப் பாடல். பக்தி கலந்த தமிழ்ப் பாடல்.



மல்லிகைப் பூமணக்கும்—வசந்த
மாலைப் பொழுதினிலே
அல்லியின் புன்னகையில்—என்
ஆசை தவழுதம்மா......
ஆதவன் சென்றுவிட்டான்—என்
அன்பு மனங்குளிரக்
காதலனைக் கொணர்வான்—என்
கனவு பலித்திடுமே.





# கல்யாணி நடராஜன்

யோகி சுத்தானந்த பாரதி

கல்யாணி இப்படியே பாடிக்கொண்டு ரோஜாச் செடிகளுக்கும் மல்லிகைப் புதர்களுக்கும் தண்ணீர் விடுகிறாள். "நான் ரோஜா, நீ மல்லிகை" என்று அவர் சொல்லிச் சென்றது இன்னும் அவள் காதில் ஒலிக்கிறது. 'என் ராஜா' என்று ரோஜா மலர்களைக் கொஞ்சுகிறாள். அந்தி மாலையில் நட்சத்திரமணிகள் மின்னுகின்றன ...... காலதேவி அந்த மணிகளை உருட்டி ஜபம் செய்வதுபோலிருக்கிறது. செவ்வானத்தின் அழகெல்லாம் வனதேவதைபோல உலாவும் கல்யாணியின் முகத்தில் 'டால்' அடிக்கின்றன. நல்ல கதர்ப் புடவை, சிவப்பு ரவிக்கை, ரோஜாமுகம், முல்லை நகை, அல்லிக் கண், தாமரைக் கை—எல்லாம் சாமுத்ரிகா லக்ஷணப்படி சேர்ந்த அழகி கல்யாணி. அவள் இன்னிசைக்குத் தென்றலும் பின்பாட்டுப் பாடுகிறது.

நெஞ்சக் கனவினிலே—அவர்
நேசக் கரங்கள் என்னைக்
கொஞ்சி வளைக்கையிலே—என்ன
குறை எனக்கினிமேல்......

இப்படிக் கல்யாணி பாட்டும் மலருமா யிருக்கும்போது, "ஐயையோ, ஐயையோ, அதிர்ஷ்டக்கட்டை. அட தெய்வமே......" என்று அலறிக் கொண்டு வந்தாள் காமாக்ஷி......

"வாடி உள்ளே......நீ கல்யாணி, பூகம்பம் நம் குடியைக் கெடுத்ததடி......வா."—சரசரவென்று காமாக்ஷி கல்யாணியைப் பிடித்து இழுத்துக் கொண்டு அதிவேகமாய் உள்ளே சென்றாள்.

2

உள்ளே சிவகடாக்ஷம் தீக்ஷிதர் பத்திரிகையில் இரத்தக் கண்ணீர் விடுகின்றார். அஸ்ஸாம் பூகம்பம் என்ற தலைப்பில் விழுந்த இரத்தக் கண்ணீர் அந்தக் 'காலம்' பூரா ஓடுகிறது. தீக்ஷிதர் ஞானியாதலால் மனத்திற்குள்ளேயே துக்கத்தை வைத்துக்கொண்டு, "ஊம்! அவ்வளவுதான் மனித வாழ்க்கை......யார் கிலே? இந்த உடலும் ஒரு நாள் போகவேண்டியதுதானே. அதற்கு முன் நடராஜப் பெருமான் திருவடி அன்பிற்காக வாழ்வை அர்ப்பணிப்போம்" என்றார். இந்த வேதாந்தம் காமாக்ஷிக்குப் பிடிக்காமல் அடுக்களைப் பக்கம் போய்த் தன் துக்கத்தையெல்லாம் மாலை மாலையாகச் சொல்லி அழுதாள்.

கல்யாணியைப் பெறச் சங்குவிரதம் இருந்தது, அரசமரம் சுற்றியது, அவளைச் சீராட்டியது, தாலாட்டியது, பாராட்டியது, அலங்காரம் செய்தது, படிக்க வைத்தது, பாட்டுச் சொல்லி வைத்தது, தங்கமும் வெள்ளியும் பட்டும் ஜரிகையுமாகச் செலவிட்டு நடராஜனுக்குக் கொடுத்தது, அவனைக் கலெக்டருக்குப் படிக்க வைத்தது, சம்பந்திகள் படுத்திய பாடு, தான் பட்ட பாடு—எல்லாம் சொல்லி ஒரு புராணமே பாடிவிட்டாள் காமாக்ஷி. கல்யாணி மட்டும் சோகத்தையெல்லாம் வைராக்கியமாக மாற்றி, "அம்மா, கடவுள் கிருபையிருந்தால் பிரம்மபுத்ரா வெள்ளத்தில் அவர் ஏன் தப்பிப் பிழைத்திருக்கக்கூடாது? கௌஹாதி வெள்ளத்தில் சில உடல்கள் மிதந்து வந்தன என்பதுதானே செய்தி......? நடராஜப் பெருமான் பேரில் பாரத்தைப் போட்டு விட்டு, நாம் செய்ய வேண்டியதைச் செய்வோம்" என்றாள்.

வந்தாள் மாமி அமராவதி. ராஷ்பிஹாரி அவிர்பூவே அதிரும்படி மார்பைப் புடைத்தலறிக் கொண்டு, "அடி ஜடைகாளி, உன் ஜாதகந்தான் என் பிள்ளையைக் கொண்டுபோனது; உன் அம்மா வயிற்றெரிச்சலே பூகம்பமாகக் கிளம்பி அஸ்ஸாமை அழித்தது" என்று கோபப்

புயல் வீசி மழுதாள். கல்கத்தா தமிழர் எல்லோருமே இந்தக் கடுஞ் சாவைக் கேட்டு அளவுகடந்து விசனித்தனர்.

கல்யாணியின் கணவன் நடராஜன் ஐ. ஸி. எஸ். ஒரு கலெக்டர். அவனுடைய பேச்சும், திறமையும், பொது நல உணர்ச்சியும், காந்தி பக்தியும் அரசாங்கத்தாரின் மதிப்பைப் பெற்றன. ஆகவே மேலதிகாரி நடராஜனை அஸ்ஸாமுக்கு மாற்றினர். அவன் அங்கே அகதிகளுக்குச் செய்த பெரிய உதவியும், இந்து முஸ்லீம் ஒற்றுமைக்குச் செய்த அற்புதத் தொண்டும், உணவுப் பஞ்சம் தீர்த்ததும் அவரது பாராட்டைப் பெற்றன. அவர் அவனை அகதிகள் பிரச்னையைத் தீர்க்க ஒரு தலைவராக நியமிக்க விரும்பினர். அதற்குள், 'வட அஸ்ஸாமில் பூகம்பம் கிளம்பி, மலைகளைத் தகர்த்தது; ஆறுகளை இங்கு விரட்டி அங்கு வெள்ளக் காடாக்கியது; ஆயிரக்கணக்கான உயிர்களைப் பலி வாங்கியது. ஆற்றோரத்தில் இருந்த கலெக்டர் ஆபீஸ் அப்படியே வெள்ளத்தில் கரைந்து போனது. நடராஜன் மறைந்தான்' என்பது பத்திரிகைச் செய்தி. இனி......?

### 3

'ஒரு பேரன் பிறந்து பாராமல் இப்படிக் கல்யாணி ஆனாளே' என்று காமாக்ஷி புலம்பினள். "கல்யாணி, நடந்தது நடந்தது; நடப்பது நடக்கும். போனவன் போனான். இனி இதற்கு நாம் என்ன செய்வது? இருப்பவர் இருக்கிறபடி. இருந்தால் பிறகு சிவன் செயல்.

"நாளாக நாளாக நாளான மாயம்போய்
ஆனாதல் சற்கேள் ரும்."

அதுதான் முடிவு. ஏதோ எனக்குக் கம்பெனி வேலை பார்த்த சொத்து இருக்கிறது. சாப்பாட்டுக்கு வரும். நான் மாப்பிள்ளையை இழந்து வருந்துகிறேன். எத்தனையோ ஆயிரம் பேர் தம் உறவினரை இழந்து அங்கே வருந்துகிறார்கள். அவர்கள் சேவையில் நம் துயரைக் கழிப்போம். ஜீவ சேவையே சிவ பூஜை. நடமாடும் கோவில் ஊழியமே நமக்கேற்ற தவம். புறப்படு கல்யாணி, பாட்டும் பஜனையும், தொண்டும், துறவும், தியாகமும் சாது சங்கமுமாக வாழ்வோம்" என்று தீட்சிதர் தாண்டினர். கல்யாணி, "அதுதான் அப்பா நல்லது" என்று வினையுடன் எழுந்தாள். மாமியார் அமராவதி கோபப் புயலும் பொறுமை வெள்ளமுமாகப் பொங்கிச் சாபம் வைத்தாள். "அடி துக்கிரி, என் பிள்ளையை விழுங்கிய ராக்ஷஸி, நீ போன இடம் உருப்படாது. என் மானத்தைக் கெடுக்கவா? வீட்டை விட்டுக் கிளம்புகிறாய்? பேசாமல் மூலையிலே அடைந்து கிட. உன் வயிற்றுக்குப் பலகாரம் தொலைக்கிறேன்" என்றெல்லாம் பத்தாம் பசலி மாமூலை ஓட்டி அழுது தீர்த்தாள். இவளால் கல்யாணி பட்ட கொடுமையை என்னென்பது! கல்யாணி ஒரு நல்ல சந்தர்ப்பத்தையே எதிர்பார்த்திருந்தாள்.

* * *

வந்தார் நம் மாபெருந் தலைவர். இயற்கையின் பயங்கரத் திருவிளையாடல்களைக் காண வந்தார். பூகம்பத்தால் வருந்தும் அஸ்ஸாமிற்கு ஆறுதல் கொண்டு வந்தார். பாகிஸ்தானிற்கும் பாரதத்திற்கும் தாம் இயற்றிய ஒப்பந்தம் நிறைவேறுகிறதைப் பார்க்க வந்தார். கல்கத்தா முழுதும் மலர் மாரி சொரிந்து அவரை வரவேற்றது. மாபெரும் கூட்டம் நடந்தது. முதலில் கல்யாணியும் தீக்ஷிதரும் தேசிய கீதங்கள் பாடினர். "பாரத வர்ஷ ஹமாரா ப்யாரா, ஜண்டா ஊஞ்சா ரஹியே" முதலிய கீதங்கள் நடந்தன. தலைவர் அன்று உருக்கமாகப் பேசினர்.

"பாரதம் விடுதலை பெற்றது. கட்டில்லை; கவலை இல்லை' என்று நாம் கையைக் கட்டிக் கொண்டிருக்கக் கூடாது. இனியே நமக்குக் கடுமையான வேலை உள்ளது. இன்னும் பயங்கரமான தியாகங்களுக்கு நாம் தயாராயிருக்க வேண்டும். நம்மைக் காலம் சோதிக்கிறது. இயற்கை சோதிக்கிறது. மழை பெய்யாமல் பயிர்கள் வாடின. வெள்ளம் வந்து பயிர்களை அள்ளிச் சென்றது. பஞ்சமும் பற்றுக்குறையும் காட்டைப் பிடிக்கின்றன. அஸ்ஸாம் பூகம்பம் அதி பயங்கரமாகக் கிளம்பிக் கணக்கில்லாத சேதம் விளைவித்தது. நம் சகோதர சகோதரிகள் அங்கே உயிர் துடிக்கிறார்கள். அவர்களுக்கு ஆடை, உணவு தரவேண்டும். அகதிகளுக்குப் புகல் அளித்து ஆதரிக்கவேண்டும். ஏராளமான தொண்டர் முன் வந்து இந்தக் காரியங்களை நிறைவேற்ற வேண்டும். பெண் அகதிகளையும் அனாதைகளையும் கவனிக்கப் பெண் தொண்டர் வேண்டும். முன்வாருங்கள், தேசம் உங்களை அழைக்கிறது."

தலைவர் பேசியதும் வேறு சில தலைவர்கள் பேசினர். கல்யாணி 'ஜனகணமன' பாடினாள். கூட்டம் கலைந்தது. மறுநாள் காலை பத்துமணிக்குத் தலைவர் தீட்சிதருடன் வந்த கல்யாணிக்குப் பேட்டியளித்தார். கல்யாணி ஆங்கிலத்திலும் இந்தியிலும் தனது நிலையை விளக்கினாள். தலைவர் அவளுக்கு ஆறுதல் கூறி, "வெள்ளம் அடித்துச் சென்ற கலெக்டரும் மற்றோரும் இறந்தார்கள் என்று சொல்ல முடியாது. பூகம்ப வெள்ளப் பாழை ஆராயச் சர்க்கார் ஏற்பாடு செய்திருக்கிறது. அதிர்ஷ்டவசமாகக் கல்யாணியின் கணவன் பிழைத்து வந்தாலும் வரலாம் என்று தேற்றினர். கல்யாணி அதே இடத்திற்குத் தானும் சென்று ஜனோபகாரம் செய்ய விரும்பினாள். தலைவர் உடனே அங்குள்ள அதிகாரி ஒருவருக்குக் கடிதம் தந்து இருவரையும் கௌரவமான தொண்டில் ஈடுபடுத்த வேண்டினர்.

### 4

கௌஹாதியின் அருகே தீனபவனம் உள்ளது. அது அழகான தோட்டத்தில் அமைந்தது. அங்கே குயில்கள் கூவும், கிளிகள் பேசும். பிரம்மபுத்ராவின் ஓங்காரம் கேட்கும்......அனைத்திற்கும் மேல் குழந்தைகளின் கலகலச் சிரிப்பு ஜல தரங்கம் போலக் கேட்கும். அவற்றிற்குமேல் கல்யாணியின் யாழிசையும் குரலும் அமைதியான காற்றில் சிந்திவந்து ஆறுதலளிக்கும்.



ப்ரேமாம்ருத தாரா
பர்ஷாவோ—ஜெய
ப்ரியதம மன மோஹனுக்க
ரூப திகாவோ.

அகில ஜீவ்மேம் சுபமங்கல
கிரண பைலாவோ
அக்ஞான சோக மோஹ ரஹித
ஜ்யோதி ஜலாவோ!

அனுத ரக்ஷகா—
தீன ஜனவன—தாரி.

என்று அவள் பாடும்போது கேட்டோர் உள்ளம் உருகும். ஆயிரம்



# நரஸூஸ்
## காபிகொள்

உங்கள் பிரியமுள்ள பானம்

# இப்பொழுது எங்கும் கிடைக்கும்

உயர்ந்த ரக பிளாண்டேஷன் பீபெரி, எக்ஸ்ட்ரா
போல்ட் காபிக் கொட்டைகளும்,

7 பவுண்டு, 3 பவுண்டு, 1½ பவுண்டு, ½ பவுண்டு
சீல் வைத்த துணிப் பைகளில்
கிடைக்கும்.



**நரஸூஸ் மான்யுபாக்சரிங் கம்பெனி லிமிடெட், சேலம்.**

NCZ-6

# ஆழ்வார்களின்

எம். ராதாகிருஷ்ண பிள்ளை

பேரின்பத்தில் ஈடுபட்டவர்கள் பக்தி ரஸத்திலே ஈடுபட வேண்டுமேயன்றி, சிருங்கார ரசத்திலே ஈடுபடலாகாது என்பார்கள். ஆனால் ஆழ்வார்களுக்குப் பக்தி ரசமே சிருங்கார ரச வடிவு பூண்டுள்ளது என்பது பூர்வாசாரியர்களின் உறுதி மொழி. கடுத் தின்னாரைக் கட்டி பூசித் தின்பிப்பாரைப் போல் சிருங்கார ரசப் பூச்சாலே பக்தி ரசத்தை ஊட்டுகிறார்கள் அன்பு கனிந்த ஆழ்வார்கள்.

பக்தி மார்க்கத்தில் வழங்கப்படும் நவவித பாவங்களில் நாயக-நாயகி பாவமும் ஒன்று. இறைவனைத் தாயாகவும் தந்தையாகவும் வணங்கினார்கள் சில ஆழ்வார்கள். தாய்த் தன்மை ஏற்று இறைவனைக் குழந்தையாகத் தாலாட்டினார்கள் குலசேகரரும், பெரியாழ்வாரும். தந்தை பாவத்தில் ராமன் கானகஞ் சென்ற பிரிவினால் வருந்தினார் தசரதனை நடித்த குலசேகரர். ஆழ்வார்கள் தம் செயலை விஞ்சும் தன்மையளான ஆண்டாள் இறைவனைக் கணவனாகப் பாவித்து, 'மானிடவர்க்கென்று பேச்சுப் படில் வாழகில்லேன் கண்டாய்' என்றாள்.

புருஷனைக் கண்டு புருஷன் மோகிப்பது மேட்டு மடை. புருஷனைக் கண்டு ஸ்திரீ மோகிப்பது பள்ள மடை; மேட்டு மடையில் ஜலத்தை ஏற்றுவது அரிது; ஏற்றினாலும் ஜலம் தங்குவதரிது; பள்ள மடையிலோ ஜலத்தைப் பாய்ச்சுவது எளிது. அங்குத் தங்கியிருப்பதும் உறுதி. இம்முறையில் பள்ள மடையான ஸ்ரீ ஆண்டாள்-பக்தி ஆழ்வார்களிலும் விஞ்சிற்று. நம்மாழ்வார், திருமங்கை மன்னன் முதலான ஆழ்வார்கள் தாமான தன்மையை விட்டு, பிராட்டிமாருடைய தன்மையை ஏற்றுக் காதற்பாட்டுக்கள் பாடினார்கள்.

ஆழ்வார்கள் ஸ்திரீ பாவத்தைத் தாமாக ஏறிட்டுக் கொள்கிறார்களல்லர். அந்த அவஸ்தை தானாக வந்து சேருகிறது. ஈசுவரன் ஒருவனே புருஷன் என்பது வெள்ளிடைமலை. அவன் பேராண்மைக்கு முன் உலகடங்கப் பெண் தன்மைத்தது. அந்த ராத்மாவை நாயகியாகவும், பரமாத்மாவை நாயகனாகவும் வைத்துச் சித்திரித்துப் பாடியிருக்கிறார்கள் ஆழ்வார்கள்.

"இந்த நாயக, நாயகி பாவத்தை ஆளுவது கத்தியின் கூர்ப்பக்கத்தின் மீது நடப்பது போன்ற கஷ்டமான காரியம்; ஒரு வரம்பு இருக்கிறது. அதற்கு அப்புறம் இப்புறம் போய் விட்டால் அசந்தர்ப்பமாகிவிடும். ஸ்ரீ பாகவதத்திலுங்கூட, சுக பகவான் இவ்வரம்பைக் கடந்து விட்டிருக்கிறார். 'கடல்ஞாலம் செய்தேனும் யானே என்னும் கடல் ஞாலம் ஆவேனும் யானே என்னும்' என்று தொடங்கும் திருவாய்மொழி களையும்,

'கருப்பூரம் நாறுமோ, கமலப்பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான்
தித்தித்திருக்குமோ?'

என்று தொடங்கும் ஆண்டாள் பாசுரங்களையும் போல இந்த பாவத்தைப் பாடுவது அநேகமாய் அசாத்தியம்" என்று ஸ்ரீ வ. வே. சு. ஐயர் கூறியுள்ளார். எனவே ஆழ்வார்கள் சாரீக மான காதலைவிட, பரபக்தியை அதிகமாக வர்ணித்திருக்கிறார்கள். உருகி வழிந்து புறப்பட்ட அந்தப் பாடல்கள் பக்திச் சிறப்பையும், பக்தி செய்யும் முறையையும் நன்கு விளக்குவனவாகும். பக்தி நிலையில் தோய்ந்த பெரியார் பெண்ணியல்பைப் பெற்றாலன்றி இறைவன் திருவடி நிழலில் தங்க இயலாது என்னும் உண்மையை இப்பாசுரங்களில் உணரலாம். சிற்றின்பம் கூறும் வகையில், சிற்றின்பத்தில் ஊன்றி யிருப்பவர்களின் புத்தியைத் திருத்திப் பேரின்பத்தில் ஈடுபடும்படிச் செய்வதற்காக, பரமகருணையால் ஆழ்வார்கள் சிருங்கார ரசத்தையும் கலந்து அருளிச் செய்தனர் என்றும் கூறலாம்.

# பக்திக்காதல்

ஆழ்வார்கள் பெண் தன்மையை ஏறிட்டுக்கொண்டு பேசி யநுபவிக்கும் நிறத்தில் மூன்று வகுப்புக்களுண்டு. அவை தாய்-பாசுரம்,தோழி-பாசுரம், மகள்-பாசுரம் என்பவை. தோழி, நாயகனையும் நாயிகையையும் இணைக்கச் சேர்ப்பவள். (எம்பெருமானை ஆத்மாவோடு சேர்த்து வைத்தல்). பெண்ணைக் கட்டுப்படுத்தி, படி கடந்து செல்லல் குல மரியாதைக்குப் பொருந்தா தென்று தடுப்பவள் தாய். ('எம்பெருமான் தானே வந்து விஷயீகரிக்கக் கண்டிருக்க வேணும்' என்று சொல்லித் துடிப்பை அடக்குதல்). உறவினர் கூட்டக் கூடுகையின்றித் தானுகவே நாயகனை அடைய வேண்டு மென்ற பதற்றமுடையவள் தலைமகள். (பகவானை உடனே அநுபவிக்க வேண்டுமென்ற ஆர்வம் கொண்டிருத்தல்.)

* * *

நாயகியின் அவஸ்தைகளைத் தாய் கூறுகிறாள். அவளுடைய வேதனைக்குக் காரணத்தை ஒருவாறு ஊகம் செய்து கொள்ளுகிறாள்.

"கண்டவர் தம் மனம் வழங்கும்
கண்ண புரத்(து)
அம்மானைக் கண்டாள் கொலோ?"

என்று ஆச்சரியப்படுகிறாள். கண்ணபுரத்தழகனுக்கு இவள் தன் மனத்தைப் பறி கொடுத்தாள் என்று எண்ணுகிறாள். நாயகனைப் பார்த்து, 'இவளை உன் மனத்தால் என் நினைத்திருந்தாய்?' என்று, அவன் விஷயத்தில் நாயகன் என்ன செய்ய நினைத்திருக்கிறான் என்பதைக் கேட்கிறாள்.

மகளின் நிலை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டு வருகிறது. சதா சிரித்துக் கொண்டும், பேசிக் கொண்டும், விளையாடிக் கொண்டும் இருந்தவள் ஒரே விதமாக மாறிவிட்டாள். தோழிகளோடு சிரித்துப் பேசுவதேயில்லை. சந்தனம் முதலிய வாசனைச் சாமான்களை உடலில் பூசிக் கொள்வதில்லை. கண்ணுக்கு மை தீட்டிக் கொள்வதும் இல்லை. தலையைச் சீவி மலர் அணிந்து கொள்வதையும் மறந்து விட்டாள்.

'நெஞ்சுருகிக் கண் பனிப்ப
நிற்கும், சோரும்,
நெடு துயிர்க்கும், உண்டறியாள்,
உறக்கம் பேணுள்.'

சதா கண்ணீரைத் தாரை தாரையாக வடிப்பாள். சரியாக உண்பதில்லை; உறங்குவதில்லை; சதா எதையோ நினைத்து நினைத்துப் பெருமூச்செறிகிறாள். முன்பெல்லாம் பந்து விளையாடுவாள். அதையும் மறந்தாள். தான் வளர்த்த கிளிக்குப் பாலூட்டுவதைக் கூட நிறுத்தி விட்டாள்.

'பந்தாடு கழல் மருவாள்! பைங்கிளியும்
பாலூட்டாள்! பாவை பேணுள்.'

சந்தனக் குழம்பை மார்பின்மேல் தடவினுல் நெருப்பு போல் எரிகிறது என்கிறாள். காய்கின்ற நிலவின் தண்ணொளி தன் மீது சூரிய ஒளி போல் நெருப்பு வீசுகிறது என்கிறாள்.

'தென்றலும் தீயிற் கொடிதாம்' என்று தென்றற் காற்றும் விரக வேதனையிலிருக்கும் நாயகிக்குத் துன்பம் விளைப்பதாய்க் கூறுகிறாள் தாய். தாயின் சொல்லைத் தட்டி நடக்காதவள், 'எம்பெருமான் திருவரங்கம் எங்கே?' என்றெல்லாம் பிதற்றுகிறாள். தாயின் மடிமீது படுத்துக் கொள்பவள் சிறிது நேரங்கூடப் பொருந்திப் படுக்க மாட்டேன் என்கிறாள். பிறகு தாய் ஒரு கட்டுவிச்சியை அங்கே வரவழைத்து, 'படமானை இது செய்தார் தம்மை மெய்யே கட்டுவிச்சி, சொல்' என்ன, 'நங்காய்! கடல் வண்ணன் இது செய்தான்"...... என்று அவள் கூறினுள். தாய்க்கு ஒன்றும் புரியவில்லை. 'கடல் வண்ணன் இது செய்தான், காப்பார் யார்?' என்று அவள் பிரலாபிக்கிறாள்.

நாயகி ஒரு கிளி வளர்த்து வந்தாள். அக் கிளிக்குக் காதலன் பெயரைக் கற்றுக் கொடுத்திருந்தாள். அக் கிளி அவன் பெயரைச் சொல்வது அவளுக்கு ஆனந்தத்தை விளைக்கிறது.

'வளர்த்ததனுல் பயன்
பெற்றேன் வருக என்று
மடக்கிளியைக் கை கூப்பி
வணங்கினுளே.'



வீணையை மீட்டிக் கண் களில் நீர் அரும்ப......

வினையை மீட்டிக் கண்களில் நீர் அரும்பத் தன் நாயகனைப் பற்றிப் பாடுகிறாள் நாயகி. இவற்றை ஊரார் பார்த்தால் விபரீதம் விளையும் என்று எண்ணித் தாய் மகளை நோக்கி, 'நங்குடிக்கு இதுவோ நன்மை?' என்று கேட்டாள். மகள் அதற்கும் சிறிது கூடச் செவி சாய்க்கவில்லை.

'என் சீர்க்கீழ் அடங்காப்
பெண்ணைப் பெற்றேன்,
இரு நிலத்து ஓர் பழி
படைத்தேன்'

என்று அவள் பிரலாபிக்கிறாள். ஆனால் அவளுக்கே ஒரு மனச் சாந்தி ஏற்படுகிறது.

'பேராளன் பேரோதும்
பெண்ணை மண்மேல்
பெருந்தவத்தள் என்றல்லால்
பேசலாமோ?'

என்கிறாள்.

* * *

நாயகியின் அவஸ்தைகளாக நாயகியே கூறுவது:

அந்திப் பொழுதில் தலைவன் வரும் நேரம் நீடிக்கத் தலைவி மிகவும் வருந்துகிறாள்.

"ஊரும் துஞ்சிற்று, உலகம் துயின்றது
ஒளியவன் விசும்பு இயங்கும்
தேரும் போயிற்று, திசைகளும்
மறைந்தன,
செய்வதொன்று அறியேனே."

ஊரடங்கியும் நாயகிக்குத் தூக்கம் வரவில்லை. தானும் இரவுமாகத் தனித்திருக்கையில் ஒரு நாழிகை கழிவது ஒரு யுகம் கழிவதுபோலிருக்கிறது அவளுக்கு.

'கரிய நாழிகை ஊழியில் பெரியன
கழியுமாறு அறியேனே'

என்று பிரலாபிக்கிறாள்.

காதலன் தன்னைக் கூர்ந்து பார்ப்பது தலைவிக்கு அச்சத்தை விளைவிக்கிறது. அன்னை இதை அறிந்தால் கோபிப்பாள் என்று எண்ணுகிறாள். தலைவனைப் பார்த்ததுமே தன் மனம், கண் முதலியன அவன்பால் சென்று லயித்து விட்டன என்கிறாள்.

'கைவளையும் மேகலையும் காணேன்;
கண்டேன்
கனமகரக் குழை இரண்டும்
நான்கு தோளும்' என்கிறாள்.

அத் தலைவன்,

'என் நலனும் என் நிறையும்
என் சிந்தையும்
என் வளையும் கொண்டென்னை
ஆளும்கொண்டு
பொன் அலர்ந்த நறுஞ் செருந்திப்
பொழிலினூடே
புனலரங்கம் ஊரென்று போயினாரே!'



என்று கூறி வருந்தித் தலைவன் சென்ற ஊருக்கு ஒரு வண்டைத் தூதனுப்ப எண்ணுகிறாள் நாயகி. ஏனெனில் அவன் வருவேன் என்று சொல்லிப் போன காலத்தில் வரவில்லை.

"அறுகால சிறு வண்டே தொழுதேனுன்னை
......அத்தாதே நின்றோர் மாது
நின் நயந்தாளென்று
இறையே இயம்பிக் காணே"

என்று வண்டைத் தூதாக அனுப்புகிறாள். வண்டு வரும் வரை பொறுக்காமல் நாரையையும் அனுப்புகிறாள்.

'செங்கால மட நாராய் இன்றே சென்று
திருக்கண்ணபுரம் புக்கு என்
செங்கண் மாலுக்கு
என் காதல் என் துணைவர்க்
குரைத்தியாகில்
இது ஒப்பது எமக்கு இன்பமில்லை.'

என்று நாரையை வேண்டுகிறாள். காகம் கரைந்தால் உற்றார் வருவார் என்று கருதி,

'உரையாரும் தோள் புகழ் உத்தமனை வரக்
கரையாய் காக்கைப் பிள்ளாய்'

என்று காகத்தை நோக்கிக் கரையும்படி வேண்டுகிறாள். பல்லியின் கொட்டுக்குப் பலவித நல்ல கெட்ட சகுனங்கள் உண்டாதலால்,

'மட்டார் குழல் மாதவனை வரக்
கொட்டாய் பல்லிக் குட்டி'

என்று பல்லியைக் கொட்டும்படி வேண்டுகிறாள்.

* * *

திருமங்கை நாயகி ஆற்றாமை விஞ்சி மடலேறத் துணிகிறாள். அகப்பொருள் துறைகளுள் பெண்கள் மடலூரும் வழக்கம் தமிழ் நூல்களில் கிடையாது. இதை ஆழ்வார் நாயகியே,

"............................ மானோக்கின்
அன்ன நடைய ரலரேற ஆடவர்மேல்
மன்னு மடலூரார் என்பதோர் வாசகமும்
தென்னுரையில் கேட்டறிவதுண்டு
அதனை யாம் தெளியோம்
மன்னு வடநெறியே வேண்டினோம்"

என்று பெண்கள் மடலேறும் வழக்கம் செய்யலாகாது என்ற பழைய தமிழ் வழக்கத்தைக் கூறிப் பின்னர் தாம் வடமொழி நூல்களில் கூறிய வழியைக் கைப்பற்றிப் போவதாகக் கூறுகிறார். ஆழ்வார் நாயகி இப்படி மடலேறல் தகுதியோ என்னில், தம்மை மறந்த ஞானிகளாகிய ஆழ்வார்கள் இறைவனோடு இரண்டறக் கலக்க எண்ணம் கொண்டு பிரபந்தங்களை அருளிச் செய்தனரே யன்றி எம்பெருமானுடைய ஸ்வரூபாதிகளை அழிக்கைக் கன்று. இதை ஞானம் கனிந்த நலம் எனலாம்.

திருமங்கை ஆழ்வாரைப் போலவே நம்மாழ்வார், குலசேகரர், பெரியாழ்வார் முதலியோர் நாயகி பாவத்தில் பாடல்கள் அருளிச் செய்துள்ளார்கள். ஆனால் இப்பாடல்களுக்கெல்லாம் பின்னின்று மிளிர்வது பக்தியே யன்றி வேறில்லை.

அஞ்சிறைய புட்கள் தமை
ஆழியாருக்கு நீ
ரஞ்செயலைச் சொல்லுமென விரந்து-விஞ்ச
நலங்கியதும் மாறனிங்கே நாயகியாய்த் தேடு
மலங்கியதும் பக்தி வளம்.

என்றார் மணவாள மாமுனிகள்.

ஞான தசை, பிரேம தசை என்றவற்றுள், முன்னதில் பக்தி அளவு பட்டிருக்கும். பின்னதில் அது வரம்பு கடந்திருக்கும். 'ஞான தசையில் தன் பேச்சு, பிரேம தசையில் பெண் பேச்சு' என்றபடி பிரேம தசையில் பக்தி அளவு கடந்து இருந்தாற் வழியில் பரிணமித்தது.

அகப்பொருள் துறைப் பாடல்கள் பக்தி நூல்களில் அமைந்திருக்கும் திறம் மிகவும் போற்றத்தக்கது. ஏனெனில், எம்பெருமானோடு ஜீவாத்மாக்கள் இணைந்து சிறப்பதற்கு அப்பாடல்கள் நல்ல வழியை எடுத்துக் காட்டுகின்றன. ஆழ்வார்களின் பக்திக் காதல் தான் திவ்யப் பிரபந்தம் என்ற வடிவுடன் சுடரொளி வீசுகிறது.



The

LOTUS MILLS LIMITED

SUNDARAPURAM - COIMBATORE

Offer their heartiest

GREETINGS

for a happy Deepavali

TO

ONE and ALL



ஆஸ்தான கவிஞர் தமது சுய சரித்திரத்தில் ஒரு நிகழ்ச்சியை வெகு ரஸமாக இக் கட்டுரையில் விவரிக்கிறார். ஒரு பெண்மணியின் உள்ளத்தில் பதி பக்தியும் பண பக்தியும் போராடுவதைப் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார்.

# ஊதுவத்திக் கிண்ணம் செய்த உதவி!

ஆஸ்தானகவிஞர் வே. ராமலிங்கம் பிள்ளை

ஆம், ஊதுவத்தி செருகி வைக்கிற ஒரு சாதாரண நிக்கல் கிண்ணம் சமய சஞ்சீவியைப் போல் எனக்கு உதவி செய்தது.

நாம் மிகவும் அலட்சியம் செய்துவிடத் தகுந்த அநேக சிறு நிகழ்ச்சிகள் சிற்சில சமயங்களில் ஆச்சரியப்படும்படியான காரியங்களைச் சாதித்துவிடுகின்றன. அந்த வெகு சிறிய நிகழ்ச்சி திடீரென்று உண்டாக்குகின்ற உணர்ச்சியினால் தீராத விவகாரங்கள் தீர்ந்துவிடுகின்றன; நடக்காத காரியம் நடந்துவிடுகிறது. மனிதனுக்குள் மறைந்து இருந்துகொண்டு சாதாரண சமயங்களில் செயலற்றுக் கிடக்கிற ஒரு நம்பிக்கையை அந்தச் சிறு நிகழ்ச்சி கிண்டிவிடுகிறது. அதனால் குருட்டு நம்பிக்கை என்று மறுக்கின்றவர்கள் கூட மறந்தாற்போல் அந்தத் திடீர் உணர்ச்சிக்கு ஆளாகி விடுகிறார்கள். தான் என்ற அகந்தைகூடத் தனக்குப் புலப்படாத ஒரு சக்திக்குத் தலை வணங்கி விடுகிறது.

என்னைப் பார்த்து ஒரு அம்மாள், "என்னய்யா! ஒங்களை ரொம்ப நல்ல மனுஷருன்னல்ல நினைச்சேன்! மட்டு மரியாதை யில்லாமெ நீங்க பேசறதைப் பார்த்தால் ரொம்ப அல்ப சாவுகாசமாக வல்ல இருக்குது! இப்படின்னு தெரிஞ்சிருந்தா இந்த நாட்டுக்குள்ளேயே விட்டிருக்க மாட்டமே!... நீங்க ஓவியம் நக்கறையுமாய்ப் படமெழுதி யிருக்கிற நேர்த்திக்கு, பேசின பேச்சுக்கு மேலே எதும் வேறே தரணுமா! ஏன்! நாறு பத்த பணந்தானே, போகட்டுமுன்னு அந்தச் செட்டியார் எழுதித் தந்துப்புட்டாரோ! அந்தச் செட்டியாரே வரட்டும், அவரோடு பேசிக்கொள்ளுங்கள். போங்க வெளியிலே......... டேய்! வெள்ளையா! இவுகளை வெளியே போகச் சொல்லிக் கதவைச் சாத்து!" என்று சொன்ன சமயத்தில்தான் அந்த ஊதுவத்திக் கிண்ணம் வந்து உதவி செய்தது.

அந்தக் கதையைக் கேளுங்கள்: (கதை உண்மையாக நடந்தது. ஆனாலும் இதில் சம்பந்தப்பட்ட ஊர்களையும் பேர்களையும் மாற்றி எழுதியிருக்கிறேன்.)

1918-ம் வருஷத்தில் அப்போது நம்மை ஆண்டு கொண்டிருந்த ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் மகுடாபிஷேகத்தை முன்னிட்டு டில்லியில் ஒரு தர்பார் நடந்தது. அதைப் போன்ற வைபவம் உலகில் எங்கும் நடந்ததில்லை.

அதில் ஒரு கண்காட்சியும் நடந்தது. அந்தக் கண் காட்சியில் நான் வரைந்த ஒரு பெரிய சித்திரமும் இடம் பெற்றது. அந்தப் படத்தைப் பாராட்டி எனக்கு ஒரு தங்கப் பதக்கம் பரிசளிக்கப்பட்டது. அந்தப் பதக்கத்தை டில்லி செங்கோட்டையில் நடந்த ஒரு விருந்தில் எனக்கு அளித்து, அலெக்ஸாண்டிரியா மகாராணியே என் உடையில் அலங்கரித்து விட்டார்கள். அதனால் அதுவரையிலும் விளம்பரமில்லாமல் இருந்த என் சித்திரத் தொழிலுக்குக் கிடைப்பதற்கரிய கிராக்கி ஏற்பட்டது.

அதனால் அதுவரையிலும் சித்திர வேலையைத் தொழிலாக நடத்தத் தயங்கிக் கொண்டிருந்த நான் மிக்க தைரியமடைந்தேன். பலருடைய இருப்பிடத்துக்கும் நானாகப் போய்ப் படம் எழுதிக் கொள்ளும்படி 'ஆர்டர்' வாங்க அலைந்தது மாறி, 'ஆர்டர்கள்' என்னைத் தேடிவர ஆரம்பித்தன. அதனால் பத்து, இருபது கிடைத்தாலும் போகட்டுமென்று படமெழுதிக் கொண்டிருந்த நான் நூறு, இருநூறு, அதற்கு மேலும் கேட்க ஆரம்பித்து நூறு ரூபாய்க்குக் குறைவான வேலைகளை வாங்குவதில்லை என்ற வழக்கம் உண்டாகிவிட்டது. என்னுடைய வேலை சிறந்ததோ அல்லவோ, டில்லியில் சக்ரவர்த்தியே மெச்சிப் பரிசளித்த சித்திரக்காரன் அல்லவா! அதற்காக நான் கேட்ட கூலி கிடைக்கலாயிற்று.

அந்தச் சமயத்தில் செட்டிமார் நாட்டில் திரு அண்ணாமலை செட்டியார் என்ற ஒரு தன வணிகர் இறந்து போனார். அந்த அண்ணாமலை செட்டியாருடைய குடும்பத்துக்கு மிகவும் வேண்டியவரான ஒருவர் நாமக்கல்லில் இருந்தார். அவர் எனக்கு மிகவும் பழக்கமானவர். நான் டில்லியில் பரிசுபெற்று நாமக்கல்லுக்கு வந்தபோது என்னைப் பாராட்டினவர்களில் அவரும் ஒருவர். அந்த நண்பர் செட்டிமார் நாட்டுக்குப் போனபோது அந்த அண்ணாமலை செட்டியாருடைய குடும்பத்தாரிடம் என்னைப் பற்றிப் பேசி, என்னைக்கொண்டு அந்த அண்ணாமலை செட்டியாரவர்களுடைய உருவப்படம் ஒன்றை வரைந்து வைத்துக்கொள்ள ஏற்பாடு செய்தார். அந்த நண்பர் என்னிடம் வந்து அதைச் சொல்லி அந்த வேலையை எனக்கு வாங்கிக் கொடுக்கச் செட்டிமார் நாட்டுக்கு என்னை அழைத்துச் சென்றார்.

அண்ணாமலை செட்டியாருடைய மக்கள் என்னை அன்புடன் வரவேற்று, செட்டியாருடைய சிறு 'போட்டோ' படம் ஒன்றை என்னிடம் தந்து, அதிலுள்ள உருவத்தில் போட்டோ பிடிப்பதற்கென்று அவர் அணிந்திருந்த தலைப்பாகையை எடுத்துவிட்டு, நிற்கிற மாதிரியாக, அவருடைய முழு உயரத்தில் எண்ணெய்ச் சாயத்தில் படம் எழுதித்தர வேணும் என்று சொன்னார்கள். நான் சம்மதித்தேன். அதற்கு என்ன விலை கொடுக்கவேணும் என்று கேட்டார்கள். அதுவரைக்கும் நான் அவ்வளவு பெரிய படம் வரைந்ததில்லை. அந்த அளவுள்ள படத்துக்கு மற்ற தொழிலாளர்கள் என்ன கேட்பார்கள் என்பதும் தெரியாது. எனக்குள் ஏற்பட்ட குழப்பத்தைச் சமாளித்துக்கொண்டு நான் அந்த வேலைக்கு ஆயிரம் ரூபாயும், மற்ற பிரயாணச் செலவுகளும் தரவேணும் என்று கேட்டேன். எந்தப் பொருளுக்கு என்ன விலை சொன்னாலும் அதை வாங்குகிறவர்கள் கொஞ்சமாவது விலையைக் குறைத்துக் கேட்காமல் வாங்கிவிடுவது வழக்கமில்லை யல்லவா! அந்தப் பழக்கத்தில் கொஞ்சம் பேரம் நடந்தது. கடைசியாக என்னைக் கூட்டிக் கொண்டு போன நண்பருடைய விருப்பத்தின்படி நான் அந்தப் படத்தை எழுநூற்று ஐம்பது ரூபாய்க்கு எழுதித்தர ஒருவிதமாய் ஒத்துக்கொண்டேன்.

மூன்று மாத காலம் அதே வேலையாக நாமக்கல்லில் அந்தப் படத்தைப் பூர்த்தி செய்து எடுத்துக்கொண்டு அண்ணாமலை செட்டியார் வீட்டிற்குப் போனேன். படம் அவர்களுக்கு முற்றிலும் திருப்தி

பளித்தது. படத்தை வீட்டின் முன் கட்டில் ஒரு நல்ல இடத்தில் பிரதிஷ்டை செய்து, அதற்கு 'வெல்வெட்' துணியில் 'சமிக்கி' வேலை செய்த படுதா ஒன்றை உடனே தயார் செய்து, அது வேண்டும் போது சுலபமாக விலக்கக் கூடிய முறையில் அமைத்தார்கள்.

எனக்கு ஒரு விருந்தும் நடத்தினார்கள். அந்த விருந்திற்கு அண்ணாமலை செட்டியாருக்கு நெருங்கியவர்களாக இருந்த பந்துமித்திரர்களையும் அழைத்தார்கள். விருந்துக்குப் பின் எல்லாரும் அந்தப் படத்துக்கு முன்னால் உட்கார்ந்திருக்கத் தாம்பூலம் நடந்தது. அந்தச் சமயத்தில் ஒரு வெள்ளித் தட்டத்தில் வேஷ்டி, புடவை, தேங்காய், பழம், புஷ்பம் முதலிய மங்கலப் பொருள்களோடு எழுநூற்றைம்பது ரூபாய்க்கு ஒரு உண்டியலும் ரொக்கம் நூறு ரூபாயும் வைத்து எனக்கு வழங்கப்பட்டது. நான் வந்தனம் சொல்லி வாங்கிக்கொண்டேன்.

அதுவரையிலும் படத்தின் படுதா விலக்கப்பட்டிருந்தது. அதன் பிறகு வீட்டுக்காரர் படத்தைப் படுதாவால் மூடினார். விருந்தினர்கள் விடைபெற்றுக் கொள்ளவேண்டிய சமயம். அந்தச் சமயத்தில் கறுத்துப் பருத்த ஒரு மனிதன் வெகு வேகமாக உள்ளே வந்து மேல் வேஷ்டியை இடுப்பில் சுற்றிக்கொண்டு வீட்டுக்காரருக்குக் கும்பிடு போட்டான்.

"அடா! கருப்பையா, எப்படா வந்தாய்!" என்றார் வீட்டுக்காரர்.

"இப்பத்தான் வாரேனுங்கோ" என்றான் கருப்பையா.

இந்தக் கருப்பையா என்பவன் படத்தில் இருக்கிற அண்ணாமலை செட்டியாருக்கு மிகவும் பிரியமான அந்தரங்க வேலைக்காரன். அளவற்ற எஜமான விசுவாசமுள்ளவன். சிறு பிராயத்திலிருந்தே அண்ணாமலைச் செட்டியார் குடும்பத்திலேயே வளர்ந்தவன். அண்ணாமலைச் செட்டியார் இவனிடம் மிக்க அன்பு வைத்திருந்தார். அவர் இறந்ததால் இவன் மிகவும் ஏக்கமடைந்து சொல்லாமல் சொந்த ஊருக்குப் போய் விட்டவன். பரம ஏழை. படிப்பே அறியாதவன். ஆனால் வெகு யோக்கியன்.

நிமிர்ந்து வந்து நின்ற கருப்பையாவைப் பார்த்து அண்ணாமலை செட்டியாரின் மூத்த மகனான வீட்டுக்காரர், "கருப்பையா! நம்ம பெரிய செட்டியார் வந்திருக்கிறாங்க, பார்த்தியா!" என்றார்.

"பெரிய செட்டியாரா!......எஜமானு! எங்கேங்கோ!" என்றான் கருப்பையா.

"இங்கே வா!" என்று கருப்பையாவைப் படத்தண்டையில் கூட்டிக்கொண்டு போய்ப் படுதாவை விலக்கினார்.

படத்தைப் பார்த்தான் கருப்பையா. கொஞ்ச நேரம் திகைத்து நின்று பேச வாய்வராமல் நின்று முக்காடி, "தர்ம ரூபமா நிக்கிறீங்களே!......சாமி!......" என்று சாஷ்டாங்கமாக விழுந்து கும்பிட்டு விட்டு, படத்திலிருந்த செட்டியாரின் பாதங்களைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக்கொண்டு எஜமானை நேரில் கண்டது போல் பிரமை பிரமைப் படத்தைப் பார்த்து மீண்டும் மீண்டும் கும்பிட்டான். கருப்பையாவின் தடுமாற்றம் கொஞ்சம் தணிந்த பின் அந்தச் செட்டியார் கருப்பையாவுக்கு என்னைக் காட்டி, "கருப்பையா! இந்த ஐயா தாண்டா இந்தப் படத்தை எழுதினது" என்றார். உடனே கருப்பையா, "இவுகளா! இவுக எழுதினதா இது! இவுகளே அந்தப் பிரமா இன்னுதான் சொல்லணும்" என்று என்னைக் கும்பிட்டான். "இந்தப் படம் எழுதினதற்கு இந்த ஐயாவுக்கு என்ன கொடுக்கலாம்! சொல், பார்ப்போம்" என்றார் செட்டியார்.

அதற்குக் கருப்பையா மிக்க முகமலர்ச்சியுடன் "இதுக்கு என்ன குடுத்தாலும் குடுக்கலாமுங்க. அஞ்சு குடுத்தாலும் குடுக்கலாம், பத்து குடுத்தாலும் குடுக்கலாம்; அம்பதுகூடக் குடுக்கலாமுங்க!" என்றான். உடனே அங்கிருந்தவர்கள் எல்லோருக்கும் வயிறு வெடித்து விடும் போலச் சிரிப்பு வந்துவிட்டது.

அப்படி நாங்கள் சிரித்துக்கொண்டிருந்த சமயத்தில் கருப்பையாவைத் தேடிக்கொண்டு ராமசாமி செட்டியார் என்ற ஒருவர் வெகு அவசரமாக அங்கே வந்தார்.

ராமசாமி செட்டியார் ஒரு பெரும் பணக்காரக் கனவான். அவர் படத்திலிருந்த அண்ணாமலைச் செட்டியாருக்கு நெருங்கிய நண்பர். அண்ணாமலை செட்டியார் உயிரோடிருந்தபோது அவருக்குமுன்னால் நடந்த ஒரு விவகாரப் பேச்சைப் பக்கத்திலிருந்து கேட்டுக்கொண்டிருந்தவன் கருப்பையா. அந்த விவகாரம் கட்சிச் சண்டையாக முற்றிக் கச்சேரிக்கும் போய் விட்டது. அந்தக் 'கேஸில்' ராமசாமி செட்டியாருடைய கட்சிக்காகச் சாட்சியம் சொல்லவேண்டியவன் கருப்பையா. அண்ணாமலை செட்டியார் இறந்துபோன துக்கத்தால் சொல்லாமல் எங்கேயோ போய் விட்ட கருப்பையாவை ராமசாமி செட்டியார் இதுவரை கண்டுபிடிக்க முடியவில்லை.

கருப்பையா வந்திருப்பதை யாரோ சொல்லி ராமசாமி செட்டியார் அவ்வளவு அவசரமாக அங்கே வந்தார். வீட்டுக்காரர் வரவேற்றதைக்கூடச் சரியாகக் கவனிக்காமல் ராமசாமி செட்டியாருடைய கண்கள் கருப்பையாவைத் தேடின. கருப்பையா படத்துக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்தான். கருப்பையாவைப் பார்த்த ராமசாமி செட்டியார் படத்தையும் பார்த்தார். படத்தைக் கண்டவுடன் கருப்பையாவைக்கூட மறந்துவிட்டு ராமசாமி செட்டியார் படத்தின் அருகிற் சென்று வெகு நேரம் பார்த்துவிட்டு, "எங்கே

எழுதினது! இந்தப் படம் அடையாளம் ரொம்ப சுத்தமாக அமைந்திருக்கிறது" என்றார்.

வீட்டுக்காரச் செட்டியார் என்னைச் சுட்டிக்காட்டி, "இவர் எழுதினது" என்றார்.

"இதற்கு என்ன கொடுத்தீர்கள்?" என்றார் ராமசாமி செட்டியார்.

"இதற்கா! இதற்கு என்ன கொடுக்கலாம் என்பதைப் பற்றித்தான் கருப்பையா சொல்லிக்கொண்டிருந்தான்" என்று கருப்பையா சொன்னதைச் சொல்லி மறுபடியும், "இதற்குப் படத்துக்காக எழுநூற்றைம்பதும், வழிச் செலவுக்காக நூறும் ஆக எண்ணூற்றைம்பதும் தந்திருக்கிறது" என்றார் வீட்டுக்காரர்.

"அப்படியானால் நம்ம சொக்கலிங்கம் செட்டியார் படத்தையும் இதே மாதிரி எழுதச் செய்யுங்கள். சிவகாமி ஆச்சி அடிக்கடி சொல்லுது. வேறு எங்கேயோ எழுதச் சொன்னது அடையாளம் கொஞ்சங்கூடச் சரியாயில்லே" என்றார் ராமசாமி செட்டியார்.

இப்படியாகச் சொக்கலிங்கம் செட்டியார் என்ற ஒருவருடைய படத்தை எழுத எனக்கு 'ஆர்டர்' தருவதாக ஏற்பாடு ஆகி முடிந்தது.

சொக்கலிங்கம் செட்டியார் என்பவர் பக்கத்து ஊரிலிருந்த ஒரு பணக்காரர். சுமார் இருபது லக்ஷம் ரூபாய் ஆஸ்தியுள்ளவர். ஒரு வருஷத்துக்கு முன்னால் இறந்து போனார். அவருடைய மனைவி சிவகாமி ஆச்சி. குழந்தையில்லை. உறவின் முறையில் சிவகாமி ஆச்சிக்கு வேண்டிய ஆலோசனைகளைச் சொல்லிக் காரியங்களைக் கவனித்துக் கொண்டு வந்தவர் ராமசாமி செட்டியார்.

கருப்பையாவைத் தேடி வந்த காரியத்தைப் பற்றிப் பேசி முடித்துக்கொண்டு சொக்கலிங்கம் செட்டியாருடைய 'போட்டோ' படத்துடன் மறுநாள் வருவதாகச் சொல்லிவிட்டு ராமசாமி செட்டியார் போய்விட்டார்.

சொன்னபடி மறுநாள் படத்துடன் வந்தார். படத்தை வாங்கிப் பார்த்தேன். அது சுமார் இருபத்தைந்து பேர்கள் அடங்கிய ஒரு 10 X 8 அங்குல 'குரூப் போட்டோ'. அதில் சட்டையணிந்து கொண்டு தலைப்பாகையுடன் உட்கார்ந்திருந்தார் சொக்கலிங்கம் செட்டியார். சட்டையையும் தலைப்பாகையையும் நீக்கிவிட்டு, உட்கார்ந்திருக்கிறதை நிற்கிற மாதிரியாக்கி அண்ணாமலை செட்டியார் படத்தைப் போலவே முழு அளவில் எழுதித்தரவேணும் என்று சொன்னார்கள்.

அண்ணாமலைச் செட்டியாருடைய 'போட்டோ' நிற்கிறமாதிரியே இருந்தது. சட்டை அணியவில்லை. தலைப்பாகையை மட்டுந்தான் நீக்க வேண்டியிருந்தது. மேலும் அது அவர் மட்டும் தனியாக இருக்கிற 'போட்டோ'. ஆனால் சொக்கலிங்கம் செட்டியார் இருந்த 'குரூப் போட்டோ' அப்படிப்பட்டது அல்ல. அதனால் அவர்கள் விரும்பினபடி மாற்றியமைத்து எழுதுவது மிகவும் கஷ்டமான காரியம். அதற்காக நான் ஆயிரத்து இருநூறு ரூபாயும், வழிச் செலவுக்கு நூற்றைம்பது ரூபாயும் தரவேணும் என்று கேட்டேன். ராமசாமி செட்டியார் நான் சொன்ன விஷயத்தை ஒத்துக்கொண்டார்.



ஆனால் அவர் சிவகாமி ஆச்சியிடம் படத்துக்கு 750-ம் வழிச்செலவுக்கு 100-ம் ஆக ரூ. 850-ம் என்று சொல்லிவிட்டு வந்திருப்பதாகவும், இருந்தாலும் மறுபடியும் பேசி ரூ. 1000 படத்திற்கும், செலவுக்கு ரூபாய் 100-ம் தரச் செய்வதாகச் சொன்னார். நான் சம்மதிக்கவில்லை. வெகு நேரம் பேசியபின் ராமசாமிச் செட்டியார் சொன்னதாவது:

"முன் ஒரு படம் சின்ன அளவில் ரூ. 250-க்கு எழுதப்பட்டது. அதில் கொஞ்சங்கூடச் சொக்கலிங்கம் செட்டியாரின் அடையாளமே அமையவில்லை. அதனால் இதுவும் அப்படியிருந்துவிட்டால் என்ன செய்வது என்று ஆச்சி பயப்படுது. நீங்கள் ரூ. 1000-க்கு ஒத்துக் கொண்டு எழுதுங்கள். படம் சரியாக இருந்தால் இன்னும் ரூ. 250 கூட்டித் தரச் செய்கிறேன்" என்றார். அதற்கு நான், "படம் திருப்திகரமாக இருந்தால் ரூ. 250-க்கு சிபார்சு செய்கிற தாங்கள் ரூ. 500-க்கு சிபார்சு செய்யக்கூடாதா?" என்றேன்.

எனக்குச் சிபார்சாக அண்ணாமலை செட்டியாருடைய குமாரர், "ஆமாம், அவ்வளவு பணக்கார ஆச்சி-புள்ளையா குட்டியா? —இன்னும் 500 ரூ. தந்தால்தான் என்ன! தரச் சொல்லுங்கள்" என்றார். அதன்படியே படம் நன்றாக இருந்தால் ரூ. 1500 தருவதென்றும், இல்லாவிட்டால் 1000 மட்டும் தான் வாங்கிக் கொள்ளவேணும் என்றும் வழிச் செலவுக்கு அண்ணாமலை செட்டியார் படத்துக்கு வாங்கிய ரூ. 100க்கு மேல் கேட்பது சரியல்ல என்றும் ராமசாமி செட்டியார் சொன்னார். நான் ஒத்துக் கொண்டேன். 'அட்வான்ஸ்' ரூ. 250 தரவேண்டும் என்று சொன்னேன். அதற்கு அவர் சம்மதித்தார்.

* * *

சுமார் ஐந்து மாத காலம் இடைவிடாது வேலை செய்து எனக்குத் திருப்தி உண்டாகிறவரையிலும் வெகுபாடுபட்டுப் படத்தை முடித்து எடுத்துக் கொண்டு ராமசாமி செட்டியார் வீட்டுக்குப் போனேன். அவர் வசிக்கும் இடமும் சிவகாமி ஆச்சி இருக்கும் இடமும் ஒன்றுக்கொன்று இரண்டு மைல் தூரத்திலுள்ள வெவ்வேறு ஊர்கள்.

சட்டத்தோடு சுமார் ஏழரை அடி உயரமும் நாலடி அகலமும் உள்ள அந்தப் படத்தை ராமசாமி செட்டியார் வீட்டிற்கு முன்னால் வண்டியை விட்டு இறக்கும்போதே, அக்கம் பக்கத்திலுள்ள பல பேர் அது என்னவென்று பார்க்கக் கூடிவிட்டார்கள். கட்டுகளை அவிழ்த்து ராமசாமி செட்டியார் வீட்டுக்குள் கூடத்தில் படம் சாய்த்து நிறுத்தப்பட்டது. உடனே அங்கே கூடியிருந்தவர்கள் எல்லோரும், "ஓ! சொக்கலிங்கம் செட்டியார்! பேஷ்! ரொம்பத் தெளிவாக இருக்கிறது" என்று படத்தைப் பாராட்டிப் பேசினார்கள். என் மனம் களிப்படைந்தது. பட்டபாடு

வீணாகவில்லை என்ற சந்தேகமும் என்னை நிம்மதிகொள்ள விடவில்லை.

ஆனால் அந்தச் சமயத்தில் ராமசாமி செட்டியார் அங்கில்லை. அவர் முன் சொல்லப்பட்ட கேசுக்காகத் தன் கட்சியின் சாட்சிகளையெல்லாம் கூட்டிக் கொண்டு தேவகோட்டை கச்சேரிக்குப் போக வேண்டிய அலுவலுக்காக வெளியே போயிருந்தார். சற்று நேரம் கழித்த பின் ராமசாமி செட்டியாரும் இன்னும் ஐந்தாறு பேர்களும் வந்தார்கள். கருப்பையாவும் வந்தான். வீட்டுக்குள் வேகமாக நுழைந்த ராமசாமி செட்டியார் என்னைக் கவனிக்காமல் அங்கிருந்த கும்பலையும் அவர்கள் ஒரு படத்தைச் சுற்றி நின்று கொண்டிருந்ததையும் கண்டார். கும்பலுக்குள் புகுந்து பக்கத்திற் சென்று வெகு நேரம் மௌனமாகப் படத்தைப் பார்த்துவிட்டு, "படம் கொண்டு வந்தது யார்!" என்று திரும்பினார். "நான் தான்" என்று அவருக்கு அருகிற் போனேன்.

"ஓ! வாங்கய்யா! படம் ரொம்பத் தெளிவாக அமைந்து போச்சு, சாவகாசமாக உங்களோடு பேச எனக்கு நேரமில்லையே என்று ரொம்ப வருத்தப்படுகிறேன். ஒரு கேஸ் விஷயமாக என் சாட்சிகளையெல்லாம் கூட்டிக் கொண்டு தேவகோட்டை வக்கீல் வீட்டுக்கு உடனே போக வேண்டியிருக்கிறது. காலைக்கு விசாரணை" என்றார்.

"தேவகோட்டைக்குப் போய்விட்டு வாருங்கள். நான் இங்கேயே இருக்கிறேன்" என்றேன்.

"கேஸ் தொடர்ந்து நடந்தால் நான் நாலைந்து நாள் அங்கேயே தங்க வேண்டி நேரிட்டாலும் நேரும். நான் சிவகாமி ஆச்சியிடம் எல்லாம் விவரமாகச் சொல்லியிருக்கிறேன். உங்களிடம் ஆச்சிக்கு ஒரு கடிதம் தருகிறேன். படத்தை அங்கே கொண்டு போய்க் கொடுத்து விட்டுப் பணத்தை வாங்கிக் கொள்ளுங்கள். சௌகரியப்பட்டால் சந்திக்கலாம்" என்றார்.

நான் ஒத்துக் கொண்டேன். உடனே அவர் உள்ளே போய் ஒரு கடிதம் எழுதி, அதை உறையில் போட்டு ஒட்டிக் கொண்டு வந்து காட்டினார். அதில் படம் வெகு நன்றாக இருப்பதாகவும், பேசியபடி படத்துக்கு ரூ. 1500-ம் செலவுக்கு ரூ. 100-ம் தந்துவிட வேணும் என்றும், அதில் அட்வான்ஸ் தந்த ரூ. 250-ம் நீக்கி மீதி ரூ. 1350-ம் வேஷ்டி புடவை தாம்பூலத்துடன் தரவேணும் என்றும், எழுதியிருந்தார்.

அந்தக் கடிதத்தை என்னிடம் தந்தது மட்டுமல்லாமல் ராமசாமி செட்டியார் அவருடைய வேலைக்காரர்களில் ஒருவனைக் கூப்பிட்டு முன்னாலேயே போய்ச் சிவகாமி ஆச்சியிடம் படம் வந்திருக்கிற தகவல் சொல்லும்படி அனுப்பினார்.

மறுநாள் காலையில் படத்துடன் சிவகாமி ஆச்சியின் வீட்டுக்குப் போனேன். அந்த வீடு சொக்கலிங்கம் செட்டியார் இறப்பதற்குச் சில மாதங்களுக்கு முன்னால் இரண்டு லக்ஷம் ரூபாய் செலவில் கட்டப்பட்ட அழகான கட்டிடம். அந்த வீட்டிலுள்ள ஒரு அலங்காரமான கூடத்தில் படத்தை அவிழ்த்துச் சுவர் ஓரமாக நிறுத்தினேன். படத்தைப் பார்த்த உடன் சிவகாமி ஆச்சி கணவனை நேரிற் கண்டு விட்டது போல் விழுந்து விழுந்து பல முறை கும்பிட்டுவிட்டு, முன்னாலேயே தயார் செய்து வைத்திருந்த ஒரு பெரிய பூமாலையைப் படத்துக்குச் சூட்டச் செய்து தூபதீபம் காட்டிக் கற்பூரம் கொளுத்தி வணங்கினார். அதன் பிறகு என்னைப் பார்த்து, "நேற்றே ராமசாமி செட்டியார் சொல்லியனுப்பினாக. உங்களுக்கு விருந்து செய்யச் சமையல் ஆகுது. சாப்பிட்டு விட்டுச் சந்தோஷமாகப் போகலாம், இருங்கள்" என்று அந்த ஆச்சி வெகு உபசாரத்தோடு சொன்னார்கள். அருகிருந்த ஒரு அறையைக் காட்டி அங்கே எங்களைத் தங்கச் சொன்னார்கள். அப்படியே ஒத்துக் கொண்டு அறைக்குள் போகுமுன்னும் ராமசாமி செட்டியார் கொடுத்திருந்த கடிதத்தை ஆச்சியிடம் கொடுத்தேன். அந்த அறை கட்டில், மெத்தை, சோபா, மேஜை, நாற்காலிகள் முதலான நவீன அமைப்புகள் உள்ள அறை. அதில் நானும் என்னுடைய வேலையாள் ஒருவனும் எனக்குத் துணை வந்த வேறொரு நண்பரும் ஓய்வு கொண்டோம்.

சிறிது நேரத்தில் சிவகாமி ஆச்சி அங்கே வந்து, "இதே அளவில் எங்கள் அக்கச்சி வீட்டுச் செட்டியார் படம் ஒன்றும், எங்கள் அப்பச்சி படம் ஒன்றும் நீங்கள் எழுதித் தர வேணும்" என்றார்.

"ஆகா, அதற்கென்ன, எழுதித் தருகிறேன். அதுதானே என் தொழில்! உங்கள் ஆதரவைத் தேடித்தானே இவ்வளவு தூரம் வந்திருக்கிறேன்" என்றேன்.

"அதுக்கப்புறம் இன்னும் இரண்டு மூன்று வேலைகூட நான் உங்களுக்கு வாங்கித்தரலாமென்றிருக்கிறேன்" என்றார் சிவகாமி ஆச்சி.

"ரொம்ப சந்தோஷம். உங்கள் தயவிருந்தால் எனக்கு வேலைக்கு என்ன குறைச்சல்!" என்றேன்.

"ஆனால் நீங்கள் எங்களுக்கெல்லாம் கொஞ்சம் சல்லிசாகச் செய்து கொடுக்க வேணும்" என்றார் அந்த ஆச்சி.

"அதற்கென்ன! கூடியமட்டும் சல்லிசாகவே செய்து கொடுக்கிறேன்" என்றேன். அதைக் கேட்டு மிக்க சந்தோஷம் தெரிவித்துவிட்டு எனக்கு அநேக 'ஆர்டர்'கள் வாங்கித் தரப்போவதாகப் பேசி விட்டுப் போய்விட்டார்கள். சிறிது நேரம் சென்றபின் பக்ஷணங்கள், பழங்கள், பாயசத்துடன் நல்ல விருந்து நடந்தது.

சாப்பாட்டுக்குப் பிறகு சொக்கலிங்கம் செட்டியாருடைய படத்துக்கு முன்னால் ரத்தினக் கம்பளம் விரிக்கப்பட்டு அதன் மேல் சந்தனம், தாம்பூலம் முதலானவை வழங்கப்பட்டன. அதன் பிறகு ஒரு தட்டத்தில் தேங்காய், பழம், புஷ்பம், வெற்றிலை பாக்கு முதலியவற்றுடன் ஜரிகை வேஷ்டியும் பட்டுப் புடவையும் வைத்து ஆச்சி அவர்களே கொண்டுவந்து என் அருகில் வைத்தார்கள். மறுபடியும் உள்ளே சென்று வெற்றிலை பாக்குக்கு மேல் சுற்றிலும் வெள்ளி நாணயங்கள் பரப்பிய ஒரு தாம்பாளத்தை ஏந்திவந்து படத்துக்குத் தரவேண்டிய பணமென்று என்னிடம் தந்தார்கள். 'தரும்போதே, "நீங்கள் ரொம்ப நல்ல மாதிரி என்று ராமசாமி செட்டியார் சொன்னாக. இந்த இடத்தை உங்கள் சொந்த வீடு மாதிரி எண்ணி அடிக்கடி வரப்போக இருக்கவேணும். நான் சொன்ன வேலைகளையெல்லாம் உங்களுக்கு வாங்கித் தருகிறேன்" என்று மிகவும் முகமலர்ச்சியோடு சொன்னார்கள்.

நானும் வெகு சந்தோஷத்தோடு அந்தத் தாம்பாளத்தை வாங்கி எனக்கு முன்னால் வைத்துக்கொண்டு அதிலிருந்த ரூபாய்களை எண்ண ஆரம்பித்தேன். நான் எண்ணுவதைப் பார்த்துக்கொண்டே ஆச்சி பக்கத்தில் நின்றார்கள். ரூபாயை எண்ணிக்கொண்டு போகப்போக என்னுடைய பூரிப்பும் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்துகொண்டே போய்க் கடைசியில் மனத்தில் பெரிய புகைச்சல் உண்டாகிவிட்டது.

அந்தத் தட்டில் 600 ரூபாய்களே இருந்தன. நான் மிகவும் ஏமாற்றத்துடன், "அறுநூறு ரூபாய்தானே இருக்குது" என்றேன்.

"ஆமாம். சந்தோஷமாக எடுத்துக் கொள்ளுங்கள். எங்களுக்கெல்லாம் நீங்கள் சல்லிசாகத்தான் எழுதிக் கொடுக்க வேணும்" என்றார் ஆச்சி.

எனக்கு வருத்தமும் கோபமும் மாறி மாறி வந்து இன்னது சொல்வதென்று தெரியாமல் சிறிது நேரம் திகைத்துப் போனேன். ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு, "என்ன அம்மா, உங்களைப் போன்ற சீமான் வீட்டு ஆச்சிகள் இப்படிச் செய்யலாமா! மூன்று மாதம் இதே வேலையாக வெகு பாடுபட்டு வேலை செய்து தந்ததற்கு இதுதானா வெகுமதி! இப்படி நடந்துகொள்வது உங்கள் கௌரவத்துக்குக் கொஞ்சம்கூட சரியில்லை. பேசின படி வரவேண்டியது இன்னும் ரூ. 1350 இருக்க, நீங்கள் ரூ. 600 கொடுத்து ஏய்த்துவிடப் பார்க்கிறீர்களே" என்றேன்.

"அண்ணுமலை செட்டியார் படத்துக்கு ரூபா எவ்வளவு வாங்கினீங்க!" என்று கேட்டார் ஆச்சி.

"அண்ணுமலை செட்டியார் படத்துக்கு ரூ. 850 தந்தார்கள். ஆனால்......" என்று நான் பேச்சை முடிப்பதற்குள், "பின் என்ன! நானும் ரூபாய் 850 தந்திருக்கிறேனல்லவா! என்னய்யா! அவுகளுக்கு ஒரு நியாயம், எங்களுக்கு ஒரு நியாயமா! நீங்களே சொல்லுங்கள்" என்றார்.

"அண்ணுமலை செட்டியார் படம் வேறே, இந்தப் படம் வேறே. இதை வெகு சின்ன படத்திலிருந்து ரொம்ப கஷ்டப்பட்டு முற்றிலும் மாற்றி எழுத வேண்டியிருந்தது. ஆர்டர் வாங்கும் போதே அந்தக் கஷ்டங்களையெல்லாம் சொல்லித்தான் ஒப்பந்தம் போடப்பட்டது. நீங்களெல்லாம் இப்படிச் செய்தால் என்னுடைய வித்தை எப்படி விருத்தி யாகும்!" என்றேன்.

"என்னய்யா, இவ்வளவு அழுத்தம் பார்க்கிறீங்களே! இங்கே கொஞ்சம் குறைச்சு வாங்கிக்க மாட்டேங்கிறீங்களே, இன்னும் மத்த வேலைகளெல்லாம் எப்படி உங்களுக்கு வாங்கித்தாரது!" என்றார்.

சாப்பாட்டுக்கு முன்னால் அந்த ஆச்சி என்னிடத்தில் வந்து பல ஆர்டர்கள் வாங்கித் தருவதாகச் சொன்னதெல்லாம் இதற்காகத்தான் என்று எனக்கு அப்போதுதான் தெரிந்தது.

"மற்றப் படங்களுக்கு வேணுமானால் குறைத்துப் பேசிக்கொள்ளலாம்; இதற்குப் பேசினபடி கொடுத்து விடுங்கள்" என்றேன்.

"விடமாட்டிங்க போலிருக்குதே. சரி பேசினபடியே வாங்கிக்கொள்ளுங்கய்யா" என்று விரவென்று உள்ளே போய் மறுபடியும் ரூ. 150 கொண்டுவந்து தட்டில் வைத்து, "பேசினபடி ஆயிரம் ரூபாயும் தந்தாச்சு; இனிமேல் ஒன்றும் தகராறு கூடாது. சந்தோஷமாக எடுத்துக்கிட்டு போயிட்டு வாங்க" என்றார்.

"அம்மா! என்ன இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்! படத்துக்கு ஆயிரம் ரூபாயும், வழிச் செலவுக்கு நூறு ரூபாயும் தருவது என்றும், படம் திருப்தியாக இருந்தால் இன்னும் ஐந்நூறும் சேர்த்துத் தருவதென்றும் ராமசாமி செட்டியார்தான் பேசினார். அதே மாதிரி தானே கடிதத்திலும் எழுதித் தந்திருக்கிறார். கடிதத்தைப் பார்க்கவில்லையா!" என்றேன்.

"ராமசாமி செட்டியாருக்கு என்ன பேச்சு! அவர் எதை வேணுமானாலும் எழுதலாம். பணம் கொடுக்கிறது நானு, ராமசாமி செட்டியாரா!" என்றார்.

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. ராமசாமி செட்டியார்தான் பேசினவர். 'அட்வான்ஸ்' தந்தவரும் அவர்தான். அவர் படம் சரியாக இருக்கிறதென்று ஒத்துக்கொண்டு உங்களுக்குக் கடிதம் தந்திருக்கிறார். கடிதத்திலுள்ளபடி தந்து விடவேணும். ஒரு செப்புச் சல்லி குறைந்தாலும் நான் ஒத்துக்கொள்ள மாட்டேன். இப்படி நீங்கள் கண்ணியக் குறைவாக நடந்து கொள்ளக்கூடியவரென்று தெரிந்திருந்தால் நான் இங்கே வந்திருக்கமாட்டேன்" என்றேன்.

ஆச்சிக்குக் கோபம் வந்துவிட்டது. "என்னய்யா, கண்ணியக் கொறவு கண்டுபிட்டிங்க! படம் சரியா இருந்தாத்தானே இன்னும் ஐந்நூறு தருவதுன்னு பேச்சு. படம் சரியாயிருக்குதுன்னு மத்தவங்க சொல்லிப்பிட்டால் நான் ஒத்துக்குவேனு! படம் எனக்குச் சரியாயில்லே. எங்க செட்டியார் வெள்ளைக்கார பொம்மையாட்டம் செக்கச் செவேலுன்னு இருப்பாங்க. இந்தப் படத்திலே ஒரு பக்கக் கன்னத்திலும் கழுத்திலும் கரி அப்பினாப்பிலே கன்னங்கரேலுன்னிருக்குது! அவுங்க நெத்தியிலே சந்தனப் பொட்டுக்கு மேலே வைக்கிற குங்குமப் பொட்டு இவ்வளவு பெரிசா இருக்கவே இருக்காது! அவுங்க தும்பை வெள்ளையான வெளுத்த வேட்டிதான் கட்டுவாங்க.........நீங்க எழுதியிருக்கிற வேட்டி அழுக்குத் துணியாட்டம் கறுப்பு கறுப்பாக அப்பி இருக்குது! அவுங்க போடுகிறது ஒம்பது கல் வைர மோதிரம். நீங்கள் எழுதியிருக்கிற மோதிரத்திலே ஒன்பது கல்லும் சரியாத் தெரியவேயில்லே! மேஜையிலே ரெண்டு கால்தான் தெரியுது! நாற்காலியிலே ஒரே கால்தான் இருக்குது. அவுக போட்டிருந்த கெவுடு ஆறுமுகமுள்ள உத்திராக்ஷம். அதிலே ரெண்டு முகந்தான் தெரியுது!......படம் சரியா இருக்குதுன்னு ராமசாமி செட்டியார் சொல்லிப்பிட்டா நான் ஒத்துக்குவேனு!......" என்று ஆச்சி படத்தில் பல குற்றங்கள் சொன்னார்கள்.

அதைக் கேட்ட எங்களுக்கெல்லாம் சிரிப்பு வந்து விட்டது. சிரிப்பையும் கோபத்தையும் அடக்கிக்கொண்டு நான், "அம்மா, பணத்துக்காக இப்படியெல்லாம் மட்டமான பேச்சுகள் பேச வேண்டாம்" என்றேன். 'மட்டமான பேச்சு' என்று நான் சொன்னதில் அந்த அம்மாளுக்கு அதிகக் கோபம் வந்துவிட்டது. "என்னய்யா, மட்டம் கிட்டமுன்னு பேசுறீங்க! ஒங்களை ரொம்ப நல்ல மனுசருன்னல்ல நான் நெனைச்சேன். மட்டு மரியாதையில்லாமல் நீங்க பேசுறதைப் பார்த்தால் ரொம்ப அப்ப சாவுகாசமாகவல்ல இருக்குது!......டேய் வெள்ளையா! இவுகளை வெளியே போகச் சொல்லிக் கதவைச் சாத்து" என்று ஆச்சி இரைந்தார்கள்.

"சரி, நான் அந்தச் செட்டியாரோடேயே பேசிக்கொள்ளுகிறேன்...... டேய் ராசா! தூக்கு படத்தை. இந்தப் படத்தைக் கடைத் தெருவில் காட்டி நாலு பேருக்கு இந்த நியாயத்தைச் சொல்லுவோம்......படத்தைக் கட்டித் தூக்குங்கள்!" என்றேன்.

"படத்தைத் தொடப்படாது" என்றார் ஆச்சி.

"ஏன், பணமா கொட்டிக் கொடுத்து விட்டீர்கள் படத்துக்கு! உங்கள் பணத்தை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள். என் படத்தை நான் எடுத்துக்கொண்டு போகிறேன். அதைத்தடுக்க உங்களுக்கு என்ன நியாயம் இருக்கிறதம்மா!" என்று சொல்லிவிட்டு அந்தப் படத்தைக் கட்டிக் கொண்டுவந்த பாய்கள், கயிறுகள் முதலியவற்றை (அவைகள் பக்கத்தில் ஒரு மூலையில் கிடந்தன) நானே எடுத்து வந்து படத்துக்குப் பக்கத்தில் போட்டுவிட்டு என்னுடன் வந்திருந்த நண்பர்களைப் பார்த்துப் படத்தைத் தூக்கிக்கொண்டு போகக் கயிறுகளைக் கட்டிக்கொண்டு வரச் சொன்னேன். படத்தை நிச்சயமாக எடுத்துக்கொண்டுபோய் விடுவேன் என்பதைக் கண்டபின் ஆச்சிக்குக் கொஞ்சம் அச்சம் வந்து விட்டது. கோபம் தணிந்த குரலில், "என்னய்யா, இவ்வளவு பிடிவாதம் செய்றீங்க. கொண்டாந்த படத்தைத் திருப்பித் தூக்கிக்கொண்டுபோறது அவலச்சணம்" என்றார்.

"ஆமாம், நீங்கள் செய்கிறது வெகு லக்ஷணம்; நான் செய்வதுதான் அவலக்ஷணம்!" என்றேன்.

"போனாப்போகுது, இன்னும் நூறு ரூபாய் தந்துவிடுகிறேன். படத்தை எடுக்காதிங்க" என்றார்.

"படந்தான் உங்களுக்குப் பிடிக்கவில்லையே, அதற்கென்னத்துக்கு இன்னும் நூறு ரூபாய் தருகிறீர்கள்! வேண்டாம், வேண்டாம். போதும், உங்கள் செட்டியாரை இவ்வளவு பாடுபட்டுப் படம் எழுதி நான் அடைந்த பலன். உங்கள் செட்டியாருக்கு நீங்கள் செய்கிற மரியாதை வெகு லக்ஷணமாக இருக்கிறது. இந்த அநியாயத்தைப் பார்த்து உங்கள் செட்டியாருடைய ஆத்மா இந்நேரம் துடித்துக்கொண்டிருக்கும்" என்று வெகு ஆத்திரத்தோடு சொன்னேன்.

இந்தச் சமயத்தில் செட்டியாருடைய படத்துக்கு முன்னால் தரையில் 'கணீர்' என்று ஒரு கனத்த ஓசை உண்டாகி, 'கண கண'வென்று உருண்டது. அங்கிருந்த எல்லோரும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தோம்.

உடனே நான் வெகு சமயோசிதமாக, "அம்மா, பார்த்தீர்களா! செட்டியார் என்ன சொல்லுகிறார், கேளுங்கள். இவ்வளவு பெரிய ஆஸ்தியை உங்களுக்கு ஏகபோகமாக விட்டுப்போன அந்தச் செட்டியாருக்கு நீங்கள் செய்கிற அநியாயத்தைப் பொறுக்காமல் அவருடைய ஆத்மா ரொம்பக் கோபித்துக் கொள்ளுகிறது. அந்தக் கோபத்தின் அடையாளந்தான் அந்த ஓசை. உங்கள் செட்டியாருடைய கோபத்துக்கும் சாபத்துக்கும் நீங்கள் ஆளாகக் கூடாது" என்றேன்.

ஆச்சியினுடைய முகம் அச்சத்தால் வெளுத்து விகாரமடைந்துவிட்டது. கொஞ்ச நேரம் விழித்து விழித்துப் பார்த்துவிட்டுத் திடீரென்று படத்துக்கு முன்னால் விழுந்து கும்பிட்டு, "ஐயா, கோவிச்சிக்காதிங்க. கொஞ்சம் பொறுங்கள். எல்லாரும் இருங்கள்" என்று எங்களை உட்காரச் சொல்லிவிட்டு உள்ளே போய்ச் சிறிது நேரத்துக்கெல்லாம் வெளியில் வந்து, "இந்தாங்கையா, ராமசாமி செட்டியார் கடுதாசியில் எழுதியிருக்கிறபடி பூராப் பணமும் இருக்கிறது. சந்தோஷமா எடுத்துக் கொள்ளுங்கள்" என்று பணத்தை என்னிடத்தில் கொடுத்தார்கள். எண்ணிப் பார்த்தேன். எல்லாம் சேர்த்து வரவேண்டிய பாக்கி 1350 ரூபாய்களும் வந்து விட்டன.

நான் என் வந்தனத்தைத் தெரிவித்து, "அம்மா, இந்தப் பணம் உங்களுக்கு ஒரு துரும்பு. ஆனால் எனக்கு இது மகவும் பெரியது. நீங்கள் மனசு வைத்தால் எவ்வளவு வேணுமானாலும் செய்யலாம். ராமசாமி செட்டியார் பேசினபடி வியாபார முறையில் வரவேண்டியது வந்துவிட்டது. அதற்குமேல் கேட்க நியாயமில்லை. இருந்தாலும் படம் உங்கள் செட்டியார் படம். பணம் உங்கள் பணம். உங்களை நாடி நான் உங்கள் வாசலுக்கு வந்த சந்தோஷத்துக்காக நீங்கள் ஒன்றும் எனக்கு வெகுமதி தரவில்லையே" என்றேன்.

உடனே அந்த ஆச்சி "நல்லாத் தருகிறேன்" என்று மீண்டும் உள்ளே போய் நூறு ரூபாய் நோட்டு ஒன்றைக் கொண்டு வந்து கொடுத்தார்கள். அதற்காகத் தனி வந்தனம் சொல்லி, ஆச்சியைப் புகழ்ந்துவிட்டு, புடவை, வேஷ்டி, பழம், தேங்காய், பாக்கு, வெற்றிலை, பணம் முதலிய எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு வெகு சந்தோஷமாக விடைபெற்றுக்கொண்டோம்.

படத்துக்கு முன்னால் தரையில் உண்டான ஓசை வேறொன்றுமில்லை. படத்துக்கு மாலையிட்டு அலங்காரம் செய்து தூபதீபம் காட்டியபோது, படத்துக்கு இரண்டு பக்கத்திலும் இரண்டு பெரிய 'நிக்கல்' ஊதுவத்தி 'ஸ்டாண்டுகள்' புகையும் ஊதுவத்திகளோடு வைக்கப் பட்டன. அவற்றில் ஒன்று ஜன்னலுக்குப் பக்கமாக இருந்தது. ஜன்னலுக்கு நேராக ஒரு அலங்காரப் படுதா தொங்கிக் கொண்டிருந்தது. அந்தப் படுதா வேகமாக அடித்த காற்றில் ஊதுவத்திக் கிண்ணத்தின்மேல் மோதி அதைத் தள்ளிவிட்டது. கிண்ணம் உயரத்திலிருந்து வேகமாகத் தள்ளப்பட்டு விழுந்ததால் 'கணீர்' என்று விழுந்து 'கணகண' என்று உருண்டது.

இப்படியாக ஊதுவத்திக் கிண்ணம் ஒன்று எனக்குச் சமய சஞ்சீவியைப் போல் உதவி செய்தது.

# ஆவேசப் பிரசங்கம்!


சகோதர சகோதரிகளே! இன்று தீபாவளி நாளாகும்! ஆகையால் எல்லோரும் ஸ்நானம் செய்து புது உடை உடுத்துச் சந்தோஷமாக இருக்கின்றீர்கள்!
1


ஏன்?...அந்தப் பாவி நரகாசுரனை ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா கொன்று உலகத்தைக் காப்பாற்றினார் என்பதற்காகத்தான்!
2


அதே மாதிரி இந்த உணவுக் கஷ்டம் என்ற அரக்கனைப் பொதுஜனம் என்ற கிருஷ்ணர் கொன்று உலகத்தைக் காப்பாற்றுவாராக!
3


'என்னடாது—தீபாவளியும் அதுவுமா—வயித்துப்பாட்டைப் பத்தி தானா பேசணும்?'... அப்படீன்னு நினைக்காதீங்க!... முக்கியமாக இப்போது நாம் உடனே செய்ய வேண்டியது என்ன?


நிலத்தை உழணும்; பயிரிடணும்; உற்பத்தியைப் பெருக்கணும், பெருக்கணும் பெருக்கியே ஆகணும்னு நான் சொல்றேன்!
5


இல்லாட்டி...பட்டினி கிடந்துக்கிட்டே இருக்க வேண்டியது தான்; ஆமா.. சகோதரர்களே...மறுபடியும் சொல்றேன்......
6


உற்பத்தியைப் பெருக்கணும்... பெருக்கணும்... பெருக்கியே ஆகணும்!
7


...அடிச்சுச் சொல்றேன்... பெருக்கியே ஆகணும்!
8


...ஆமா!...
9

மங்களகரமான தீபாவளிக்கு
மகோன்னதமான பிலிம் ரிக்கார்டுகள்!
தமிழ்
















ஹிந்தி
"பர்ஸாத்" "துலாரி"
"பாபுல்" "மஹால்" "ஷாயெர்"




"ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

தி கிராமபோன் கம்பெனி லிமிடெட், கல்கத்தா - பம்பாய் - மதராஸ் - டில்லி

இந்திய மூலதனம்! முதல்தர மில்லினர்!! இந்திய தொழிற்சாலை!!!

# ஸ்ரீ கார்த்திகேயா மில்ஸ் லிமிடெட்

சிங்காநெல்லூர் போஸ்டு [ ஸ்தாபிதம் : 1949 ] கோயமுத்தூர்



ஸ்தாபகர்
ஸ்ரீமான் P. S. G. கெங்கா நாயுடு அவர்கள்

●

டைரக்டர்கள் :

ஸ்ரீ G. ராமசாமி நாயுடு (மானேஜிங் டைரக்டர்)
ஸ்ரீ G. கோவிந்தசாமி நாயுடு
ஸ்ரீ R. வெங்கடேசலு நாயுடு

●

ரிங் கதிர்கள் : 10,912 - இங்கிலிஷ் : 6,160
கோவை டெக்ஸ்டைல் கம்பெனி ரிங் கதிர்கள் : 4,752

நமது சென்னை ராஜதானியில் சேலம், வட ஆற்காடு ( குடியேற்றம் ) கோவை ஜில்லா நெசவாளருக்குத் தேவையான 36 நெ. 40 நெ. 80 நெ. முதலான உயர்ந்த ரக பாவு நூல் தயார் செய்து எங்கள் டிப்போக்கள் மூலம் ஜரிகாரர்களுக்கு நேரடியாக விநியோகம் செய்து வருகிறோம்.

40 நெ. ஸ்டேபிள் நூலும் தயார் செய்கிறோம்

தேவையுள்ளவர்கள் விண்ணப்பித்துக் கொள்ளவும்

இந்தியத் தொழிலை ஆதரியுங்கள்!

# "அதிக உணவு உற்பத்தியே"

## நம் தேசத்தின் மிக அத்யாவசியமான தேவை!



## இதற்கு போர்ட்ஸன் மேஜர் டிராக்டர்கள்

### உங்களுக்கு உதவியளிக்கும்!

வேலைக்கு ஏற்ற வன்மை, செய்நேர்த்தி, சிக்கனம் ஆகிய குணங்களே போர்ட்ஸன் மேஜர் டிராக்டர்களை நவீன விவசாயத் தொழிலுக்கு மிகச் சிறந்த சாதனமாக இன்று விளங்கச் செய்துள்ளன. இவைகள் உற்பத்தி செய்யப்படும் இங்கிலாந்தில் இரண்டாவது உலக மகா யுத்தத்தின்போது ஏற்பட்ட உணவு நெருக்கடியை 150,000க்கு மேற்பட்ட போர்ட்ஸன் டிராக்டர்களே தவிர்த்தெறிந்தன. இன்றும் இவை உலகின்கண் பல்வேறு பாகங்களிலும் எத்தனையோ வித நிலம், பூமிகளில் வெவ்வேறுவித மாறுபட்ட சீதோஷ்ண ஸ்திதிகளிலும் உபயோகிக்கப்பட்டு உலக உணவுப் பிரச்னையையே ஒழிக்கப் பயன்பட்டு வருகின்றன. தரத்தில் சிறந்ததோடல்லாமல் விலையிலும் மிகக் குறைவானது மேஜர் டிராக்டர்தான். நிர்வகிக்கும் செலவு மிகக் குறைவு. யந்திர ஸ்பேர் சாமான்களின் விலையும் ரிப்பேர் செலவும் குறைந்தபக்ஷமாக நிர்ணயிக்கப்பட்டுள்ளன. விவசாய சம்பந்தமான எல்லா சிறந்த உபகரணங்களுடன் இன்று மேஜரே முன்னணியில் நிற்கிறது. போர்ட்ஸன் முறை வேளாண்மை வெற்றியே!

This SIGN



MEANS

SALES with SERVICE

**போர்டு மோட்டார் கம்பெனி ஆப் இந்தியா லிட்.**

பம்பாய்

•

**ஸிம்ப்ஸன் & கம்பெனி லிமிடெட்**

போர்ட்ஸன் மேஜர் டிராக்டர் டீலர்ஸ்

**202-203, மவுண்ட் ரோடு :: சென்னை-2**

கிளைகள்: பெங்களூர், உதகமண்டலம், திருச்சிராப்பள்ளி, ஹைதராபாத் (டெக்கான்)

டிப்போ: கோயமுத்தூர்

# எங்கும் ஒளிமயம்!

**கனம் எம். பக்தவத்ஸலம்**

தீபாவளியன்று பிரகாசிக்கும் தீபாலங்காரங்களை நோக்கும் போது, நம் எண்ணம் எங்கெங்கோ செல்கின்றது. தீபம், மங்கள சரத்தின் சின்னம்; தூய்மையின் தூதன்; ஜீவ ஒளியின் உருவகம். அது மட்டுமா! தீபத்தின் வரலாற்றை ஆராய்ந்தால், மனித நாகரிகத்தின் சரித்திரத்தையே ஒருவாறு அறியமுடியும். தீபத்தை உண்டாக்கும் சாதனங்கள் காலப் போக்கில் மாறி வந்துள்ளன. மனிதன் ஆதி காலத்தில் கற்களிலிருந்து தீப்பொறியுண்டாக்கி, அதைக் கொள்ளிக்கட்டையில் வைத்திருந்தது முதல், பலவித எண்ணெய் விளக்குகள் கண்டது, மண்ணெண்ணெயைக் கண்டு பிடித்தது, மின்சார சக்தியை உண்டாக்கி அதன் மூலம் விளக்குகள் ஏற்றியது வரையில், பல நிகழ்ச்சிகள் நடைபெற்றுள்ளன. இவை, மனித வர்க்கம் பல்வேறு நூற்றாண்டுகளாகப் பெற்ற அநுபவ வளர்ச்சியைப் படிப்படியே பிரகாசிக்கச் செய்கின்றன.

இயற்கையன்னை சமீப காலத்தில் பெற்றெடுத்த புதுக் குழந்தைகளுள் மிக முக்கியமானது மின்சார சக்தி. உலகத்தில் இந்த சக்தி எப்போதும் இருந்து வந்த தென்றாலும், அதைச் சமீபத்தில் தான் விஞ்ஞான உலகம் கண்டுபிடித்து, பயன்படுத்தத் தொடங்கியது. இதனால் உலக சரித்திரத்திலேயே மகத்தான மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. இந்தப் புது சக்தி, நம் சென்னை ராஜ்யத்தில் அபிவிருத்தி செய்யப்பட்ட வரலாறு, நாம் ஒவ்வொருவரும் அறிய வேண்டிய தொன்றாகும்.

நம் சென்னை ராஜ்ய அரசாங்கம், மின்சார உற்பத்தியில் நேரடியாக ஈடுபட்டது 1927-ம் வருஷத்திலேதான். அதற்கு முன்பு, ஏதோ ஒரு சில இடங்களில் மட்டும் (அதாவது நீலகிரியைச் சார்ந்த தேயிலைத் தோட்டப் பிரதேசங்களில், சென்னை நகரம் முதலிய இடங்களில்) மின்சாரம் உற்பத்தி செய்யப்பட்டு வந்தது. அவை தவிர, முனிசிபாலிடிகள், தனிப்பட்ட கம்பெனிகள் சில அங்கங்கே யந்திரங்கள் மூலம் மின்சாரம் உற்பத்தி செய்து விநியோகித்து வந்தன. அப்போது, இவற்றுக்கெல்லாம் சென்னை அரசாங்கத்தார் லைசென்ஸ் மட்டும் அளித்திருந்தார்களே தவிர, தாங்களாகவே மின்சாரம் உற்பத்தி செய்து விநியோகிக்க முன்வரவில்லை.

## இலாகாவின் தோற்றம்

சென்னை ராஜ்யத்திலுள்ள இயற்கைச் சக்திகளைக்கொண்டு, மின்சார உற்பத்தி செய்யவேண்டும் என்ற எண்ணம், அரசாங்கத்துக்குத் தோன்றவே, இதற்கென 1927-ம் வருஷம் ஒரு புது இலாகா தோற்றுவிக்கப்பட்டது. படிப்படியே, இந்த இலாகாவின் வேலை விரிவடைந்து, அநேக மின்சார உற்பத்தித் திட்டங்கள் நிறைவேறத் தொடங்கின. நீலகிரி ஜில்லாவிலுள்ள பைகாராவிலே நீர் மின்சாரத் திட்டம் முதன் முதல் தொடங்கப்பட்டு, 1933-ம் வருஷத்தில் பூர்த்தியாகியது. அதைத் தொடர்ந்து சேலம் ஜில்லாவைச் சேர்ந்த மேட்டூர், திருநெல்வேலி ஜில்லாவிலிருக்கும் பாபநாசம் ஆகிய இடங்களில் முறையே 1937, 1944-ம் வருஷங்களில் நீர் மின்சார உற்பத்தி நிலையங்கள் உருவாகி—தம் வேலையைச் செய்யத் தொடங்கின. இவற்றுடன், 1938-ம் வருஷத்தில் விஜயவாடா, விசாகப்பட்டணம் ஆகிய இடங்களில் யந்திர மின்சார நிலையங்களை நிறுவினர். 1940-ம் ஆண்டில் காகிநாடா மின்சார நிலையத்தை அரசாங்கத்தினர் வாங்கி நடத்தத் தொடங்கினர்.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான், அதாவது 1939-ல், இரண்டாவது உலக மகாயுத்தம் தொடங்கி விட்டது. அதுவரையில் வெகு வேகமாக முன்னேறி வந்த சென்னை மின்சார இலாகாவின் வேலைகள் ஒரேயடியாகத் தடைப்படலாயின. யுத்த காலத்தில் இருந்த நெருக்கடியை இப்போது விவரிக்க வேண்டியதில்லை. போதுமான யந்திர சாதனங்களையோ மற்றக் கருவிகளையோ வெளிநாடுகளிலிருந்து பெற முடியாமல் போயிற்று. தவிர, அச்சமயம் யுத்த முயற்சியிலேயே அரசாங்கத்தின் முழுக் கவனமும் ஈடுபட்டிருந்ததால், இத்துறையில் போதுமான அபிவிருத்தி ஏற்பட வழியில்லாமல் போய்விட்டது.

ஆனால், 1946-ம் ஆண்டில் காங்கிரஸ் அரசாங்கம் பதவி ஏற்றதும், சென்னை அரசாங்க மின்சார இலாகாவின் சரித்திரத்திலேயே ஒரு புது அத்தியாயம் ஆரம்பமாகியதென்று கூறலாம். கடந்த சுமார் நான்கு ஆண்டுகளாக, இத்துறையில் ஏற்பட்டுள்ள வியக்கத் தகுந்த முன்னேற்றத்தை, இந்தச் சந்தர்ப்பத்தில் நினைவூட்டிக் கொள்வது மிகப் பொருத்தமானது என்று கருதுகிறேன்.

## புதிய திட்டங்கள்

மின்சார உற்பத்தியைப் பெருக்கும் பொருட்டு, ஐந்து வருஷத் திட்டமொன்றைக் காங்கிரஸ் அரசாங்கம் பதவி ஏற்ற உடனே நிறைவேற்றத் தொடங்கியது. அவற்றுள் முதலாவது, மச்குந்த் திட்டம் ஆகும். 1946-ம் வருஷம் ஏப்ரல் மாதத்திலேயே இது அங்கீகரிக்கப்பட்டது. சென்னை—ஒரிஸா எல்லையிலுள்ள இந்த மாபெரும் திட்டம் நிறைவேறினால் பைகாரா, மேட்டூர், பாபநாசம் ஆகிய மூன்று திட்டங்களும் சேர்ந்து உற்பத்தி செய்யும் அளவுக்கான நீர் மின்சாரம் கிடைக்கும். இத்துடன் நீலகிரி ஜில்லாவில் மோயாறுத் திட்டம் நிறைவேறவும், ஏற்கெனவே உள்ள பைகாரா, பாபநாசம், சென்னை, விசாகப்பட்டணம், விஜயவாடா, காகிநாடா ஆகிய நிலைய-திட்டங்களில் தக்க விஸ்தரிப்புகள் நடைபெறவும் அங்கீகாரம் வழங்கப்பட்டது. தவிர மதுரை, நெல்லூர், தாட்பத்ரி, நந்தயால், மதனபள்ளி ஆகிய இடங்களில் புதிதாக யந்திர நிலையங்கள் நிறுவவும் காங்கிரஸ் அரசாங்கம் இணங்கியது. மற்றும் ராயலசீமா ஜில்லாக்களின் தேவைகளுக்காக நம் அரசாங்கம் மைசூர் மின்சாரத்தை வாங்கி விநியோகிக்கவும் இசைந்தது. இவ்வாறு புதிதாகப் பெற்ற அபரிமிதமான மின்சாரத்தை ராஜ்யத்தின் பல்வேறிடங்களில் விநியோகிப்பதற்காக, சுமார் 1,650 மைல் நீளத்துக்கு மின்சார இணைப்புக் கம்பிகளும் கம்பங்களும் நிறுவ அரசாங்கத்தார் சம்மதித்துள்ளனர். இவற்றுள் முக்கியமாகக் குறிக்கத் தக்கவை, சேலம்—ஈரோடு மார்க்கம், அரக்கோணம்—செங்கல்பட்டு—காஞ்சீபுரம் மார்க்கம், பாபநாசம்—வைத்தாறு மார்க்கம், மேல் கோதாவரித் திட்டங்கள் முதலியவைகளாகும்.

இந்தத் திட்டங்களெல்லாம் வெகு துரிதமாக நிறைவேற்றப் பட்டு வருகின்றன. சமீபத்தில் சென்ற அக்டோபர் மாதம் நெல்லூர் யந்திர மின்சார நிலையம் பூர்த்தியாகி, மின்சார விநியோக வேலை நன்றாகத் தொடங்கப்பட்டு விட்டது.

## உற்பத்தி இரட்டிப்பு

மேற்சொன்ன திட்டங்கள் பூர்த்தியாக, சுமார் 30 கோடி ரூபாய் செலவாகும் என மதிப்பிடப்பட்டிருக்கிறது. 1953-ம் வருஷத்தில் இவையெல்லாம் பரிபூரணமாக நிறைவேற்றப்படும் போது வருஷம் ஒன்றுக்கு 170,000 கிலோவாட்ஸ் மின்சாரம் புதிதாக உற்பத்தியாகும். 1946-ம் ஆண்டில், அதாவது, இப்போதைய காங்கிரஸ் சர்க்-

பாபநாசம் அணைக்கட்டின் அற்புதத் தோற்றம்.

கார் பதவி ஏற்றபோது, 190,000 கிலோவாட்ஸ் மின்சாரம் மட்டுமே, சென்னை அரசாங்க மின்சார உற்பத்தி நிலையங்களிலிருந்து கிடைத்தது. இதோடு ஒப்பிட்டுப் பார்த்தால், இப்போதைய சர்க்கார், மேற்கொண்டிருக்கும் புதிய திட்டங்களின் மூலம், இந்த ராஜ்யத்தின் மின்சார உற்பத்தி இரட்டிப்பாகப் பெருகும் என்பது விளங்கும்.

மின்சார உற்பத்தியைப் பெருக்குவதோடு அரசாங்கம் நின்று விடவில்லை. அதைத் தக்க வகையில் பயன்படுத்தி, பல புதிய வகைகளில் நாட்டின் பொருளாதார நிலைமை உயர்த்தவும், சென்னை சர்க்கார் திட்டமிட்டு வேலை செய்து வெற்றி கண்டு வருகின்றனர். சிறப்பாக, கைத் தொழில்கள், விவசாயம் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு மின்சாரத்தை அதிகப்படியாக விநியோகிக்க முயன்றுள்ளனர். அதுவும் கிராமாந்தரப் பிரதேசங்களுக்கு மின்சார வசதி அளிப்பதில் விசேஷ கவனம் செலுத்தி வருகின்றனர். மின்சார சப்ளை தனிப்பட்ட கம்பெனிகள் வசம் இருந்தபோது, கிராமாந்தரங்களுக்கு மின்சாரம் கிடைப்பது துர்லபமாகவே இருந்தது. கிராமாந்தரப் பிரதேசங்களுக்கு மின்சார சப்ளை செய்வதில், முதலில் அதிகச் செலவு ஏற்படுவதோடு, அதற்கேற்ற லாபமும் கிடைக்காது. எனவே, வெறும் லாபக் கண் கொண்டு மட்டும் இத் துறையில் ஈடுபடுபவர்கள், நஷ்டம் உண்டாக்கக் கூடிய இந்த வேலையில் முனையத் துணியாததில் ஆச்சரியம் இல்லை.

## விநியோகக் கொள்கையில் மாறுதல்

ஆனால் பொது நல அரசாங்கம் வெறும் லாபக் கண் கொண்டு மட்டும் இதைப் பார்க்கவில்லை. நாட்டின் அபிவிருத்தி கிராமங்களின் மறுமலர்ச்சியைப் பொறுத்தே அமைகின்றது என்ற காந்தியடிகளின் கொள்கையைக் காங்கிரஸ் சர்க்கார் எவ்வாறு மறக்க முடியும்! எனவே, கிராமங்களின் பொருளாதார வாழ்வை உயர்த்துவதற்கு, பல விதங்களிலும் முயற்சி நடைபெற்று வருகின்றது. விவசாய அபிவிருத்தி, கிராமக் கைத்தொழில் வளர்ச்சி ஆகியவற்றுக்கு மின்சாரம் பெரிதும் துணை செய்யக் கூடியதாதலால், அதைக் கிராமாந்தரப் பிரதேசங்களுக்கு 'சப்ளை' செய்யக் காங்கிரஸ் அரசாங்கம் ஏற்பாடு செய்துள்ளது. முக்கியமாக, கிராமாபிவிருத்திக்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள சில குறிப்பிட்ட பிர்க்காக்களிலும், கதராபிவிருத்திக்கான பிரதேசங்களிலும் இந்த வசதியை உடனடியாகச் செய்து தரத் திட்டமிடப்பட்டுள்ளது. இதற்கென, அரசாங்கம் இது வரையில் பின்பற்றி வந்த நடைமுறை விதிகளில் ஒரு முக்கிய மாறுதல்



பைகாரா மின்சார நிலையத்திலுள்ள யந்திரங்கள்.

செய்யப்பட்டுள்ளது. அதாவது, தூல மின்சார சப்ளை, யந்திர மின்சார சப்ளை ஆகிய பிரதேசங்களிலே மூலதனச் செலவீட்டில் குறைந்தது 12½ சத விகிதம், 15 சத விகிதம் வரவு வந்தாலன்றி, மின்சாரசப்ளை செய்யக்கூடாதென்று முன்பு விதியிருந்தது. அந்த அளவை முறையே 10 சத விகிதம், 10 சத விகிதம் என இப்போது அரசாங்கம் திருத்தியிருக்கின்றது. இதன் மூலம், மேலும் பல கிராமாந்தரப் பிரதேசங்கள் மின்சார சப்ளை பெற வசதி செய்யப்பட்டிருப்பது விளங்கும்.

## கிராமங்களுக்கு மின்சார வசதி

இது தவிர, விவசாயத்துக்கும், கிராமக் கைத் தொழில்களுக்கும் கொஞ்சம் மலிவாகவே மின்சாரம் சப்ளை செய்யப்படுகின்றது. சென்னை ராஜ்யத்தில் உற்பத்தியாகும் மொத்த மின்சாரத்தில் 16 சத விகிதம் விவசாயத்துக்காக உபயோகிக்கப்படுகிறது. கிணறு இறைப்பதற்கான 'பம்பு' செட்டுகள் 13,500-ம், கிராமக் கைத் தொழில்கள் 15,000-ம் மின்சாரம் மூலம் இயங்குகின்றன. இவற்றுக்காக 82,000 கிலோவாட்ஸ் செலவாகிறது.



மின்சார நிலையத்தின் மற்றொரு தோற்றம்.

கிராமங்களுக்குள்ள மின்சார வசதியை ஒப்பிட்டுப் பார்க்கும் போது, இந்தியாவிலுள்ள எல்லா ராஜ்யங்களையும்விட நம் சென்னை ராஜ்யமே முதல் ஸ்தானம் பெறுகிறது. ராஜ்யத்திலுள்ள மொத்தம் சுமார் 30,000 கிராமங்களுள் 1,668 கிராமங்கள் இப்போது மின்சார வசதி பெற்றுள்ளன. 1952—53-ம் வருஷத்திற்குள், மேலும் 1,000 கிராமங்களுக்கு மின்சார சப்ளை கிடைப்பதோடு, இன்னும் 12,000 'பம்பு' செட்டுகள் மின்சாரம் மூலம் இயங்கலாம் என்றும் எதிர்பார்க்கப் படுகிறது.

## முன்னேற்றமா ?

இவ்வாறு, கடந்த நான்கு வருஷங்களில் மின்சார உற்பத்தியிலும், விநியோகத்திலும் ஏற்பட்டுள்ள இந்த அபிவிருத்தி பிரமிக்கத் தக்கதே என்பதில் ஐயமில்லை. ஆனால், மற்ற நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, நாம் தலை குனிய வேண்டியிருக்கிறதென்பதை மறந்துவிடக்கூடாது. சென்னை ராஜ்யத்தில் ஆள் ஒருவர் உபயோகிக்கும் மின்சாரத்தின் சராசரி அளவு, 10 ஆனால், கனடா நாட்டிலோ, ஆள் ஒருவர் உபயோகிக்கும் மின்சாரத்தின் சராசரி அளவு 2,000 ஆகும். நார்வே, ஸ்விட்ஜர்லாந்து முதலிய தேசங்களில் இந்த அளவு 1000-க்கு மேற்பட்டிருக்கிறது. அவ்வளவு ஏன்? நம் இந்தியாவிலுள்ள மற்ற ராஜ்யங்களைப் பார்க்கும்போது, நம் சென்னை ராஜ்யம் இத்துறையில் மிகவும் பிற்போக்கானதாகவே இருப்பது தெளிவாகும். பம்பாயில் ஆள் ஒருவர் உபயோகிக்கும் மின்சாரத்தின் சராசரி அளவு, 47; மேற்கு வங்கத்தில் 40; மைசூரில் 39. சென்னையிலோ 10.

நம் சென்னை ராஜ்யத்தில் வெகு சமீபத்தில்தான், (1927-ல்) இத் துறையில் முயற்சி தொடங்கப்பட்டது. மற்ற பிரதேசங்களில் பல ஆண்டுகளுக்கு முன்பே இவ் வேலை தொடர்ந்து நடை பெற்று வந்திருக்கிறது. மிகக் குறைந்த காலத்திற்குள் (23 வருஷங்களில்) சென்னை ராஜ்யம் இவ்வளவு தூரம் முன்னேற முடிந்திருப்பதைப் பார்க்கும்போது, வெகு விரைவில், அது மற்ற நாடுகளுக்குச் சமமாக அபிவிருத்தி யடைந்துவிடும் என்று நம்பிக்கை கொள்ள இடமிருக்கிறது.

## அரசாங்கம் ஏற்று நடத்தல்

மின்சார விநியோக விஷயத்திலும் தக்க மாறுதல்கள் செய்யப்பட்டு வருகின்றன. மின்சார சப்ளை ஸ்தாபனங்கள்

எல்லாவற்றையும் அரசாங்கமே ஏற்று நடத்த வேண்டும் என்ற நோக்கத்தோடு, சென்ற வருஷம் ஒரு சட்டம் இயற்றப்பட்டது. இதன் விளைவாக இதுவரையில் சர்க்காரிடம் லைசென்ஸ் பெற்று மின்சாரம் சப்ளை செய்து வந்த சுமார் 73 ஸ்தாபனங்கள் அந்த வேலையை அரசாங்கத்துக்கே விட்டுவிடும். அரசாங்கம் இந்த ஸ்தாபனங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக வாங்கி வருகிறது. சென்னை நகரிலுள்ள யந்திர மின்சார உற்பத்தி நிலையத்தை அரசாங்கம் கடந்த மூன்று ஆண்டுகளுக்கு மேலாக ஏற்று நடத்தி வருவது நாமறிந்ததே. அதேபோல, கர்நூல், கடப்பை, அனந்தப்பூர், கொள்ளேகாலம், ஹிந்துப்பூர், வால்பாறை, செங்கோட்டை,



முகூர்த்தி அணைக்கட்டு.

ஓசூர், குடியாத்தம், சாத்தூர் ஆகிய இடங்களிலுள்ள மின்சார சப்ளை நிலையங்களைச் சர்க்கார் ஏற்றுக் கொண்டு விட்டனர்.

## கைத்தொழில் விவசாய வளர்ச்சி

தற்சமயம் நம் ராஜ்யத்தில் 164,000 கிலோ வாட்ஸ் மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. அதாவது, வருஷத்துக்கு 60·6 கோடி யூனிட்டுகள் கொண்ட சக்தி உண்டாகிறது. இதன் மூலம் 66 முனிசிபல் நகரங்களும், 1,602 கிராமங்களும் மின்சார வசதி பெறுகின்றன. பல வகையிலும் இந்த மின்சாரத்தை உபயோகிப்போரின் எண்ணிக்கை சுமார் 243,500. இதில் 99·4 சத விகிதமுள்ள மின்சாரம், சர்க்கார் உற்பத்தி நிலையங்களிலிருந்தே கிடைக்கிறது. மொத்தத்தில் 75 சத விகித மின்சாரம், பொருள் உற்பத்திக்குத் துணை செய்யவே பயன்பட்டு வருகிறது. அதாவது, நூற்பு ஆலைகள், சிமெண்ட் தொழிற்சாலைகள், ரஸாயனத் தொழிற் சாலைகள் முதலியவற்றை நடத்தவும், நீர்ப்பாசனத்துக்கான 'பம்பு' செட்டுகளை ஓட்டவும் பயன்படுகின்றன. பருத்திக் கொட்டை நீக்குதல், பருப்பு உடைத்தல், நெல் அரைத்தல், செக்காடுதல், கரும்பஞ்சாறு இறக்குதல் போன்ற சுமார் 1,500 கிராமக் கைத்தொழில்களுக்கும் மின்சாரம் உபயோகிக்கப்பட்டு வருகிறது. இதுவரையில், இந்த மின்சார உற்பத்திக்காக அரசாங்கத்தார் 15 கோடி ரூபாய் செலவிட்டுள்ளனர். இதற்காக 1949—50-ம் வருஷத்தில், மொத்தம் 3·17 கோடி ரூபாய் வருமானம் கிடைத்துள்ளது.

## நம்பிக்கையூட்டும் எதிர்காலம்

நம் எல்லையிலுள்ள ராஜ்யங்களுடன் செய்துகொள்ளும் ஏற்பாடுகளின் மூலம், நம் மின்சார சப்ளையை அதிகரிக்கச் சென்னை அரசாங்கம் பின்வாங்கவேயில்லை. மைசூர் சர்க்காரிடமிருந்து 6,000 கிலோ வாட்ஸ் அளவுள்ள மின்சாரத்தைப் பெற்று, துங்கபத்திரா அணைப்பிரதேசம், ஹாஸ்பெட், பெல்லாரி, அதோனி, கொள்ளேகாலம், ஹிந்துப்பூர் ஆகிய பிரதேசங்களுக்குச் சென்னை அரசாங்கம் சப்ளை செய்கின்றது. மைசூர் 'ஜோக்' மின்சாரத்தைத் தென் கன்னட ஜில்லாவில் 6,000 கிலோ வாட்ஸ் வரையில் விநியோகிப்பதற்கான திட்டமொன்றையும் சென்னை சர்க்கார் அங்கீகரித்துள்ளனர். அதோடு, காவேரி நதியிலிருக்கும் 'மேகதாது' நீர் வீழ்ச்சியிலிருந்து மின்சாரம் உற்பத்தி செய்வதற்கான திட்ட மொன்றைக் குறித்து, மைசூர்—சென்னை அரசாங்கங்களுக்கிடையே நடைபெற்ற பேச்சு முடிவடைந்து வருகிறது. இதன் விளைவாக, மேட்டூர்—சேலம் பிரதேசங்களுக்கு, மேலும் 13,000 கிலோ வாட்ஸ் மின்சாரம் கிடைக்கும்.

துங்கபத்திரா நதித் திட்டம் வாயிலாக (இதற்கும் சர்க்கார் அங்கீகாரம் அளித்து விட்டனர்) 37,500 கிலோ வாட்ஸ் உற்பத்தியாகும். பழனி மலைத் தொடரைச் சார்ந்த 'பேயாறு' திட்டம் சம்பந்தமாகத் திருவாங்கூர்—கொச்சி ராஜ்ய அரசாங்கத்துடன் உடன்படிக்கை ஏற்பட்டு விட்டது. இதனால், சுமார் 40,000 கிலோ வாட்ஸ் மின்சாரம் நாம் பெறுவோம். திருவாங்கூர்—கொச்சி ராஜ்ய அரசாங்கம் இதுவரையில் பாபநாசம் மின்சார உற்பத்தி நிலையத்திலிருந்து 3,000 கிலோ வாட்ஸ் உபயோகித்து வந்தது. பள்ளிவாசலில் புது யந்திரம் ஒன்று அமைப்பதின் விளைவாக, இனிமேல் அதை நமக்கே விட்டுவிடுவார்கள். இதே போல, சென்னை ராஜ்யத்திலிருந்து பிரஞ்சுப் பிரதேசமான புதுச்சேரிக்கு விநியோகம் செய்து வந்த 1,750 கிலோ வாட்ஸ் மின்சாரத்தைச் சில வருஷங்களுக்குள் நாமே உபயோகித்துக் கொள்ளலாம்.

மற்றும், மின்சார உற்பத்திக்காக நம் ராஜ்யங்களிலிருக்கும் பல்வேறு சாதனங்களையும் சர்க்கார் ஆராய்ந்து வருகின்றனர். நீலகிரியிலுள்ள குண்டா நதித் திட்டம் மூலம், 100,000 கிலோ வாட்ஸ் கிடைக்கலாம் என்றும் எதிர்பார்க்கப் படுகிறது. தவிர தென்னாற்காடு ஜில்லாவில் விருத்தாசலத்தை அடுத்த பிரதேசத்தில் 'லிக்னைட்' என்னும் பழுப்பு நிற நிலக்கரி கண்டு பிடிக்கப் பட்டுள்ளது. அதைச் சேகரிப்பதற்காக நடைபெற்றுவரும் பரிசோதனைகள் வெற்றி பெற்றால், விருத்தாசலத்துக்கு அருகே யந்திர மின்சார உற்பத்தி நிலையம் (லிக்னைட் மூலம் இயங்கும்) ஒன்றை நிறுவும் உத்தேசமும் சர்க்காருக்கு இருந்து வருகிறது.

## எங்கும் பிரகாசம்

கூடிய சீக்கிரம் இந்தத் திட்டங்களை யெல்லாம் நிறைவேற்றுவதற்கு, பொதுஜன அரசாங்கம் பெரிதும் முயன்று வருகின்றது. நமது ராஜ்யத்தில் நிலக்கரி, மண்ணெண்ணெய் முதலிய முக்கியப் பொருள்கள் உற்பத்தியாகாததால், மின்சாரத்தை எதிர் பார்த்தே நம் கைத் தொழிலும், விவசாயமும் அபிவிருத்தியடைய வேண்டியிருக்கிறது. பொது ஜனங்களும் இதை



மின்சார நிலையத்துக்குச் செல்லும் தண்ணீர்க் குழாய்கள்

அறிந்து, அரசாங்கத்துடன் பரிபூரணமாக ஒத்துழைத்தால், தற்சமயம் அரசாங்கத்தார் எடுத்துள்ள இத் திட்டங்கள், வெகு விரைவில், நம் கண்ணெதிரே பயனளிக்கத் தொடங்கிவிடும். அப்போதுதான் இன்று நகரங்களிலும், எங்கோ ஒரு சில கிராமங்களிலும் மட்டும் உபயோகமாகின்ற மின்சாரம், நாட்டிலுள்ள எல்லா இல்லங்களிலும் பிரகாசிக்கும். அதன் பயனாகப் பொருளாதார அபிவிருத்தியும், நாகரிக மேம்பாடும் மேன்மேலும் பெருக வழி பிறக்கும். அந்த நன்னாள் விரைவில் வருவதற்கு எல்லோரும் பாடுபடுவோமாக!

# ஊருக்கெல்லாம் ராணி



(வேலனும் கப்பனும்)

வேலன் :—

எற்றமரப் பாட்டுத்தான் பாட்டு — அதற்கு
எதிர்ப்பாட்டுப் பாடும் கவிராயர் உண்டோ?
காத்தானின் மூத்த மகள் வள்ளி — அவள்
கறுப்பாய் இருந்தாலும் மிடுக்கான கன்னி

கப்பன் :—

கறுப்பாய் இருந்தால்தான் என்ன? — நாட்டுக்
கருப்பட்டி வெல்லத்தில் கசப்பேறிப் போமோ?
எடுப்பாகக் கண்ணோடு மூக்கும் — எல்லாம்
இருந்தாக்கே லட்சணம் நிறைந்தாப் போலாச்சு

வேலன் :—

நாத்து நடும் வேளை வயல் ஓரம் — அவள்
நாக்குக் குழையவே பாடின பாட்டைக்
கேட்டுச் சிறுசிறுத்துப் போனேன் — அது
வெளியோ குயிலோன்னு தடுமாறி நின்றேன்

கப்பன் :—

வெளிலின்னு குயிலின்னு வேலா! — மாக்
கிளைமேலே உட்கார்ந்து கிச்சின்னு பாடும்
கல்யாணப் பருவத்தில் சேட்டை — இப்போ
காக்காயும் கண்ணுக்குச் செவப்பாகத் தோணும்

வேலன் :—

கண்ணைச் சிமிட்டிச் சிரித்தாக்கே — அவள்
கன்னத்தில் ரோசாச் செவப்பேறிப் போகும்
என்னத்தைச் சொல்ல நான் கப்பா — என்
இதயமே ஆசைக் களஞ்சியம் ஆச்சு!

சோழநாட்டுத் தாவணி அழகு — அவள்
கொண்டையில் பூநீக் குலுங்கிற அழகு
ஒருநாளும் மங்காத சிப்பு — எல்லாம்
உன்னே புருத்தெல்லைப் பண்ணுதே இருக்கு

தோப்புத் துறவயல் எங்கும் — அவள்
துணைகூட்டி வருவது இடையூறுப் போச்சு
கூப்பிட்டுப் பேசலாம் என்றால் — அவள்
கூச்சமும் நாச்சமும் குறுக்கிடுதே கப்பா!

தீபாவளிப் பண்டிகை அன்று — யாரும்
தெரியாமல் ஆற்றங் கரையிலே கண்டு
பூப்போன்ற கையைநான் தொட்டு — என்னைப்
புடிச்சிருந்தால் கல்யாணம்முடிக்கலாம் என்பேன்

(வள்ளியும் வேலனும்)

வேலன் :—

எத்தனை நாள் காத்திருப்பேன் — வள்ளி
ஏங்கி உன்னைப் பாத்திருப்பேன்
பித்துப் பிடிச்சவன் போல் — வள்ளி
பேசிப் புலம்பி நிற்பேன்

வள்ளி :—

பித்துப் பிடிச் சிருந்தால் — மாமா
பிரார்த்தனைகள் செய்து கோயில்
சுத்தி வந்து கும்பிட்டாக்கே — மாமா
சுருக்காய்த் தெளிஞ்சு போகும்

வேலன் :—

கோயிலைச் சுத்த வேணும் — வள்ளி
கும்பிட்டு நிக்க வேணும்
நோயைத் தெரிஞ்சுக் கிட்டால் — வள்ளி
நொடிப் போதில் தீர்த்துடலாம்.

வள்ளி :—

நோயைத் தெரிஞ்சுக் கிட்டேன் — மாமா
நூதன மாய் வந்திருக்கு
வாயாலே பேசி விட்டால் — மாமா
வந்த நோயும் ஓடிடுமோ ?

வேலன் :—

பாக்கும் பரிசம் வைத்து — வள்ளி
பந்தல் போட்டு மேளம் கொட்டி
காப்பிட்டுத் தாலி கட்டி — உன்னைக்
கல்யாணம் செய்துக் கணும்

வள்ளி :—

உரிமை உறவு சொல்லி — மாமா
ஊரில் நூறு பெண்ணிருக்க
கறுப்பாய் இருக்கும் என்னை — மாமா
கண்டு ஆசை கொண்டதுமேன் ?

வேலன் :—

உரிமை உறவுக் கெல்லாம் — வள்ளி
ஒப்ப வில்லே என்மனசு
கறுப்புத் தான் இனிச்சிருக்கு — உன்னை
கண்டாத் தான் பிடிச்சிருக்கு

(வேலனும் கப்பனும்)

ஆவணியும் போயிடுச்சே — வேலய்யா
அடுத்தாப்போல் தையிருக்கே — கப்பய்யா
தீவளியும் ஓடிடுச்சே — வேலய்யா
திரும்பவரும் மறு வருசம் — கப்பய்யா
உருவான அழகி வள்ளி — வேலய்யா
ஊருக்கெல்லாம் ராணி அவள் — கப்பய்யா
பரிசம் எப்போ போடப்போறே — வேலய்யா
பயறுவித்த பணம்வரட்டும் — கப்பய்யா



# காட்டூர் கண்ணன்

## பசி இல்லை!



மாமனார் :—மாப்பிள்ளை! கொஞ்சம் ஏதாவது உபயமாக 'டிபன்' பண்ணச் சொல்லவா?

மாப்பிள்ளை :—எனக்கும் பசியே இல்லை, மாமா! டிபன் ஒன்றும் பிரமாதமாய்ச் செய்ய வேண்டாம். கொஞ்சம் 'லைட்'டாகப் பாதாம் அல்வா, இரண்டு சொஜ்ஜி அப்பம், இரண்டு மசாலாத் தோசை, ஒரு கூஜா காப்பி.—இது போதும்! இராத்திரி வெங்காய சாம்பார் பண்ணுவதா யிருந்தால் கூடக் கொஞ்சம் வத்தல் குழம்பும் பண்ணச் சொல்லுங்கள்!

## "சுபிட்சம்"



நடிகை :—டைரக்டர் ஸார்! 'பஞ்சம்' என்று படம் எடுக்கப் போகிறீர்களாமே? அதில் எனக்கு ஏதாவது ஒரு 'சான்ஸ்' கிடைக்குமா?

டைரெக்டர் :—இந்தப் படத்தில் இல்லை! அடுத்தாற் போல் 'சுபிட்சம்' என்ற படம் எடுக்கப் போகிறேன். அதில் உங்களுக்குக் கட்டாயம் 'சான்ஸ்' தருகிறேன்!

## அந்த நாளிலே!



பேத்தி :—பாட்டி! பாட்டி! 'ஆட்டம் பாம்'பை வெடிச்சோமே, உனக்குக் காது கேட்டுதா?

பாட்டி :—ஆட்டம் பாம்பும் ஆச்சு! கேட்டம் பாம்பும் ஆச்சு! அந்த நாளிலே உங்கள் தாத்தா தலை தீபா வளிக்கு வந்திருந்தபோது ஒரு அரி பட்டாசுக் கட்டு வாங்கிக் கொண்டு வந்திருந்தார்! அதன் சத்தத்துக்கு இதெல்லாம் உறை போடக் காணாது!

## தாகசாந்தி!



ஜலதரங்க வித்வான் :—என்னய்யா காணும்! இந்தக் கிண்ணத்திலே இருந்த ஜலத்தைக் காணோமே?

மிருதங்க வித்வான் :—மன்னிக்கவேணும்! தாங்கள் பசிக்கிறதென்று மிருதங்கத்துக்கு வச்சிருந்த ரவை மாவைச் சாப்பிட்டீர்கள் அல்லவா? எனக்குத் தாக மாக இருந்தது; ஜலதரங்கக் கிண்ணத்திலிருந்த ஜலத் தைக் குடித்து விட்டேன்!

ஸ்தாபகர்



நே. ஆறுமுக முதலியார்

# சுதேசி டைப் பவுண்டரி

(ஸ்தாபிதம்: 1906)

டெலிபோன்: 8291 தந்தி: 'புலவு'

51, குருவப்ப செட்டித் தெரு

சிந்தாதிரிப்பேட்டை :: மதராஸ்

●

தீபாவளி இப் புனித நாளில் நண்பர்களுக்கும் அபிமானிகளுக்கும் எங்களது மனமார்ந்த

**நல் வாழ்த்துக்கள்!**

●

இதர, எந்த தயாரிப்புகட்கும், தலை சிறந்ததும், நீடித்து உழைக்கக் கூடியதும், அழகும், கவர்ச்சியும் பொருந்தியவையாகும். விலையுயர்ந்த நவீன யந்திர சாதனங்களால், மேனாட்டு முறைப்படி தயாரிக்கப்பெற்ற எங்கள் "கணபதி" புதிய தமிழ் எழுத்துக்களும், "ஆறுமுகம்" புதிய தெலுங்கு எழுத்துக்களும் புகழ் சிறந்த பல்லோராலும் பாராட்டப் பெற்றுள்ளன. மேலும் அச்சாபீஸ் நிர்வாகிகள் அனைவருடைய நன்மதிப்பையும் ஆதரவையும் பெற்றவையாகும்

தமிழ், இந்தி, மலையாளம், தேவநாகரி, தெலுங்கு, கன்னடம், உருது, கிரந்தம், மகாராஷ்டிரம், ஸம்ஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய பதினொரு பாஷைகளிலும் எழுத்துக்களும் தயாரிக்கப்படும் பவுண்டரி இது ஒன்றேதான்

இந்த தீபாவளி மலரில் உபயோகிக்கப் பட்டிருக்கும் எழுத்துக்கள் "கணபதி" புதிய தமிழ் எழுத்துக்களே. இந்த எழுத்துக்களின் உறுதிக்கும், அழகான அமைப்பிற்கும் இந்த தீபாவளி மலரே தக்க சான்று.

●

வெளிநாட்டு யந்திரங்களும் நம் நாட்டில் செய்த 'கட்டிங் மிஷின்,' 'பெர்ப்பரேடிங்,' லெட், ரூல் கட்டர்கள் இவைகள் சப்ளை செய்யப்பெறும். பூரா விவரங்களும் வேண்டுவோருக்கு அனுப்பி வைக்கப்பெறும்

●

பூரா விவரங்களுக்கு எழுதவும்

**நே. ஆ. சுப்பிரமணிய முதலியார்**

பூரண உரிமையாளர்



# தியாகச் சுடர்



ந்தியா தேவிக்குத்தான் என்ன சந்தோஷம்! என்ன மகிழ்ச்சி! அப்பப்பா! அதைச் சொல்லி முடியாது. மாலைக் கதிரவன் மலைவாயில் மறைந்து மண்ணுலகைப் பொன்னுலகாக்கும் இன்பகரமான அந்தி நேரத்திலே, அந்தியான வர்ணம் தோய்ந்த ஆடை அணிந்து அவள் அவ்வளவு ஒய்யாரமாக எதைக் காண வருகிறாள்! அவள் தன் கையிலுள்ள நீல வானத் தட்டிலே செக்கச் சிவந்த மஞ்சள் நீரைக் கரைத்து ஏந்தி வருவது போலத் தோன்றுகிறதே! யாருக்காவது ஆரத்தி சுற்றத்தான் வருகிறாளோ!

இல்லை, இல்லை! மானமும் புகழும் மேவார் நாட்டின் தலைநகரான சித்தூர் நகரத்தின் கோட்டைக்கு வலப்புறத்தில் யாமினி ஸ்தூபம் வானத்துடன் ஸல்லாபித்துக்கொண்டு நிற்கிறதல்லவா! அதன் உச்சியிலே ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் வண்ண விளக்கை—தியாகத்துக்கெல்லாம் தியாக சொரூபமாகத் திகழும் அந்தத் தியாகச்சுடரை—தரிசித்து விட்டு, அதற்குத் தன் மரியாதையைச் செலுத்திப் போவதற்காகவே வருகிறாள்!

அப்படியா! அந்தத் தீபம் அவ்வளவு விசேஷம் வாய்ந்ததா! ஆம்; 'என்ன மேவாரம் செய்யாக எம்முயிரினுள் வளர்ந்த வண்ண விளக்கு' அல்லவா அது! சுதந்திரத்தை இழந்திருந்த சொந்த நாட்டுக்குச் சுதந்திரத்தை மீட்டுத் தந்ததோடு மட்டும் அல்ல; தன்னுடைய ஜாஜ்வல்யமான கடர் ஒளி மூலம் சுதந்திரத்துக்கு வழி காட்டியாக விளங்கும் அந்தத் தியாகச் சுடரை மண்ணுலக வாசிகளான மனிதர்கள் மட்டுமன்றி, வானுலக வாசிகளான வானவர்களுங்கூட வணங்கி வழிபடத் தவம் கிடக்கிறார்கள் என்றால் அதன் மகிமையை என்ன சொல்வது! அதனால்தான் நித்த நித்தம் சந்தியாதேவி நேரம் தவறாமல் அவ்வழியே வருகிறாளோ! ஆம், அதில் சந்தேகம் என்ன! தியாகத்துக்குத் தலை வணங்க வேண்டியதுதானே கடமை

* * *

அன்று சித்தூர் நகரமே கோலாகலமா யிருந்தது. எங்கே பார்த்தாலும் தோரணங்களும், கொடிகளும், மாவிலைகளும் கட்டப்பட்டு நகரத்துக்கே ஒரு புதிய எழிலையும் புதிய பெருமையையும் கொடுத்திருந்தன. ஒவ்வொரு வீட்டு வாசலிலும் மெழுகி மிகவும் அழகாக மாக்கோலங்கள் போடப்பட்டிருந்தன. அழகான சித்தூர்க் கோட்டைக்கு அன்று அழகு செய்திருந்ததானது அழகுக்கு அழகு செய்தது போலவே இருந்தது. சித்தூர்க் கோட்டையும் நகரமும் அன்றைக்கென்று என்றைக்கும் இல்லாத திருநாளாக, 'ஜே, ஜே!' என்றிருந்தன. எங்கே பார்த்தாலும் நகரமக்கள் 'கலகல' வென்று ஒலித்தன. மங்கல வாத்தியங்கள் மங்களகரமாக முழங்கின. இசைக் கருவிகளின் இன்னிசை கர்ணாமிர்தமாகக் காதில் விழுந்து களிப்பை உண்டு பண்ணிக் கொண்டிருந்தது. இவ்வளவு ஆடம்பர ஏற்பாடுகளும் இவ்வளவு குதூகலம் நடக்கக் காரணம் என்னவோ! விடுதலை முழக்கமாக இருக்குமோ! தில்லி பாதுஷாவின் கையிலிருந்து விடுதலை பெற்று சித்தூர் நகரம் ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டதா, என்ன! முடியிழந்திருந்த மேவார் மன்னர் மறுபடியும் முடி சூடிக் கொள்ளப் போகிறாரா! ஆம், அப்படித்தானிருக்க வேண்டும். இல்லாவிட்டால் எதற்கு இந்த அலங்காரங்களும் ஆடம்பரங்களும்!

சுமார் பத்து நாழிகை இருக்கலாம். அரண்மனையின் ஆசார வாசலிலே, தம் மந்திரிப் பிரதானிகள் புடை சூழ, சித்தூருக்குத் தில்லி பாதுஷாவின் அதிகாரியான விஜயநேதல் பகட்டான பட்டாடை உடுத்தி மகாராஜனை வரவேற்பதற்காகப் பூரண கும்பத்துடன் தயாராக நின்று கொண்டிருந்தான்.

ராஜவீதியின் இருபுறமும் சுவர் வைத்தாற்போல ஜனங்கள் குழுமி யிருந்தனர். மேவார் மன்னரின் வரவை எதிர்பார்த்து வழிமேல் விழி வைத்த வண்ணம் மேவாரின் மக்கள் நின்ற காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. ஏ, காக்கை கூடக் குறுக்கே போக முடியாமல் வழி



ரா. வீழிநாதன்

பாதை மிகவும் பந்தோபஸ்தாக 'காபந்து' செய்யப்பட்டிருந்தது. தாய் நாட்டின் நலனுக்காகப் பலவிதத் தியாகங்கள் புரிந்து பற்பல இன்னல்களுக்கும் இலக்காகித் தாய் நாட்டைக் கண்ணின் மணியெனப் போற்றிப் புகழும் மேவார் மன்னரைக் கண்டு ஆனந்திக்க மக்கள் ஆவலுடன் குழுமியிருந்ததில் ஆச்சரியம் என்ன!

மகாராணா ஹம்மீர் சிங் மங்களகரமான மஞ்சள் ஆடை உடுத்தி, தம்முடைய சீத்கல்யாணிக் குதிரையின்மீது அமர்ந்து ஆனந்தமாகப் பவனி வந்து கொண்டிருந்தார். கண்களைப் பறிக்கும் கோடி சூரியப் பிரகாசத்துடன் கூடிய மணி மகுடம் அவருடைய சிரசை அலங்கரித்தது. மணி மகுடத்தின் மேல் உச்சியிலே பொருத்தப்பட்டிருந்த பட்டுக் குஞ்சங்களுக்குத்தான் என்ன கர்வம்! மேவார் மன்னரின் முடியை அலங்கரிக்கும் பாக்கியம் தமக்குக் கிடைத்ததே என்ற மகிழ்ச்சி வெறியில் அவை பூரித்துப் போயிருந்தனவோ, என்னவோ! காற்றிலே கன ஜோராக அசைந்து மன்னரின் மதிமுகத்துக்கு அவை அலாதி சோபையை அளித்துக் கொண்டிருந்தன. மன்னரைச் சுற்றிலும் மெய்காப்பாளர்கள் போலப் பல வீரர்கள் வீரவாள் ஏந்திய வண்ணம் வந்து கொண்டிருந்தனர். பின்னால் படை வீரர்கள் கையில் உருவிய கத்தி ஏந்தி அணிவகுத்து அழகாக முன்னேறிக்கொண்டிருந்தனர். அந்தக் குதிரைகளுக்குந்தான் என்ன உற்சாகம்! அவை கம்பீரமாகத் தலைநிமிர்ந்து 'டடக், டக், டடக், டக்' என்று குளம்புச் சத்தம் ஓரேவிதமாக ஒலிக்க, அரண்மனையை நோக்கி அடி எடுத்து வைத்துக்கொண்டிருப்பதிலிருந்தே தெரியவில்லையா! காதுக் கினிமையான மங்கள வாத்தியங்கள் முழங்க, ஊர்வலம் மெதுவாக அரண்மனையின் ஆசார வாசலை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தது.

உள்ளத்தில் உவகையும் அச்சமும் ஒருங்கே தாண்டவமாட, மக்கள் இருபுறமும் சுவர் வைத்தாற் போல நின்று கொண்டிருந்தனர். அவர்களுடைய கண்கள் அரசர் வரும் வழியை விட்டு அணுவளவும் அகலவில்லை.

அதே சமயம் மிகவும் தொண்டு கிழவராகக் காட்சி அளித்த ஒரு கிழவர் அந்தக் கூட்டத்தைப் பிளந்துக் கொண்டு ராஜவீதியின் நடுவிலே மகாராணா வரும் திசையை நோக்கி நடந்தார்.

அதைக் கண்ணுற்றதும் கூட்டத்தினிடையே சிறிது சலசலப்பு ஏற்பட்டது. கிழவர் அதைப் பொருட்படுத்தாமல் 'விடு விடு' என்று தன் கிழட்டு நடையை எட்டிப் போட்டுக் கொண்டிருந்தார். மகாராணாவை நெருங்கியதும் தம் இரு கைகளையும் தூக்கி ஆசீர்வதித்தார். பிறகு, "மகாராணா, நீடூழி வாழ்க! வெற்றி கிட்டுக!" என்று கோஷித்தார். அதற்குப் பின், "மகாராணா! என் கையால் தங்கள் நெற்றியில் வெற்றித் திலகம் இட விரும்புகிறேன். குதிரையிலிருந்தபடியே சற்றுக் குனிவீர்களா!" என்று கேட்டார்.

கிழவர் கூறியதைக் கேட்டதும் மகாராணா இலேசாக இளநகை புரிந்தார். பிறகு குதிரையின் மீது இருந்தவாறே குனிந்தார். கிழவர் தம் நடுங்கும் கையால் திலகம் இடுவது போலப் பாவனை செய்து கொண்டே காதோடு காதாக ஏதோ சொன்னார்.

அவர் மகாராணாவிடமிருந்து எந்த விதமான பதிலையும் எதிர் பார்க்கவில்லை. அடுத்தகணம் அங்கிருந்த கூட்டத்தைக் கிழித்துக்கொண்டு வெளியேறி விட்டார்.

கிழவரின் வார்த்தைகளைக் கேட்ட மகாராணா சிறிது நேரம் திகைத்துப்போய் ஸ்தம்பித்து நின்று விட்டார். பிறகு பக்கத்தில் நின்ற படைத் தலைவர்களைப் பொருள் புதைந்த பார்வையுடன் ஒரு முறை பார்த்தார். சிறிது நேரம் வரை படைத் தலைவர்கள் 'குசுகுசு'வென்று தங்களுக்குள் ஏதோ இரகசியம் பேசிக் கொண்டனர். "வெற்றி காணுவதோ, வீர மரணம் எய்தி வீர சொர்க்கம் அடைவதோதான் ராஜபுத்திரர்களாகிய நம்முடைய தொழில். சிறிதும் அஞ்சாதீர்கள்! முன்னேறுங்கள்!" என்று தம் படை வீரர்களுக்கு சைக்கம் காட்டிவிட்டுத் தம் குதிரையின் கடிவாளத்தை இழுத்தார். குதிரை லாவகமாகக் கழுத்தைத் திருப்பிக் கொண்டு நடந்தது. மன்னரைப் பின் தொடர்ந்து மற்றவர்களும் தங்கள் தங்கள் குதிரைகளைத் தட்டி விட்டனர்.



ஆசார வாசலை அடைந்ததும், விஜயதேவ் தம் மந்திரிப் பிரதானிகளுடன் முன் வந்து மகாராஜாவை எதிர் கொண்டு அழைத்தான். பிறகு அவரைக் குதிரையிலிருந்து இறங்கி நடந்து வருமாறு வேண்டிக்கொண்டான்.

அதற்குள்ளாக, ராஜாவின் படைத் தலைவர்களில் ஒருவன், 'தொப்' பென்று கீழே குதித்து விஜயதேவை அணுகி, "எங்கள் குலாசாரப்படி முதலில் தங்களுக்கு நாங்கள் உற்ற மரியாதைகள் செய்யவேண்டும். ஆகவே, தயவு கூர்ந்து தாங்கள் எங்களுடன் எழுந்தருள வேண்டும்" என்று வேண்டினான். அடுத்த கணம் சற்றும் எதிர்பாராத விதமாக அவன் அவனை அலாக்காகத் தூக்கித் தன் குதிரையின் மேல் உட்கார வைத்துக் கொண்டான். பிறகு மகாராஜாவின் பக்கம் திரும்பி, "நமது குல சம்பிரதாயப்படி மகாராஜா விவாக மண்டபத்துக்குப் போன பின்தான் பூமியில் காலடி எடுத்து வைக்கலாம்" என்றான்.

விஜய தேவுக்கு அந்த சம்பிரதாயங்களைப் பற்றி யெல்லாம் அவ்வளவாகத் தெரியாது. அவனுடைய இதயத்திலே இனம் தெரியாத பயம் ஒன்று குடிகொண்டது. 'இதென்னடா இது! பெரிய இக்கட்டில் அல்லவா மாட்டிக்கொண்டு விட்டோம் போலிருக்கிறது!' என்று மிகவும் மனம் நொந்து கொண்டான். மகாராஜாவின் ஊர்வலம் ஆசார வாசல் வழியே கோட்டைக்குள் நுழைந்து விட்டது.

கொஞ்ச தூரம் சென்றதும், விஜயதேவ் மிகவும் சிரமப்பட்டுத் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு, "மகாராஜா! சமையல் எல்லாம் ஆகித் தயாராயிருக்கும் என்று எண்ணுகிறேன். முதலில் ஆகாரத்தை முடித்துக் கொள்ளலாமா!" என்று கேட்டான்.

பக்கத்திலிருந்த படைத் தலைவன், "கூடாது, முதலில் விவாகச் சடங்குகள் பூர்த்தியுற வேண்டும். எங்கள் குல ஆசாரப்படி விவாகம் முடியாமல் நாங்கள் நீர்கூடப் பருகக் கூடாது. ஆகவே கல்யாண மண்டபத்துக்குப் போனதும் முதல் காரியமாக மணப் பெண்ணை வரவழையுங்கள். விவாகத்துக்கு வேண்டிய சகலவித சாமக்கிரியைகளும் நாங்கள் எங்கள் கையோடு கொண்டு வந்திருக்கிறோம். கூடவே எங்கள் புரோகிதரும் வந்திருக்கிறார்" என்று சொன்னான்.

அதற்குள் விவாக மண்டபம் நெருங்கி விடவே, குதிரை வீரர்கள் அத்தனைபேரும் கீழே குதித்தனர். அடுத்தகணம் அவர்கள் விஜயதேவை நாற்புறமும் சூழ்ந்து கொண்டனர். பிறகு, கையில் உருவிய கத்தி ஏந்திய வண்ணமே விவாக மண்டபத்துக்குள் போய் அமர்ந்தனர்.

விஜய தேவுக்குப் பயத்தினால் நாக்கு உலர்ந்தது; கண் இருண்டது. அவன் கருடன் கையில் கட்டுண்ட கருநாகத்தைப் போலக் கதி கலங்கிச் சுற்று முற்றும் பார்த்தான். பிறகு பக்கத்திலிருந்த படைத் தலைவனைப் பார்த்து, "நான் போய்ப் பெண்ணை அழைத்து வரட்டுமா?" என்று கேட்டவாறே எழுந்தான்.

"எங்கள் குல முறைப்படி விவாகச் சடங்குகள் எல்லாம் முடிந்த பிறகுதான் தாங்கள் இந்த இடத்தை விட்டு நகரலாம். ஆகவே, முதலில் வேறு யாரையாவது அனுப்பி மணப் பெண்ணை அழைத்துவரச் சொல்லுங்கள்!" என்று சொல்லி, விஜயதேவை உட்கார வைத்து விட்டான் அந்தப் படைத் தலைவன்.

அவன் சொன்னதைக் கேட்டதும் விஜயதேவுக்கு ஒரு தடவை உடல் முழுவதும் வியர்த்து விறு விறுத்து விட்டது. தான் சூழ்ச்சி செய்து நம்பீச் சிங்கை வரவழைத்ததெல்லாம் பலிக்காது போனதை எண்ணி அவன் மனம் நொந்து கொண்டான். ஏனெனில், உண்மையிலேயே விஜயதேவுக்குக் கல்யாணத்துக்குப் பெண்ணே கிடையாது. இப்பொழுது பெண்ணுக்கு எங்கே போவான், பாவம்! அவனுடைய மந்திரிப் பிரதானிகளும் செய்யும் வகை யறியாது திகைத்தனர். விஜயதேவுக்குத் தன் உயிர் ஊசலாடிக் கொண்டிருப்பதாகத் தோன்றியது. 'இன்னும் எத்தனை கண நேரம் வாழ்வோ!' என்று எண்ணி ஏங்கித் தவித்தான். அவனுடைய சங்கடமான நிலைமையைக் கண்டு ஒரு மதிமந்திரிக்குச் சட்டென்று ஒரு யோசனை தோன்றிற்று. அடுத்த கணம் 'விடுவிடு' என்று அந்தப்புரத்துக்குள் ஓடினான்.

அந்தப்புரத்திலே வேலை செய்துகொண்டிருந்த ஒரு ராஜபுத்திர கன்னிகைக்கு அடித்தது யோகம்! அவளைக் 'கரகர' வென்று இழுத்து வரச் செய்து மணப் பலகையில் உட்கார வைத்தான். அச்சமும் நாணமும் சேர்ந்து அவளை மான்போல மிரளமிரள விழிக்க வைத்து விட்டன. அத்தனை பேருக்கும் மத்தியில் நாணிக்கோணிக் கொண்டு உட்கார்ந்திருந்த அந்த அழகி அசல் மணப் பெண்ணாகவே காட்சியளித்தாள்! விவாகச் சடங்குகள் எல்லாம் வெகு துரிதமாகவும் சாங்கோபாங்கமாகவும் நடந்தேறின. விஜயதேவ் சிலையாகச் சமைந்து அந்தக் காட்சியை யெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தான். அவனுக்கு வாய் திறக்க வழி இருந்தால்தானே!

விவாகம் முடிந்ததும் பெண்ணும் மாப்பிள்ளையும் அரண்மனையின் அந்தப்புரத்துக்குள்ளே அழைத்துச் செல்லப்பட்டனர். விஜயதேவும் உள்ளே போவதற்காக எழுந்தான். பக்கத்திலிருந்த வீரன் 'வெடுக்' கென்று அவன் கையைப் பிடித்து இழுத்து நிறுத்தி, "அதற்குள்ளாக எங்கே கிளம்பிவிட்டீர்கள்! போகலாம், உட்காருங்கள்! எங்கள் குலாசாரப்படி, இன்று முழுவதும் நீங்கள் எங்கள் விருந்தினராக எங்கள் ஜாகையிலேயே இருக்க வேண்டும். ஆகவே, தாங்கள் இப்பொழுது எங்கும் போகக் கூடாது!" என்றான். அதோடு அந்த வீரர்கள் நிற்கவில்லை; அவனைக் கையோடு கையாக அழைத்துக்கொண்டு அங்கிருந்து வெளியேறி விட்டனர். மகாராஜாவை ஏமாற்றிச் சிறை செய்ய எண்ணியிருந்த விஜயதேவ் கடைசியில் தானே சிறைப்பட வேண்டுமா!

## 2

எங்கே பார்த்தாலும் கன்னங்கரிய இருள் சூழ்ந்திருந்தது. பேய்க் காற்று பயங்கரமாக 'உஷ்ஷ்!' என்று ஓலமிட்டு உறுமிக் கொண்டிருந்தது. சித்தூரின் அழகான அரண்மனையிலே, மிகவும் சோபிதமாக அலங்கரிக்கப் பட்டிருந்த அறை ஒன்றிலே, 'பளபள' வென்று கண்களைப் பறிக்கும் பட்டாடை உடுத்தி மகாராஜா நம்பீச்சிங் தூலிகா மஞ்சம் ஒன்றில் வெகு ஒய்யாரமாகச் சாய்ந்திருந்தார். பக்கத்துப் பலகை ஒன்றில் பல பணிப்பெண்கள் புடைசூழ மணமகள் யாமினி ரத்தினாலங்கார பூஷிதையாக உட்கார்ந்திருந்தாள். சுற்றி உட்கார்ந்திருந்த பெண்கள் அவளைக் கேலியும் பரிகாசமும் செய்து விளையாடிக் கொண்டிருந்தனர். வேறு சில பெண்கள் கேலிப் பாட்டுக்கள் இட்டுக்கட்டி ஏசிப் பாடிக் கொண்டிருந்தனர். பெண்கள் பலர் கூடி விட்டால் பரிகாசத்துக்குக் கேட்க வேண்டுமா! அவர்களுடைய கேலியிலும் சிரிப்பிலும் அந்த அறையே 'கலகல' வென்று எதிரொலித்துக் கொண்டிருந்தது. விரோதிகளின் விடுதியிலே தாம் தன்னந்தனியாக இருக்கிறோம் என்பதைக் கூட மறந்து மகாராஜா அங்கே கூடியிருந்த அழகிகளின் உல்லாசப் போக்கிலே லயித்திருந்தார். தேனின் இனிமையிலே லயித்த

பின் வந்து இந்த உலகத்துச் சிந்தனையிலே எங்கேயாவது ஈடுபடுவது உண்டா!

யாமினி நாணிக் கோணிக்கொண்டு தலை கவிழ்ந்து உட்கார்ந்திருந்தாள். என்ன இருந்தாலும் அவள் புது மணப் பெண் தானே! நாணம் ஏற்படுவது சகஜமே அல்லவா! அதுவும் முதன் முதலாக மணாளனைச் சந்திப்பதென்றால் வெட்கம் உண்டாகாமல் எப்படி இருக்கமுடியும்! வெட்கம் உண்டாயிருந்தால் முகம் சிவந்து கன்னங்கள் குழிந்து கண்கள் குறு நகை பூத்துக் கொண்டிருக்க வேண்டுமே! அதற்கு நேர் மாறாக அவளுடைய முகம் வெளிறிப் போயிருக்கக் காரணம் என்ன! உள்ளத்திலே அச்சம் குடி கொண்டிருந்தால் அல்லவா அப்படி முகம் வெளுத்துப் போகும்! அப்படி பயப்படும்படியான அவசியம் அவளுக்கு என்ன ஏற்பட்டு விட்டது!—ஏதோ ஏற்பட்டிருக்கத்தான் வேண்டும். ஏனெனில் அவளுடைய மனம் அந்தக் கேளிக்கையிலும் பரிகாசத்திலும் லயிக்கவில்லை. வேறு ஏதோ சிந்தனையில் ஈடுபட்டிருந்தது.

எங்கோ தூரத்தில் 'ஹோ' என்ற இரைச்சலுடன் பேய்க்காற்று வீசிற்று. அதன் சத்தத்தைக் கேட்டதும் அவளுக்கு ஒரேயடியாகத் தூக்கி வாரிப்போட்டது. அவளுடைய மனதை மகிழ்விப்பதற்காகத் தோழிகளும் பணிப் பெண்களும் எடுத்துக் கொண்ட பிரயாசைக்கு ஓர் அளவில்லை. ஆனால் அவளுடைய உள்ளக் கடல் ஏதோ பயங்கரமான சுழலில் அகப்பட்டுத் தத்தளித்துக் கொண்டிருந்தது என்பது அடிக்கடி அவளுடைய முகபாவம் மாறுபட்டுக் கொண்டிருப்பதிலிருந்தே தெரிந்தது.

ஆனந்த சாகரத்தில் மூழ்கித் திளைத்துக் கொண்டிருந்த மகாராணாவிடம் ஒரு பணிப் பெண் வந்து, "மகாராணா! ஒரு கிழவர் உங்களைப் பார்க்க வேண்டும் என்று காத்திருக்கிறார். இப்பொழுது மகாராணா தங்களைக் காணமுடியாது என்று எவ்வளவோ சொல்லியும் அவர் கேட்கவில்லை. தங்களைப் பார்த்துவிட்டுத்தான் போவேன் என்று பிடிவாதமாக உட்கார்ந்திருக்கிறார். இன்று காலையில் கூடத் தங்களைக் கண்டு ஆசீர்வாதம் செய்திருப்பதாகச் சொன்னார்" என்றாள்.

"ஓகோ! அந்தக் கிழவரா! அவர் ரொம்ப நல்லவராயிற்றே! இன்று அவருக்கு ஏதுவுமே தட்சிணை கிடைக்கவில்லை போலிருக்கிறது. 'மகாராணா இப்பொழுது தங்களைப் பார்க்கமாட்டார். தங்களுக்கு இந்த முத்து மாலையைப் பரிசாக அளித்திருக்கிறார்' என்று சொல்லிக் கொடு!" என்று மகாராணா தம் கழுத்தி லிருந்த முத்து மாலையைக் கழற்றிப் பணிப்பெண்ணிடம் கொடுத்தார்.

முன்னமேயே பயத்தில் மூழ்கி யிருந்த யாமினி மகாராணாவின் வார்த்தைகள் காதில் விழுந்ததும் கதி கலங்கிப் போய்விட்டாள். அடுத்த கணம் தன் பக்கத்திலிருந்த பணிப் பெண்களையும் தோழிகளையும் பார்த்து, "போதும்; நிறுத்துங்கள் உங்கள் பாட்டை!" என்று உத்தரவிட்டாள்.

மகாராணா அவளுடைய அபிப்பிராயத்தைப் புரிந்து கொண்டவர் போல், எல்லோரையும் வெளியே போகுமாறு சமிக்ஞை செய்தார். கண் மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள் அங்கேகூடியிருந்த பெண்களின் கும்பல் கலைந்தது. யாமினியும் அவளுடைய ஒரு தோழியும்தான் எஞ்சி யிருந்தனர். தோழி, யாமினியைத் தனியாக அழைத்துச் சென்று தலை வாரி அலங்காரம் செய்யலானாள். யாமினிக்கு அந்த ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு யுகமாக இருந்தது. ஆகவே, அவள் அலுத்துக் கொண்டு, "எனக்கு மனம் சரியாக இல்லை. ஆகவே, அலங்காரம் ஆனவரைக்கும் போதும்!" என்றாள்.

அதைக் கேட்ட தோழி குறும்புடன் சிரித்துக்கொண்டே, எதிர்பாராத வெகுமதியை யாமினியிடம் பெற்றுக் கொண்டு அங்கிருந்து செல்லலானாள். யாமினியும் அவள் கூடவே சென்றாள்.

அதைக் கண்ட மகாராணா ஒரே தாவாகத் தாவிச் சென்று அவளுடைய இரு கைகளையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். "என்னை ஏமாற்றி விட்டு ஓடப் பார்க்கிறாயா! உன் ஜபம் எல்லாம் என்னிடம் சாயாது!" என்று அன்புடன் கடிந்து கொண்டார்.

யாமினிக்கு உள்ளங்காலிலிருந்து உச்சந் தலை வரை ஒரே ஆட்டமாக ஆடியது. அவளுடைய முகம் பேய் அறைந்ததைப் போல் ஆகிவிட்டது. அதைக் கண்ட மகாராணா சற்றுப் பின்னகர்ந்து ஒரு முறை அவளை ஏற இறங்கப் பார்த்தார். யாமினி உலர்ந்த குரலில், "எனக்குப் பயமாயிருக்கிறதே!" என்றாள்.

"பயமாயிருக்கிறதா! நான் இருக்கும்பொழுது உனக்கு என்ன பயம்!"

"இப்பொழுது ஒரு பணிப்பெண் வந்து உங்களிடம் 'ஒரு கிழவர் வந்திருக்கிறார்' என்று சொன்னாள் அல்லவா! அந்தக் கிழவர் உங்களுக்கு ஒரு பயங்கரச் செய்தி கொண்டு வந்திருக்க வேண்டும் என்று எண்ணுகிறேன். நீங்கள் அவரைக் கட்டாயம் கண்டு பேசியிருக்க வேண்டும். இப்பொழுது பார்க்க முடியாது என்று



சொல்லி அவரைப் போகச் சொன்னது முற்றிலும் தவறு!" என்று படபடக்கும் குரலில் சொல்லி முடித்தாள் யாமினி.

மகாராஜா 'கடகட' வென்று சிரித்து, "பூ! இதற்குத்தானா இவ்வளவு பயம்! இன்று காலையிலேயே அவரைப் பார்த்து சகல விஷயம் அனைத்தையும் தெரிந்து கொண்டு விட்டேனே!" என்றார்.

"எனக்குப் பயமாயிருக்கிறதே! அதோ, அது என்ன சத்தம், பாருங்கள்!"

"ஒன்றும் இல்லை, கண்மணி! வீணில் பயப்படாதே! நான் இருக்கும்பொழுது எதற்காக இப்படிப் பயந்து சாகிறாய்!" என்றார் மகாராஜா.

யாமினி மிகவும் சிரமப்பட்டு, குரலில் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "மகாராஜா! உங்களை ஏமாற்றி விட்டார்கள்!" என்றாள்.

"என்னையாவது, ஏமாற்றுவதாவது!" என்றார் மகாராஜா சிரித்துக்கொண்டே.

"உண்மையில் உங்களை ஏமாற்றித்தான் விட்டார்கள், மகாராஜா! நான் அரசகுமாரியில்லை. அரண்மனையின் அந்தப்புரத்தில் வேலை செய்யும் ஒரு அடிமைப் பெண்!" என்றாள் யாமினி.

அதைக் கேட்டதும் ராஜாவுக்குத் தலையிலே பேரிடி விழுந்தது போலிருந்தது. "என்ன!" என்று ரௌத்திராகாரமாகக் கர்ஜித்தார். அவருக்கு ஆங்காரம் எல்லை மீறியது. 'நறநற' வென்று பற்களைக் கடித்துக் கொண்டு கோபத்தினால் ஜொலிக்கும் கண்களுடன் ஒரு முறை யாமினியைப் பார்த்தார். கட்டுக்கடங்காத கோபத்தின் காரணமாக அவருடைய உடல் நரம்புகள் முழுவதும் முறுக்கேறின. கால்கள் தரையில் பாவவே இல்லை. உடல் முழுவதும் ஒரே ஆட்டமாக ஆடியது.

"மகாராஜா! தங்கள் உயிருக்கு ஆபத்து நேர இருக்கிறது. எப்படியாவது உயிர் தப்ப முயற்சி செய்யுங்கள். மேவாருக்கு அதன் இழந்த சுதந்திரத்தை மீட்டுத் தரவேண்டியது தங்கள் பொறுப்பு; தங்கள் கடமை. மேவாரின் மீட்சியை உத்தேசித்தாவது தாங்கள் உயிர் வாழ்ந்துதான் ஆகவேண்டும்" என்றாள் யாமினி.

அதே சமயம் தோட்டத்தில் தீவட்டிகள் வரும் வெளிச்சம் சாளரத்தின் இடைவழியே தெரிந்தது. அடுத்த சில கணங்களுக்குள் பக்கத்துப் பூங்காவில் ஆட்கள் நடமாடும் சத்தமும், வீரர்களின் ஹுங்கார சத்தமும் கேட்டன.

அதைக் கேட்டதுதான் தாமதம்; யாமினிக்கு உடல் பறந்தது; உள்ளம் பறந்தது; உயிரே பறந்தது. ராஜாவுக்கோ கோபம் தலைக்கேறி விட்டது. வெறி பிடித்தவனைப் போலப் பற்களை 'நறநற' வென்று கடித்துக்கொண்டு, "என்ன மோசடி, இது! நம்பிக்கைத் துரோகம் இழைப்பதா!...கையில் எந்த விதமான ஆயுதமும் இல்லையே! இப்பொழுது என்ன செய்வது!" என்று இரைந்து முணுமுணுத்தவாறே இங்கும் அங்கும் கூண்டில் அடைபட்ட சிங்கம்போல உறுமிக் கொண்டே நடந்தார்.

உள்ளமும் உடலும் பயத்தில் பறந்து கொண்டிருந்த அந்த நேரத்திலும் யாமினியின் மூளை தீவிரமாக வேலை செய்தது.

"மகாராஜா! அதோ பின்புறம் சாளரம் ஒன்று இருக்கிறது, பாருங்கள்! அதன் வழியே தாண்டிக் குதித்து ஓடிவிடுங்கள். மேற்குத் திசையிலே சிறிது தூரம் சென்றால் தங்கள் கூடாரத்தை அடைந்து விடலாம். இந்தக் கதவைத் திறந்து கொண்டு எதிரிகள் உள்ளே நுழையாதபடி நான் பார்த்துக் கொள்ளுகிறேன். உம், சீக்கிரம் போங்கள்! சீக்கிரம் போங்கள்!" என்று மகாராஜாவை அவசரப்படுத்தினாள். அதைச் சொல்லி முடித்த அந்தக் கணமே அவள் கதவண்டை சென்றாள்.

மகாராஜா அவசர அவசரமாக ஓடிச் சாளரத்தின் கதவைத் திறக்க முயன்றார். ஆனால் முன் ஜாக்கிரதையாக முன்னமேயே கதவு வெளிப்புறமாகத் தாளிடப்பட்டிருந்தது. அதை அறிந்த அவர், "இது என்ன அக்கிரமம்! கதவு வெளிப்புறமாக அல்லவா தாளிடப்பட்டிருக்கிறது! அதை எப்படித் திறப்பது!" என்று அங்கலாய்த்தார்.

யாமினி தன் இரண்டு கைகளாலும் கீல்படியை இறுகப் பிடித்துக்கொண்டு கதவில் சாய்ந்தாள். தாளிடுவதற்காகக் கையைக் கொண்டு போனவள், தாழ்ப்பாள் இல்லாமற் போகவே, "அட கிரகசாரமே! இந்தக் கதவைச் சாத்தித் தாளிடத் தாழ்ப்பாள் கட்டையோ, சங்கிலியோ இல்லையே! என்ன செய்வது!" என்று துடியாய்த் துடித்தாள்.

'ஏதாவது ஆயுதம் அகப்படாதா!' என்ற எண்ணத்தில் மகாராஜா இங்கும் அங்கும் அலை பாய்ந்து கொண்டிருந்தார். ஒரு ஆயுதமும் கைக்குக் கிட்டாமற் போகவே, "ஆரவாரச் சத்தம் அதிகமாகிக் கொண்டே வருகிறது. ஆனால் ஆயுதம் கிடைத்தபாடில்லை! அட கடவுளே! இதென்ன சோதனை!" என்று அவர் உள்ளம் பதறினார்.

"சீக்கிரம், மகாராஜா! சீக்கிரம்! அதோ இரும்புக் கரண்டி ஒன்று கிடக்கிறது, பாருங்கள்! அதை எடுத்துக் கொண்டு, அதனால் நடுத்தரையில் பொருத்தப்பட்டிருக்கும் அந்தப் பலகையை அகற்றுங்கள். அதன் கீழே படிக்கட்டு போகிறது. அதன் வழியாகப் போனால் உங்களை எல்லைக் கோட்டுக்குக் கொண்டு போய் விடும். அங்கிருந்து எப்படியாவது உயிர் தப்பி ஓட வழி பாருங்கள்!" என்று துரிதப்படுத்தினாள் யாமினி.

அவ்வளவு இக்கட்டான அந்த நிலைமையிலும் கூட யாமினியின் புத்தி அபாரமாக வேலை செய்தது. மகாராஜா ஒரே ஓட்டமாக ஓடி அந்தப் பலகையை அகற்ற முயன்றார். அதற்குள் வீரர்களின் காலடிச் சத்தம் அதிகமாய் நெருங்கிவிட்டது. அவர்கள் கோபாவேசத்தில் கொக்கரிக்கும் சத்தமும் தெளிவாகக் காதில் விழுந்தது.

"தாங்கள் இவ்விடத்தை விட்டு வெளிபோகும்வரை, அவர்களை உள்ளே நுழைய வொட்டாமல் என்னால் இயன்ற மட்டும் தடுத்து நிறுத்தப் பார்க்கிறேன். தாங்கள் அபாயத்தில் சிக்காமல் தப்பிச் சென்றால் அதுவே எனக்குப் போதுமானது!" என்றாள் யாமினி.

அவள் அதைச் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே வெளியிலிருந்து வீரர்கள் கதவைத் 'தட தட' வென்று இடிக்கத் தொடங்கி விட்டார்கள். யாமினி தன் பலம் கொண்ட மட்டில் கதவை அழுத்திப் பிடித்துக் கொண்டாள். கதவு 'கடகட' வென்று ஆடியது. 'கதவு திறந்து விடுமோ!' என்ற எண்ணம் எழவே, யாமினி தன்னுடைய மென்மையான மலர்க்கரத்தைத் தாழ்ப்பாளுக்குப் பதிலாக நாதாங்கியில் கொடுத்து விட்டாள். அழுத்தமான தாழ்ப்பாள் இருக்க வேண்டிய இடத்திலே அவளுடைய மலருக்கு ஒப்பான மென்கரம் எவ்வளவு நேரம் தான் நிற்க முடியும்!

கணத்துக்குக் கணம் கதவை இடிக்கும் சத்தம் அதிகரித்துக் கொண்டே போயிற்று. கதவின் தாழ்ப்பாளுக்காகக் கையைக் கொடுத்திருந்த யாமினிக்கு வலி தாளவில்லை. அவளுடைய கண் விழிகள் பிதுங்கின. இருந்தாலும் பற்களால் உதட்டை இறுகக் கடித்துக்கொண்டாள். அந்தச் சகிக்க முடியாத வேதனையை அவள் எப்படித்தான் சகித்துக் கொண்டாளோ! பெண் பொறுமைக்குப் பூஷணம் என்று புரிந்து கொள்ளாமலா பெரியவர்கள் சொல்லிப் போனார்கள்! ராஜா இறங்கிப் போன பின் பலகை சரியாகப் பொருந்தாமல் மேலே தூக்கியவாறே நின்றது. யாமினியின் கண்கள் அதிலேயே லயித்திருந்தன. அதைச் சரியாகப் பொருத்திவிடும் சக்தி அவளுடைய கண்களுக்கு இல்லையே! என்ன செய்வாள், பாவம்!

இனி எந்தக் கணம் வேண்டுமானாலும் கதவு பெயர்ந்து விழ வேண்டியதுதான்! கதவு அவ்வளவு ஆட்டம் கொடுத்து விட்டது. அது மட்டுமல்ல; வெளியிலிருந்த வீரர்கள் கூரிய ஆயுதங்களால் கதவைக் குத்திப் பெயர்த்துக்கொண்டிருந்தார்கள். அந்த ஆயுதங்கள் கதவைத் துளைத்துக் கொண்டு யாமினியின் உடலிலும் வந்து பாய்ந்தன. ரத்தம் ஆறாகப் பெருகியது. அதையெல்லாம் அவள் சிறிதும் லட்சியம் செய்யவில்லை. கதவு திறந்து கொள்ளாமல் இருக்கவேண்டுமே என்பதுதான் அந்த வீர ரமணியின் லட்சியம், குறிக்கோள் எல்லாம். அந்த ஒரே சிந்தனையில்தான் அவள் தன் உள்ளம் அனைத்தையும் செலவிட்டிருந்தாள். வெளியில் இருந்தவர்கள் கதவைப் பலமாகத் திறக்க முயன்றதில் அவளுடைய கை, வில் போல வளைந்து விட்டது. அவளுக்கு வலி தாங்காமல் உயிர் போயிற்று. வலியால் வாய் தவறிப் போய் அலறக் கூடாதே என்பதற்காக அவள் இன்னும் இறுகப் பற்களைக் கடித்துக் கொண்டாள்.

அதே சமயம் மகாராஜா சுரங்க வாயிலருகில் வந்து, "என்ன கஷ்டம்! என்ன கஷ்டம்! பொறியில் அகப்பட்ட எலியைப் போல் அல்லவா நான் திண்டாடுகிறேன்! கதவுகளையெல்லாம் வெளிப் புறமாகத் தாளிட்டு விட்டார்களே! என்ன செய்வேன்!" என்று கத்தினார்.

யாமினியின் மலர்க் கரங்கள் எத்தனை நேரம்தான் வெளியிலிருந்து வரும் பலத்த எதிர்ப்பை எதிர்த்து நிற்க முடியும்! கடைசியில் கதவு உடைந்து தெறித்து விழுந்தது. யாமினியும் குப்புற விழுந்தாள். அவளுக்கு மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது. அவள் கை ஒடிந்தே விட்டது. அடுத்த கணம் 'தட-

தட' வென்று வீரர்கள் உள்ளே நுழைந்து விட்டனர்.

முதன் முதலாக உள்ளே நுழைந்தவன் யாமினியை நாயை உதைப்பது போல உதைத்து உக்கித் தள்ளி, "எங்கே அந்த ராணா? சொல்லு!" என்று உறுமினான்.

யாமினியைக் காலால் உதைத்து உக்கித் தள்ளிக் கடுஞ் சொற்களால் கேள்வி கேட்டவன் வேறு யாரும் இல்லை; டில்லி பாதுஷாவின் அதிகாரியான விஜய தேவ் தான்! யாமினிக்குத் தன் நினைவு இருந்தால் அல்லவா பதில் சொல்லுவதற்கு!

"ஏன்! இதோ இருக்கிறேன்!" என்று சிம்மம் போலக் கர்ஜித்துக் கொண்டு ராணா சுரங்க வாயிலிருந்து வெளியே வந்தார். அவருடைய கையில் அந்தச் சுரங்க வாயிலை மூடியிருந்த பெரும் பலகை இருந்தது. அதைக் கொண்டு அவர் ஓங்கி ஒரு வீரன் தலையில் அடித்தார். அவன் 'வீ' என்று தலை சுழன்று 'தொப்' என்று கீழே விழுந்தான். அவன் கையிலிருந்த வாள் 'டணார்' என்று ஒலித்துக் கொண்டு தொலைவில் போய் விழுந்தது. ராணா ஒரே ஓட்டமாக ஓடிப்போய் அந்த வாளைக் கையில் எடுத்துக் கொண்டார். "பயங் கொள்ளிப் பேய்களே! பெண்ணைக் கொல்லும் பாவிகளே! வாருங்கள்; உங்களை ஒரு கை பார்த்து விடுகிறேன்!" என்று கூறியவாறே ரௌத்திராகாரமாகப் போரில் இறங்கிவிட்டார். அப்பொழுது அவர் அழித்தல் தொழிலை மேற்கொள்ளும் சாக்ஷாத் ருத்ர தாண்டவ மூர்த்தியாகவே காட்சி அளித்தார். சில கணங்களுக்கெல்லாம் பூமியிலே பல முண்டங்களும் தலைகளும் உருளத் தொடங்கின. ராணாவின் வாள் அநாயாசமாக எதிரிகளின் சிரங்களை வெங்காயம் சீவுவது போலச் சீவத் தொடங்கிவிட்டது. ஆகவே, அவரை எதிர்த்து நிற்க எவனுக்கும் துணிவு பிறக்கவில்லை.

இருந்தாலும் எதிரி வீரர்கள் ஒருவரா, இருவரா! புற்றிலிருந்து ஈசல் புறப்படுவது போல் அல்லவா புறப்பட்டுக் கொண்டிருந்தனர்! ராணா நிஜமாகவே களைத்துப் போய் விட்டார். அவர் ஒருவரால் எத்தனை நேரம்தான் எண்ணற்ற எதிரி வீரர்களை எதிர்த்து நிற்க முடியும்! அவருடைய உடலில் ஒரு இடம் கூடப் பாக்கியில்லாமல் ரத்தக் காயமாகிவிட்டது. நேரம் ஆக ஆக அவருடைய உடல் சோர்ந்தும் விட்டது.

கடவுளின் கருணையை என்ன வென்று சொல்லுவது! மகாராணா சோர்ந்து ஓய்ந்து உட்காரப் போகும் சமயத்தில் அதிர்ஷ்ட வசமாக அவருடைய போர்ப் படையின் முரசு ஒலி கேட்டது. அது காதில் விழுந்ததுதான் தாமதம்; ராணாவின் உற்சாகம் பன்மடங்கு அதிகரித்து விட்டது. எதற்கும் அஞ்சாமல் எதிரிகளின் மீது பாய்ந்து விட்டார். அவருடைய அந்தப் புது உற்சாகத்தைக் கண்ட எதிரிகள் அசந்தே போய்விட்டனர். மகாராணா நம்மிடம் சண்டை யிடுவதென்றால் காலனும் கை சளைத்துப் போவான் என்ற முடிவுக்கு வந்துவிட்டனர்.

அதே சமயம் ராணாவின் படைவீரர்கள் உள்ளே நுழைந்தனர். மிகப் பெரிய போர் நிகழ்ந்தது. அரண்மனையின் அந்த அறை பெரும் யுத்தகளமாகவே காட்சியளித்தது. மகாராணாவின் வீரர்கள் வீராவேசத்துடன் எதிரிகளை எதிர்த்துப் போராடி வெட்டி வீழ்த்தினர். சிறிது நேரத்துக்கெல்லாம் அந்த அறை எதிரிகளின் பூண்டு அழிந்து காணப்பட்டது. விஜயதேவின் உயிர் அற்ற உடலும் சவக்குவியலிலே அலங்கோலமாய்க் கிடந்தது.

ராணாவின் வீரர்கள் அவரைத் தூக்கி வைத்துக் கொண்டு வெற்றி வெறியில் "மகாராணாவுக்கு ஜே!" என்று ஜய கோஷம் இட்டனர்.

"ஜயகோஷம் எல்லாம் அப்புறம் ஆகட்டும். முதலில் யாமினியைத் தேடுங்கள். இந்தப் பிணக் குவியலுக்கடியில் அவள் ஒரு வேளை கிடக்கலாம்" என்றார் மகாராணா.

"மகாராணா! யாமினி தேவி நம் கூடாரத்தில் இருக்கிறார்கள். அவர்கள் விவரம் சொல்லக் கேட்டுத்தான் நாங்கள் தங்கள் உதவிக்காக ஓடி வந்தோம்!" என்றான் படைத் தலைவன்.

உடனே கூடாரத்துக்குப் புறப்படுமாறு மகாராணா படைத்தலைவனுக்கு உத்தரவிட்டார். அடுத்த நிமிஷம் மகாராணாவை ஒரு பல்லக்கில் உட்காரவைத்துத் தூக்கிக் கொண்டு அவர்கள் கூடாரத்தை நோக்கி விரைந்தனர்.

## 3

யாமினி மரணப் படுக்கையில் கிடந்தாள். அரசாங்க வைத்தியர் அவளுடைய உடல் காயங்களைக் கழுவிக் கட்டுக் கட்டிச் சிகிச்சை செய்து கொண்டிருந்தார். யாமினியின் சரீரம் முழுவதையும் மகாராணா ஒரு முறை உற்றுக் கவனித்தார். அவளுடைய உடல் முழுவதும் எங்கே பார்த்தாலும் ஒரே குத்துக் காயமாக இருந்தது. "நம்மைக் காக்கும் பொருட்டு அல்லவா யாமினி இப்படித் தன் உயிரைத் தியாகம் செய்யத் துணிந்தாள்!" என்று நினைத்த மாத்திரத்திலேயே அவருக்கு மயிர்க்கூச் செறிந்தது. தனக்காக அவள் செய்த அந்தத் தியாகத்தைப் பாராட்ட வாய் எடுத்தார். அவருக்கு என்ன சொல்லுவதென்றே புரியவில்லை. உணர்ச்சி மிகுதியினால் நாக்குக் குழறியது.

"கண்மணி! என் உயிரைக் காக்கும் பொருட்டு உன் உயிரை தாராளமாகக் கொடுத்து விட்டாய்! உன் பெருமையை....." என்று வாக்கியத்தை முடிக்கத் தெரியாமலே விழித்தார் மகாராணா.

அதைக் கண்ணுற்ற யாமினி தன் உடல் வலி அனைத்தையும் மறந்து இலேசாகப் புன்னகை புரிந்தாள்.

ராணாவின் கண்களில் இரண்டு நீர்த் துளிகள் முத்துப் போல் கோத்து நின்றன. "யாமினி! உன் பெருமை தெரியாமல் உன் மனத்தை நோகச் செய்து விட்டேன். என்னை மன்னித்து விடு! என் உயிர் உள்ள அளவும் உன்னை மறக்க மாட்டேன். இது சத்தியம்" என்றார்.

யாமினியின் முகத்திலே மறுபடியும் அதே முல்லை முறுவல் தாண்டவமாடியது. "ஸ்வாமி! ஒன்றுக்கும் உபயோகமற்ற இந்த உடல் ஒரு நல்ல காரியத்துக்கு உபயோகப்பட்டதே, அதன் பொருட்டு நான் அளவற்ற மகிழ்ச்சி கொள்ளுகிறேன். இந்த ஜன்மத்தில் இல்லா விட்டாலும் அடுத்த ஜன்மத்திலாவது அடியாளைத் தாங்கள் தங்களுடைய அடிமையாக ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்று நீண்ட பெருமூச்சுக் கிடையே வேண்டிக் கொண்டாள்.

"யாமினி! அப்படிச் சொல்லாதே! அடுத்த ஜன்மத்தில் என்ன! இந்த ஜன்மத்திலேயே நான் உன்னை என் பட்ட மகிஷியாக ஏற்றுக் கொள்ளுகிறேன். கவலைப்படாதே!" என்றார் மகாராணா.

அடுத்த கணம், மகாராணாவை ஊர்வலத்தின் பொழுது சந்தித்து ஆசீர்வதித்த அதே கிழவர் உள்ளே நுழைந்தார். அவரைக் கண்டதும் யாமினி, "அப்பா!" என்று அன்புடன் அழைத்தாள். அவளுடைய கண்களில் ஆனந்தபாஷ்பம் சுரந்து நின்றது. மகாராணா ஆச்சரியம் மிகுந்த கண்களால் யாமினியையும் கிழவரையும் மாறி மாறிப் பார்த்தார். கிழவர் அன்பினால் தழுதழுத்த குரலில், "அம்மா, யாமினி! உன் வீரத்தை மெச்சினேன். நீ செய்த தியாகம் மகத்தானது. உன் கணவனுக்காக—இல்லை, இல்லை! நாட்டின் கவலையே தன் கவலைக் கருதும் மன்னனுக்காக—நீ செய்த தியாகத்தை இந்த உலகம் உள்ள அளவும் மறக்காது. உன்னைப் போன்ற வீரப் பெண்மணிகளின் தியாகத்தினால்தான் நம் நாடு சுதந்திரத்தைக் காத்துக் கொள்ள முடிகிறது. நாடு சுதந்திரமாயிருக்க, நாடு சுபிட்சமாயிருக்க உன்னைப் போன்ற பெண்களின் சேவை அத்தியாவசியமானது. என் பெண் தேசத்துக்காகத் தன் பிராணனையே விட்டாள் என்று நான் அளவற்ற மகிழ்ச்சியுடன் சொல்லிக் கொள்ளுவேன். இதை விட எனக்கு வேறு என்ன பெருமை வேண்டும்!" என்றார். அதற்குமேல் அவரால் பேச முடியவில்லை. அவருடைய கண்களிலும் கண்ணீர் கோத்து நின்று பார்வையை மறைத்தது.

"அப்பா! உங்களுடைய ஆசீர்வாதத்தினால்தான் நான் நாட்டின் நலனுக்கான இந்தச் சிறு காரியத்தைச் செய்ய முடிந்தது. என் உள்ளத்திலே தேசத்தின் மீதுள்ள பற்றை நீங்கள் உண்டு பண்ணியதால் அல்லவா நான் இந்தச் சிறு தியாகத்தைச் செய்ய முடிந்தது...!" என்று உருக்கமாய்க் கூறியபின் மகாராணாவைப் பார்த்தாள் யாமினி.

"ஸ்வாமி, உங்கள் உதார குணத்தை என்னவென்று சொல்லுவேன்! அடியாள் மீது........."

அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை. ஆனந்த பாஷ்பம் கோத்து நின்ற அவளுடைய கண்கள் மகிழ்ச்சியால் அகல விரிந்தன. சிறிது நேரத்துக்கெல்லாம் மகிழ்ச்சியில் நிறைந்த அவளுடைய இமைகள் இம்மையை மறந்து மூடின.

* * *

மறு நாள் காலை சித்தூர்க் கோட்டையின் உச்சிமீது சுதந்திரக் கொடி பறந்தது. நகர முழுவதும் நகராக்களும் மங்கள வாத்தியங்களும் முழங்கின.

மகாராணா ஹம்மீர் சிங்கினால் சுதந்திரத்தின் ஞாபகச் சின்னமாக எழுப்பப்பட்ட ஸ்தூபம் 'யாமினி ஸ்தூபம்' என்னும் பெயருடன் புகழ் பெற்று விளங்கியது.

# சரசுவின் கலியாணம்

ரயில் பெரிய சப்தத்துடன் ஸ்டேஷனில் வந்து நின்றது. மூட்டை முடிச்சுகளுடன் பிளாட்பாரத்தில்காத்துக் கிடந்த ஜனங்கள் உடனே எழுந்து ஒருவரை யொருவர் இடித்துத் தள்ளிக்கொண்டு மளமளவென்று ரயிலில் ஏறத் தொடங்கினார்கள். அது ஒரு சிறிய ஸ்டேஷன். அங்கே அதிக நாழிகை ரயில் நிற்காது என்பதால் தான் இவ்வளவு பரபரப்பு!

இச்சமயம் கூட்டத்தைக் கஷ்டப்பட்டு விலக்கிக் கொண்டு சற்று வயதான ஒரு மனிதர், ஓர் இளம் பெண் பின்தொடர இரண்டாம் வகுப்பு வண்டி ஒன்றை நோக்கி வேகமாய் வந்தார். ஜன்னல் வழியாய் உள்ளே எட்டிப் பார்த்து விட்டுத் திரும்பிப் பின்னால் வரும் பெண்ணை, "வா! வா! சரசு! இங்கே இடம் இருக்கு; வந்து ஏறிக் கொள். நாழிகையாய் விட்டது" என்று கூப்பிட்டார். ஆனால் அவர் அவசரப் படுத்தியதற்காக அந்தப் பெண் அவசரப்படவில்லை. நிதானமாகவே நடந்து வந்து வண்டியில் ஏறினாள். உள்ளே ஏறும்பொழுது அவள் கால் தடுக்கிற்று. சட்டென்று பக்கத்துக் கம்பியைப் பிடித்துக்கொண்டாள்.

"விழுந்து விடப் போகிறாய். பார்த்து ஏறு அம்மா!" என்று கீழே நின்றவர் அவளை எச்சரித்தார்.

"ஒன்றும் விழமாட்டேன், அப்பா! புடவை கொஞ்சம் தடுக்கிவிட்டது. அவ்வளவுதான்" என்று அவள் சிறிது அசட்டையாகப் பதில் கூறிவிட்டு வண்டிக்குள் ஏறிக் கொண்டாள். அவள் தந்தை ஒரு சிறிய டிரங்குப் பெட்டியையும் படுக்கையையும் திறந்த கதவின் வழியாய் உள்ளே தள்ளி விட்டுத் தாமும் ஏறிக் கொண்டார். இதற்குள் ரயில் ஊதி விட்டது.

பெட்டியையும் படுக்கையையும் 'ஸீட்'டுக் கடியில் தள்ளி வைத்து விட்டு அப்பெண் உட்கார்ந்து கொண்டாள். அவ்விருவரையும் பார்த்தால் இரண்டாம் வகுப்பு வண்டியில் பிரயாணம் செய்யக் கூடிய செல்வமும் அந்தஸ்தும் உடையவர்களாய்த் தோன்றவில்லை. சரசு என்ற அந்தப் பெண்ணின் உடம்பில் விலையுயர்ந்த நகைகள் ஒன்றையும் காணவில்லை. சாதாரணப் புடவைதான் உடுத்தியிருந்தாள். அவளுக்குப் பதினெட்டு அல்லது பத்தொன்பது வயதிருக்கலாம். வாட்டமாய்க் கொடிபோல் வளர்ந்திருந்தாள். அதிக அழகு என்று கூற முடியா விட்டாலும் இளமையின் எழில் அவள் மேனிக்கு நல்ல வசீகரத்தை அளித்தது.

சரசு ஜன்னலுக்கு வெளியே நோக்கினாள். இருட்டில் ஒன்றும் தெரியவில்லை. ரயில் இப்பொழுது வேகமாய்ச் செல்லத் தொடங்கியது. 'நான் எங்கே போகிறேன்; எதற்காகப் போகிறேன்' என்ற நினைவு வந்ததும் அவள் நெஞ்சில் அடங்கியிருந்த வேதனை மீண்டும் குமுறி எழுந்தது. ரயிலை விட்டு இப்படியே குதித்து விட்டாலென்ன என்று கூட ஒரு பயங்கரமான எண்ணம் ஒரு கணம் அவள் சித்தனையில் ஓடி மறைந்தது. இல்லையென்றால், இந்த ரயில் இப்படியே நிற்காமல் ஓடிக் கொண்டே இருக்கக் கூடாதா என்று நினைத்தாள். இந்த இளம் வயதில் இந்தப் பெண்ணுக்கு இப்படிப்பட்ட மனநிலை ஏற்படுவதற்கு என்ன காரணம்?

சரசு முத்து ஐயரின் கடைசிப் பெண். அவளை விட வயதில் மூத்தவர்களான மூன்று சகோதரிகள் அவளுக்கு இருந்தனர். எளிய குடும்பம். ஏதோ கொஞ்சம் நிலபுலன் இருந்தது. அதிலிருந்து வரும் சொற்ப வரும்படியைக் கொண்டுதான் காலக்ஷேபம் செய்ய வேண்டும். மூத்த பெண்ணுக்குக் கலியாண வயது வந்ததும் படித்தவனும் ஒரு பையனைப் பார்த்துக் கையிலிருந்ததைக் கொண்டு சமாராய்ச் செலவு செய்து கலியாணத்தை நடத்தி விட்டார். எதிர்பார்த்தபடி

ஸவிதா

இல்லாமல் அவன் சொற்ப சம்பளத்தில் ஒரு சின்ன வேலையில் திண்டாடிக் கொண்டிருந்தான். இக்காரணத்தினால் முத்து ஐயர் அடுத்த இரண்டு பெண்களையும் சற்று வயதானவர்களுக்கு இளையாளாகக் கொடுக்கத் துணிந்து விட்டார். 'எப்படியோ கஷ்டப் படாமல் சௌக்கியமாய் இருப்பார்கள் அல்லவா' என்பதே அவர் நோக்கம். அதற்கேற்றவாறு அந்த இரண்டு பெண்களும் மூத்த பெண்ணைப் போல் இல்லாமல் சௌகரியமான நிலைமையிலேயே இருந்தனர். ஆயினும் அவர்கள் நினைவு வரும்பொழுதெல்லாம், 'இளையாளாக வாழ்க்கைப்படுவதற்கு அவர்கள் எப்படி இணங்கினார்கள்?' என்று எண்ணி, சரசு வியப்பும் வருத்தமும் கொள்வாள்.

ஓயாமல் கதைகள் படிப்பாள் சரசு. அதில் அவளுக்கு எப்பொழுதும் ஆர்வம் அதிகம். "கல்கி"யின் சிறு கதை யொன்றைச் சமீபத்தில் அவள் படித்தாள். அதில் வரும் ஒரு சம்பவம் அவள் மனத்தில் ஆழமாகப் பதிந்திருந்தது.

* * *

வயதான ஒரு பெரிய மனிதர் ஓர் அழகிய இளம் பெண்ணை இளையாளாக மணம் புரிந்து கொள்ள நிச்சயித்தார். பெண்ணைப் போய்ப் பார்த்ததும் அவருக்கு மிகவும் பிடித்து விட்டது. எல்லா விஷயங்களையும் பேசித் திருப்தியுடன் முடித்து விட்டுப் புறப்படுவதற்கு முன் திடீரென்று அவருக்கு ஒரு எண்ணம் தோன்றிற்று. அந்தப் பெண்ணைக் கூப்பிட்டு நேரிலேயே அவள் சம்மதத்தையும் கேட்டுவிட வேண்டும் என்று விரும்பினார். தன் செல்வத்தையும் அந்தஸ்தையும் கண்டு அவளுக்கு ஒரு ஆக்ஷேபணையும் இருக்காது என்றுதான் அவருக்கு நினைவு. அப்படியே அந்தப் பெண்ணை வரச்சொல்லி, "ஏனம்மா! என்னை மணம் புரிந்து கொள்ள உனக்குச் சம்மதந்தானே?" என்று கேட்டார். அவள் கூறிய பதில் அவரைத் தூக்கி வாரிப் போட்டது. "இல்லை. எனக்குச் சம்மதம் இல்லை. ஆனால், சொல்வதில் என்ன பிரயோஜனம்? நீங்கள் கேட்பீர்களா?" என்று அவள் அழுத்தம் திருத்தமாகப் பதில் சொன்னாள். அந்தப் பெரிய மனிதருக்கு மூஞ்சியில் அடித்தது போல் ஆயிற்று. இத்தகைய துணிச்சலுள்ள பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளத் தைரியமில்லாமல் அவர் வந்த வழியே பேசாமல் தம்முடைய ஊருக்குச் சென்று விட்டார்.

* * *

இதுதான் அச் சம்பவம். கதையில் வரும் அந்தப் பெண்ணின் தைரியத்தைச் சரசு மனத்திற்குள் மிகவும் வியந்து கொண்டாள். அப்படிப்பட்ட தைரியம் தன் சகோதரிகளுக்கு இல்லாமற் போய்விட்டதே என்று வருந்தினாள். ஆனால் மறு விவாகம் செய்து கொள்ள விரும்பும் வயதான மனிதர்கள் யார்தான் பெண்ணின் சம்மதத்தைக் கேட்கத் துணிவார்கள்?

சரசுவுக்கும் கலியாணம் பண்ண வேண்டிய வயது வந்தது. இப்பொழுது அவள் தாயும் இறந்து போய்ச்



சில வருஷங்களாகி விட்டன. வயது வந்த பெண்ணை எவ்வளவு காலக்குப் போகாமல் வைத்திருக்க முடியும்? ஒரு வரனும் சரியாய் அமையவில்லை. எல்லோரும் பெண்ணோடு வர தக்ஷிணையும் நிறையக் கேட்டார்கள்.

இந்தச் சமயத்தில்தான் சென்னையில் நிறைந்த பணம் படைத்த ஒருவர் இளையாளாக அவளை மணம் செய்து கொள்ள முன்வந்தார். அவருக்கு நாற்பத்தைந்து வயதுக்கு மேல் இருக்கும். குழந்தை குட்டிகள் ஒன்றுமில்லை. அவர் தாமே வந்து சரசுவைப் பார்த்தார். அவளது கொடி போன்ற உருவமும், களை பொருந்திய முகமும் அவரை வசீகரித்துவிட்டன. சரசுவும் அவரைப் பார்த்தாள். அவருடைய வழுக்கை விழுந்த தலையும் சற்றே வயதான தோற்றமும் தான் அவள் கண்களுக்குப் பட்டன. அவரை நமஸ்கரித்து விட்டு எழுந்ததும் அவர் தன்னைப் பரிவுடன் நோக்குவதுபோல் தோன்றியது அவளுக்கு. தான் படித்த கதையில் வரும் பெரிய மனிதரைப் போல் இவரும் ஒருவேளை தன்னைக் கூப்பிட்டு நேரில் தன் சம்மதத்தைக் கேட்டாலும் கேட்கலாம் என்று ஏதோ ஒரு விதமான நம்பிக்கை அவள் உள்ளத்தில் எழுந்தது. அப்பொழுது தானும் தைரியமாய்த் தனக்குச் சம்மதமில்லை என்று சொல்லிவிடுவது என்று நிர்மானித்துக் கொண்டாள்.



ஆனால் அவளை மணக்க விரும்பிய ராவ்பகதூர் ராமநாதன் என்பவரோ அப்படி ஒன்றும் செய்யவில்லை. கலியாண ஏற்பாடுகளைப் பேசி முடித்துக் கொண்டு அவள் இஷ்டத்தை விசாரிக்காமலே ஊருக்குப் போய்விட்டார்! விதி அவள் விஷயத்தில் இப்படி ஒரு சதி செய்து விட்டது.

சரசு ஒரு பெருமூச்சு விட்டாள். அப் பெருமூச்சு எதிர் ஸீட்டில் சாய்ந்த வண்ணம் ஏதோ புஸ்தகம் படித்துக் கொண்டிருந்த வாலிபன் ஒருவனைச் சரேலென்று திரும்பி அவள் பக்கம் பார்க்கச் செய்தது. இது வரை தன் சிந்தனைகளில் ஆழ்ந்திருந்த சரசுவும் அப்பொழுதுதான் அவனைக் கவனித்தாள். அவளையும் அவள் தந்தையையும் தவிர, அவ் வாலிபனும், மேல் தட்டில் நிம்மதியாய் உறங்கிக் கொண்டிருந்த மற்றொரு மனிதரும் தான் அவ்வண்டியிலிருந்தவர்கள். அவனுக்கு இருபத்தைந்து அல்லது இருபத்தாறு வயதிருக்கலாம். லக்ஷணமாயும், நாகரிகத் தோற்றமுள்ளவனாயும் அவன் காணப்பட்டான்.

புஸ்தகத்தை மூடிவிட்டு அவன் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான். சரசு இப்பொழுது அவனை நன்றாகப் பார்த்தாள்.

“ஒருவேளை அவருக்குக் கலியாணம் ஆகியிருந்தாலும் ஆகியிருக்கலாம். கலியாணமாகியிருந்தால் மனைவி என் வயதுள்ளவளாகத்தா னிருப்பாள்”—இப்படி அர்த்தமற்ற எண்ணங்கள் உருத் தெரியாமல் அவள் மனத்தில் எழுந்தன. ஜன்னலில் சாய்ந்த வண்ணம் அரைத் தூக்கத்திலிருந்தார் சரசுவின் தகப்பனார் முத்து ஐயர்.

அவர் தோளைத் தொட்டு அவ்வாலிபன், “ஸார்! நீங்கள் இங்கே படுத்துக் கொள்ளுகிறீர்களா? நான் வேண்டுமானால் மேல் தட்டில் படுத்துக் கொள்ளுகிறேன்” என்றான். முத்து ஐயர் சந்தோஷத்துடன் தன் நன்றியைத் தெரிவித்தார். இப்பொழுது ரயில் ஒரு ஸ்டேஷனை அணுகிக் கொண்டிருந்தது.

“எங்கே போகிறீர்கள்? சென்னைக்கா?” என்று தன் படுக்கையை விரித்துக்கொண்டே கேட்டான் அவன்.

“ஆம்” என்று முத்து ஐயர் தலையசைத்தார்.

“சென்னையில் எங்கே? சொந்த மனிதர்கள் வீட்டிற்கா?” என்று அவன் மேலும் கேட்டான்.

“சொந்த மனிதர்கள் யாருமில்லை. இனிமேல்தான் சொந்தமாகணும்” என்றார் முத்து ஐயர். இவ் வார்த்தைகளைக் கேட்டதும் சரசு தலை குனிந்து கொண்டாள்.

“ராவ்பகதூர் ராமநாதன் என்பவரை உங்களுக்குத் தெரியுமோ? சென்னையில் அவர் வீட்டுக்குத்தான் போகிறோம். அங்கே ஒரு கலியாணம்.



"இவனுக்குத்தான்" என்று முத்து ஐயர் சரகுவைச் சுட்டிக் காட்டி, இழுத்தாற்போல் கூறினார். அதைக் கேட்டதும் அவ்வாலிபனின் முகத்தில் ஆச்சரியம் நிலவியது. அவன் மேலே ஒன்றும் கேட்கவில்லை. ஆனால் இச் சம்பாஷணைக்குப் பிறகு அந்த வாலிபன் இரண்டு மூன்று தடவை தன்னை ஒரு விதமாய் நோக்கியதைச் சரகு கவனித்தாள்.

* * *

ரயில் எழும்பூர் ஸ்டேஷனை அடைந்தது. சரகுவும் அவள் தந்தையும் கீழே இறங்கினார்கள். அவர்களுக்கு முன்பே அந்த இளைஞனும் கீழே இறங்கிவிட்டான். தமக்கு இனி வாய்க்கப்போகும் மாமனாரையும் மனைவியையும் வரவேற்க ராமநாதனே நேரில் ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். அவர்களோடு ரயிலினின்றும் இறங்கிய வாலிபனைக் கண்டதும் அவர் திடுக்கிட்டுப் போய் விட்டார். அவர் முகம் அசடு தட்டியது.

"என்ன மாமா! சௌக்கியமா?" என்று புன்னகையுடன் குசலப்பிரச்னம் செய்தான் அந்த இளைஞன்.

அவர் சமாளித்துக்கொண்டு, "ஓகோ! மூர்த்தியா? இப்பொழுதுதான் வருகிறாயா? என்ன விசேஷம்? நீ வருகிறது தெரியாதே!" என்றெல்லாம் விசாரித்தார்.

"உங்களைப் பார்த்து நாளாயிற்றே! பார்த்து விட்டுப் போகலாம் என்று தான் வந்தேன். ஆனால் நான் வருவது எப்படியோ உங்களுக்கு ஜோஸ்யம் தெரிந்து விட்டது; அதுதான் என்னை வரவேற்க நீங்களே ஸ்டேஷனுக்கு வந்திருக்கிறீர்கள் என்றல்லவா நினைத்தேன்?" என்றான் அவன் சிரித்துக் கொண்டே. பிறகு முத்து ஐயரையும் சரகுவையும் காட்டி, "இவர்கள் யார்? புதிதாயிருக்கிறதே?" என்றான்.

அவன் குறும்பாகக் கேட்கிறான் என்பதை அவர் புரிந்துகொண்டார். ஆனால் அதைக் காட்டிக்கொள்ளாமல், "அதற்கென்ன? இன்று புதிதாயிருப்பவர்கள் நாளை தானே பழையவர்கள் ஆகி விடுகிறார்கள்" என்றார்.

அவர் தன் கேள்விக்குச் சரியாகப் பதில் கூறவில்லை என்று தெரிந்தும் மூர்த்தி விடாமல், "என்னவோ புதிர் போடுவதுபோல் பேசுகிறீர்களே? நீங்கள் கூறுவது எனக்குப் புரியவில்லை" என்றான்.

அவர் பேசாமல் சரகுவையும் அவள் தந்தையையும் காருக்கு அழைத்துச் சென்றார். காரில் இடமில்லை என்பதனால் மூர்த்தி பஸ்ஸில் வருவதாகக் கூறிக் கிளம்பினான். "ஏதடா! இவன் எங்கிருந்தோ சமயம் பார்த்து வந்து சேர்ந்தானே!" என்று அவர் மனத்துக்குள் கவலை கொண்டார் என்பது அவர் முகத் தோற்றத்தினின்றும் நன்கு தெரிந்தது.

போகுமுன் தற்செயலாய் மூர்த்தி சரகுவை நோக்கினான். அதே சமயத்தில் அவளும் அவனை நோக்கினாள். இருவர் கண்களும் ஒரு நிமிஷம் சந்தித்தன. அந்த நிமிஷத்தில் அவள் பார்வையிலிருந்த ஏக்கத்தை அவன் கண்டுகொண்டான். அதன் அர்த்தம் அவனுக்கு விளங்கி விட்டது.

* * *

ராவ்பகதூர் ராமநாதன் தியாகராய நகரில் வசித்து வந்தார். உயர்தர வாழ்க்கைக்குத் தேவையான அழகிய பங்களா, விலையுயர்ந்த கார் முதலிய வசதிகள் அவருக்கிருந்தன. ராமநாதனின் வீட்டிலுள்ள சௌகரியங்களையும் செல்வத்தையும் கண்டு முத்து ஐயரின் உள்ளம் சந்தோஷத்தால் பூரித்தது. இனிமேல் சரகுவுக்கு என்ன குறைவு என்று எண்ணி மகிழ்வெய்தினார். ராமநாதனின் மேற்பார்வையில் அவர்களுக்கு ராஜோபசாரம் நடந்தது. அவர்களைத் தம் இருப்பிடத்திற்கே வரவழைத்து ஒருவரும் அறியாமல் முகூர்த்தத்தை நடத்திவிட வேண்டும் என்பதே அவர் யோசனை.

தான் கூறியபடியே மூர்த்தி சிறிது நேரத்திற்கெல்லாம் அங்கு வந்து சேர்ந்தான். சரகுவின் பரிதாபகரமான பார்வை அவன் மனக் கண்ணை விட்டு அகலாமல் நின்றது. அப்பேதைப் பெண்ணுக்கு எப்படியாவது உதவி செய்வது என்று தீர்மானித்துக் கொண்டான். சீக்கிரமே அவனுக்குத் தன் மாமாவுடன் தனியாகப் பேசும் சந்தர்ப்பம் கிடைத்தது.

அவர் 'ஈஸிசேர்' ஒன்றில் சாய்ந்த வண்ணம் படுத்திருந்தார். மூர்த்தி அவர் அருகில் சென்று ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். இரண்டொரு நிமிஷம் பேசாதிருந்துவிட்டுப் பிறகு மெதுவாய்ப் பேச்சை எடுத்தான்.

"மாமா! நீங்கள் சொல்லாவிட்டால் எனக்கு ஒன்றுமே தெரியாதென்று எண்ணி விட்டீர்களா? எனக்கு எல்லா விஷயமும் தெரியும். இன்று ரயிலில் நானும் அவர்களுடன் சேர்ந்து வரும்படி நேர்ந்தது தெய்வச் செயல் என்றே நினைக்கிறேன். அதிருக்கட்டும்; முகூர்த்தம் எப்பொழுது?" என்று சற்றே பரிகாசமாய்க் கேட்டான். இக் கேள்வி அவருக்குக் கொஞ்சம் கோபத்தை உண்டாக்கியது.

"உனக்குத்தான் எல்லாம் தெரியும் என்று சொல்லுகிறாய். பின்பு என்னை மறுபடியும் கேட்பானேன்?" என்றார்.

"மாமா! நீங்கள் இப்படி நடப்பீர்கள் என்று நான் நினைக்கவில்லை. உங்களுக்கென்ன பைத்தியமா? கலியாணம் செய்து கொள்ளும் வயதா உங்களுக்கு இப்போது?"

அவர் சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்து, "ஏன்? அப்படி என்ன வயதாகிவிட்டது என்கிறாய்? நீ நினைப்பது போல் எனக்குப் பைத்தியம் ஒன்றுமில்லை. சுய புத்தியோடுதான் இருக்கிறேன். இதெல்லாம் அவரவர் சொந்த விஷயம். எப்பொழுது இஷ்டமோ அப்பொழுது கலியாணம் செய்துகொள்ள ஒருவனுக்கு உரிமை இல்லையா?" என்றார் ஆத்திரத்தோடு.

"நீங்கள் கூறுவது உண்மைதான். இருந்தாலும் உங்கள் வயதையும் அந்தப் பெண்ணின் வயதையும் நீங்கள் யோசித்துப் பார்க்க வேண்டாமா? ஒரு இளம் பெண்ணின் வாழ்க்கையை நாம் பாழ்படுத்துவது நியாயமா?" என்று மூர்த்தியும் சற்று ஆத்திரத்துடன் பேசினான்.

"நீ சொல்லுகிறபடி பார்த்தால் நாற்பது வயதுக்கு மேற்பட்ட ஒரு அம்மாளைப் பார்த்துத்தான் நான் கலியாணம் பண்ணிக் கொள்ள வேண்டும் என்று தோன்றுகிறது. அப்பொழுது தான் என் வயதுக்குச் சரியான பெண்ணாக இருக்க முடியும். அதுதான்



சரி என்கிறாயா?" என்றார். அவன் பதில் கூறுமுன் மீண்டும், "வெள்ளைக்காரர்கள் தங்கள் இஷ்டப்படி கலியாணம் பண்ணிக்கொள்ள வில்லையா? அவர்கள் வயதையும் இன்னொன்றையுமா பார்க்கிறார்கள்?" என்றார்.

"வெள்ளைக்காரர்கள் பார்ப்பதில்லை என்பது வாஸ்தவம்தான். ஆனால் அவர்கள் ஒருவருக்கொருவர் சம்மதத்துடன் அல்லவா கல்யாணம் செய்து கொள்ளுகிறார்கள். அதை மறந்து விட்டீர்களா? என்மேல் கோபித்துக் கொள்ளக் கூடாது. அந்தப் பெண்ணின் சம்மதத்தை நீங்கள் தெரிந்து கொண்டீர்களா?" என்றான் அவன்.

இந்தக் கேள்விக்கு அவர் என்ன பதில் சொல்லுவார்? சரளவின் சம்மதத்தைக் கேட்டிருந்தால் அல்லவா அவர் பதில் சொல்ல முடியும்?

மூர்த்தி மேலும் உணர்ச்சி மிகுந்த குரலில் சொல்லத் தொடங்கினான்:

"நீங்கள் பதில் சொல்லாமலிருப்பதிலிருந்தே அவள் இஷ்டத்தைக் கேட்கவில்லை என்று தெரிகிறது. அந்தப் பெண் சிறு குழந்தையா? வயது வந்த பெண் அல்லவா? தன் விருப்பத்தைக் கூற அவளுக்கு அதிகாரம் இருக்கிறது. பணமில்லாக் கொடுமையால் தந்தை சிரமப்படுவதைப் பார்த்து வேறு வழியின்றி அவள் இக் கலியாணத்திற்கு இசைந்திருக்கிறாள் என்பது நிச்சயம். உங்கள் மனச்சாட்சியைத் தொட்டுப் பார்த்து இது நியாயமா, தருமமா என்று நீங்களே சொல்லுங்கள்."

அவன் சொற்கள் மேன்மேலும் ஆவேசத்துடன் வெளிப்பட்டன.

ராமநாதன் இடித்த புளி போல் அசையாமல் உட்கார்ந்திருந்தார். மூர்த்தியின் ஒவ்வொரு வார்த்தையும் அம்புபோல் அவர் உள்ளத்தில் பாய்ந்தது. திடீரென்று தோன்றிய சபலத்திற்காளாகி அவர் இக் கல்யாண முயற்சியில் ஈடுபட்டார். மூர்த்தி பேசியதைக் கேட்கக் கேட்க அவர் மன உறுதி தளர ஆரம்பித்தது. சரளவின் சம்மதமில்லாமல் அவளைக் கலியாணம் செய்து கொண்டால் அவள் வாழ்வு பாழாகிவிடுமோ என்ற அச்சமும், சந்தேகமும் அவரை இப்பொழுது பாதிக்கத் தொடங்கின. கடைசியில் சரளவைக் கூப்பிட்டு நேரில்கேட்க அவர் ஒப்புக்கொண்டார்.

சிறிது நேரத்திற்கெல்லாம் ராமநாதன் சரளவைத் தன் முன் அழைத்து வரச் செய்தார்.

சரளவுக்கு ஒன்றும் புரியவில்லை. சந்தேகமும் நம்பிக்கையும் குடிகொண்ட உள்ளத்துடன் தலை குனிந்த வண்ணம் வந்து நின்றாள்.

அவளைக் கண்டதும் தான் ஒரு குற்றவாளி போன்ற உணர்ச்சி இப்பொழுதுதான் முதல்தடவை ராமநாதனுக்கு உண்டாயிற்று. தன்னை திடப்படுத்திக் கொண்டு அவளை நோக்கி, "ஏன் அம்மா! உனக்கு இந்தக் கலியாணத்தில் சம்மதம்தானே? உன் இஷ்டத்தைக் கேட்டுச் செய்வது தான் நல்லது என்று நினைக்கிறேன். உன் மனத்திலிருப்பதைத் தாராளமாய்ச் சொல்" என்றார்.

'என்ன இது! நான் கேட்பது கனவோ?' என்று சரள நினைத்தாள். தன் காதுகளையே அவளால் நம்ப முடியவில்லை. எந்தச் சந்தர்ப்பத்தை அவள் ஆவலுடன் கோரினாளோ அதே சந்தர்ப்பம் அல்லவா இப்பொழுது வாய்த்திருக்கிறது? அந்தக் கதையில் வரும் பெண்ணைப் போல அவளும் இப்பொழுது தைரியமாய்ப் பேசி விட வேண்டும் அல்லவா!

ஒரு நிமிஷம் அவள் தயங்கினாள். ஆனால் மறு நிமிஷமே தன்னைத் திடப்படுத்திக் கொண்டாள்.

"நீங்கள் கேட்பது நிஜம்தானா! நிஜம்தான் என்றால் எனக்குச் சம்மதமில்லை என்றுதான் நான் சொல்ல வேண்டும். ஆயினும் நீங்கள் பெருந்தன்மையுடன் கேட்பதால்தான் என் மனத்திலிருப்பதை அப்படியே வெளியிட்டுக் கூறுகிறேன். நான் உங்கள் பெண்ணுக்குச் சமானம். உங்கள் பெண்ணைப் போல் நீங்கள் என்னைப் பாவிக்க வேண்டும். பணத்திற் காசைப்பட்டு என் சொந்தத் தந்தையே என் சௌக்கியத்தையும் சந்தோஷத்தையும் கவனிக்க வில்லை. ஆனால் நீங்கள் விரும்பினால் பெற்ற தந்தைக்கு மேல் உயர்வாக நடந்து கொள்ள முடியும். அவ்வாறு நீங்கள் நடப்பீர்களா?"—அவள் குரல் தழுதழுத்தது. உணர்ச்சி மிகுதியால் அவளால் மேலே பேச முடியவில்லை. கண்ணீர் பெருக்கியபடி அவர் முன் சென்று அவரை நமஸ்கரித்தாள்.

சரள கோரியது நிறைவேறி விட்டது. 'நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைத்தது' என்பது ராமநாதன் விஷயத்தில் உண்மையாயிற்று. சரளவைக் கல்யாணம் செய்து கொள்ளும் உத்தேசத்தை அவர் கைவிட்டு விட்டார். அவள் பேசியதைக்கேட்ட பிறகு அவர் வேறென்ன செய்ய முடியும்?

* * *

கலியாணம் நின்று போனதற்குத் தானே காரணமாகையால் அதற்குப் பரிகாரம் செய்வதும் தன் கடமை என்று கூறிச் சரளவுக்கு ஆக்ஷேபணை இல்லை யென்றால் அவளைத் தானே மணந்து கொள்வதாகவும் மூர்த்தி தெரிவித்தான். சரளவுக்கு ஆக்ஷேபணை எவ்வாறு இருக்க முடியும்? ராமநாதன் நிச்சயித்திருந்த அதே முகூர்த்தத்தில் சரளவுக்கும் மூர்த்திக்கும் கலியாணம் வெகு விமரிசையாக நடைபெற்றது.

## மன்னிக்கவும்!



"மன்னிக்கவும்! இரண்டு பேருக்கும் சேர்த்துத்தானே 'பில்' போடவேண்டும்?"



# ஆசை அத்தான்



பி.எஸ்.மணி



அன்று மேஸ்திரி முனுசாமியோடு வேண்டா வெறுப்பாகப் பெண்ணைப் பார்த்துவிட்டு வருவதற்காகக் கிளம்பினான் முத்து. பெண் வீட்டார் முத்துவையும், முனுசாமியையும் தகுந்த உபசாரத்தோடு வரவேற்றார்கள். பெண்ணைப் பார்த்ததும் முத்துவுக்குப் பிடித்து விட்டது. ஆனால் அதற்கு மாறாக முத்துவைப் பார்த்துவிட்டு அந்தப் பெண் உள்ளே போனதும், 'ஹோ'வென்று அழ ஆரம்பித்து விட்டாள். அத்துடன் அவள் விக்கிக் கொண்டே, "ஐயோ! இந்த மனுசனை எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை, நான் கட்டிக்க மாட்டேன்!" என்று கத்தினது அவன் காதில் விழாமல் போகவில்லை. அங்குள்ளவர்கள் எவ்வளவோ முயன்று சமாதானப் படுத்தினார்கள். அந்தப் பெண்ணோ பிடிவாதமாக மறுத்துவிட்டாள். அவ்வளவுதான்; முத்து கோபத்தோடு எழுந்திருந்து வந்துவிட்டான். மேஸ்திரி முனுசாமியும் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு அவனைப் பின் தொடர்ந்தான்.

முத்து அந்தப் பெண்ணைப் பார்க்கப் போகவே முதலில் விரும்பவில்லை. மேஸ்திரி முனுசாமிதான் அவனைக் கட்டாயப்படுத்தி அங்கே அழைத்துக் கொண்டு போனான். முத்துவால் முனுசாமியின் வார்த்தையைத் தட்டிக் கழிக்க முடியவில்லை. எப்படி முடியும்? வீட்டை விட்டு ஓடி வந்த அவனுக்கு நாலைந்து வருஷங்களாக ஒரு வேலைக் கஞ்சி கிடைப்பதற்கு வழி செய்தவன் முனுசாமிதானே?

அதற்குப் பிறகு முனுசாமியும் முத்துவைக் கல்யாணம் செய்துகொள்ளும்படி வற்புறுத்தவில்லை. முத்துவுக்கு அந்தத் தொந்தரவிலிருந்து விடுதலை கிடைத்ததில் பரம திருப்தி. ஆனாலும் அவனுடைய உள் மனம் தன்னைத் துரதிர்ஷ்டம் தொடர்ந்து துன்புறுத்துவதை எண்ணிப் பார்த்து வருந்தாமலில்லை.

* * *

மேஸ்திரி முனுசாமியின் வீட்டுக்குப் பின்னாலிருந்த குடிசையில் முத்து குடியிருந்தான். அவனுக்கு முனுசாமியின் முயற்சியால் ஒரு கம்பெனியில் 'வாட்ச் மேன்' உத்தியோகம் கிடைத்தது. கோழி கூவு முன்பே எழுந்திருந்து சமைத்துச் சாப்பிட்டு விட்டுக் கையில் சோற்று மூட்டையுடன் கம்பெனியை நோக்கி ஓடுவான். ஆறு மணிக்குள் அவன் கம்பெனியின் வாசலில் நிற்காவிட்டால், அவ்வளவுதான்—அன்று அவன் கூலியில் மண் விழுந்து விடும். வியர்க்க விறுவிறுக்கச் சாப்பிட்டதும் சாப்பிடாததுமாக ஓடுவது அவன் வழக்கமாகி விட்டது. அவன் வாழ்க்கை ஏதோ வயிற்றுக் கஞ்சிக்குக் கஷ்டமில்லாமல் போய்க் கொண்டிருந்தது.

முத்து இவ்வாறு கஷ்டப்பட்டுத்தான் ஜீவனம் செய்ய வேண்டுமா? பெரும் பணம் படைத்த பணக்காரரின் பிள்ளையாய்ப் பிறந்து விட்டுப் பின்னும் கஷ்டப்பட்டுக் காலம் தள்ள வேண்டுமென்றால் அது விதியின் விளையாட்டுத்தான்! விதி குறுக்கிடாவிட்டால் அவன் மீது வீண் பழி சுமந்திராது; வீட்டை விட்டு அவன் ஓடி வந்திருக்க வேண்டிய அவசியமும் நேர்ந்திராது!

## 2

முத்து செல்வம் கொழிக்கும் ஒரு ஜமீனின் வீட்டில்தான் பிறந்தான். திருநெல்வேலிச் சீமையில் தாம்பிரவர்ணிக் கரையில் பத்து வேலி நிலமும், வண்ணார்பேட்டையில் பெரிய வீடு ஒன்றும் அவன் தகப்பனார் வீரப்பப் பிள்ளைக்கு இருந்தன. அவனுடைய தாயார் அவனைச் சீராட்டித் தாலாட்டித்தான் வளர்த்தாள். அத்துடன் அவனைப் பள்ளிக்கும் அனுப்பி



வைத்தான். ஆனால் முத்துவுக்குப் படிப்பு வந்ததா?—அதுதான் இல்லை; வாத்தியாரை வைவதும் பள்ளிக்கூடத்துக்கு 'டிமிக்கி' கொடுத்து விட்டு விளையாடித் திரிவதிலுமேயே அவன் மனம் சென்றது.

முத்துவின் அதிர்ஷ்டத்தை என்னவென்று சொல்ல? படிப்பைத்தான் கடவுள் அவன் தலையில் எழுதாமல் செய்து விட்டார். பெற்ற தாயாரையுமா கொடிய நோயில் தள்ளி அவனிடமிருந்து பிரித்துவிட வேண்டும்?

வீரப்பப் பிள்ளைக்குத் தன் அருமை மனைவியைப் பிரிந்ததில் முதலில் துக்கமாய்த் தானிருந்தது. ஆனால் அந்தத் துக்கம் வெகு சீக்கிரத்தில் — அதாவது, அவள் இடத்தை மற்றொருத்தி வந்து ஆட்கொண்டு விட்டபிறகு — மறைந்து விட்டது.

விசாலம் வீட்டுக்கு வந்ததும் முதலில் முத்துவின் சோம்பேறி வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைத்தாள். சித்தன்னையின் கொடுமைகள் அவனுக்குச் சொல்ல முடியாத துயரத்தை யளிக்கத் தொடங்கின. முத்து என்ன செய்வான், பாவம்!

* * *

வீரப்பப் பிள்ளை அன்று எழுந்ததும் குளிப்பதற்காகத் தாம்பிரவர்ணி நதியை நோக்கிக் கிளம்பினார். அச்சமயத்தில் முத்துவின் மாமன் சிங்காரம் அவரை எதிர்நோக்கி வந்து, "என்னங்க அத்தான்! அவசரமாக வெளியிலே புறப்பட்டாங்க போலிருக்கு. சரி, அப்புறம் வந்து பேசிக் கொள்கிறேன்!" என்று கூறி விட்டு, அங்கிருந்து போவதற்காக இரண்டடி எடுத்து வைத்தான்.

"பரவாயில்லை; சொல்கிறதை இப்பவே சொல்லி விடு!" என்றார் வீரப்பப் பிள்ளை அவனைத் தடுத்து நிறுத்திக் கொண்டே. பல வருஷங்களாக வீரப்பப் பிள்ளைக்கும் சிங்காரத்துக்கும் பேச்சு வார்த்தையே கிடையாது. ஒருவர் வீட்டுக்கு ஒருவர் போகிற வழக்கமும் இல்லை. காரணம் வீரப்பப் பிள்ளையின் மறுமணத்தைச் சிங்காரம் வெளிப்படையாகக் கண்டித்ததுதான். அப்படியிருக்க, திடீரென்று சிங்காரம் வந்து பேச ஆரம்பித்தது அவருக்குப் பிடிக்கவில்லை.

"நம்ப முத்துப் பயல் வளர்ந்து விட்டானே, அவனுக்கு இந்த வருஷமாவது நம்ம பெண்ணைக் கட்டிப் போடலாம்னு நினைச்சேன். அது தான் உங்க கிட்டே..." என்று சொல்லி நிறுத்தினான் சிங்காரம்.

"அந்தப் பயலுக்கு இப்போ என்ன அவசரம்? வேலை வெட்டி யில்லாமல் சுற்றித் திரிகிறான். மெள்ளப் பார்த்துக் கொள்ளலாம்" என்று கூறி விட்டு, முகத்தில் கோபக் குறியுடன் சென்று விட்டார் வீரப்பப் பிள்ளை. சிங்காரமும் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு போய் விட்டான்.

இந்த வார்த்தைகள் எல்லாம் முத்துவின் சித்தன்னை காதிலும் விழாமல் போகவில்லை. கேட்க வேண்டுமா? ஒன்றுக்கு இரண்டாகத் திரித்துக் கூறிச் சண்டை மூட்டி விடுவதில் முனைந்தாள் விசாலம். வீரப்பப் பிள்ளை வந்ததும் வராததுமாக, "என்னங்க! உங்களுக்குத் தெரியுமா, சேதி? நம்ம முத்து அவன் மாமன் வீட்டுக்குப் போய் அவருடைய பெண்ணைக் கட்டிக் கொடுக்கும்படி கேட்டானும். நம்ம பக்கத்து வீட்டு மருதாயி இருக்கிறாளே, அவள் இதைக் காதிலே போட்டுகொண்டு வந்து சொன்னாள். பார்த்தீர்களா, உங்க பிள்ளையின் லட்சணத்தை?" என்று நடக்காத நிகழ்ச்சியை நடந்ததுபோல் கூறினாள் விசாலம். 'இந்தச் சின்னப் பயலுக்கு இவ்வளவு கௌரதையா?' என்று கோபம் வந்தது அவருக்கு. அதற்கேற்றாற் போல் சிங்காரம் காலையில் வந்து விட்டுப் போனது வீரப்பப் பிள்ளையின் கோபத்தைப் பன்மடங்கு அதிகமாக்கி விட்டது.

அவ்வளவுதான்; அவரது பிரம்பு முத்துவின் வரவை வெகு ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருந்தது. அவன் வந்ததும், 'சுளீர், சுளீர்' என்று நாலு அடி அடித்து, "அயோக்கியப் பயலே! என் உப்பைத் தின்னும் உனக்குத் திமிரு வளர்ந்து போச்சோ? இந்த வீட்டை விட்டு இப்பவே போய்விடு. இனிமே இங்கே வந்தால் காலை ஒடிச்சுப் போடுவேன்!" என்று கோபத்துடன் கர்ஜித்தார் வீரப்பப் பிள்ளை.

"நான் ஒண்ணும் பண்ணலியே!" என்று விம்மிக் கொண்டே கூறினான். முத்துவின் கண்கள் கலங்கின.

"என்னடா! எனக்குத் தெரியாமே மாமன் வீட்டிலே பெண்ணு கேட்கப் போயிட்டியோ? — போ, எங்கே வேணுமானாலும் போய்த் தொலை! இனி என் கண் முன்னாலே நிற்காதே!" என்று கூவி விட்டு வாசல் பக்கம் அடி யெடுத்து வைத்தார் பிள்ளை.

முத்துவுக்கு ஆக்ரோஷம் தாங்கவில்லை. "உங்க வீட்டிலே இனி ஒரு போதும் காலடி எடுத்து வைக்க மாட்டேன். எனக்குப் பொழைக்கத் தெரியும்!" என்று இரைந்து சொல்லி விட்டு, அவன் அங்கிருந்து வெளியே விரைந்து சென்றான்.

## 3

ஒரு நாள் மாலை ஆறு மணி இருக்கும். வேலை முடிந்ததும் முத்து வீட்டுக்குத் திரும்பினான். எலெக்ட்ரிக் டிரெயினில் ஏகக் கூட்டம். எப்படியோ முண்டியடித்துக் கொண்டு ஏறினான் முத்து. அவசரத்தில் அவன் தன்னுடைய செருப்புக் காலால் ஒரு மீசைக்காரரை மிதித்து விட்டான். அவ்வளவுதான்; அவருக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்து விட்டது. "என்ன, ஐயா! உனக்குக் கண்ணிருக்கா? காலை மிதிச்சுட்டியே?" என்று கோபத்தோடு கேட்டார்.

"தெரியாமல் மிதிச்சுட்டேன், மன்னிச்சுக்குங்க!" என்று அவரைப் பார்த்துச் சொன்னான் முத்து.

உடனே மீசைக்காரர் அவனைக் கூர்ந்து பார்த்து விட்டு, "அட பாவி, முத்துப் பயலா? உன்னைப் பார்க்க நான் எங்கே யெல்லாம் தேடிக்கிட்டிருக்கேன்! நீ எங்கே இருக்கே?" என்று கூறி அவன் கையைக் கெட்டி



யாகப் பிடித்துக் கொண்டார். முத்து ஒரு வேளை ஓடிப் போய்விட்டால் என்ன செய்வது என்ற பயமோ, என்னமோ அவருக்கு!

"வா, நம்ம வீட்டுக்குப் போகலாம்" என்று கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனார் அவர். முத்துவும் அவருடைய பிடியிலிருந்து தப்பமுடியாமல் அவரைப் பின் தொடர்ந்தான்.

அந்த மீசைக்காரர் வேறு யாரும் இல்லை; முத்துவின் மாமன் சிங்காரம் தான்!

முத்துவும் சிங்காரமும் வீட்டை யடைந்தனர். முத்துவுக்கு அந்த வீட்டைப் பார்த்ததும் திகைப்பு உண்டாயிற்று. அதோடு வாசலில் வந்து நின்ற பெண்ணைப் பார்த்ததும் அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவன் முந்தி ஒரு தடவை மேஸ்திரி முனுசாமியோடு பெண் பார்க்க வந்திருக்கையில் அவனை அவமானப்படுத்திய அதே பெண்தான் அங்கே நின்று கொண்டிருந்தாள்!

"இந்தா, மரகதம்! என்ன முழித்துப் பார்க்கிறாய்? இது யாரு, தெரியவில்லையா? உன் அத்தான் முத்து வல்ல?" என்று கூறிவிட்டு, முத்துவின் பக்கம் திரும்பி, "அவளுக்கு உன்னை எப்படித் தெரிஞ்சிருக்க முடியும்? உங்கப்பாவுக்கும் எனக்குமுள்ள சண்டையிலே நீதான் நம்ம வீட்டுப் பக்கமே எட்டிப் பார்க்கிறதில்லையே?" என்று கூறினான் சிங்காரம்.

முத்து இந்தச் சமாதானத்தை யெல்லாம் ஒரு சிறிதும் லட்சியம் செய்ததாகத் தெரியவில்லை. முன்பொரு தடவை வந்திருக்கும்போது அந்தப் பெண் தன்னைப் பலர் முன்னிலையில் அவமானப் படுத்தியதுதான் அவன் மனக்கண் முன் ஊசலாடியது. அவள் கூறிய வார்த்தைகள் அவன் மனத்திரையில் எதிரொலித்தன. 'ஐயோ! இந்த மனுசனை எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. நான் கட்டிக்கொள்ள மாட்டேன்' என்று கூறியது பல தடவை அலைமோதின. 'என்ன, இந்தப் பெண்ணையா கல்யாணம் செய்து கொள்வது? கூடாது, கூடவே கூடாது. அந்த அவமானம் ஒன்றே போதாதா?' என்று எண்ணமிட்டது அவன் மனம். கடைசியில், மரகதத்தை என்ன ஆனாலும் கட்டிக் கொள்ளுவதில்லை யென்றே அவன் திடசங்கல்பம் செய்து கொண்டான். முத்துவின் மனத்திலுள்ளதைப் புரிந்து கொள்ளாத சிங்காரம் ஏதேதோ தன் போக்கில் கூறிக் கொண்டிருந்தான்:

"பார்த்தாயா, முத்து! இதுதான் என் மச்சான் வீடு. இந்த வீட்டிலே தான் மரகதம் நாலைந்து வருசமா இருக்கிறாள். என் வீட்டுக்காரியை வீட்டைப் பார்த்திருக்கச் சொல்லிவிட்டு உன்னைத் தேடக் கிளம்பிவிட்டேன். என் மச்சான் புரிந்து கொள்ளாமல் மரகதத்துக்கு எங்கெல்லாமோ வரன் பார்த்திருக்கிறார். 'ஓடிப்போன உன்னைக் கண்டு பிடிக்கிறது என்கிறது நடக்கிற காரியமா?' என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தார். இப்ப நான் உன்னைக் கண்டு பிடிச்சுட்டேனு, இல்லையா?" என்று பலவாறு தனது சாமர்த்தியத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தான். அவ்வளவும் முத்துவுக்கு விஷம்போல் கசந்தது என்று அவனுக்குத் தெரியுமா, என்ன? எப்படியா





வது சிங்காரத்தினிடமிருந்து தப்பி வீட்டுக்குப் போனால் போது மென்றாகி விட்டது முத்துவுக்கு.

"மாமா! நான் வீட்டுக்குப் போகிறேன். மேஸ்திரி எனக்காகக் காத்திருப்பார்!" என்று புறுவிட்டுப் போக எழுந்தான் அவன். "தம்பி! சாப்பிட்டுவிட்டுப் போ!" என்று சிங்காரம் எவ்வளவோ வற்புறுத்தியும் கேட்கவில்லை. கடைசியில் சிங்காரம் முத்துவின் குடிசையை அடையாளம் தெரிந்துகொள்ள அவன் கூடவே வந்து விட்டுப் போனான்.

அதன்பின் சிங்காரம் அடிக்கடி முத்துவின் குடிசைக்கு வந்து அவனைப் பார்த்துவிட்டுப் போவான். அவன் பல தடவைகள் கல்யாணத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்தும் முத்து பேசாமலிருப்பதைக் கண்டு திகைப்பான். ஆனால் சிங்காரம் அதற்காக மனம் தளருவதில்லை.

## 4

அன்று சிங்காரம் வந்ததும் முத்துவின் குடிசை பூட்டியிருப்பதைக் கண்டான். அதைக் கண்டதும் அவன் அப்படியே மலைத்து நின்று விட்டான். அவனுக்குச் சில நிமிஷங்கள் மூச்சே நின்று விட்டது போல் தோன்றியது. 'பல தடவை நான் கல்யாணத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்தும் ஒன்றும் பதிலே சொல்லவில்லையே? இன்று எங்கேயோ போய் விட்டானே! எதற்காக இவன் ஓடுகிறான்? என் பெண்ணை இவனுக்குப் பிடிக்க வில்லையோ? இல்லாவிட்டால் வாய்மூடி மௌனியாக இருப்பானா?' என்று பல எண்ணங்கள் அவன் மனத்தில் அலை பாய்ந்தன. அதற்குமேல் அவனால் அங்கு நிற்க முடியவில்லை. நம்பிக்கை இழந்தவனுக்குத் தள்ளாடித் தள்ளாடி நடந்து சென்றான். தோல்வியின் காரணமாக

## இல்லை, ஐயா!



"என்ன, கோச்சுமேன்! இதுதானே ராயப்பேட்டை?"
"இல்லை, ஐயா! இது என் தோள் பட்டை!"

அவன் முகம் மிகவும் வாட்டமடைந்து வெளிறிப் போயிருந்தது.

சிங்காரம் அருகிலிருந்த தென்னந் தோப்பின் வழியாக வீட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தான். நிராசையில் ஆழ்ந்திருந்த அவனுக்கு வீட்டுக்குச் செல்லுவது சிறிது கூடப் பிடிக்கவில்லை. எங்கேயாவது தனியாக உட்கார்ந்து தன் மனக் குறையைச் சொல்லி அழவேண்டும் என்று தோன்றியது. அதற்குத் தென்னந் தோப்பே சரியான இடம் என்று எண்ணி அங்கேயே உட்கார்ந்து விட்டான்.

அச்சமயத்தில் யாரோ இருவர் தூரத்தில் பேசிக் கொண்டிருப்பது அவனுக்குத் தெரிந்தது. அவர்கள் சம்பாஷணையும் தெளிவாக அவன் காதில் விழுந்தது.

"இந்தா! என்னைச் சிரமப் படுத்திப் பிரயோசனமில்லை. நான் யாரையும் கல்யாணம் கட்டிக் கொள்ளப் போகிறதில்லை. பெண்களைக் கண்டாலே எனக்கு வெறுத்துப் போச்சு!" என்றது ஓர் ஆண் குரல்.

"ஏன் அப்படித் தீர்மானித்து விட்டீர்கள்? என் மேலே ஏதாவது கோபமா?" என்று உருக்கமாய்க் கேட்டது ஒரு பெண் குரல்.

"கோபம் என்றால் இலேசான கோபமா? அன்றைக்குப் பல பேர் முன்னாலே என்னை அவமானப் படுத்தினது போதாதா?"

"எப்போதோ தெரியாமல் ஒரு குற்றம் செய்து விட்டால் அதற்கு நிவர்த்தியே இடையாதா?"

"என்ன தெரியாமல் செய்து விட்டாய்? சொல், பார்க்கலாம்?"

"அத்தான்! நிசமா நடந்த கதையைக் கேட்டால் இப்படிச் சொல்ல மாட்டீர்கள். என் மாமன் உங்களைக் கண்டுபிடிக்க முடியாது என்று நினைத்து எனக்குப் பல வரன்கள் பார்த்தார். வந்த வரன்களை யெல்லாம் உங்களைக் கட்டிக் கொள்ளணுங்கிற ஆசையிலே பல காரணங்கள் கூறித் தட்டிக் கழித்துவிட்டேன். உங்களையும் அவர்களிலே ஒருவராக நினைத்து விட்டேன். நிசமாக அன்றைக்கு வந்தது என் ஆசை அத்தான்தான் என்று எனக்குத் தெரியாது. தெரியாமல் செய்த குற்றத்துக்கு என்னை மன்னிச்சுடுங்க!" என்றாள் அந்தப் பெண். அடுத்த நிமிஷம் அவள் விக்கி விக்கி அழும் சத்தம் கேட்டது.

"இந்தா மரகதம்! ஏன் அழறே? —அழாதே!" என்று கூறினான் அந்த ஆடவன். அவள் வார்த்தைகள் அவனுடைய மனத்தைப் பெரிதும் இளகச் செய்தன போலும்!

"நீங்கள் என்னை மன்னித்தேன் என்று சொல்லுங்கள். அப்பொழுது தான்......" என்று சொல்லி இழுத்தாள் அந்தப் பெண்.

"உன்னை மன்னித்து விட்டேன்- உன்னையே கல்யாணம் கட்டிக்கொள்கிறேன். போதுமா? நீ முதலில் அழுவதை நிறுத்து!" என்று கேலியாகக் கூறினான் அவன்.

முத்து அவளுடைய பேச்சைத் தட்ட முடியாமல் நின்றான். அவசர அவசரமாகச் சென்று அவன் ஒரு குடம் தண்ணீரை எடுத்துக்கொண்டு வந்தான்.

"ஆசை அத்தானுக்கு இப்பொழுதாவது கருணை பிறந்ததே! அத்தான்! கொஞ்சம் நில்லுங்க; நவைப் பொழுதிலே இறைத்து விருந்து ஒரு குடம் தண்ணீர் இறைத்துக் கொண்டு வந்து விடுகிறேன். அப்புறம் நாம் இரண்டு பேருமாய் வீட்டுக்குப் போகலாம். உங்கள் மாமா நம்மைச் சேர்ந்து பார்த்தால் ரொம்ப சந்தோஷப்படுவார்!" என்றாள் அவள்.

இதுவரை அவர்களது பேச்சைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த சிங்காரத்துக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. தன் மகளும் மருமகனும் தன்னுடைய உதவியின்றியே கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்து கொண்டு விட்டார்கள் என்ற ஆனந்த வெள்ளத்தில் மிதந்த வாறே, அவர்கள் இருக்கும் இடத்தை நோக்கி ஆவலுடன் விரைந்தான்.

"உங்களுக்கு ஏன் அந்தச் சிரமம்? அதை என் கண்களால் கண்டு களிக்க நானே இதோ நேரில் வந்து விட்டேன்!" என்று சொல்லிக் கொண்டே அவர்களை அணுகினான் சிங்காரம்.

சிங்காரத்தைக் கண்ட இருவரும் வெட்கித் தலை குனிந்தனர். இருந்தாலும் உள்ளத்திலே பொங்கி யெழுந்த உவகை உணர்ச்சி முகத்தில் பிரதிபலிக்காமற் போகவில்லை.

சிங்காரம், "காரியமாச்சு, வீட்டுக்கு வாங்க! இங்கேயே பேசிக்கிட்டுப் பொழுது போவது தெரியாமல் நின்னுடாதீங்க!" என்று சொல்லி விட்டுப் புறப்பட்டான். இருவரும் 'களுக்'கென்று சிரித்தனர்.

சிங்காரத்தின் மனத்தைப் பல வருஷங்களாக வாட்டிக் கொண்டிருந்த கவலையும் துயரமும் நீங்கின. அவனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியும், உற்சாகமும் அவன் நடைக்கு வேகம் கொடுத்தன.





# கதவு திறந்தது

நவீனன்

"மாமி! குருட்டி அடுப்பில் என்ன செய்கிறீர்கள்? மாமாவுக்கு டிபனா! ஏன், மாமி! அந்தப் பக்கம் நான் வரலாமா?" என்று குரல் ஒன்று கேட்டது.

குரலுக்குச் சொந்தக்காரி ஜன்னல் கம்பிகளைப் பிடித்துக் கொண்டு பின் கட்டுப் 'போர்ஷ'னில் நின்று கொண்டிருந்தாள்.

வயது பதினேழு, பதினெட்டுக்குள்ளேதான் இருக்கும். வாயால் வர்ணிக்க முடியாது; அவ்வளவு அழகு அவள். பேச்சில் கிளி கொஞ்சியது. பின் கட்டு மாமிக்கு இப்படி பெரிய பெண்ணொருத்தி இருக்கிறாளா என்று ஆச்சரியப் பட்டுப் போனேன்.

"வாடியம்மா, வா! கோதுமையில் ஒரு புது பட்சணம் செய்து பார்க்கிறேன். உன் பேர் என்ன?" என்று அவளை அன்புடன் அழைத்தேன்.

அவள் பின் கட்டுக் கதவைப் படீரென்று திறந்து கொண்டு என் அருகே ஓடி வந்தாள்.

"என் பேரா...மாமி...?" என்று சொல்லி முடிப்பதற்குள் அவளுடைய தம்பி போல இருக்கிறது, ஒரு பயல் அவளைப் பார்த்து விட்டு, "அம்மா! **சாரதா** முன் கட்டுக்கு ஓடுகிறாள்" என்று ஒலி பரப்பினான்.

அவள் அம்மா அவசரமாகக் கூடத்துப் பக்கம் பாய்ந்து வந்தாள். சாரதாவைப் பிடித்துக் கர கர வென்று இழுத்து, "போ! உள்ளே; அறையை விட்டு வெளியே வரக்கூடாது என்று சொல்லி இருக்கிறேனே?" என்று விழிகளை உருட்டிக் கடுமையாக எச்சரித்தாள். பெண் குனிந்த தலை நிமிராமல் தாயாருடன் 'கைதி' போல நடந்தாள். விழிகள் சுழன்று சுழன்று என்னைப் பார்த்தன. அதில் பரிதாபம் மேலிட்டது; அர்த்தமிருந்தது.

'என்னத்துக்கு அந்தப் பெண்ணைக் கூப்பிட்டோம்' என்று என் முகம் சுருங்கி விட்டது. 'இவ்வளவு பெரிய பெண்ணைக் கட்டி யிழுத்துப் போகிறாளே! அவள் 'தவழ்ந்து' குருட்டி அடுப்பில் விழுந்து விடப்போகிறாளே என்ற பயமா? பின் கட்டில் குடியிருப்பவர்களின் சுபாவம் புரியாமல் சகஜமாகப் பழக ஆரம்பித்திருக்கக் கூடாது' என்று என்னை நொந்து கொண்டேன்.

அரை மணிக்குப் பிறகு சாரதாவின் தாயார் என்னைச் சமாதானப் படுத்தினாள். "நீங்கள் வித்தியாசமாக நினைத்துக் கொண்டு விடுவீர்கள் என்று எனக்குத் தெரியும். எங்கள் குடும்ப அலங்கோலத்தை என்னென்பது! அவள் என் மூத்த பெண், சாரதா. அவளுக்குப் பைத்தியம்...." என்று அந்த மாமி சொல்லி விட்டுப் புடவைத் தலைப்பால், வழிந்து வந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

தூக்கி வாரிப் போட்டது. "அந்த அழகு சுந்தரிக்கா பைத்தியம்!"—என்னால் நம்பவே முடியவில்லை.

ஆறு ரூபாய் வாடகையில், அரை டஜன் ஆத்மாக்களுடன் சின்னஞ் சிறு அறையில் அடைபட்டுக் கிடக்கும் பின் கட்டு மாமி, சாரதாவைப் பற்றிக் கதை கதையாகக் கூறினாள்.

★

ஏழைப் பெண்ணாகப் பிறந்து விட்ட சாரதாவைத் தகுந்த இடத்தில் வைத்துக் கல்யாணம் செய்ய அவர்களால் முடியவில்லை. ஜில்லா போர்டு பள்ளிக்கூடமொன்றில் வாத்தியாராக இருந்து, மூன்று மாதங்களுக்கு ஒரு தரம் முப்பது ரூபாய் சம்பளம் பெறும் அவள் அப்பாவால் ஆயிரம், இரண்டாயிரம் எதிர் ஜாமீன் கொடுத்துப் பெண்ணுக்கு வரன்பார்க்க எப்படி முடியும்?

சாரதாவின் அழகைக் கண்டு மோகித்து எவனாவது 'ஓடி வந்து' எதிர் ஜாமீனே இல்லாமல் மணந்து கொண்டு போய் விடக்கூடும் என்று எதிர் பார்த்துச் சில வருஷங்களைத் தள்ளினார்கள். சாரதாவுக்கு வயதாயிற்று. அவளுக்கு அடுத்த தங்கை அம்புஜமும் வளர்ந்து வரலானாள். நாளடைவில் பெற்றோர்களுக்குப் பெருங் கவலை உண்டாயிற்று.

கடைசியில் வேறு வழி யில்லாமல் வலுக்கட்டாயமாக, பணக்காரக் கிழ மிராசுதார் ஒருவருக்குச் சாரதாவை இரண்டாந்தாரமாக 'காமா சோமா' வென்று மணமுடித்து விட்டார்கள்.

கிருகப் பிரவேசத்தன்று பெண்ணை அழைத்துக் கொண்டு போனபோது கூடத்து வாசற்படி தடுக்கிச் சாரதா தொபுகடீரென்று கீழே விழுந்தாள். கையையும், காலையும் உதைத்துக் கொண்டாள். சில மணி நேரங்கள் பேச்சு மூச்சில்லை.

பிறகு எழுந்து உட்கார்ந்தபோது அவளுக்குக் கையும், காலும் பின்னிக் கொண்டன; வாய் உளறிற்று; விழிகள் மிரள விழித்தன. வாயில் வந்தபடி பேசினாள்; ஏசினாள்; இப்படியாகப் பைத்தியமானாள்!

நல்ல வேளையாக, சாரதாவின் கிழக் கணவர் வித்தியாசமாக நினைக்காமல் சில மாதங்கள் வீட்டிலேயே வைத்து எவ்வளவோ வைத்தியம் செய்தார். பைத்தியம் முற்றிற்று. வேறு வழியில்லாமல் பிறந்த வீட்டுக்குச் சாரதாவை அனுப்பி வைத்து விட்டார்.

அனுப்பினது மட்டுமில்லாமல் அடிக்கடி வந்து பார்த்துப் பணவுதவியும் அவர் செய்து வந்தார். "மனைவி இவ்வளவு மோசமாக இருந்தும் அன்பு குறையவில்லையே" என்று ஆச்சர்யப் படாதவர்கள் இல்லை. பாவம், சாரதாவின் பெற்றோர்களுக்குத்தான் வேதனையாக இருந்தது. இன்னொரு பெண் கல்யாணத்திற்கு நிற்கும்போது மூத்தவள் பைத்தியம் பிடித்து வீட்டோடு இருப்பதென்றால் அவர்களுக்கு எப்படி இருக்கும்!

—சாரதாவின் தாயார் தன் மூத்த பெண்ணைப் பற்றி அழுத கண்ணும் சிந்திய மூக்குமாகச் சொல்லி விட்டு, "மாமி! நாங்கள் ஏதோ துளி அதிர்ஷ்டம் பண்ணி இருக்கிறோம். அதனால்தான் முன் கட்டுக்கு நீங்கள் குடியாக வந்திருக்கிறீர்கள். நான் என்ன மாமி பண்ணுவேன்! அசந்து மறந்து விட்டால் இந்தப் பெண் குடு குடு வென்று வாசலில் ஓடிச் சென்று நிற்கிறது; மேல் மாடிக்கு ஓடி விடுகிறது. கண் குத்திப் பாம்பு போலப் பார்த்துக் கொள்ள வேண்டியதாய் விட்டது. ஏதாவது அதட்டி உருட்டினால்; பயங்கரமாகப் பார்க்கிறது; நான் நல்ல தூக்கம் தூங்கி மூன்று வருஷங்களுக்கு மேலாகிறது" என்று கூறினாள். குரல் தழுதழுத்திருந்தது.

இப்படிப் பட்ட அழகின் அவதாரத்துக்கு எப்படிப்பட்ட குறை என்று நாள் முழுதும் ஆச்சர்யப் பட்டேன். நமக்குக் குழந்தை குட்டிகளைக் கொடுக்காமல் ஈசுவரன் ஏமாற்றி விட்டாரே என்று நினைத்தது போக, 'கொடுத்து என்ன பயன்! சாரதாவைப் போலச் சோதித்து விடாமல் இருக்கவேண்டுமே' என்று சமாதான மடைந்தேன்.

அன்று முழுவதும் சாரதாவே என் மனக் கண் முன்னால் வந்து பரிதாபகரமாக நின்றாள்.

"ஏழை வாத்தியார், அவரது மெலிந்த மனைவி, பைத்தியம் பிடித்த பெண்...என்ன கஷ்டம் இது!"

★

தீபாவளிக்கு இரண்டு நாட்கள் இருந்தன. பின்கட்டு மாமி என்னிடம் மன்றாடிக் கேட்டுக் கொண்டாள்.

"பெரிய உபகாரம் ஒன்று செய்யணும்! உங்களைத்தான் மலைபோல நம்பி யிருக்கிறேன். சின்னக்குட்டி அம்புஜத்துக்கு இந்த வருஷம் தலை தீபாவளி. நாளைக்கு அவள் கணவன் புதுடில்லியிலிருந்து 'பறந்து' வரப் போவதாகக் கடிதம் போட்டிருக்கிறான். என்னமோ இவ்வளவு கஷ்டத்திலே அவளை மட்டும் நல்ல இடத்தில் எதிர்பாராதவிதமாகக் கல்யாணம் செய்து கொடுத்துவிட்டேன். தீபாவளி அன்று மத்தியானமே அம்புஜத்தைக் கையோடு கூட்டிக்கொண்டு போய் விட வேண்டும் என்று எழுதியிருக்கிறான். மாப்பிள்ளை வந்து திரும்பிப் போகிற வரையில் இரண்டு நாட்களுக்கு உங்கள் மாடி அறையில் சாரதாவை அடைத்துப் போட அனுமதிப்பீர்களானால் உங்களுக்கு எவ்வளவோ புண்ணியம்.

"இப்படி ஒரு மைத்துனி வீட்டோடு இருக்கிறாள் என்றே அவனுக்குத் தெரியாது. தெரிந்தால் என்ன நினைத்துக் கொள்ளுவானோ! சின்னப் பெண்ணாவது அகமுடையான் வீட்டுக்குச் சென்று சௌக்யமாக வாழட்டும். அதற்கு அனுக்ரஹியுங்கள்!"—என்று வாத்தியார் மனைவி சொன்னபோது அம்புஜம், அம்மாவுக்குப் பின்னால் பரிதாபகரமாக நின்று கொண்டிருந்தாள். அவள் என்னையும் அவளுடைய தாயாரையும் பார்த்த பார்வை, 'என்னத்துக்கு ஊராருக்கு இம்சை கொடுக்க வேணும்?' என்று கூறுவது போல் இருந்தது.

எனக்கு மனம் இளகி விட்டது. எங்கள் வீட்டுக்கு எந்தத் தலை தீபாவளி - மாப்பிள்ளையும் வரவில்லை. அவர் கூட இந்த வருஷத் தீபாவளிக்கு ஊரில் இருக்கமாட்டார்; வெளியூர் 'முகாம்' இருக்கும் என்று சொல்லி விட்டார். இரண்டு நாட்களுக்கு மாடி அறையைச் சாரதாவுக்கு ஒழித்து விட்டால் என்ன என்று தோன்றியது. பைத்தியம் என்று பிரமாதமாகக் கதறிக்கொண்டோ, ஆர்ப்பாட்டம் செய்து கொண்டோ பயப்படும்படிச் சாரதா எவ்வித 'கலாட்டா'வும் செய்து நான் பார்க்கவில்லை. எனவே, "சரி, மாமி!" என்று சொல்லி விட்டேன். அந்த அம்மாளுக்கு இனாமாக ஆயிர ரூபாயைக் கொடுத்திருந்தால் கூட இவ்வளவு திருப்தி ஏற்பட்டிருக்காது. முகத்திலே புதிய குதூகலம் ஒன்றை வரவழைத்துக் கொண்டு "இந்த நன்றியை என்றுமே மறக்கமாட்டேன்" என்றாள்.

★

தீபாவளிக்கு முதல்நாள். மாடி அறைப் பக்கம் சென்று பரண்மேல் கிடந்த வெந்நீர்த் தவலையை எடுத்தேன்.

அறைக்குள் அடைபட்டுக் கிடந்த சாரதா, "மாமி!" என்று கூப்பிட்டாள். அவளோடு பேசலாமா, வேண்டாமா என்று தயங்கி நின்றேன்.

"உங்கள் தயக்கம் எனக்குப் புரிகிறது, மாமி! என் அம்மா என்னைப் பற்றி உங்களிடம் சொல்லிக் கொண்டிருந்தது எல்லாம் எனக்குத் தெரியும். எனக்குப் பைத்தியமில்லை மாமி! நீங்கள் கூட என்னைப் பைத்தியம் என்று நம்புகிறீர்களா, என்ன?" என்று சாரதா கேட்டாள்.

நான் அசந்து போனேன்.

"மாமி! என்னை நீங்கள் நம்புங்கள். வெளிக் கதவைச் சாத்தி விட்டுச் சற்று வந்து உட்காருங்கள். என்னுள்ளத்தைத் திறந்து உங்களுடன் பேசவேண்டும்..." என்று அவள் கனிவுடன் கூறி என்னை அடி எடுத்து வைக்காமல் உட்கார வைத்துவிட்டாள்.

அவள் இருந்த அறைக் கதவைத் தைரியமாகத் திறந்து விட்டேன். சாரதா என் அருகே வந்து மண்டியிட்டு அமர்ந்தபடி மனம் திறந்து பேசினாள்.

★

"அப்போது எனக்குக் கல்யாணம் ஆகவில்லை. பதினாறு வயதிருக்கும். இந்த மாடி அறைக்கு யாரும் குடி வராமல் காலியாகக் கிடந்தது. வீட்டுக்காரர் சாவியை எங்களிடம் கொடுத்து யாருக்காவது வாடகைக்கு விடச் சொல்லியிருந்தார். நான் அடிக்கடி சாவியை எடுத்துக்கொண்டு மாடி அறையைத் திறந்து இங்கே வந்து உலாவுவேன்; நாவல் ஒன்றைப் படித்துக் கொண்டிருப்பேன்.

ஒரு நாள் 'ஸ்வெட்டர்' நூலை எடுத்துப் பின்னிக் கொண்டே மாடி அறைக்கு வந்து, ஜன்னல் விளிம்பில் முழங்கைகளை ஊன்றியபடி எதிர் வரிசை வீடுகளைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

எதிர் வரிசையில் தென்பட்டது மாடி வீடு; அதிலும் இதே போல மாடி அறை. அதற்குள்ளிருந்த ஜன்னல் வழியாக ஒரு வாலிபன் என்னை உற்றுக் கவனிப்பதைக் கண்டேன். சட்டென்று இறங்கி ஓடி விடலாமா வென்று பார்த்தேன். ஏதோ ஒரு உணர்ச்சி என்னைத் தேக்கிற்று. அந்த வாலிபன் என்னைப் பார்க்கும் போது எனக்கும் அவனைப் பார்க்கத் தோன்றியது.

பார்த்தேன்; அந்தக் களையான முகம், அமுக்கி வாரி விடப்பட்ட அலை அலையான கிராப்பு, விழிகளிலே வட்டமிட்ட குறும்பு கலந்த குறுகுறுப்பு, எல்லாமே எனக்கு மிகப் பிடித்திருந்தன.

அவன் யாரோ, என்ன பேரோ? எதிர்வீட்டு மாடியில் அவனுக்கு என்ன வேலையோ?



எனக்குத் தெரியாது. அந்தச் சுந்தர முகம் எனக்குப் பிடித்திருந்தது. நான் மாடி அறைக்கு வந்து திருட்டுத்தனமாக ஜன்னல் கதவைத் திறந்து எட்டிப் பார்க்கும் போதெல்லாம் அவனும் ஜன்னல் கதவைத் திறந்து எட்டிப் பார்த்தான்.

அந்தப் பார்வை என்னை விழுங்கிற்று; என்னவோ செய்தது; என் நெஞ்சம் கிளைவும் படபடத்தன. ஆனால் பத்து நாட்களுக்கு மேல் நீடிக்கவில்லை! அவன் எங்கேயோ போய்விட்டான். என் நெஞ்சில் ஆசைக் கனலை மூட்டி வேதனையை வடித்து விட்டுப் போய்விட்டான்.

அந்த நினைவு முகம் இன்னும் கண் முன்னே நிற்கிறது. மறக்கவே முடியவில்லை, மாமி!

இந்தச் சமயத்தில் தான் என்னை ஒரு கிழவருக்கு இரண்டாம் தாரமாக மணம் செய்விக்க முடிவு செய்து விட்டார்கள். 'உனக்கு இஷ்டமா?' என்று ஒரு வார்த்தை கேட்கவில்லை.

இந்தக் கட்டாய பலிக்கு என் கழுத்தைக் கொடுக்காமல் எங்கேயாவது ஓடி விடலாமா என்று பார்த்தேன். அதனால் எங்கள் குடும்பத்துக்கு அபகீர்த்தி ஏற்படும் என்று தோன்றியது. எனக்குப் பின் தங்கை ஒருத்தி கல்யாணத்திற்கு நின்றாள். அவளுடைய எதிர்காலமாவது சோபிக்கட்டும். அதை என்னுடைய 'முடிவு' பாதிக்காமல் இருக்கட்டும் என்று ஒரு சூழ்ச்சி செய்தேன்.

இப்படிப்பட்ட இரண்டாந்தாரக் கிழக் கட்டைகளுக்குப் புத்தி வர வேண்டுமானால் 'அடம்' செய்துதான் ஆக வேண்டுமென்று தீர்மானித்தேன். திருகப் பிரவேசத்தன்று போட்ட பைத்தியக்கார வேஷத்தை இன்றுவரை கலைக்கவில்லை! ஆனால் எனக்கு ஏன் இன்னும் உண்மையாகவே பைத்தியம் பிடிக்கவில்லை என்று ஆச்சரியமாக இருக்கிறது. ஏன் மாமி! எனக்குப் பைத்தியக்காரனு?"

சாரதா சொன்னது, அவள் அம்மா கூறினதைவிட உருக்கமாக இருந்தது. இவளைப் பைத்தியம் என்கிறார்களென்று நான் ஆரம்பத்தில் நினைத்தது சரியாகி விட்டது.

"மாமி! உங்களிடம் சொல்லவேண்டும் என்று தோன்றியது. சொன்னேன். நீங்கள் யாரிடமும் சொல்லிவிட வேண்டாம்!" என்று அவள் என்னிடம் வேண்டிக் கொண்டாள்.

★

அன்று மாலை டாக்ஸியில் அம்புஜத்தின் கணவர் வந்து இறங்கினர். கார்ச் சத்தம் கேட்டு மாடி அறையிலிருந்த நான் ஓடிச் சென்று பார்த்தேன். எனக்குப் பின்னுல் சாரதா ஓடி வந்து, "நானும் பார்த்து விடுகிறேன் மாமி! என் தங்கை புருஷனைக் கல்யாணத்தின்போதே பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை. இந்தப் 'பைத்திய'த்தைத் தள்ளிவிட்டு எல்லோரும் போய்விட்டார்கள்!" என்று அவள் நெஞ்சில் துக்கம் முட்ட எனக்குப் பின்னுல் எட்டிப் பார்த்தாள்.

அடுத்த கணம் 'ஹா!' வென்று சுருண்டு விழுந்து விட்டாள் சாரதா.

ஓடிச் சென்று வெளிக் கதவைத் தாளிட்டேன். விழுந்தவளை மெதுவாகத் தூக்கி அறைக்குள் அழைத்துச் சென்று ஆசுவாசப்படுத்தினேன்.

"சாரதா! திடீரென்று உனக்கு என்ன வந்து விட்டது? அம்மாவைக் கூப்பிடட்டுமா?" என்று ஒன்றும் புரியாமல் பதறிப் போனேன்.

கண்களை விழித்து என்னைப் பார்த்த சாரதா, "வேண்டாம், மாமி!" என்று உரைத்து விட்டு, மென்று விழுங்கினுள். என்னமோ சொல்ல வாயெடுத்தவள் நிறுத்தி விட்டாள்.

"சாரதா! என்ன? ஏன் மயங்கி விழுந்தாய்? என்ன சொல்ல நினைத்தாய்?" என்று பரபரப்புடன் கேட்டேன்.

"மாமி! என்னத்தைச் சொல்லுவேன்? காரிலிருந்து இறங்கி வந்த என் தங்கையின் கணவர் தான்...... நான் பல வருஷங்களுக்கு முன்னுல் எதிர்வீட்டு ஜன்னல் கடுவே பார்த்த அந்த முகத்தின் சொந்தக்காரர்..." என்று விம்மிக் கொண்டே சொல்லி விட்டு மீண்டும் மயங்கி விழுந்து விட்டாள் சாரதா.

தீபாவளிப் பண்டிகை முடிகிற வரையில் 'அந்த ஒரு நாளில் ஏதா



வது விபரீதம் நடந்து விடாதபடி சர்வ ஜாக்ரதையாக நடந்து கொண்டேன். அம்புஜத்தை அவள் கணவன் அழைத்துச் சென்ற பிறகு தான் எனக்கு மனநிம்மதி ஏற்பட்டது.

சாரதாவுக்கு எவ்வளவோ எடுத்துச் சொன்னேன். இனி அந்த முகத்தை நினைத்து ஏங்குவது, வாழ் நாள் முழுதும் பைத்தியக்கார வேஷம் போட்டுத் தன் வாழ்வை வேம்பாக்கிக் கொள்வது எல்லாம் சரியில்லை என்று விவரித்துச் சொன்னேன்.

"கல்யாணத்தின் போதே உன் உள்ளத்தைத் திறந்து சொல்லியிருக்க வேண்டும். அதற்குத் தைரியமில்லாமல் அக்கிழவருக்கு வாழ்க்கைப் பட்டு விட்டு இப்படி இருப்பது சரியல்ல. இன்னும் சில மாதங்களுக்குப் பிறகு உன்னுடைய கிழக் கணவரும் உன்னை மறந்து வேறு யாரையாவது, மணந்து கொண்டு விடலாம். அப்புறம் உன் கதி? அவருடைய அன்பு குறைவதற்கு முன்னாலேயே உன்னுடைய வேஷத்தைக் கலைத்து விட்டு அவருடன் வாழ்க்கை நடத்துவது தான் உசிதம். இனி உன்னுடைய தங்கையின் புருஷனைக் கனவிலும் நினைத்து வாட உனக்கு உரிமையில்லை" என்று அவள் மனத்தில் பதியும்படிச் சொன்னேன்.

ஆனால் சாரதா ஒன்றும் பதில் கூறாமல் மௌனம் சாதித்தாள். அவளுடைய கண்களிலிருந்து பாரமான நீர் முத்துக்கள் உதிர்ந்தன. எனக்கு அதன் அர்த்தம் புரியவில்லை. நான் திரும்பவும் அவளுக்கு உபதேசம் செய்ய முற்பட்டேன். 'அவள் தன் வாழ்க்கையின் முதல் காலையிலேயே பட்டுப் போய் விடும்படி அந்தப் பாழான விதி செய்து விட வேண்டுமா? அவளுடைய எதிர் காலத்தின் விடிவெள்ளியை அவள் காணவே முடியாதா? சுய புத்தி கொண்டு, இந்த உலகத்தில் எப்பேர்ப்பட்ட மேடு பள்ளங்களையும் சாமர்த்தியமாகக் கடந்து விடலாமே! அதற்கு முதலில் கொஞ்சம் மன அடக்கம் வேண்டும்! அவ்வளவு தானே! எப்படியும் சாரதாவை அவளுக்குத் தாலி கட்டிய அதே மனிதரிடம் சேர்த்து விட்டால், பிறகு அவள் ஒரு பைத்தியமாய்ப் பதுங்கி வாழ வேண்டிய துர்ப்பாக்கிய நிலையாவது நீங்கிவிடுமல்லவா? அவள் முதலில் எண்ணியபடி இனிமேல் எந்த இளங்குமாரனையும் அடைவதற்கில்லை! ஆனால் விதி வகுத்த அந்தக் கோட்டிலேயே நின்று தன் வாழ்க்கையில் மன அமைதியை அவள் ஏன் அடைய முடியாது?" என்று எனக்கு மிகவும் உறுதியாகத் தோன்றியது.

ஆகையினால் அவளைப் பார்த்துக் கடைசியாகக் கேட்டேன் மிகவும் இரக்கத்துடன். "என் உபதேசம் உனக்குப் பிடிக்கவில்லையா?" என்று நான் கேட்ட அப்போது அவள், தன் உடல் சிலிர்க்க, "மாமி!" என்று ஏதோ கூறத் தொடங்கினாள். ஆம்! நான் விரும்பி எதிர்பார்த்த பதிலையே தான் அவள் கூறினாள்.

அவளுடைய மனக்கதவு திறந்து விட்டது. "மாமி! நீங்கள் சொல்லுகிறபடி கேட்கிறேன்" என்று உள்ளம் திறந்து கூறி விட்டாள்.

பிறகு சின்ன நாடகம் ஒன்று நடத்தேன். சாரதாவை என் பிறந்த ஊரான பாலக்காட்டிற்கு அழைத்துச் சென்று வைத்தியம் செய்து பைத்தியம் தெளிய வைப்பதாகவும், அங்கே அதற்கு என்று பிரத்யேகமான வைத்தியம் இருப்பதாகவும் ஒரு போடு போட்டேன். சாரதாவின் அம்மாவுக்குப் பரம திருப்தி. சாரதாவை என்னோடு அனுப்பி வைத்தாள்!

★

அதற்கு அடுத்த மாதம் ஒரு நல்ல நாள் பார்த்துச் சாரதா புக்ககம் போனாள்.

கூடத்திலே குத்து விளக்கு அழகாகச் சுடர் விட்டெரிந்தது.

# பூங்காவனத்தின் புதுவாழ்வு



ய், கண்ணுசாமி! எங்கே கிளம்பிட்டே? இங்கே வா, வா! இந்தக் கறுப்புப் பசுவுக்குத் தண்ணீர் காட்டு! —ஆமாம், இந்த வெள்ளை எருமையைப் பிடித்து வேலி ஓரத்திலே கட்டு என்று உனக்கு நான் எத்தனை தரம் சொல்லி யிருக்கிறேன்—கேட்டாயா? பொழுது சாய்வதற்குள்ளே வீட்டுக்கு மட்டும் கிளம்பிடறியே!" என்று கத்திவிட்டு, அவன் கன்னத்தில் 'சுளீர்' என்று ஒரு அறை கொடுத்தார் தம்புசாமிப் படையாட்சி.

கண்ணுசாமி கண்களில் நீர் வழியக் கன்னத்தைத் தடவிக் கொண்டே கறுப்புப் பசுவுக்குத் தண்ணீர் காட்டப் போனான்.

படையாட்சி பக்கத்தில் கிடந்த மூங்கில் கழியை எடுத்து முரண்டு செய்யாத வெள்ளை எருமையின் முதுகில் நாலுபோடு போட்டு, அதைக்கொண்டு போய் வேலி ஓரத்தில் கட்டினார்.

ஆமாம், தம்புசாமிப் படையாட்சிக்கு எதைக் கண்டாலும் வெறுப்பு; ஏதோ ஆத்திரம்! — எதையாவது, யாரையாவது அடித்துத் திட்டினால் தான் அவர் மனம் கொஞ்சமாவது நிம்மதியாக இருக்கும்.

அன்று இத்துடன் அவர் நின்றுவிடவில்லை; தோட்டத்தை ஒரு முறை சுற்றிப் பார்த்துவிட்டு 'விர்' என்று வீட்டுக்குள் நுழைந்தார். கனம் பொருந்திய படையாட்சியின் கண்ணியம் தெரியாமல் வழியில் இருந்த தண்ணீர்த் தோண்டி அவருடைய காலில் பட்டுவிட்டது. அவ்வளவுதான்; எரிகிற பந்தத்தில் எண்ணெய் விட்டதுபோல அவருக்குக் குபீரென்று கோபம் பொத்துக் கொண்டு வந்து விட்டது. தண்ணீர்த் தோண்டியை எட்டி ஒரு உதை உதைத்துத் தள்ளி விட்டுப் புகையும் அடுப்புடன் போராடிக் கொண்டிருந்த பூங்காவனத்தை நோக்கிச் சென்றார்.

"ஏ, பூங்காவனம்! நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்? வழியில் தண்ணீர்த் தோண்டியை வைத்தால் அதில் நான் தடுக்கி விழுவேன் என்று நினைத்தாயோ? இந்தத் தம்புசாமிப் படையாட்சியிடம் அதெல்லாம் ஒன்றும் பலிக்காது!" என்று இரைந்து கொண்டே, புளிய மரத்தை உலுக்குவது போல அவள் கழுத்தைப் பிடித்து ஒரு உலுக்கு உலுக்கினார்.

"இப்பொழுதுதான் கிணற்றிலேயிருந்து அந்தத் தோண்டி நிறையத் தண்ணீர் எடுத்துக்கொண்டு வந்தேன். உள்ளே இறக்கி வைக்கிறதுக்குள்ளே அடுப்பிலேயிருந்த கீரைக் குழம்பு தீயும் வாசனை வந்தது. தோண்டியை நடையிலே வைத்துவிட்டு அவசர அவசரமாக உள்ளே வந்தேன்......"

"ஓகோ! குறுக்கே பேசறதுக்கு வேறே நீ தயாராகி விட்டாயா?" என்று அவளுக்கு இன்னும் இரண்டு கொடுத்துவிட்டுத் தம்புசாமிப் படையாட்சி வெளியே வந்தார்.

வீதியில் கூட்டமாக விளையாடிக் கொண்டிருந்த குழந்தைகள் படையாட்சியைக் கண்டதும் பாம்பைக் கண்டதுபோல் பயந்து ஓடி விட்டன. 'கலகல' வென்று பேசிக் கொண்டே தெருவோடு வந்த சில விவசாயிகள் தம்புசாமிப் படையாட்சியின் கனைப்புச் சத்தத்தைக் கேட்டதும் தங்களுடைய பேச்சை நிறுத்திக் கொண்டதோடு, நடையையும் தளர்த்திக் கொண்டு விட்டனர்.

அவருடைய வீட்டைத் தாண்டியதும் அவர்களுடைய பேச்சு மீண்டும் ஆரம்பமாயிற்று:

"நல்ல வேளை! நாம் தம்புசாமியைப் பற்றிப் பேசாமல் வந்தோம்..." என்றான் அவர்களில் ஒருவன்.

"ஆள் வர வர ரொம்ப மோசமாகி விட்டான்! நேற்று அவன் வீட்டு வாசலில் இரண்டு குழந்தைகள் கோலி விளையாடுவதற்காகக் குழி பறித்துக் கொண்டிருந்தனவாம். அதற்காக அவர்களில் ஒரு பையனைப் பிடித்து அவன் 'அடிஅடி' என்று அடித்து நொறுக்கி விட்டானாம்!" என்றான் இன்னொருவன்.

"நானும் பார்த்தாலும் பார்த்தேன், இவனைப் போன்ற கொடியவனைப் பார்த்ததே இல்லை. சின்னஞ் சிறு பையனாக இருந்தாலும், வாய் இல்லாத பிராணியாக இருந்தாலும் இந்தக் கிராதகனுக்கு எல்லாம் ஒன்றுதான்!" என்று சொன்னான் வேறொருவன்.

பகீரதன்

"இல்லாவிட்டால் இவனுடைய பிள்ளைகள் இரண்டும் இவனை விட்டு ஓடிப் போயிருக்குமா? அந்தப் பிள்ளைகளை இந்தப் பாவி என்ன பாடு படுத்தினானோ? அந்தப் புண்ணியவதி பூங்காவனம் ஒருத்திதான் தாலி கட்டிய தோஷத்திற்காக இவனுடன் இருந்து குடித்தனம் செய்கிறாள்!" என்று சொன்னான் மற்றும் ஒருவன்.

இப்படி ஊரார் வெறுப்புக்கும் உற்றார் கசப்புக்கும் ஆளாகியிருந்த தம்புசாமிப் படையாட்சிக்கு வயது சற்றேறக் குறைய ஐம்பது இருக்கும். இருந்தாலும் அவருடைய உடல் கட்டுக் குலையாமலிருந்தது. அவருடைய பேச்சிலும் செயலிலும் அகம்பாவம், அலட்சியம், ஆத்திரம் எல்லாம் குமுறிக் கொண்டிருந்தன. பொதுவாக எல்லாவற்றிலும் அவர் குற்றம் காணும் சுபாவம் உள்ளவர். ஆகையால் மூங்கில் தோட்டத்துக் கிராமத்தில் உள்ளவர்கள் எல்லோரும் அவரை வெறுத்து வந்தார்கள். அதற்காக அவர் சந்தோஷமடைந்தாரே ஒழியத் துக்கப்படவில்லை!

* * *

மறு நாள் மாலை. மூங்கில் தோட்டம் அமைதியாக இருந்தது. கிராமத்து வீதிகளில் எல்லாம் குழந்தைகள் கும்மாளி போட்டு விளையாடிக் கொண்டிருந்தன. தெருக்கோடியிலிருந்த கோயில் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்துக் கொண்டு வந்த பெண்கள் ஊர் வம்புகளைப் பற்றிப் பேசிக்கொண்டு சென்றனர். ஊருக்கு மேற்கே உள்ள சவுக்குத் தோப்புக்குப் பின்னால் கதிரவன் தங்கத் தாம்பாளம் போன்ற தன்னுடைய பொன்னான மேனியைப் பூமிக்குள் புதைத்துக் கொண்டிருந்தான். நாள் பூராவும் வயல் வெளியில் வேலை செய்து அலுத்துப்போன விவசாயிகள் வீடு திரும்பிக் கொண்டிருந்தனர். கும்பல் கும்பலாகப் பறவைகள் தங்கள் கூட்டைத் தேடிப் பறந்து சென்றன. மாட்டுக்காரக் கண்ணுசாமி ஒய்யாரமாக 'விசில்' அடித்துக்கொண்டு, கறுப்புப் பசுவையும் வெள்ளை எருமையையும் வீட்டுக்கு ஓட்டிக் கொண்டு வந்தான்.

இவர்களுக்குச் சற்றுத் தூரத்தில் தம்புசாமிப் படையாட்சி தம் வீட்டை நோக்கி வந்துகொண்டிருந்தார். வழக்கம் போல் அவர் முகத்தில் கடுகடுப்பு வெடித்துக் கொண்டிருந்தது. அதற்கேற்றாற் போல் சாயங்கால நேரத்தில் வீட்டுத் திண்ணையில் எரியும் விளக்கு எரியவில்லை; தெருக் கதவு வேறு சாத்தி யிருந்தது!

"பூங்காவனம்! ஏய், பூங்காவனம்!"

—உள்ளே யிருந்து பதில் வரவில்லை.

படையாட்சிக்கு ஆத்திரம் அளவு கடந்துவிட்டது. சாத்தியிருந்த கதவைப் பலமாக ஒரு உதை உதைத்தார். அது உள்ளே தாளிடாமல் இருந்ததால் வேகமாகத் திறந்து 'படீர்' என்ற சத்தத்துடன் சுவரில்

மோதி நின்றது. வீட்டுக்குள் நுழைந்ததும், இன்னும் பலமாக, ''பூங்காவனம்! பூங்காவனம்!'' என்று இரைந்தார்.

பதிலே யில்லை!

உள்ளே சென்று மூலை முடுக்கெல்லாம் தேடினார்; காணவே காணோம்!

'எங்கே போயிருப்பாள்?' என்று யோசித்தபடி, இருள் நிறைந்த அந்த வீட்டுக்குள் விளக்கைக்கூட ஏற்றாமல் அங்கிருந்த பெஞ்சின்மீது 'அப்பாடா!' என்று உட்கார்ந்தார்.

சிறிது நேரத்துக்குப் பிறகு எதையோ நினைத்துக்கொண்டு வெளியே வந்தார். பயபக்தியுடன் திண்ணை ஓரமாக நின்ற மாட்டுக்காரக் கண்ணுசாமி அவருடைய கண்ணில் பட்டான்.

''ஏ, கண்ணுசாமி! அம்மா எங்கேடா போனாள்?'' என்று கேட்டார்.

தன் தைரியத்தை யெல்லாம் வரவழைத்துக் கொண்டு கண்ணுசாமி சொன்னான்:

''பகலுக்கு மேலே ஒரு துணி மூட்டையை எடுத்துக் கொண்டு அவுங்க ஆத்தா வீட்டுக்குப் போகிறதாக அடுத்த வீட்டு அம்மாவிடம் சொல்லி விட்டுப் போனாங்களாம்!''

இதைச் சொல்லி முடிப்பதற்குள் அவனுக்கு வியர்த்து விறுவிறுத்து விட்டது.

''சரி, நீ வீட்டுக்குப் போய்விட்டு வா!'' என்று சொல்லிவிட்டுப் 'படார்' என்று கதவைச் சாத்திக் கொண்டு மீண்டும் உள்ளே போனார்.

அவருக்குக் கோபம் கோபமாக வந்தது. குடும்பம், சமூகம், ஊர், உலகம் எல்லாவற்றின் மேலும் அவருக்கு எப்பொழுதுமே வெறுப்பு. அந்த வெறுப்பைக் காட்டிக்கொள்ள மனைவி என்று ஒருத்தி இருந்தாள். இப்பொழுது அவள் இல்லை. அதனாலேயே அவருக்கு அவள் மீது இன்னும் அதிகமாகக் கோபம் வந்தது. ஆனால் அந்தக் கோபத்தை அவர் இப்போது யார்மீது காட்டுவது? எதன்மீது காட்டுவது? — அவருக்கு ஒன்றும் புரியவில்லை. அவருடைய மனம் அந்த விளக்கில்லாத வீட்டைப் போலவே இருண்டது. அந்தச் சூழ்நிலையைத் தாங்காமல் முப்பது வருஷங்களுக்குப் பின்னால் அவருடைய மனம் சென்றது.

2

மூங்கில் தோட்டத்துக் கிராமத்தில் காட்டாண்மைக்காரப் படையாட்சியார் என்று பெயர் பெற்ற சிவசாமிப் படையாட்சியின் செல்லப் பிள்ளையாக அப்போது வளர்ந்து வந்தான் தம்புசாமி. காளைக் கன்று மாதிரி 'துருதுரு' வென்று அவன் இருப்பான். காட்டாண்மைக்காரரின் சிநேகிதரான மணியக்காரத் திருவேங்கட முதலியார் வீட்டுக்கு அவன் அடிக்கடி போய் விடுவான். காரணம், அவனுடன் விளையாடுவதற்கு அங்கே முதலியாரின் மகள் ஞானதி இருந்தாள்!

ஞானதியும் தம்புசாமியைத் தவிர வேறு யாருடனும் விளையாடுவதில்லை. மூங்கில் தோட்டத்து முதலியார்கள் படையாட்சி வீட்டில் தண்ணீர்கூட வாங்கிச் சாப்பிடமாட்டார்கள். காரணம், படையாட்சிகளைவிடத் தாங்கள் உயர்ந்தவர்கள் என்று அவர்கள் எண்ணியதுதான்! — அப்படி இருந்தும் காட்டாண்மைக்கார வீட்டுப் பையன் மீது மணியக்கார முதலியாருக்கு ஏதோ ஒரு தனிப் பிரியம்.

பள்ளிக்கூடத்திலும், ஆற்று ஓரத்திலும், பஜனை மடத்திலும், பாண்டி விளையாடும் இடத்திலும் — எங்கே பார்த்தாலும் தம்புசாமியையும் ஞானதியையும் சேர்த்தே பார்க்கலாம். அதன் காரணமாக அவர்கள் வீட்டில் ஞானதியைக் காணவிட்டால் தம்புசாமியைத் தேடுவார்கள்; தம்புசாமியைக் காணவிட்டால் ஞானதியைத் தேடுவார்கள். விஷயம் தெரியாத சிலரோ அவர்கள் இருவரும் இரட்டைக் குழந்தைகள் என்று கூடத் தீர்மானித்து விடுவார்கள்!

இவர்கள் வயது வளர வளர இவர்களுடைய நட்பும் வளர்ந்தது. கடைசியில் சிநேகம் முற்றி வழக்கம் போல் காதலாக மலர்ந்தது. ''நான் உன்னைத் தவிர வேறு யாரையும் இந்த ஜன்மத்தில் கலியாணம் செய்து கொள்ள மாட்டேன்'' என்று காவேரிக்கரை மாரியம்மன் சன்னதியில் கையடித்துச் சத்தியம் செய்தாள் ஞானதி. ''உன்னைக் கலியாணம் செய்து கொள்ள ராமனில்லை, ராவணனில்லை—யார் வந்தாலும் சரி, அவர்களை எதிர்த்துச் சண்டை போட்டு நான் தோற்கடித்து விடுவேனாக்கும்!'' என்று சபதம் கூறினான் தம்புசாமி.

இந்தக் காதல் நாடகத்தைக் கண்டு கல்லாய்ச் சமைந்து நின்றாள் காவேரிக்கரை மாரியம்மன்.

நாட்கள், வாரங்கள், மாதங்கள் என்று இரண்டு ஆண்டுகள் ஓடி மறைந்தன. இந்த இரண்டு வருஷங்களில் ஒருநாள் கூடத் தவறாமல் காவேரிக்கரை மாரியம்மன் கோவில் பிராகாரத்தில் தம்புசாமியும் ஞானதியும் சந்தித்து வந்தார்கள். இவர்களுக்கென்று தினசரி என்னதான் விஷயம் கிடைக்குமோ, அந்த மாரியம்மனுக்குத்தான் வெளிச்சம்! நேரம் போவதே தெரியாமல் அவர்கள் பேசுவார்கள், பேசுவார்கள், அப்படிப் பேசுவார்கள்; கடைசியில் ஒவ்வொரு நாளும் பிரியமனமில்லாமல் பிரிவார்கள்.

இந்த ரகசியச் சந்திப்பு முதலில் மாரியம்மனுக்கு மட்டும்தான் தெரிந்திருந்தது. பிறகு மாரியம்மன் கோவில் பூசாரிக்குத் தெரிந்து, அப்புறம் காட்டாண்மைக்காரப் படையாட்சிக்கும் மணியக்கார முதலியாருக்கும் தெரிந்து போய்விட்டது.

அவ்வளவுதான்; ''வீட்டை விட்டு வெளியே போகக் கூடாது!'' என்று முதலியார் தமது மகள் ஞானதியைத் தடுத்தார். தம்புசாமியின் தகாத செயல்களைப் படையாட்சி கண்டித்தார். என்ன தடுத்தும், என்ன கண்டித்தும் என்ன பயன்? — எல்லாக் காதலர்களையும் போலவே அவர்கள் யாருடைய கண்ணிலும் படாமல் ரகசியமாகச் சந்தித்து வந்தனர்.

இதை வளர விடக் கூடாது என்று முதலியார் தம் மகளுக்குச் சீக்கிரம் கலியாணத்தை முடித்து விடத் தீர்மானித்தார். காட்டாண்மைக்காரப் படையாட்சியும் தம்புசாமிக்குப் பெண் பார்க்க ஆரம்பித்துச் சில நாட்களுக்கெல்லாம் ஒரு பெண்ணையும் தேர்ந்தெடுத்து விட்டார்.

* * *

ஒரு நாள் சிவசாமிப் படையாட்சி தம்புசாமியைக் கூப்பிட்டு, ''இன்று உன்னை 'மாப்பிள்ளை பார்க்க' வருகிறார்கள்; நீ வெளியே எங்கும் போய் விடாதே; பேசாமல் வீட்டிலேயே இரு!'' என்று சொன்னார்.

இதைக் கேட்ட தம்புசாமிக்குத் தலை சுழல ஆரம்பித்தது. வானம், பூமி எல்லாமே சுழன்று எங்கேயோ போவதுபோல அவனுக்குத் தோன்றியது. கடைசியில் ஒருவாறு நிலைமையைச் சமாளித்துக் கொண்டு, ''எனக்கு இப்பொழுது கலியாணம் வேண்டாம், அப்பா!'' என்றான்.

ஒரு நாளும் தன் வார்த்தைக்கு எதிர் வார்த்தை சொல்லாத தம்புசாமியின் பதிலைக் கேட்டதும்



''இப்பொழுதுதான் நினைத்தேன் விருந்து...''

படையாட்சி பதை பதைத்துப் போய் விட்டார். இருந்தாலும், "இப்பொழுது அப்படித்தான் சொல்லுவாய்; பெண்டாட்டி வந்த பிறகு யாரையும் திரும்பிக்கூடப் பார்க்கமாட்டாய்!" என்றார் அவர் 'இடி இடி' யென்று சிரித்துக் கொண்டே.

தகப்பனாரின் சிரிப்பைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று எண்ணி, "அப்பா! கலியாணம் செய்து வைப்பதாயிருந்தால் எனக்கு ஜானகியைக் கல்யாணம் செய்து வைத்து விடுங்களேன்!" என்றான் தம்புசாமி.

அவர் கேட்கவில்லை; எனவே அவன் துணிந்து அவருடன் தர்க்கம் பேசினான்.

கோபம் பொத்துக்கொண்டு வந்து விட்டது நாட்டாண்மைக்காரருக்கு. "காதலாம், கத்தரிக்காயாம்! முதலியார் வீட்டுப் பெண்ணை க்ஷத்திரியர்களாயெ நாம் கலியாணம் செய்து கொள்ளலாமா? மகா கேவலமில்லே? உனக்காக நான் ஒப்புக்கொண்டாலும் நமது உறவினர்கள் ஒப்புக் கொள்ளவே மாட்டார்கள். முதலியாரும் உனக்குப் பெண் கொடுக்க மாட்டார். வீணாக உலகம் தெரியாமல் உளறாதே! போ, போய் உருப்படியாக ஏதாவது செய், போ!" என்று எரிந்து விழுந்தார் அவர்.

தந்தையின் கோபம் தம்புசாமியைக் கொஞ்சம் தடுமாறச் செய்து விட்டது. இதற்கு நடுவே அவனுடைய தாயாரும், ஊராரும், உறவினர்களும், "சாதி விட்டுச் சாதி கலியாணம் செய்து கொள்ளுவது நமது சாதிக்கு அடுக்காது!" என்று இதோபதேசம் செய்தனர். இவர்களுடைய பேச்செல்லாம் தம்புசாமியின் காதில் ஏறவில்லை. ஒருவருக்கும் தெரியாமல் ஜானகியுடன் ஓடிவிடுவது என்று அவன் கடைசியில் தீர்மானித்தான்.

ஆனால் அந்த எண்ணம் ஈடேறவில்லை; அதற்குள் ஜானகியின் திருமணம் எவ்விதக் குறைவுமின்றி 'ஜாம், ஜாம்' என்று மங்களகரமாக நடந்து முடிந்து விட்டது!

தம்புசாமி என்ன செய்வான், பாவம்! தான் ஒரு நாள் கூடப் பார்க்காத, ஒரு வினாடிகூடப் பழகாத ஒரு பெண்ணை, பெற்றோர்களால் நிச்சயிக்கப்பட்ட ஒரே காரணத்துக்காக, அவன் தன்னுடைய வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொள்ள வேண்டிய பரிதாப நிலையை அடைந்தான். ஒரு சுபயோக சுபதினத்தில் ஜானகிக்குக் கல்யாணமான சில நாட்களுக்கெல்லாம் தம்புசாமிக்கும் எந்தவிதமான தடங்கலுமில்லாமல் திருமணம் நடந்தேறியது.

கலியாணம் முடிந்து விட்டதை நினைத்துக் களிப்படைந்தார் நாட்டாண்மைக்காரர். ஆனால் தம்புசாமியோ தன் எதிர்கால வாழ்க்கையே குட்டிச்சுவராகி விட்டது என்று கருதினான். அவனையும் அறியாமல் அவன் மனம் தன் பெற்றோர்களை வெறுக்க ஆரம்பித்தது. இப்படி ஆரம்பித்த வெறுப்பு நாளடைவில் உற்றார், உறவினர், சாதி, சமூகம் எல்லாவற்றின் மேலும் திரும்பியது.

பாவம், பூங்காவனத்துக்கு இதைப்பற்றி ஒன்றும் தெரியாது. தன் கணவனுடன் சந்தோஷமாக வாழலாம் என்றுதான் அவள் முதலில் எண்ணினாள். அவள் எண்ணத்தில் மண்ணைப் போட்டான் தம்புசாமி. கலியாணம் என்று ஆயிற்றோ, அன்றே அவனுடைய கனிந்த உள்ளம் கருங்கல்லாகி விட்டது; இளகிய நெஞ்சம் இரும்பாகி விட்டது. கருணை பொங்கிய அவன் முகம் கடுகடுப்பு நிறைந்த முகமாகி விட்டது. — கடைசியில், எல்லோரும் போற்றும் தம்புசாமி, எல்லோரும் தூற்றும் தம்புசாமிப் படையாட்சியானான்!



அன்று முதல் கடந்த முப்பது வருஷ காலமாக அவன் பூங்காவனத்துக்கு இழைத்த கொடுமை கொஞ்ச நஞ்சமன்று. அவ்வளவையும் அவள் இந்தப் பாழும் சமூகத்துக்காகவே பல்லைக் கடித்துக்கொண்டு பொறுத்து வந்தாள். பொறுமை எல்லை கடந்து விடவே, அவள் தன் அப்பன் வீட்டை நாடிச் சென்று விட்டாள்.

3

எப்பொழுதும் போலவே மறுநாள் காலை வானவீதியில் கதிரவன் உதயமானான். ஆனால் வழக்கத்துக்கு மாறாக அவன் ஒளி மங்கியிருந்தது. அதேமாதிரி அன்று தம்புசாமிப் படையாட்சியும் வழக்கத்துக்கு மாறாகத் தம்முடைய காரியங்களை யெல்லாம் மறந்து தமது கால் போனபடி சாலையில் போய்க்கொண்டிருந்தார்.

வழியில் 'ஜல், ஜல்' என்ற சலங்கைச் சத்தத்துடன் மாட்டு வண்டி ஒன்று தம்மை எதிர் நோக்கி வரவே, அவர் கொஞ்சம் ஒதுங்கிச் சாலை ஓரமாக நின்றார். அவரைத் தாண்டிச் சென்ற வண்டி சட்டென்று நின்றது.

அந்த வண்டியிலிருந்து ஒரு அம்மாள் இறங்கி அவரை நோக்கி வந்தாள். அவள் வேறு யாருமில்லை; சாக்ஷாத் ஜானகியேதான்!

"ஆ! ஜானகி! நீயா இப்படி உரு மாறிப் போய்விட்டாய்!" என்று வியப்புடன் கேட்டார் படையாட்சி.

"ஆமாம், நான்தான்! — நானே தான்!" என்று சொல்லி விட்டு, "ஆமாம், உங்களுக் கென்ன பைத்தியமா பிடித்து விட்டது?—உங்களைப் பற்றி நான் கேள்விப்பட்டவை யெல்லாம் கொஞ்சங்கூட நன்றாயில்லை! ஏதும் அறியாத பெண்டாட்டியைப் படாத பாடு படுத்தினீர்களாம்; அவள் பிறந்த வீட்டுக்குப் போய்விட்டாளாம். காளைக்கன்றுகள் மாதிரி இருந்த இரண்டு பிள்ளைகளையும் எங்கேயோ கண்காணாத இடத்துக்கு அடித்து விரட்டிவிட்டீர்களாம்!—இதெல்லாம் என்ன கூத்து?—கடந்து போன காரியத்துக்கு நீங்கள் என்ன செய்து என்ன பிரயோஜனம்? எனக்காக யாரை வஞ்சம் தீர்த்து என்ன பயன்? உங்களுக்காக யார் அனுதாபப் படப் போகிறார்கள்? — அப்படி நீங்கள் ஊரைச் சீர்திருத்த வேண்டுமென்று நினைத்தால் முதலில் உங்கள் வாழ்க்கையை வளமாக்கிக் கொள்ளுங்கள்; பொன்னும் பொருளும் பட்டமும் பதவியும் தேடிக்கொள்ளுங்கள். அப்புறம் நீங்கள் செய்வதுதான் சட்டமாயிருக்கும்; நீங்கள் செய்ததைத்தான் ஊராரும் செய்வார்கள். அதை விட்டு விட்டு எனக்காக ஏன் உங்கள் வாழ்க்கையை நீங்கள் பாழாக்கிக் கொள்கிறீர்கள்? — போங்கள்; போய் உங்கள் மனைவியை அழைத்துக் கொண்டு வந்து மீதி நாட்களையாவது சந்தோஷமாகக் கழியுங்கள்!" என்று அவள் 'படபட' வென்று பொரிந்து தள்ளினாள்.

அவளுடைய உணர்ச்சி மயமான சொற்களைக் கேட்டதும் தம் தவறை உணர்ந்து படையாட்சி கண்ணீர் பெருக்கினார். அதைப் பார்க்கச் சகிக்காமல் ஜானகி அம்மாள் வண்டியில் ஏறி உட்கார்ந்துகொண்டு, "உம்...... ஓட்டு!" என்று வண்டிக்காரனுக்கு உத்தரவிட்டாள்.

அவ்வளவுதான்; வண்டி மறைந்தவுடன் படையாட்சி ஓட்டமும் நடையுமாகத் தம் மாமனார் வீட்டை நோக்கிச் சென்றார்.

தன்னுடைய தகப்பனார் வீட்டில் தம்புசாமிப் படையாட்சியை எதிர்பார்க்காத பூங்காவனம் அவரைப் பார்த்தவுடன் அப்படியே அசைவற்று நின்று விட்டாள்.

"பூங்காவனம், என்னை மன்னித்து விடு, பூங்காவனம்! நான் இப்போது பழைய படையாட்சி இல்லை; புதுப் படையாட்சி!" என்று சொல்லும் போதே அவருடைய கண்களில் நீர் நிறைந்துவிட்டது—பூங்காவனம் புது மனுஷியானாள்!

* * *

தீபாவளி வருவதற்கு இன்னும் இரண்டு தினங்கள் இருந்தன. பூங்காவனமும் தம்புசாமிப் படையாட்சியும் மூங்கில் தோட்டத்துக்குக் கிளம்பினார்கள். அவர்களுடைய ஆனந்தத்துக்குக் குறுக்கே அப்போது ஒரு குறை வந்து நின்றது. அந்தக் குறை ஓடிப்போன அவர்களுடைய குழந்தைகளைப் பற்றியதுதான்!

வழி முழுதும் பூங்காவனம் தன் குழந்தைகளைப் பற்றி ஏதாவது சொல்லிக் கொண்டே வந்தாள். அதைக் கேட்கும்போது தம்புசாமிப் படையாட்சியின் தந்தை யுள்ளம் புத்திர பாசத்தால் மிகவும் நொந்தது. ஆயினும் சமாளித்துக்கொண்டு தன்னால் ஆனமட்டும் அவளுக்குத் தேறுதல் கூறி வந்தார்.

தம்புசாமியையும் பூங்காவனத்தையும் சேர்ந்தாற்போல் சிரித்த முகத்தோடு பார்த்த மூங்கில்தோட்டத்து மக்கள், தாங்கள் காண்பது கனவா, நனவா என்று தெரியாமல் மலைத்து நின்றனர். தம்புசாமிப் படையாட்சி தம் தர்ம பத்தினி சகிதம் முதன் முறையாக அவர்களைப் பார்த்து ஒரு புன்முறுவல் பூத்தார்!

இவ்வாறு மூங்கில்தோட்டத்துத் தெருக்களை யெல்லாம் கடந்து இருவரும் தங்கள் வீடு வந்து சேர்ந்தனர். தம் அருமை மனைவி பூங்காவனத்துக்கு வேலை வைக்காமல் தாமே கதவைத் திறந்தார் படையாட்சி. அவர்களுக்கு முன்னால் இரண்டு கடிதங்கள் வந்து அங்கே காத்துக் கொண்டிருந்தன. அவற்றில் ஒன்று:

"அன்புடைய அம்மா அவர்களுக்கும், அப்பா அவர்களுக்கும் முனுசாமி மிகவும் வணக்கத்துடன் எழுதிக் கொண்டது:

நான் இப்போது சென்னைப் பட்டணத்தில் இருக்கிறேன். இங்கு எல்லோருக்குமே என்னுடைய பெயரைத் தெரியும். நீங்கள் கூடக் கேள்விப் பட்டிருக்கலாம், நடிகமணி செல்லையாவைப் பற்றி. அந்தப் புகழ் பெற்ற நடிகமணி செல்லையா நான்தான். சென்னைக்கு வந்தவுடன் பிழைப்புக்காக வேண்டி என்னுடைய பெயரை மாற்றிக்கொண்டு நாடகத்தில் சேர்ந்தேன். தீபாவளிக்கு ஊருக்கு வருகிறேன். அம்மாவுக்குப் பட்டுப் புடவையும் தங்களுக்கு வேஷ்டியும் வாங்கி வைத்திருக்கிறேன். எனக்கு அப்பாவிடம் எந்தவிதமான கோபமும் இல்லை. நான் நன்றாக இருக்க வேண்டும் என்றுதானே அப்பா என்னைக் கண்டித்து வந்தார்? மற்றவை நேரில். அன்புள்ள,

சென்னை
5—11—50 முனுசாமி."

இந்தக் கடிதத்தைப் படிக்கக் கேட்டதும் பூங்காவனத்துக்கு ஆனந்தம் தாங்கவில்லை. அவள் மற்றொரு கடிதத்தை எடுத்துக்கொடுத்து அவசர அவசரமாகப் படிக்கச் சொன்னாள்:

"அருமை அப்பாவுக்கும் அம்மாவுக்கும் ராஜாங்கம் எழுதிக் கொண்டது:

அப்பாவிடம் கோபித்துக் கொண்டு வந்ததும் ஒருவிதத்தில் நல்லதாய்ப் போயிற்று!—நான் பட்டாளத்தில் சேர்ந்து இப்போது மாதம் நூறு ரூபாய் சம்பளத்துடன் சௌகரியமாக இருக்கிறேன். மூன்று வருஷமாகக் கஷ்டப்பட்டுச் சேர்த்துவைத்த முந்நூறு ரூபாயையும் உங்கள் பேருக்கு இன்று அனுப்பி யிருக்கிறேன். இந்த வருஷம் தீபாவளிக்கு ஊருக்கு வரவேண்டும் என்று ரொம்பவும் கஷ்டப்பட்டு லீவு வாங்கி யிருக்கிறேன். எத்தனை நாட்களுக்குத்தான் உங்களை நான் பார்க்காமல் இருப்பது! இங்ஙனம்,

2—11—50 ராஜாங்கம்
ஜுபல்பூர்

இரு கடிதங்களையும் படித்து முடித்ததும் தம்புசாமிப் படையாட்சிக்கு எப்படி யிருக்கும்?—அவர் வான வீதியில் இறக்கை இல்லாமலே பறக்க ஆரம்பித்து விட்டார். பூங்காவனம் புது வாழ்வை எண்ணிப் பூரித்துப் போனாள். தங்களை மறந்து புதுத் தம்பதிகளைப்போல அவர்கள் இருவரும் 'சளசள' வென்று வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தனர். இப்படி எவ்வளவு நேரம் அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்களோ தெரியவில்லை; "கும்பிடுறேன், எசமான்!" என்ற மாட்டுக்காரக் கண்ணுசாமியின் குரல் கேட்டபோதுதான் அவர்கள் தங்களுடைய பேச்சை நிறுத்தினர்.

* * *

இரண்டு நாட்களுக்குப் பிறகு தீபாவளி வந்தது. அத்துடன், முனுசாமியும் ராஜாங்கமும் தவறாமல் வந்து சேர்ந்தார்கள். அப்புறம் கேட்க வேண்டுமா?—மூங்கில் தோட்டத்துக் கிராமத்தில் தம்புசாமிப் படையாட்சியின் வீடுதான் எல்லாவற்றையும் விட அன்று குதூகலமாக இருந்தது!

# வீரனை மெச்சிய வீரன்

ஸோமாஸ்



ந்திரா, என்ன ஆழ்ந்த யோசனையில் ஈடுபட்டு விட்டாய்!'' என்று கேட்டுக் கொண்டே அமரபுரி மகாராஜா குமாரகுப்தர், ராணி இந்திரா தேவியின் அருகில் வந்தார்.

''மகாராஜா, வாருங்கள்! உட்காருங்கள்! தங்களை எதிர்பார்த்து அந்தப்புரத்தில் வெகுநேரம் காத்திருந்தேன். தாங்கள் வரவில்லை. ஆகையினால் நந்தவனத்தில் சற்று உலாவிவிட்டு வருவோம் என்று எண்ணி இங்கே வந்தேன். சந்திரன் வான வீதியில் பவனி வருவதைப் பார்த்ததும் என் சிந்தனைப் பறவை சிறகடித்துக் கொண்டு எங்கெல்லாமோ சுற்றித் திரிய ஆரம்பித்தது. கடைசியில் ஜோதிபுரிக்குச் சென்று அது சுதந்திரமாக அந்தப்புரத்துக்குள் நுழைந்தது. அங்கே...!'' என்று இன்னும் மேலே ஏதோ சொல்ல வாயெடுத்தவள் மகாராஜாவின் முகமாறுதலைக் கண்டு அப்படியே நிறுத்தி விட்டாள்.

அவ்வளவுதான் — மௌனம்; ஒரே மௌனம்.

அவர்களைப் பொருட்படுத்தாமல் வானக் கடலிலே மிதந்துகொண்டிருந்த வெண்மதி விரித்த தண்ணொளியிலே அமரபுரி அரண்மனை தாவள்யமாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. நகரம் முழுவதையும் தன் மோகன நிலவில் முழுக்காட்டிய பூரண சந்திரன் அந்த அரண்மனை நந்தவனத்தில் மட்டும் தன் ஒளியைக் கொஞ்சம் அதிகமாகவே வீசிக்கொண்டிருந்தான்.

அந்த நந்தவனத்துத் தடாகக்கரையில் இருந்த சலவைக் கல் ஆசனத்தில் தான் அரசர் குமார குப்தரும் தேவி இந்திராவும் இந்திரனையும் இந்திராணியையும் போல் அமர்ந்திருந்தனர். மந்தமாருதம் மெல்லென வீசித் தனக்கு மகாராஜாவிடமுள்ள மரியாதையைத் தெரிவித்துக் கொண்டிருந்தது.

மகாராஜா ஒரு கணம் தம்மை மறந்திருந்த பிறகு சொன்னார்:

''இந்திரா, என்ன சொன்னாய்! உன் சிந்தனை ஜோதிபுரிக்கா சென்றது! அச்சுதவர்மன் ஆளும் ஜோதிபுரிக்கா!''

''ஆமாம், அந்த இணையற்ற எழிலரசி ரோகிணி தன்னிடத்தில் வசிக்கும் பாக்கியம் பெற்ற ஜோதிபுரியைப் பற்றித் தான் சொல்லுகிறேன்!''

''இந்திரா, என்ன காரணம் பற்றி ஜோதிபுரி அரசி ரோகிணியைப் பற்றி உனக்கு நினைவு வந்தது!''

''எனக்கு எப்பொழுதுமே அவளைப் பற்றி மறதி ஏற்பட்டதே இல்லை. அதிலும் நிலாக்காலம் வந்து விட்டது என்றால் ரோகிணிக்கு ஆனந்தம் நிலை கொள்ளாது. சின்னஞ் சிறு வயதில் கன்னிப் பருவத்தில் அவளும் நானும் இணை பிரியாமல் இருந்தோம். ரோகிணி எப்பொழுதும் சிரித்த முகத்துடன் உற்சாகமாயிருப்பாள். மகா புத்திசாலி. கள்ளங் கபடமற்ற உள்ளம் படைத்தவள். என் தகப்பனாரிடம்தான் அவள் அப்பா மந்திரியா யிருந்தார். ஆதலால் நானும் அவளும் உடன் பிறந்த சகோதரிகளைப் போல் மிகவும் நேசமாகப் பழகினோம். அந்த நாட்களில்.....!''

மகாராஜா தன் பேச்சைக் கவனிக்காமல் எதையோ சிந்திப்பதைப் பார்த்ததும், ''மகாராஜா, எந்தக் கோட்டையைப் பிடிக்க இந்தப் பலமான யோசனை!'' என்று குரலில் கொஞ்சம் கேலித் தொனியுடன் கேட்டாள் இந்திரா.

உடனே குமாரகுப்தர் அமைதியாக, ''இந்திரா, அந்த ஜோதிபுரிக் கோட்டையைப் பிடிக்கத்தான் யோசனை செய்து கொண்டிருக்கிறேன்'' என்றார்.

''உண்மையாகவா! ஜோதிபுரி அரசன் அச்சுதவர்மனுடன் போர் தொடுக்கப் போகிறீர்களா! அப்படி என்ன அவன் தவறு செய்தான்!''

இதைக் கேட்கும்போது இந்திராவின் குரலில் நடுக்கம் தொனித்தது.

குமாரகுப்தர் அமைதியாக, ''ஒன்றுமில்லை. அவன் நமக்கு அடங்கிக் கப்பம் கட்டி வரும் சிற்றரசர்களுள் ஒருவன் தானே! சில காலமாக நமக்குப் பணிய அவன் மறுக்கிறான். கடைசியாகத் தூது அனுப்பியிருக்கிறேன். அவன் பணிந்து வராவிடில் யுத்தம் செய்துதான் ஆக வேண்டும். இதன் பொருட்டு அநேக பிரஜைகளின் உயிரை மாய்க்க வேண்டியிருக்குமே என்றுதான் நான் கவலைப்படுகிறேன். அது இருக்கட்டும், அந்த அழகி ரோகிணியைப் பற்றிய கதையைச் சொல்லு!'' என்றார்.

இந்திரா தேவி சற்று நேரம் யோசித்துவிட்டு, ''ரோகிணியை விட நான் பத்து வயது பெரியவள். அவள் சிறு குழந்தையா யிருந்த போதே....!'' என்று சொல்லிக் களைப்படைந்தவள் போல் சில விநாடிகள் தன் பேச்சை நிறுத்தினாள்.

"இந்திரா, என்ன பாதியில் நிறுத்திவிட்டாய்!" என்று கேட்டார் மகாராஜா. அவர் குரலில் கதை கேட்கும் ஆர்வம் தொனித்தது.

"இல்லை, இல்லை. ரோகிணியைப் பற்றிச் சொல்ல வேண்டுமானால் அவளது அழகைப் பற்றிக் கூறியாக வேண்டும். ஆனால் அதை நான் எப்படிச் சொல்லுவேன்! அவள் அழகுக்கு உவமை சொல்லுவ தென்பது முடியாத காரியம். பொன்னுலகத்து அப்ஸரஸ்கள் கூட அவள் அழகுக்கு இணையாக மாட்டார்கள். அஞ்சனந் தீட்டிய விசாலமான அவளது விழிகளுக்குத்தான் என்ன சக்தி! ஒரு முறை ரோகிணி கண் இமைத்தால் அகில உலகமும் அவள் காலடியில் வந்து விழுந்து விடும். எத்தனையோ வார்த்தைகளைக் கொட்டி வாய் வலிக்கப் பேச வேண்டிய விஷயங்களை யெல்லாம் ரோகிணி தன் விழிகளாலேயே ஒரு விநாடியில் பேசி விடுவாள்! தேசதேசமெல்லாம் அந்தச் சுந்தரியின் ரூப சௌந்தர்யத்தைப் பற்றிக் கேள்விப்படாதவர் இல்லை.

"பதினைந்து பிராயம் பூர்த்தியாவதற்குள் ரோகிணி சங்கீதத்திலும் அபிநயக் கலையிலும் இணையற்று விளங்கினாள். அவள் நடனம் ஆடினால் அவளுடைய ஒவ்வொரு அங்கத்திலும், ஒவ்வொரு அங்கத்தின் அசைவிலும், உயிர்த் துடிப்பைக் காண முடியும். ஒரு நாள் உற்சாக மிகுதியில் ரோகிணி அற்புதமாக நடனம் ஆடினாள். அப்போது நான் அவளைப் பார்த்து, 'ரோகிணி, அபிநயக் கலையே உன்னிடந்தானடி அடைக்கலம் புகுந்து விட்டது! அதனால் தான் இந்த அரண்மனையைச் சேர்ந்த மற்ற யாருக்கும் அது வர மாட்டேன் என்கிறது!' என்றேன். அதற்கு அவள் கொஞ்சமாகச் சிரித்துக் கொண்டு, 'போ, அக்கா! உன்னிடம் இருக்கும் பேச்சுக் கலையை விடவா!' என்றாள். இன்னும் அந்தச் சிரிப்பும் பேச்சும் என் நெஞ்சை விட்டு நீங்கவில்லை.

"அந்தக் காலத்தில் நேரிபுரி அரசனின் குமாரனான அச்சுத வர்மன் என் தகப்பனாரிடம் வில் வித்தை பயில வருவான். அப்போதுதான் தற்செயலாக ரோகிணியை அரண்மனை நந்தவனத்தில் சந்தித்து, அவளுடைய வேல் விழிகளின் தாக்குதலுக்கு அவன் இலக்கானான். போதாக்குறைக்கு அந்த அழகியின் நடனத்தை வேறு பார்த்து விட்டான். அவ்வளவுதான்; தேனில் விழுந்த ஈயைப் போல் மதிமயங்கி விட்டான் அச்சுதவர்மன். இல்லை, அந்த உதாரணம் தவறு. ரோகிணியின் அபிநய சாகஸத்தைப் பார்த்தவன் எந்தமாதிரி நிலையை



அடைவானோ அந்த மாதிரி நிலையைத்தான் அந்த அச்சுதவர்மனும் அடைந்தான்!

"அச்சுதவர்மனின் போர்ப் பயிற்சி முடிந்தது. அவனது தேர்ச்சியைக் கண்டு மற்ற மாணவர்களெல்லாம் ஆச்சரியம் அடைந்தனர். என் தகப்பனாரும் போர்ப் பயிற்சிச் சாலையின் உபாத்தியாயரும் அவனைப் பெரிதும் பாராட்டினர். ஆனால் அச்சுத வர்மனின் மனம் மட்டும் இந்தப் பாராட்டுதல்களையெல்லாம் பற்றி நிற்கவில்லை. பயிற்சி முடிந்ததில் அவனுக்குத் துளியும் மனத் திருப்தியில்லை. முதன் முதலில் எந்தப் பயிற்சியை அவன் பெரிதாக எண்ணி எங்கள் தேசத்துக்கு வந்தானோ, அந்தப் பயிற்சியையே அவன் மனம் மிகவும் துச்சமாக மதித்தது.

"அச்சுத வர்மனின் பயிற்சி முடிந்து போனதில் அவனைவிட வருத்தம் அடைந்த ஓர் ஆத்மா அப்பொழுது இருக்கத்தான் செய்தது. அது வேறு யாரும் இல்லை; ரோகிணிதான்! அச்சுத வர்மன் ஊருக்குப் போனதிலிருந்து ரோகிணி யாருடைய கண்களிலும் படுவதேயில்லை.

"என் தந்தை எனக்குக் கல்விகாமாடம் அமைத்து அதில் துணைக்கு என்னுடன் அவளை இருக்கும்படி ஏற்பாடு செய்தார். அப்பொழுதுதான் ரோகிணியின் இதயத் துடிப்பை என்னால் கூர்ந்து கேட்க முடிந்தது. ரோகிணியை மூன்று வருஷங்கள் பொறுத்திருக்கும்படி உறுதியாகச் சொல்லி விட்டு, அச்சுத வர்மன் அவளிடம் கடைசியாக விடை பெற்றுக் கொண்டானாம்.

"அதே மாதிரி மூன்றாவது வருஷம் அவனே நேரில் வந்து ரோகிணியின் கரம் பிடித்தான். அவனது காதல் மணத்துக்குப் பெற்றோர்களும் மற்று முன்னோரும் இணங்க வில்லையாதலால், ராஜ்யத்தையே துறந்து அவன் ரோகிணியை அடைந்தான். அச்சுதவர்மன் அந்த ராஜ்யத்தை விட்டுச் சென்று விட்டான் என்ற செய்தி கேட்டு, வெகு நாட்களாகச் சமயம் பார்த்துக்கொண்டிருந்த பகை அரசர்கள் சிலர் மூர்க்கத்தனமாக அந்தத் தேசத்தின் மேல் படையெடுத்தனர்.

"அந்நிய தேசத்தவர் தன் தாய் நாட்டின் மேல் படையெடுத்து விட்டார்கள் என்னும் செய்தி அச்சுதவர்மனின் செவியில் விழுந்து அவனது வீரத் தோள்களைத் துடிக்கச் செய்தது. நாட்டின் எல்லையை விட்டு நீங்கி எவ்வளவோ தூரத்துக்கு அப்பால் ரோகிணியுடன் வசித்து வந்த அச்சுதவர்மன் அவளைப் பத்திரமாக ஒரு நண்பரிடம் ஒப்புவித்து விட்டு, குதிரை ஏறி, வாயுவேகம்

மறுபடி வேகமாகப் பறந்து தன் தாய் நாட்டுக்கு வந்து சேர்ந்தான்.

"அவ்வளவுதான்; பின் வாங்கிக்கொண்டிருந்த ஜோதிபுரிப் படைவீரர்கள் வீராவேசத்துடன் போர் புரிந்தனர். அவர்களுக்குத் திடீரென்று எப்படி வீராவேசம் வந்தது என்று தெரியாமல் எதிரியின் படைகள் அதிசயித்தன. 'அர்க்கதவர்மன் வந்து விட்டான்!' என்னும் செய்தி சற்று நேரத்துக்கெல்லாம் காட்டுத் தீயைப் போல் போர்க்களம் முழுவதும் பரவி விட்டது. எதிரியின் படைகள், சண்டமாருதத்தைக் கண்ட சருகுகள் போல் பறந்து பின் வாங்கின. நாட்டை நாசத்திலிருந்தும் காப்பாற்றிய மகனை அரசன் அன்புடன் தழுவிக் கொண்டான்.

"பிறகு ராஜ மரியாதைகளுடன் ரோகிணியையும் அரசன் வரவேற்றான். வான வீதியில் பவனி வரும் சந்திரனையும் ரோகிணியையும் போல, அர்க்கதவர்மனும் ரோகிணியும் மணிமுடி தாங்கி அரியாசனத்தில் அமர்ந்தார்கள். அந்த ஆதர்ச தம்பதிகளின் காதலைப்பற்றிப் போற்றாதவர்கள் கிடையாது!" என்று இந்திரா கதையை முடித்தாள்.

மகாராஜா, மகுடிக்குக் கட்டுப்பட்ட நாகத்தைப் போலக் கதையைக் கேட்டுக் கொண்டு வந்தவர், கதை முடிந்ததும், "இந்திரா, கதையை முடித்துவிட்டாயா! எனக்கு அது தெரியவே யில்லையே! உன்னுடைய வாக்குச் சாதுர்யத்தில் மயங்கி அப்படியே கதா பாத்திரங்களுடன் ஒன்றி விட்டேன்!" என்றார்.

இந்திரா புன் சிரிப்புடன், "இந்தக் குறும்புப் பேச்செல்லாம் இருக்கட்டும். ஜோதிபுரியின்மேல் படையெடுப்பதாயிருந்தால் அந்த இளங் காதலர்களுக்குத் தீங்கு நேராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அந்த வரம் தருவீர்களா, எனக்கு!" என்று கேட்டாள்.

"இந்திரா, உன் அருமைத் தோழி ரோகிணிக்கும், அவள் கணவனுக்கும், அவர்களது காதலுக்கும் எந்தக் கெடுதியும் ஏற்படாது. சரிதானே!" என்றார் குமாரகுப்தர் சிரித்துக்கொண்டே.

"முக்கியமாக ரோகிணியைப் பற்றித் தங்களிடம் ஒன்று கூற வேண்டும். எத்தனையோ மன்னர்கள் அவள் மேல் இன்னும் ஒரு கண் வைத்திருக்கின்றனர். ஏற்கெனவே அவளைச் சிறைப் பிடிக்க எத்தனையோ வீரர்கள் முயற்சி செய்திருக்கின்றனர். ஆகையினால் அர்க்கதவர்மனுடன் போரிடுவதானால் தாங்களே நேரில் சென்று போரை நடத்த வேண்டும். இதைத் தாங்கள் முக்கியமாகக் கருத்தில் கொள்ள வேண்டும்!" என்று இந்திரா கண்டிப்பாகக் கூறினாள். அவள் அவ்வாறு கூறும் போது, முப்பது வயதுக்கு மேல் ஆகியிருந்தும் அவளுடைய முகத்தில் இளமையின் சௌந்தர்யம் சிறிதும் குன்றாமலிருப்பதைக் கண்டு, மகாராஜா வியந்தார்.

## 2

ராஜ சபையில் அன்று விசேஷ மந்திராலோசனைக் கூட்டம் கூடியிருந்தது. மந்திரிப் பிரதானிகளும் சேனைத் தலைவர்களும் இன்னும் நகரிலுள்ள முக்கிய பிரமுகர்களும் அவரவர்களுக்கேற்ற ஆசனங்களில் அமர்ந்திருந்தனர். சபையில் பரிபூரண அமைதி நிலவியது.

"சபையோர்களே, அர்க்கதவர்மனிடமிருந்து இன்று உறுதியான பதில் வந்து விட்டது. 'இன்றைக்குப் பதினைந்தாவது நாள் பௌர்ணமி தினத்தில் வேகவதியாற்றங் கரையில் தைரியமிருந்தால் சந்திக்கும்படி எழுதியிருக்கிறான். வாள் முனையில்தான் அவன் நம்மோடு பேசுவானாம். அவன் சாமானியமானவனல்ல; சிறந்த போர் வீரன். நமக்கு எதிரியாகி விட்டான் என்பதற்காக அவனுடைய வீரத்தைக் குறைத்து மதிப்பிடுவது கூடாது. ஆகையினால் நீங்கள் எல்லோரும் யுத்தத்துக்கு வேண்டிய முஸ்தீபுகளைத் துரிதமாகச் செய்யுங்கள். நானே அவனைப் போர்க்களத்தில் சந்திக்கலாம் என்றிருக்கிறேன். இந்த யுத்தத்தை நடத்தும் பொறுப்பையும் நானே வகிப்பது என்று தீர்மானித்து விட்டேன்!" என்று கம்பீரமான குரலில் மகாராஜா பேசி முடித்தார். எல்லோரும், "மகாராஜா, உத்தரவு! உத்தரவு!" என்று தலை வணங்கியபடி சொன்னார்கள்.

அப்பொழுது ஒரே ஒரு மனிதன் மட்டும் மகாராஜாவின் உத்தரவுக்குக் கீழ்ப்படியத் தயாராயில்லை என்பது, அவன் மற்றவர்களோடு சேர்ந்து கொண்டு சம்மதம் தெரிவிக்காததிலிருந்து தெரிய வந்தது.

அவன் யார்! மகாராஜாவின் கட்டளையை உதாசீனம் செய்யும் அளவுக்கு அவனுக்கு எங்கிருந்து அத்தனை தைரியம் வந்தது! அவன் தலை மட்டும் இரும்பில் பண்ணியிருக்கிறதா, என்ன!

அவன் வேறு யாரும் இல்லை; அமரபுரியின் சேனாபதி பிரபாகரன்தான்.

அவன் முகத்தில் சொல்லொணாத வேதனை குடிகொண்டிருந்தது. பராக்கிரமத்தின் பிரதிநிதியென விளங்கிய அவன் மீசை துடி துடித்தது.

"மகாராஜா, நான் இதுவரையில் எத்தனையோ யுத்தங்களுக்குச் சென்று வெற்றி கொண்டு, பகைவரின் புறமுதுகு கண்டு வீரனாகத் திரும்பியிருக்கிறேன். அவையெல்லாம் மகாராஜாவுக்குத் தெரிந்தவைதாம். எனது உடல், பொருள், ஆவி யாவும் மகாராஜாவின் உடைமை என்று மனப்பூர்வமாகக் கருதி வந்திருக்கிறேன். இதுவரையில் நான் செய்த சேவையை மதித்து, எனக்கு இந்தத் தடவை சேனைக்குத் தலைமை வகித்து நடத்திச் செல்ல உத்தரவு தரவேண்டும் என்று தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்!" என்று பிரபாகரன் தலை வணங்கிக் கூறினான்.

குமாரகுப்தர் சேனாபதி பிரபாகரனைக் கனிவோடு பார்த்து, "சேனாபதி, நாட்டின்பால் நீர் கொண்டிருக்கும் அன்புக்கு நன்றி. மற்ற சிற்றரசர்களை விடச் சேனை பலமும் வீரமும் உள்ளவன் என்று அர்க்கதவர்மனைப் பற்றிச் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆதலால் நானே சேனைக்குத் தலைமை தாங்கிச் செல்ல விரும்புகிறேன்!" என்றார்.

"மகாராஜா, தாங்களே நேரில் சென்று நடத்தும்படியான அளவுக்கு அந்த அர்ச்சுதவர்மனுக்கு அந்தஸ்து வந்து விட்டதா? அப்படியானால் அது அவனது அதிர்ஷ்டம் தான்! ஆனால் அவனோடு போரிடும் சக்தி எனக்கு இல்லை என்று தாங்கள் நிர்மானித்து விட்டதுதான் மனதுக்கு மிகவும் கஷ்டமாயிருக்கிறது. மகாராஜா இப்படி அடியேனை ராஜ சபையில் அவமதிக்கும்படியான அளவுக்கு நான் செய்த தவறு என்ன!" என்று அடங்கிய கோபத்தோடு கேட்டுவிட்டு, உலைக்களத்தில் காற்றை ஊதும் துருத்தியைப் போல் பெருமூச்சு விட்டான் பிரபாகரன்.

ஜோதிபுரிக்குத் தானே சென்று வழியில் அவ்வளவு சிரத்தை காட்டும் சேனாபதி பிரபாகரனின் செயல் மகாராஜாவுக்குச் சிறிது ஆச்சரியத்தை அளித்திருக்க வேண்டும். ஆகவே, அவன் மீது அவர் பொருள் பொதிந்த பார்வையைச் செலுத்தி ஒரு கணம் யோசித்தார். அவரது நிஷ்டிணமான புத்திக்கு விஷயம் விளங்காமற் போகவில்லை.

மகாராஜாவின் தயக்கத்தைக் கண்ட பிரபாகரன், "மகாராஜா, என் தோள் மீதும், வாள் மீதும் தங்களுக்கு இருந்த நம்பிக்கை குறைந்து விட்ட தென்றால் அதற்காகத் தாங்கள் சிறிதும் யோசிக்க வேண்டாம். என்னைத் தளபதிப் பதவியிலிருந்து நீக்கிவிடுங்கள்!" என்று குரல் தழுதழுக்கக் கூறினான்.

குமார குப்தர் இமைப்பொழுதில் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவராய், "சேனாபதி, மன வருத்தம் வேண்டாம். நீரே படைகளை நடத்திச் செல்லும்!" என்று உத்தரவு கொடுத்து விட்டுச் சிம்மாசனத்திலிருந்து எழுந்தார்; சபையும் கலைந்தது.

## 3

ஜோதிபுரியின் கோட்டையும் மதிலும் எத்தனை எத்தனையோ காலமாகத் திண்மைக்கும் பழமைக்கும் பிரசித்தி வாய்ந்தவை. ஆயிரம் யானைகள் ஒன்று சேர்ந்து தங்கைகளில் இரும்பு உலக்கைகளுடன் ஏக காலத்தில் மோதினாலும் அசையாத உறுதி வாய்ந்தவை, அந்தக் கோட்டை வாயிற் கதவுகள்.

ஜோதிபுரி மக்கள் அரசன் அர்ச்சுதவர்மனிடம் பேரன்பும் பெருமதிப்பும் வைத்திருந்தனர். அர்ச்சுதவர்மனின் உத்தரவுக்கிணங்க நகரத்து மக்கள் போருக்குத் துரிதமாய்த் தயாராகிக் கொண்டிருந்தார்கள். வீதிகளிலும் தெருக்களிலும் சந்து சதுக்கங்களிலும் கொல்லர்களின் பட்டறைகள் நிறைந்திருந்தன. அந்தப் பட்டறை வாசல்களில் வேல்களும், வாள்களும் புத்தம் புதியனவாகச் செய்து மலை மலையாகக் குவிக்கப் பட்டிருந்தன. மந்தைகளுங்கள் ஒரு புறம் போர்க்களத்தில் பகைவர்களைச் சந்திக்கத் தங்கள் பலத்தைப் பரிசை செய்து பார்த்துக் கொண்டிருந்தன. 'டணர்,' 'டணர்' என்று வாள் வீரர்கள் செய்யும் வாள் யுத்தப் பயிற்சி நெடிதுயர்ந்த கோட்டை மதில் சுவர்களில் மோதி எதிரொலியிட்டது.



இத்தனை வைபவங்களையும் கொஞ்சமும் அறியாதது போல் அரண்மனை அந்தப்புரத்தில் எப்போதும் போல் வேடிக்கை நிறைந்திருந்தது.

நிலா முற்றத்தில் ரோகிணியும் அர்ச்சுதவர்மனும் அமர்ந்திருந்தனர். மலர்ந்த செந்தாமரையைப் போன்ற ரோகிணி தேவியின் முகம் அன்றைக்கு என்னவோ வாட்டமுற்றிருந்தது. எந்த முகம் தேச தேசங்களையெல்லாம் மயக்கமுறச் செய்ததோ, எந்த வதனத்தின் ஒரு பார்வைக்காக மன்னாதி மன்னர்களெல்லாம் ஒரு சமயம் ஏங்கிக் கிடந்தார்களோ, அந்த முகம் இன்று பொலிவின்றி இருந்தது. வெண் மதியைப் பழிக்கும் அந்தப் பெண் முகத்தின் வாட்டம் கண்டுதானோ என்னவோ, சந்திரனும் அன்று அடிக்கடி வெண்முகிற் போர்வையைப் போர்த்திக் கொண்டு சோகத்துடன் விளங்கினான்.

"நாதா, தங்களைக் கடைசியாகக் கேட்டுக் கொள்ளுகிறேன். தேசமெல்லாம் போற்றும் மகாராஜா குமாரகுப்தரை வணங்கி விடுவதால் நமது கீர்த்தி குறைந்து விடாது. நான் நேற்றிரவு கண்ட கனவு என்னைப் பெரிய கவலைக்குள்ளாக்கி விட்டது!" என்றாள் ரோகிணி.

இதைச் சொன்னதும் விசாலமான அவளுடைய விழிக் கடைகளில் கண்ணீர் துளித்து நிலா ஒளியில் நல்முத்துப்போல் பிரகாசித்தது.

அர்ச்சுதவர்மன் அவளுடைய கரங்களைப் பிடித்துக்கொண்டு, "கண்ணே, ரோகிணி! உலகத்து ஆயுதங்களிலேயே வலிமை வாய்ந்த ஆயுதமான உன் கண்ணீரைப் பிரயோகித்து என்னை நீ கோழையாக்க லாமா! அன்புடன் விடை கொடு. அபஜயம் என்பது என் ஆயுளில் இல்லை. பகைவர்களின் வேல்களையும் வாள்களையும் கண்டு அஞ்சியறியாத என் நெஞ்சு உன் வேல் விழிகளைக் கண்டுதான் முதன் முதலில் அஞ்சியது. எங்கே என்னைப் பார்த்து விடை கொடு!" என்றான்.

"பிரபு, தங்களுடைய வீரத்திலும், தீரத்திலும் எனக்குப் பரிபூரண நம்பிக்கையிருக்கிறது. ஆனால் அந்த வஞ்சகப் பாவி, அமரபுரியின் சேனாபதி பிரபாகரனை நினைத்தால்தான் எனக்கு மெய் நடுக்கம் உண்டாகிறது. ஏற்கெனவே என்னை இரண்டு தடவை சிறைப் படுத்திச் சென்ற அவனிடமிருந்து தெய்வாதுகூலத்தால் நான் தப்பினேன் என்பது தங்களுக்குத் தெரியுமே! அவன் விஷயத்தில் நீங்கள் சர்வ ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். போய் வாருங்கள்; வெற்றியுடன் திரும்புங்கள்!"

"ரோகிணி, அன்னை பராசக்தியின் அருளால் நமக்குத் தீங்கு நேரிடாது. நாளை உதயத்துக்குள் வேகவதி ஆற்றங்கரையில் மகாராஜா குமாரகுப்தரைப் போர்க்களத்தில் சந்திக்க வேண்டும். இதோ யுத்த அறிவிப்பாக ஊது கொம்பின் ஒலி கேட்கிறது! உடனே போக வேண்டும்" என்று கூறி அர்ச்சுத வர்மன் நிலா முற்றத்திலிருந்து புறப்பட்டான். ரோகிணியும் தன்னைத் தானே சமாளித்துக் கொண்டு, அமைதியுடன் அர்ச்சுத வர்மனைத் தொடர்ந்து சென்றாள்.

## 4

மறு நாள் சேனாபதி பிரபாகரனுக்கும் அர்ச்சுதவர்மனுக்கும் கடும் போர் நடந்தது. சில நாழிகை நேரத்துக்குள் அர்ச்சுதவர்மன் அமரபுரியின் சைன்யத்தையும், அதன் சேனாபதியையும் புறமுதுகு காட்டி ஓடும்படி செய்து விட்டான்.

பிரபாகரன் மீண்டும் மீண்டும் முறியடிக்கப்பட்டு, அன்று மாலைக்குள் பல முறை படையெடுத்தான். சூரியன் அஸ்தமன மாவதற்குள் அமரபுரியிலிருந்து பெரும் யானைப் படையும் குதிரைப் படையும் காலாட்படையும் சகாயத்துக்கு வந்து சேர்ந்தன. பிரபாகரனுக்கு உற்சாகம் கரை மீறிப் பெருகியது. புதிய பலத்தோடு புதிய சைன்யம் வரவே அவன் மூர்த்தண்யமாகச் சண்டை யிட்டான். பகைவனின் சேனா சமுத்திரத்தை நோக்கும்போது அர்ச்சுதவர்மனின் சேனை இருந்த இடமே தெரியவில்லை. ஒரு சில நிமிஷங்களில் அர்ச்சுதவர்மன் சேனை வீரர்கள் அத்தனை பேரையும் இழந்து தன்னந்தனியனானான். அவனுக்குத் துணையாயிருந்தது அவன் கைவாள் ஒன்றுதான்.

அச்சம் சிறிதுமின்றிச் சண்டையிடும் அர்ச்சுதவர்மன் படையின் பலம் இழந்து ஒரு தனி மனிதனாக நிற்பதைப் பார்த்த பிரபாகரனுக்கு அவனிடம் பேச வேண்டும் என்று தோன்றியது. 'விடு விடு' என்று அவனை நெருங்கினான்.

"அர்ச்சுதவர்மா, இன்னும் ஏன் வீணுக்குச் சண்டையிடுகிறாய்! யுத்தம்தான் முடிந்து விட்டதே! உடனே மகாராஜா குமாரகுப்தருக்கு நீ சரணடைவதைத் தவிர வேறு வழி ஒன்றும் இல்லை!" என்று பிரபாகரன் மிகவும் அலட்சியமாகச் சொல்லிவிட்டு, எதிரொலி உண்டாகும்படி 'ஹஹ்ஹஹ்ஹா!' என்று சிரித்தான்.

"நிறுத்து, உன் பேச்சை! அற்ப நரியைக் கண்டு அஞ்சி, ஒரு சிங்கம் சரணடையும் காலம் வந்தாலும் வரும். நான் இந்நாட்டில் எனக்கு இருக்கும் உரிமையை இம்மியளவும் விட்டுக் கொடுக்க மாட்டேன். பிரபாகரா, வீண் வாய்ப் பேச்சு




# சிந்தாமணி டாக்கீஸ் லிட்.

## கீழ வெளி வீதி - மதுரை

★  ★

தியேட்டரின் உட்புறத் தோற்றம்

- இந்தத் தியேட்டரில் நவீன R. C. A. High Fidelity தொனிப் பரப்பி விசேடமும், மேன்மையான, உயர்ந்தவையும் தாழ்ந்தவையுமான Frequency யூனிட்டுகளுடன் கூடிய ஒலிப் பெருக்கிகளும், மிகுந்த பிரகாசத்துடன் கண்களுக்குக் குளிர்ச்சியைத் தருவதுமான (High Intensity) ஆர்க் விளக்குகளும் நன்கு அமைக்கப் பட்டுள்ளன.
- மதுரைமா நகரிலேயே நவீன சுகாதார முறைப்படி அமைக்கப் பட்டதும், மிகுந்த வசதி கூடியதும் சினிமா ரசிகர்களுக்கு உயர்தர படங்களை காண்பிக்கப் படுவதுமான தியேட்டர் எங்களுடையதுதான்.

என்! வா, வாளால் பேசுவோம்!" என்று அலட்சியமாக அறைகூவி அழைத்த அச்சுதவர்மனின் இடிக்குரல் பிரபாகரனுக்குத் திகைப்பை உண்டு பண்ணியது.

இச் சமயம் சேனாபதி பிரபாகரனின் குறிப்பை உணர்ந்த சேனை வீரர்கள் ஒரே சமயத்தில் அச்சுதவர்மன் மேல் பாய்ந்தார்கள். அச்சுதவர்மன் சிறிதும் சளைக்கவில்லை; பின்வாங்கவும் இல்லை. எண்ணற்ற வீரர்கள் அச்சுதவர்மன் கைவாளுக்கு இரையாகி வீரசொர்க்கம் புகுந்தனர். பிரபாகரன் அவனுடைய அசாத்தியத் துணிவையும் திறமையையும் கண்டு அயர்ந்து போனான்.

ஆனால் இந்த நிலைமை வெகு நேரம் நீடிக்கவில்லை. எவ்வளவுதான் இணையற்ற வீரனாயிருந்தாலும் ஒரு பெரிய சேனா சமுத்திரத்தோடு எத்தனை நேரம் தன்னந்தனியனாகப் போரிட முடியும்! சற்று நேரத்துக்கெல்லாம் பிரபாகரன் அச்சுதவர்மனைச் சிறை செய்தான்.

அவசரம் அவசரமாக அவனைத் தன் பாசறைக்கு அனுப்பி யுத்தக் கைதிகளோடு அவனையும் காவலில் வைக்கும்படி ஏற்பாடு செய்து விட்டு, பிரபாகரன் நேரே அச்சுதவர்மனின் அரண்மனையை நோக்கி விரைந்தான். அரண்மனையில் புகுந்து அவன் நேரே அந்தப்புரத்துக்குச் சென்றான்.

அங்கே ரோகிணியைத் தேடினான். வெளித் தாழ்வாரத்தில் ஒரு மேடையில் அமர்ந்து, ரோகிணி தன் கண்களில் நீர் பெருக வான வெளியைப் பார்த்தபடியிருந்தாள். சிந்தனையில் ஆழ்ந்திருந்த ரோகிணி, திடீரென்று ஓநாயைக் கண்ட மான் குட்டியைப் போலப் பயந்து நடுங்கினாள். அவள் அழகில் ஈடுபட்டு நின்ற பிரபாகரன் சற்று நேரம் செயல் இழந்து விட்டான்.

"நீர் யார்! எங்கு வந்தீர்!" என்று மிகவும் கோபத்துடன் கேட்ட ரோகிணியின் குரல் பிரபாகரனை இந்த உலக நினைவுக்குக் கொண்டு வந்தது.

"நானா! என்னை உனக்குத் தெரியவில்லையா! முன்பு இரண்டு தடவை உன்னால் ஏமாற்றப்பட்ட அதே பிரபாகரன்தான்!"

"இங்கே உமக்கு என்ன வேலை! மகாராஜா குமாரகுப்தர் அனுப்பினாரா!"

"மகாராஜா என்னை அனுப்பவில்லை. நானாகத்தான் பெரு முயற்சி செய்து உன்னைக் காண வந்தேன். நான்கைந்து வருஷங்களாகவும் உன் நினைவு என் நெஞ்சை விட்டு நீங்கவே இல்லை. இந்தத் தேசத்தின்மீது படையெடுப்பு என்றதும் என் உள்ளத்தில் ஏற்பட்ட களிப்புக்கு எல்லை இல்லை. உன் சௌந்தர்யத்தைக் கண்குளிரக் காண ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததல்லவா!"

இதைப் பிரபாகரன் சொல்லி முடித்ததும் குமாரகுப்தரது மெய்காப்பாளன் திடீரென்று பிரவேசித்தான்.

"சேனாபதி, மகாராஜா பாசறைக்கு வந்திருக்கிறார். உடனே தங்களை அழைத்து வரச் சொன்னார்!"

மெய்காப்பாளனின் இந்த வார்த்தை சேனாபதிக்கு ஆத்திரத்தையும் மனக் கசப்பையும் உண்டாக்கி யிருக்க வேண்டும். ஏனெனில், "மகாராஜா இங்கே எதற்கு வந்தார்!" என்று கேட்ட பிரபாகரனின் குரலில் உணர்ச்சியே யில்லை. முகத்தில் அருவருப்புக் களை தாண்டவமாடியது. ரோகிணியை எரித்துவிடுபவன் போல் பார்த்து விட்டு அவன் வெளியேறினான்.

## 5

அப்பொழுதிருந்த ரோகிணியின் மனநிலையைச் சொல்லி முடியாது. அவளது அருமைக் கணவன் அச்சுதவர்மன் சிறைப்பட்ட செய்தி அவள் செவிக்கு எட்டியதும் அவள் திடமான ஒரு முடிவுக்கு வந்து விட்டாள். அதிலும் பிரபாகரன் சற்று முன்னால் அவளுக் கெதிரே தோன்றியதிலிருந்து அவளுடைய மன உறுதி இன்னும் திடமாகி விட்டது.

ரோகிணி கண்ணாடியின் எதிரில் நின்று அதில் தன் உருவத்தைப் பார்த்தாள். கட்டுக் கடங்காத சோக நிலையிலும் அவளது அழகு கட்டுக் கடங்காமல் விளங்குவதைப் பார்த்தாள். ரோகிணிக்கு அப்பொழுது தன் மேலேயே கோபம் உண்டாயிற்று.

"ரோகிணி! ஏ, ரோகிணி! நீ ஏன் பிறந்தாய்! பிறந்ததுதான் பிறந்தாயே! இணையற்ற அழகுடன் ஏன் பிறந்தாய்! உன் இளமையிலிருந்து உன் அழகு உனக்கு எத்தனை தீங்கு இழைத்திருக்கிறது! இனி மேலும் இந்த உபத்திரவத்தை என்னால் தாங்க முடியாது. அந்தப் பாதகன் பிரபாகரன் மீண்டும் வந்து துன்புறுத்துவதற்குள் நீ மறைந்து விடு!" என்று உணர்ச்சிப் பெருக்கில் தனக்குத் தானே சொல்லிக் கொண்டு, கையிலிருந்த விஷத்தைக் குடிக்கப் போனாள்.

அந்தச் சமயம் திடீரென்று பின்புறத்திலிருந்து அவளது கையை ஒரு பலமான கை—போர்க்களத்தில் போரிட்டு உரம் பெற்ற கை—பிடித்துக் கொண்டது. அடுத்த கணம் "நில்!" என்று ஒரு இடிக்குரல் கேட்டது. ரோகிணி கிட்டத்தட்ட மயக்கமடையும் நிலையில் இருந்தாள். அவளை யறியாமலே, அந்தக் குரலுக்கு உரியவர் யார் என்று அறிய அவள் முகம் திரும்பிப் பார்த்தது.

ஆகா! இது என்ன! மகாராஜா குமாரகுப்தரல்லவா!

அவளுக்குப் பேச நா எழவில்லை.

"யாரங்கே!" என்று மகாராஜா குமாரகுப்தர் குரல் கொடுத்ததும் முன்பு வந்த அதே மெய்காப்பாளன் வந்து அடக்க ஒடுக்கத்தோடு நின்றான்!

"ரோகிணி தேவியைப் பல்லக்கில் ஏற்றித் தகுந்த காவலுடன் அமரபுரி அரண்மனைக்கு அனுப்பி வை!" என்று கூறிவிட்டு மகாராஜா வேகமாக அவ்விடத்தை விட்டு அகன்றார்.

ரோகிணியின் விசாலமான நயனங்களில் ஆச்சரியம் ததும்பி நின்றது. மௌனமாக மெய்காப்பாளனைத் தொடர்ந்தாள்.

## 6

அமரபுரி அரண்மனையின் ராஜ சபையில் கூட்டம் நிறைந்திருந்தது. ஜோதிபுரி மன்னன் அச்சுதவர்மன் யுத்தக் கைதியாகப் பிடிபட்டு அமரபுரிக்குக் கொண்டு வரப்பட்டிருந்தான். அவன் விஷயமாக மகாராஜா சொல்லப்போகும் தீர்ப்பைக் கேட்பதற்குத்தான் அந்த மகாஜனங்கள் அங்கே கூடியிருந்தார்கள்.

அழகு ராணியான ரோகிணி மான் குட்டியைப் போல் மருண்ட பார்வையுடன் ஒரு புறம் அமர்ந்திருந்தாள். அச்சுதவர்மன் கம்பீரமாக இன்னொரு புறம் அமர்ந்திருந்தான்.

"சபையோர்களே, நம் சாம்ராஜ்யத்தில் நமக்கு அடங்கிய சிற்றரசர் யாருமே நம்மை எதிர்க்க இது வரையில் துணிந்ததில்லை. வாரிதி போன்ற நம் சேனையை மேலும் மேலும் ஏவி நமது சேனாபதி பிரபாகரன் போர் புரிந்திராவிட்டால் அச்சுதவர்மனை வெற்றி கொள்ள முடிந்திராது. போர்க்களத்தில் அச்சுதவர்மன் காட்டிய வீரமும் தீரமும் மிகவும் பாராட்டுக் குரியவை. இத்தகைய வீரசிங்கத்தின் சுதந்திர உணர்ச்சியைப் பாராட்டுவதற்கு அறிகுறியாக அச்சுதவர்மனை ஜோதிபுரி ராஜ்யத்தின் சுதந்திர அரசனாக இருக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்!" என்று மகாராஜா கம்பீரமாகக் கூறி முடித்ததும் கரகோஷம் வானைப் பிளந்தது.

அச்சுதவர்மன் உடனே எழுந்தான். "மகாராஜா, தாங்கள் வீரத்துக்கும் தீரத்துக்கும் கொடுக்கும் மதிப்பை அறிந்து மகிழ்கிறேன். அதைவிட ஒரு மனிதனின் சுதந்திர ஆர்வத்தை அறிந்து அதற்கும் மதிப்புக் கொடுப்பதுதான் என்னைப் புளகாங்கிதம் அடையச் செய்கிறது. 'வெற்றி அல்லது மரணம்' என்கிற திடமான முடிவுடன்தான் இந்தப் போரில் இறங்கினேன். சேனாபதியின் வஞ்சகப் போர் காரணமாக நான் யுத்தக் கைதியாக அகப்பட நேர்ந்தது......!"

இப்பொழுது மகாராஜா இடைமறித்து, "அச்சுதவர்மா, சேனாபதியின் துர் எண்ணத்தை அறிந்துதான் அவனுக்கு இந்த யுத்தத்தை நடத்த அனுமதி கொடுத்தேன். ஆனால் அவனுக்குத் தெரியாமல் அவனைக் கவனித்துச் சமயத்தில் ரோகிணியையும் தப்புவித்தேன்!" என்றார்.

சபையோர் முகத்தில் ஆச்சரியக்குறி தோன்றியது.

"மகாராஜாவின் செயல் எனக்கு அவரிடம் உள்ள மதிப்பை அதிகமாக்குகிறது. போர்க் களத்தில் உயிர் விடாமற் போனேனே என்ற வருத்தம், மகாராஜா சொன்ன தீர்ப்பைக் கேட்டபிறகு இருந்த இடம் தெரியாமல் மறைந்தது!" என்று கூறி அச்சுதவர்மன் மகாராஜாவைக் கை கூப்பி வணங்கினான். அப்பொழுது மீண்டும் சபையிலே பலத்த கரகோஷம் எழுந்தது.

மகாராஜா குமாரகுப்தர், அச்சுதவர்மனை ஆலிங்கனம் செய்து கொண்டார். ரோகிணியையும் அச்சுதவர்மனையும் ஆசீர்வதிக்கும்போது குமாரகுப்தரின் முகம் மகிழ்ச்சியால் பொங்கியது.

* * *

வெண்ணிலவு வேற்றுமை இல்லாமல் அமரபுரிக்கோட்டை மீதும் ஜோதிபுரிக் கோட்டைமீதும் பொழிந்து கொண்டிருந்தது.

அமரபுரியின் நிலவொளியில் இந்திரா தேவியும் மகாராஜா குமாரகுப்தரும் ரோகிணி — அச்சுதவர்மன் காதலைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அதே சமயத்தில் ஜோதிபுரி அரண்மனை நிலா முற்றத்தில் அச்சுதவர்மனும் ரோகிணியும் குமாரகுப்தரின் பெருந்தன்மையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.




# பூங்கோதையின் பூர்வோத்தரம்



எம்.எஸ்.மணி

பொன்தாமரைக் குளத்திற்குப் பூங்கோதையும் அவள் தாயாரும் புதிதாகக் குடி வந்தபோது அந்தக் கிராமமே புத்துயிர் பெற்றது போலிருந்தது. சாதாரணமாக வெள்ளை வேஷ்டியே கட்டி வழக்கமில்லாத அந்தக் கிராமத்து வாலிபர்களெல்லாம் வேஷ்டியையும் மேல் துண்டையும் வெளுத்துக் கட்ட ஆரம்பித்தார்கள். வம்பிலும் வழக்கிலுமே பொழுதைப் போக்கிக் கொண்டிருந்த அக்கிராமத்துப் பெண்களெல்லாம் நயமாகவும் நாசுக்காகவும் பேசக் கற்றுக் கொள்ள வாரம்பித்தார்கள். வழக்கமாகச் சாலையின் குறுக்கே படுத்துறங்கும் எருமைகள் கூட வழியை விட்டுப் படுத்துக் கொள்ள வாரம்பித்தன!

இதற்கெல்லாம் பூங்கோதை தான் முழுதும் காரணமென்று கூற முடியாமல் போனாலும் அவள் வருகை கிராமத்தாரிடையே ஒரு விதப் பரபரப்பை உண்டாக்கியது என்பதில் சந்தேகமில்லை. முக்கியமாக அக்கிராமத்தில் இயங்கிக் கொண்டிருந்த "வீர வாலிபர் சங்க"த்தின் அங்கத்தினர்களிடையே பூங்கோதையின் விஜயம் ஒரு விதச் சுறுசுறுப்பை ஏற்படுத்தியது.

சுமார் ஐம்பது சிறு வீடுகளையும் இருநூறுக்கு மேற்படாத ஜனங்களையுமுடைய பொன்தாமரைக் குளத்தில், அக்கிராமவாசிகள் பெருமைப் பட்டுக்கொண்டிருந்த அம்சம் ஒன்றிருந்தால் அது, "வீர வாலிபர் சங்கம்" தான். பட்டணம் போய் வந்த வேலாயுதம் தான் இந்தச் சங்கத்தை ஏற்படுத்தி அதற்குத் தன்னையே தலைவனாகவும் நியமித்துக் கொண்டான். குடிசைத் தொழில், நூல் நூற்றல், முதியோர் கல்வி முதலிய திட்டங்கள் இந்தச் சங்கத்தின் ஆதரவில் நடக்கா விடினும், வீண்வம்பும் வெட்டிப் பேச்சும் அங்கே அமர்க்களமாக நடந்தேறின. ஆனாலும் இந்த வாலிபர்கள் கட்டாயம் பொதுஜன சேவை செய்யும்படியான ஒரு கட்டாய நிலைமை ஏற்பட்டு விட்டது.

சில காலமாகவே பொன்தாமரைக் குளத்தின் பக்கத்திலுள்ள கிராமங்களில் அடிக்கடி பெருங்களவுகள் நடக்கின்றனவென்று ஜனங்கள் சொல்லிக் கொண்டார்கள். கதைகளில் வரும் தனிப்பெருங் கள்வன் போல யாரோ ஒருத்தன் மேற்பார்வையில் இந்தக் களவுகள் நடக்கின்றனவென்றும் இந்தக் கிராம வாசிகளின் காதுகளில் விழுந்தது. போலீஸ்காரர்களையும் 'டிமிக்கி' கொடுத்துவிட்டு அவர்கள் தங்கள் காரியங்களை நடத்தி வருகிறார்கள் என்ற செய்தி பொன்தாமரைக் குளக் கிராம வாசிகளிடம் பீதியை உண்டாக்கியது. அம்மாதிரிக் களவுகள் தங்களுடைய கிராமத்திலும் நடக்கக் கூடாதேயென்று கவலை கொண்ட கிராமத்து ஜனங்கள் கூட்டம் கூடி முடிவு செய்தார்கள்.

இக் கூட்டம் வீரவாலிபர் சங்கத்தின் ஆதரவில் நடந்தது என்று சொல்லத் தேவையில்லை. கிராமத்திலுள்ள எல்லா வாலிபர்களும், அதாவது பதினெட்டு வயதுக்கு மேற்பட்ட காளைகளெல்லாம் இந்தச் சங்கத்தில் கட்டாய அங்கத்தினர்களாகச் சேர்ந்து மாதம் எட்டணா கட்டாயச் சந்தாவும் செலுத்த வேண்டுமென்று இக்கூட்டத்தில் முடிவுக்கு வந்தார்கள். இதன்படி முன்பு நாலைந்து பேர்களைக் கொண்ட வீர வாலிபர் சங்கம் இப்போது இருபத்து நான்கு இளஞ் சிங்கங்களைக் கொண்ட சங்கமாக மாறியது. ஒவ்வொரு இரவும் நான்கு பேர்களாகச் சேர்ந்து கொண்டு, கிராமக் காவல் காரனையும் துணைக்கு அழைத்துக் கொண்டு பொன்தாமரைக் குளக் கிராமத்தைச் சுற்றி ரோந்து வர வேண்டுமென்று தீர்மானித்தார்கள். கள்வர்கள் அருகிலிருக்கிறார்கள் என்ற சந்தேகம் ஏற்பட்டதும் இவரில் ஒருவன் ஓடிப் போய்க் கோயில் மணியை யடித்துத் தூங்கிக் கொண்டிருக்கும் வீர வாலிபர்களை எழுப்பி விட்டு, உடனே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்ப் போலீஸ்காரர்களை அழைத்துக் கொண்டு வரவேண்டுமென்றும் திட்டம் வகுத்தார்கள். கோயில் மணியின் அபாய அறிவிப்பைக் கொண்டு மற்ற அங்கத்தினர்களும் கிராமத்தார்களும் உதவிக்கு வரும்வரை பாக்கியிருக்கும் நாலு பேர்களும் திருடன் அல்லது திருடர்களைச் சமாளிக்க வேண்டியது என்று உறுதி செய்து கொண்டார்கள்.

இந்தக் காவல் திட்டம் அமுலில் கொண்டு வரப்பட்டு இரண்டு மாத காலம் தீவிரமாக நடந்தது. ஆனால் பொன்தாமரைக் குளக் கிராம வாசிகளின் இத்திட்டம் கொள்ளைக்காரர்களின் காதில் விழுந்ததோ என்னவோ, அவர்கள் இக் கிராமத்தை எட்டிக்கூடப் பார்க்கவில்லை. இதனால் கொள்ளைக்காரர்கள் தங்களுக்குப் பயந்து விட்டார்களென்று கிராமத்து வீர வாலிபர்களெல்லாம் பெருமையடைந்திருந்தார்கள். ஆனாலும் வீணாகக் கண் விழித்துக் கொண்டு இரவெல்லாம் இரண்டு மாத காலம் ஊரைச் சுற்றிக் கொண்டிருந்ததால் அவர்கள் மிகவும் சோர்ந்திருந்தார்கள்.

* * *

இந்தச் சமயத்தில் தான் பூங்கோதை பொன்தாமரைக் குளத்தில் காலடி வைத்தாள்.

களைப்பால் வாடி உறங்கிக் கொண்டிருந்த வாலிபர்களெல்லாம் உடனே விழித்துக் கொண்டார்கள். தற்சமயம்




வேறு வேலையொன்றுமில்லாததால் வீர வாலிப சங்கத்தின் அங்கத்தினர்களுடைய அவசரக் கூட்டமொன்றைக் கூட்டினார்கள். கிராமத்திற்குப் புதிதாக வந்த பூங்கோதையின் அழகு சினிமாவில் வரும் ராணிகளின் அழகைக் காலில் கட்டி அடிக்கும் என்று ஒருவர் பிரேரேபித்தார். பூங்கோதையின் உடையும் நடையுமே ஒரு அலாதி ரகத்தைச் சேர்ந்தவை என்று மற்றொரு தீர்மானத்தை ஒரு அங்கத்தினர் கொண்டு வந்தார். இதுவும் ஒரே மனசாக அங்கீகரிக்கப்பட்டது. பூங்கோதைக்கு வயது சத்தியமாக இருபதுக்கு மேலிருக்காது என்ற தீர்மானத்தை இரு அங்கத்தினர்கள் ஒரே சமயத்தில் கொண்டு வந்தார்கள். தீர்மானம் பலத்த ஆரவாரங்களிடையே ஆமோதிக்கப்பட்டுக் கை தட்டலுக்கிடையே நிறைவேற்றப்பட்டது.

பூங்கோதை எல்லாரிடமும் இனிமையாகத்தான் பேசினாள். சரளமாகத்தான் பழகினாள். ஆனால் இதெல்லாம் வீட்டிற்கு வெளியில் தான். அவள் தன் வீட்டினுள் யாரையும் அனுமதிக்காதது கிராமப் பெண்களுக்கு ஒரு புதிராகவேயிருந்து வந்தது. அவள் சொல்வதற்கு மறுத்த இன்னொரு விஷயம் புதிரை மர்மமாக மாற்றியது. அவள் பூர்வோத்தரங்களை யாராவது கேட்டால் அவள் பதில் சொல்லக் கண்டிப்பாய் மறுத்து வந்தாள். இதனால் கிராமத்து ஜனங்களுக்குப் பூங்கோதையைப் பற்றி மேலும் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற அடங்காத தாகம் ஏற்பட்டது. பூங்கோதையின் தாயாரிடம் விஷயத்தைத் தந்திரமாக அறிந்து கொள்ளலாமென்று அவர்கள் முயன்றார்கள். ஆனால் தாயார் பெண்ணை விட்டு ஒரு நிமிஷம் கூடப் பிரியாமலிருப்பதுடன் அவள் ஒரு முழுச் செவிடு என்றும் அறிந்து கொண்ட போது பொன் தாமரைக் குளக் கிராம வாசிகள் அடைந்த ஏமாற்றத்திற்கு அளவில்லை.

தங்கள் வீட்டிலுள்ள பெண்டிர்களின் மூலம் இந்த விஷயத்தை— அதாவது பூங்கோதையின் பூர்வோத்தரங்கள் ஒன்றும் தெரிந்து கொள்ள முடியவில்லையென்ற விஷயத்தை— நமது வீர வாலிபர்கள் தெரிந்து கொண்ட போது அவர்கள் அடைந்த ஏக்கத்திற்கு அளவில்லை. அதனால் அவர்கள் மற்றொரு அவசரக் கூட்டம் போட்டு மற்றொரு அவசரத் தீர்மானம் கொண்டு வந்தார்கள். அதாவது பூங்கோதையின் பூர்வோத்தரங்களைத் தெரிந்து கொள்ளும் வரை கொள்ளைக்காரர்களைப் பிடிக்கும் திட்டத்தைத் தாற்காலிகமாக ஒத்திப் போடலாமென்று ஒரே மனசாக முடிவுக்கு வந்தார்கள். இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றுவதற்கு வேலாயுதம் பெருமுயற்சி எடுத்துக் கொண்டான்.

வேலாயுதம் அப்படிச் செய்ததற்குக் காரணமுமிருந்தது. பூங்கோதையின் மீது தனக்குத் திடீரென்று காதல் விழுந்து விட்டதென்று வேலாயுதம் சில நாட்களாக நினைத்துக் கொண்டு விட்டான். மற்ற வாலிபர்களைப் போல, வெறும் காதல் கொண்டதற்காக மட்டும் அவன் பூங்கோதையை உடனே கல்யாணம் செய்து கொள்ளத் தயாராயில்லை. அவளுடைய குலம், கோத்திரம் முதலியவைகளைத் தெரிந்து கொள்ள விரும்பினான். ஆகவே தன் தாயாரையும் தங்கையையும் பூங்கோதையின் வீட்டுக்குப் பெண் பேச அனுப்பினான். அவர்கள் வந்த காரியத்தைச் சொன்ன போது பூங்கோதை சிரித்துவிட்டுத் தனக்கு இப்போதைக்குக் கல்யாணம் செய்துகொள்ளும் உத்தேசமில்லையென்று சொன்னாள். தன் பூர்வோத்தரங்களைத் தெரிந்து கொள்வதில் அவர்களுக்கென்ன அவ்வளவு ஆவல் என்று அவள் கோபமாகச் சொன்ன போது அவர்கள் வேகமாகத் திரும்பி விட்டார்கள். நடந்த விஷயத்தை வேலாயுதத்திடம் அவன் தாயாரும் தங்கையும் சொன்ன போது அவன் அருப்பு மீசை துடித்தது. அந்த வேகத்துடனேயே தான் சங்கத்தின் அவசரக் கூட்டத்தைக் கூட்டி மேலே சொன்ன அவசரத் தீர்மானத்தை அவன் நிறைவேற்றினான்.

முன்பு கொள்ளைக்காரர்களின் பயத்தால் உறக்கம் பிடிக்காமலிருந்த வீர வாலிபர்களுக்கு இப்போது பூங்கோதையின் பூர்வோத்தரங்களைத் தெரிந்து கொள்ளாமல் உறக்கம் பிடிக்கவில்லை.

இப்படியாகச் சில நாட்கள் கழிந்தன. கிராமத்து ஜனங்களுக்குப் பூங்கோதையின் மீது சந்தேகமும் கோபமும் அதிகரித்துக்கொண்டே வந்தன. அவள் ஏதோ செய்யத் தகாத காரியத்தைச் செய்திருப்பதால்தான் சொந்த ஊரைவிட்டு இங்கு ஓடி வந்திருக்கிறாளென்றும், அதனால்தான் தன் பூர்வோத்தரங்களை அவள் சொல்லக் கண்டிப்பாய் மறுக்கிறாள் என்றும் அவர்கள் சொல்லிக்கொண்டார்கள். கடைசியில் அவளைக் 'கட்டுப்

பாடு' செய்துவிடுவதாகப் பயமுறுத்தினார்கள். இன்னும் அவள் மற்றவர்களைப்போல் தன் வீட்டினுள் ஏன் யாரையும் அனுமதிப்பதில்லை என்று வெளிப்படையாகவே கேட்டார்கள். எல்லா வீர வாலிபர்களும் இந்த எதிர்ப்பில் சேர்ந்து கொண்டு உற்சாகம் காட்டினார்கள். இந்தக் 'கட்டுப்பாடு' ஏற்பாட்டின்படி கிராமத்தார்கள் யாரும் பூங்கோதையினுடனோ, அவள் தாயாருடனோ பேசக்கூடாது. கிராமத்து மளிகைக் கடை அவளுக்கு யாதொரு பண்டமும் விலைக்குக்கூடக் கொடுக்கக்கூடாது. பூங்கோதை கிராமத்தாரின் சந்தேகத்தைப் போக்கினால் தான் அவளுக்கு எல்லாவிதச் சலுகைகளும் அளிக்கப்படும் என்று எச்சரித்தார்கள்.

வேலாயுதம் இதற்குத் தலைமை வகித்தான் என்று சொல்ல வேண்டியதில்லை. முன்பு பூங்கோதையின் குலம் கோத்திரத்தைத் தெரிந்து கொண்ட பிறகு அவளைக் கல்யாணம் செய்து கொள்ளத் தயாராக இருந்தவன் இப்போது அவளை மணம் செய்து கொள்ளும் எண்ணத்தையே விட்டு விட்டான். இப்போது பூங்கோதையின் கர்வத்தை எப்படியாவது அடக்குவதிலேயே கண்ணாயிருந்தான்.

இரண்டு வாரம் கழித்து ஒரு நாள் சாயங்காலம் வேலாயுதம் தன் நண்பர்கள் இருவரோடு கிராமத்தின் பெரிய சாலையின் வழியாகச் சென்று கொண்டிருந்தான். அப்போது திடீரென்று தனக்குச் சற்று முன்னால் பூங்கோதையும் அவள் தாயாரும் போய்க் கொண்டிருப்பதை அவன் கண்டான். அப்படி அவர்கள் போய்க் கொண்டிருந்த போது பூங்கோதை அடிக்கடி, "அம்மா! வீர வாலிபர்கள் வருகிறார்கள்! வழியை விட்டு ஓரமாய் வா!" என்று தன் செவிட்டுத் தாயாரிடம் உரக்கச் சொல்லிக்கொண்டிருந்தாள். தங்களைக் குறித்துத் தான் பூங்கோதை தன் தாயாரிடம் சொல்லிக் கொண்டிருக்கிறாள் என்று எண்ணி வேலாயுதமும் நண்பர்களும் அகமகிழ்ந்து போனார்கள்.

ஆனால் சிறிது நேரம் கழித்துப் பூங்கோதை திடீரென்று, "அம்மா! சங்கத் தலைவர் வருகிறார்! நீ வழியை விடா விட்டால் ஒரே தள்ளாய்த் தள்ளிவிடுவார்!" என்று உரக்கக் கூறினாள். பட்டணம் போய் வந்த வேலாயுதத்திற்கு இதைக் கேட்டதும் கோபம் வந்தாலும் மனத்திற்குள் சந்தோஷப் பட்டுக் கொண்டிருந்தான். தான் பட்டணம் போய்விட்டு வந்ததைப் பூங்கோதையிடம் தெரிவித்துக் கொள்ள இதுதான் சரியான சமயமென்று அவனுக்குத் தோன்றியது. சிறிது நேரத்திற்குள் வேலாயுதம் பூங்கோதையின் தாயாரின் அருகில் நெருங்கியபோது பூங்கோதை தன் தாயாரிடம் எதையோ தொலைவில் காண்பித்து, "அம்மா! அதோ பார்! வீர வாலிபர் சங்கத்தின் கூட்டம் நடக்கிறது!" என்று சொல்லுவதைக் கேட்டான். தனக்குத் தெரியாமல் சங்கத்தின் கூட்டம் எப்படி நடக்கும் என்று ஆச்சரியம் கொண்ட வேலாயுதம் பூங்கோதை காட்டிய திசையில் நோக்கியபோது அவன் உடம்பில் மின்சார அதிர்ச்சி உண்டானது போலிருந்தது. ஏனென்றால் பூங்கோதை காட்டிய திசையில் கிராமத்தின் எருமை மாடுகள் கூட்டத்தைத்தான் அவன் கண்டான்!

அன்றிலிருந்து மனத்திற்குள் பூங்கோதையின் கர்வத்தை அடக்காமல் விடுவதில்லையென்று சபதம் செய்து கொண்டான்.

பூங்கோதை மீது வேலாயுதம் 'கட்டுப்பாடு' ஏற்படுத்தி ஒரு வாரமும் கழிந்தது. இப்போது எல்லோரும் வேலாயுதத்தையே நோக்கினார்கள். ஏனென்றால் அவன் பூங்கோதை மீது 'கட்டுப்பாட்டை' ஏற்படுத்திய இரண்டே தினங்களில் அவள் பணிந்து விடுவாளென்று எல்லாருக்கும் உறுதி கூறியிருந்தான். அப்படி அவன் உறுதி சொன்ன போது கிராமத்திலுள்ள ஒரே மளிகைக் கடைக்காரனைக் கலந்து கொண்டே சொன்னான். ஏனென்றால் அந்தக் கடையில் தான் பூங்கோதை தனக்கு வேண்டிய தினசரி மளிகைச் சாமான்களைத் தினந்தோறும் வாங்கிக் கொண்டிருந்தாள். ஆனால் பூங்கோதையோ கடைப் பக்கம் வரவே இல்லை.

வேலாயுதத்திற்கு இப்போது பூங்கோதையின்மீதுள்ள சந்தேகம் அதிகமாயிற்று. அவளுக்கு யாரோ தெரியாமல் உதவி செய்து கொண்டிருக்கிறார்களென்று நிச்சயித்தான். உடனே அவர்களை ரகசியமாகக் கண்டு பிடித்துப் பகிரங்கப் படுத்த வேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டான்.

அன்றிரவு மணி பதினொன்றிருக்கும். முன் நிலா நன்றாகக் காய்ந்து கொண்டிருந்தது. வீர வாலிபர்கள் உள்படக் கிராமமே தூங்கிக் கொண்டிருந்தது. திண்ணையில் படுத்துக்கொண்டிருந்த வேலாயுதத்திற்கு மட்டும் தூக்கம் வரவில்லை. அவன் வேதனை அவனுக்கல்லவா தெரியும்? மெதுவாக எழுந்தான். பூங்கோதையின் வீட்டின் பின்புறத்தை நோக்கி நடந்தான். ரகசியமாக உதவி புரிபவர்கள் அவள் வீட்டின் கொல்லைப்புறமாக வந்துதான் உதவி செய்வார்களென்ற எண்ணம் அவனுக்கு. அந்த இடத்தை யடைய அவன் சுற்று வழியாக வர வேண்டும். அப்படி அவன் போகும் வழியில்தான் சற்றுத் தொலைவில் தனியாகக் கிராமக் கோயிலிருக்கிறது.

தினம்தான் சாமியைக் கும்பிடுகிறதில்லையே, அன்று தன் எண்ணம் நிறைவேற ஏன் கோயிலிலிருக்கும் கடவுளைத் தனியாக வேண்டிக் கொள்ளக் கூடாதென்று வேலாயுதம் நினைத்தான். ஆகவே கோயிலை நோக்கி நடந்தான். சாத்தப்பட்டிருந்த கோயில் கதவுகளின் முன்பு நின்று தலை



வணங்கினான். பூங்கோதையின் கர்வமடங்கினால் அந்தச் சாமிக்குப் பலமாகப் பூஜை போடுவதாக வேண்டிக் கொண்டான்.

வேலாயுதம் அங்கிருந்து திரும்புவதற்குக் காலடி யெடுத்து வைத்தபோது யாரோ விம்மும் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டான். ஒரு விநாடி கதிகலங்கினான். ஆனால் விம்மலைத் தொடர்ந்து ஒரு ஸ்திரீயின் குரலைக் கேட்கவே அவனுக்குப் பயம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்தது. இருந்தாலும் முழுதும் பயம் போகவில்லை. அவன் சற்று உற்றுக் கேட்டபோது அக்குரல் பூங்கோதையின் குரல் போலிருக்கவே பயம்போய் ஆவல் அதிகரித்தது. இப்போது எங்கிருந்து சப்தம் வருகிறதென்று வேலாயுதம் தெரிந்து கொண்டுவிட்டான். கதவின் மறுபக்கத்திற்கு, அதாவது கோயிலின் உட் புறத்திற்குப் பூங்கோதை எப்படிச் சென்றாள் என்று அவனுக்குப் புரியவில்லை. ஏனென்றால் தினமும் இரவில் கோயில் கதவு பூட்டப்பட்டுச் சாவி கிராமக் காவல்காரன் கையில் சேர்ந்துவிடும். ஆவலுடன் அவன் கதவின் அகன்ற சாவித் துவாரத்தின் வழியாக உள்ளே பார்த்தான். அப்போது நிலவொளியில் பூங்கோதையுடன் இன்னொரு வாலிபன் நின்று கொண்டிருப்பதைக் கண்டான். அவன் ஆஜானுபாகுவாயிருப்பதைக் கண்டதும், அவன் தன் சகபாடிகளில் ஒருத்தனாயிருக்க முடியாதென்று தெரிந்து கொண்டான். அந்த இளைஞனின் குரலைக் கேட்டபோது வேலாயுதத்திற்குப் பாக்கியிருந்த சந்தேகமும் போய்விட்டது.

“பூங்கோதை! அழாதே! உனக்கு அவர்கள் கொடுக்கும் தொந்தரவிற்கு நான் சரியான தண்டனை கொடுக்கிறேன். இத்தனை நாள் ஜாக்கிரதையாகவிருந்த அவர்கள் இப்போது ஓய்ந்து போயிருக்கிறார்கள். அடுத்த வாரம் இந்தக் கிராமத்தைக் கொள்ளையடிக்கத் திட்டம் போட்டதை இன்றிரவே, இப்போதே, நிறைவேற்றி விடுகிறேன். அந்த வேலாயுதத்தையும் புளியமரத்தில் கட்டி வேப்பம் விளாறினால் அடிக்கிறேன்!” என்று அந்த இளைஞன் சொன்னதெல்லாம் பூங்கோதையின் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. ஏனென்றால் அவள் விசித்துக் கொண்டேயிருந்தாள்.

இளைஞன் கூறியதைக் கேட்ட வேலாயுதத்திற்கு உள்ளம் கொதித்தது. கொள்ளைக்காரன் தன்மீது பழி வாங்கப் போகிறானென்பதை நினைத்துத் தவித்தான். ஆனால் பூங்கோதையும் அவள் தாயாரும் கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவர்களென்பதை அவனால் நம்பவே முடியவில்லை. மேலும் அங்கிருந்தால் சற்று நேரம் கழித்துக் கொள்ளைக்காரன் கையால் போகப் போகும் உயிர் அப்போதே போய்விடுமென்று எண்ணினான். தன் வீட்டிற்கு ஓட்டம் பிடிக்க நினைத்தான். நினைத்ததும் திரும்பினான். ஆனால் அவன் கால்களை ஓரடி எடுத்து வைக்கு முன்பு தன்னை இரும்புக் கரம் ஒன்று பிடித்து நிறுத்தியதை உணர்ந்தான். அந்தக் கை அவனைப் பிடித்துத் தள்ளிக் கொண்டே கோயில் கதவைத் திறந்து, இளைஞன் முன்னால் கொண்டு போய் நிறுத்தியது. பலியாடு போல நிலைவிழந்து வேலாயுதம் இளைஞன் முன்னால் நின்றான். காலஞ்சென்ற தன் தகப்பனை அப்போது அவன் நினைத்துக்கொண்டான். தான் இறந்த பிறகு அனாதரவாய் நிற்கப் போகும் தன் தாயாரையும் தங்கையையும் எண்ணிக் கொண்டான்.

பூங்கோதைக்கு இதற்கு முன்பு வேலாயுதத்தின் மீது எவ்வளவுதான் கோபமாயிருந்தாலும் அவன் இப்போதிருக்கும் நிலையைக் கண்டு சிரிப்புத்தான் வந்தது. நிலைகுலைந்த வேலாயுதத்தை நோக்கி அவள், “வேலாயுத அண்ணே!” என்று கூப்பிட்டபோது அவன் அவளை மரியாதையுடனும் பயத்துடனும் பார்த்தான். “குலமும் கோத்திரமும் தெரிந்துகொண்டுதான் என்னைக் கல்யாணம் செய்து கொள்வேனென்று சொன்னீர்களே, என் பூர்வோத்தரங்களை இதோ சொல்கிறேன், கேளுங்கள்!” என்றாள்.

* * *

பொய்யாகத் திருட்டுக் குற்றம் சாட்டப்பட்ட பொன்னுரங்கம் அநியாயமாக இரண்டு வருஷம் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டான். மனம் வெதும்பிய அவன் தன் தண்டனைக் காலம் முடியு முன்பே சிறையிலிருந்து தப்பிவிட்டான். மறுபடியும் போலீஸாரால் பிடிபட்ட அவனுக்கு முதலும் வட்டியுமாக ஆறு வருஷத் தண்டனை விதிக்கப்பட்டது. அப்போது பொன்னுரங்கத்திற்கு வயது இருபத்தெட்டேயாகியிருந்தது. விதி வசத்தால் பொன்னுரங்கம் மறுபடியும் சிறையிலிருந்து தப்பி விட்டான். ஆமாம்! விதிவசம் என்றுதான் சொல்ல வேண்டும். அந்தச் சிறைதான் அவனை அசல் கொள்ளைக்காரனாக மாற்றியது. எப்படி ஒளிந்து கொண்டிருந்தாலும் கட்டாயம் அகப்பட்டுக்கொள்ள நேருமென்று நினைத்த அவன், தன் கூடத் தப்பிவந்த இரண்டு சகோதரக் கைதிகளைச் சேர்த்துக் கொண்டு அசல் கொள்ளைக்காரனாகவே மாறி விட்டான். ஆறுமாத காலமாக ஜனங்கள் சொல்லிக் கொண்ட புதுக் கொள்ளைக்காரன் அவன்தான். ஆனால் தப்பியோடிய பொன்னுரங்கம் தான் அந்தக் கொள்ளைக்காரனென்று போலீஸ்காரர்கள் தெரிந்து கொள்ளவில்லை. இருந்தாலும் அவர்கள் அடிக்கடி பூங்கோதையையும் அவள் தாயாரையும் தொந்தரவு செய்து வந்தார்கள். அதனால் அவர்களும் சொந்தக் கிராமத்தை விட்டுவிட்டுப் பொன்னுரங்கம் சொன்னபடி ரகசியமாக வெளியேற நேர்ந்தது. அவன் அப்போதைக்கப்போது சொல்லிக் கொடுத்தபடியே அவர்கள் அடிக்கடி ஊர் விட்டு ஊர் மாறிக்கொண்டிருந்தார்கள். அநியாயமாகச் சிறை சென்ற பொன்னுரங்கம் அநியாய வழியில் நிறையப் பணம் சம்பாதித்தான்.

இந்த ஆபத்தான தொழிலுக்கு ஒரு முழுக்கு போட்டுவிட்டு சிங்கப்பூருக்கு ஓடிப் போய்விடும்படித் தாயும் தங்கையும் பொன்னுரங்கத்தை மிகவும் வேண்டிக் கொண்டார்கள். ஆனால் அவன் பொன்தாமரைக்குளக் கிராமத்தைக் கடைசியாகக் கொள்ளையடித்துவிட்டுச் சிங்கப்பூருக்கு ஓடிவிடுவதாகவும், பிறகு அவர்கள் இரண்டு பேரும் தன்னிடம் அங்கே வந்து சேர்ந்து கொள்ளலாமென்றும் சொல்லி விட்டான். அதனால்தான் அவன் பூங்கோதையைப் பொன்தாமரைக் குளத்திற்கனுப்பி கிராமத்தாரின் கவனத்தையும் வாலிபர்களின் கவலையையும் திருப்ப எண்ணினான். சாமர்த்தியமில்லாத தன் தாயாரைச் செவிடாக மாறச் சொல்லி, யார் எது கேட்டாலும் வாயைத் திறக்காமல் இருக்கச் சொன்னான். பூங்கோதைக்கு வேலாயுதம் ‘கட்டுப்பாடு’ ஏற்படுத்திய அன்றிரவே விஷயமறிந்த பொன்னுரங்கம் இரவுக்கிரவே பூங்கோதைக்கு வேண்டிய ஒரு வாரத்துச் சாமான்களை அனுப்பி விட்டான்.

“என்னுடைய கதையைச் சொல்லி விட்டேன். கொள்ளைக்காரனின் தங்கையைக் கல்யாணம் செய்து கொள்ளும் துணிச்சல் உங்களுக்கிருக்கிறதா? என்னை மணம் செய்து கொள்ளத் தயாராயிருக்கிறீர்களா?” என்று பூங்கோதை அதட்டிக் கேட்டபோது வேலாயுதம் மறுபடியும் மிரண்டுபோகவில்லை. அவன் சொன்ன பதில் பூங்கோதையையும் பொன்னுரங்கத்தையும் திகைக்க வைத்தது.

“செய்து கொள்கிறேன்! கொள்ளைக்காரன் தங்கையாயிருந்தாலும் கல்யாணம் செய்துகொள்ளுகிறேன்!” என்று ஆவேசம் வந்தவன் போலக் கூவினான் வேலாயுதம். பூங்கோதையையும் அவள் தாயாரையும் தான் காப்பாற்றுவதாகக் கையடித்துக் கொடுக்கவும் தயாராகவிருந்தான். ஆனால், வேலாயுதத்தையும் தன்னுடன் வெளி நாட்டிற்கு வந்துவிடும்படிக் கூப்பிட்டான் பொன்னுரங்கம். வேலாயுதம் இதற்குச் சம்மதிக்கவில்லை.

பொன்தாமரைக்குளக் கிராமத்தை அன்றிரவே கொள்ளையடிக்கும் ஆசையைப் பொன்னுரங்கம் இப்போது விட்டொழித்தான். சாதுக்களான

துணைக்கொண்ட இந்தச் சிறு கிராமத்தை விட்டுவிடும்படியாகப் பூங்கோதை கேட்டுக் கொண்டதே இதற்குக் காரணம். மேலும் தன் தங்கையையும் தாயாரையும் யாரென்று தெரிந்த பிறகுகூட, வேலாயுதம் காப்பாற்றுகிறேனென்று சொன்னது பொன்னுரங்கத்தின் மனத்தைத் தொட்டுவிட்டது.

ஆனால் அந்த இரவே, அப்போதே, பொன்தாமரைக் குளத்தை விட்டுத் தன்னுடனேயே கிளம்பும்படியாகப் பொன்னுரங்கம் தங்கையிடம் சொன்னான். தாயாரிடமும் சொன்னான். அப்போதுதான் வேலாயுதம் நிழல் மறைவில் நின்று கொண்டிருந்த பூங்கோதையின் தாயாரையும் பார்த்தான். பொன்னுரங்கம் தன் தீர்மானத்தைச் சொல்லி முடிக்குமுன்பே அவனுடைய சகபாடி பூங்கோதையின் வீட்டிலிருந்த ஒரே பெட்டியை அவர்கள் முன்பு கொண்டு வந்து வைத்துவிட்டான்.

“வேலாயுத அண்ணே! போய் வருகிறோம். சிங்கப்பூருக்குப் போய்ச் சேர்ந்த பிறகு கடிதம் போடுகிறோம். உங்கள் ஞாபகம் எங்களுக்கு எப்போதுமிருக்கும்!” என்று பூங்கோதை தயக்கத்துடன் கூறியபோது வேலாயுதத்தின் கண்களில் நீர் சுரந்தது. அவர்களுடனேயே தானும் கிளம்பிப் போய்விடலாமென்று ஒரு கணம் நினைத்தான். பிறகு, “வழியில் போகும் வம்பை ஏன் விலை கொடுத்து வாங்க வேண்டும்? அவர்கள் அகப்பட்டுக் கொள்ள நேர்ந்தால் தானும் ஆபத்தில் சிக்க நேரும்” என்ற எண்ணம் மேலோங்கவே நின்றுவிட்டான்.

ஆனால் சந்தேகம் காரணமாகவோ என்னவோ வேலாயுதத்தை அவர்கள் மூன்று மைல் தூரத்திலிருக்கும் கிராமத்து எல்லை வரைக்கும் அழைத்துச் சென்றார்கள். அங்கே சாலையோரமாக ஒரு மாட்டு வண்டி நின்று கொண்டிருந்தது. அதில் பொன்னுரங்கமும் மற்ற மூவரும் ஏறிக் கொண்டார்கள். அந்த வண்டியைப் பார்த்தபோது வேலாயுதத்திற்கு அதை அன்று சாயங்காலம் கூடப் பக்கத்துக் கிராமத்தில் பார்த்ததாகக் கவனம் வந்தது. வண்டியைப் பொன்னுரங்கத்தின் சகபாடி ஓட்டினான். ஆனால் எதையோ நினைத்துக் கொண்ட வேலாயுதம் ஓடிப்போய் வண்டியை நிறுத்தினான். ஆச்சரியத்துடனிருந்த பொன்னுரங்கத்தை நோக்கி, “பொன்னுரங்கம்! உன் ஞாபகார்த்தமாக எனக்கு ஏதாவது கொடுத்துவிட்டுப் போகாவிட்டால் என் மனம் சமாதானமடையாது!” என்றான்.

“அண்ணா! அந்தப் பிச்சுவாவை அவரிடம் கொடுத்துவிடு! நீதான் இந்தத் தொழிலையே இன்றிலிருந்து விட்டுவிட்டாயே!” என்று பூங்கோதை சொன்னாள். “கொடுப்பதா! வேண்டாமா!” என்று தயங்கிக் கொண்டிருந்த அண்ணனிடமிருந்து பூங்கோதை கத்தியைப் பிடுங்கினாள். அதைச் சற்றுத் தொலைவில் விட்டெறிந்து விட்டு வேலாயுதத்திடம் அதை எடுத்துக் கொள்ளும்படிக் கூறினாள். மங்கிய நிலவொளியில் ‘பளிச்’ சென்று மின்னியது அக் கத்தி. வேலாயுதம் அதை எடுக்கத் திரும்பிய போது வண்டி காற்றாய்ப் பறந்தது!

கத்தியை எடுத்துக் கொண்ட வேலாயுதம் ஓடோடிப் போய்க் கிராமத்துக் கோயிலுக்கு வந்தான். திறந்திருந்த கோயிலுக்குள் நுழைந்தான். கோயில் மணியைப் பலமாக இழுத்து நாலைந்து முறை அடித்தான்!

நடு நிசியில் கோயில் மணியின் சத்தத்தைக் கேட்ட பொன்தாமரைக் குளக் கிராம வாசிகள் திடுக்கிட்டு விழித்தார்கள். விழித்துக் கொண்டு பயந்தார்கள். வீர வாலிபர்களுக்குப் பல்லைக் கிட்டிக் கொண்டது. திண்ணையில் படுத்துக் கொண்டிருந்த எல்லாரும் உள்ளே ஓடிப் போய்க் கதவை இழுத்து மூடித் தாழ்ப்பாளைக் கெட்டியாகப் போட்டுக் கொண்டார்கள். கோயில் மணியை யார் அடித்தது என்ற சந்தேகமும் பயமும் கொண்ட கிராம வாசிகளின் காதுகளில், “ஐயோ! வேலாயுதத்தைக் காணோம்! கோயிலுக்குப் போய் அவனைக் கொள்ளைக்காரர்களிடமிருந்து காப்பாற்றுகிறவர்கள் யாருமில்லையா?” என்ற பரிதாப ஓலம் பலமாக விழுந்தது.

இப்படிச் சில நிமிஷங்கள் பயங்கரமாகக் கழிந்தன. அப்போது, “கொள்ளைக்காரர்களைத் துரத்தி விட்டேன்! எல்லாரும் கதவைத் திறவுங்கள்!” என்ற பலத்த கூச்சல் வெளியே கேட்டது. முதலில் பயந்த கிராமத்தார்களுக்கு இக் குரல் வேலாயுதத்தினுடையதுதான் என்று நிச்சயமாகத் தெரிந்ததும் எல்லாரும் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார்கள். வேலாயுதத்தின் தாயும் தங்கையும் அவனைக் கட்டித் தழுவிக் கொண்டனர்.

எல்லாரும் வேலாயுதம் கொள்ளைக்காரர்களைத் தன்னந்தனியாக விரட்டியடித்த விவரத்தை அப்போதே கேட்கவேண்டுமென்று துடித்தார்கள்.



அப்பொழுது காய்ந்த நிலவு வெளிச்சமே அவர்கள் கூட்டம் கூடப் போதுமானதாயிருந்தது.

வேலாயுதம் இரவு பதினொரு மணிக்குக் கோயில் பக்கம் ஆள் நடமாட்டமிருப்பதாகச் சந்தேகப்பட்டு அங்கே போனதைச் சொன்னபோது அவனுடைய மதியூகத்தைக் கண்டு எல்லாரும் வியந்தார்கள். கள்ளச்சாவி போட்டுக் கோயில் கதவைத் திறந்து அதனுள் பதுங்கியிருந்த இரண்டு கொள்ளைக்காரர்களையும் அவன் ஒருவனே விரட்டி விட்டு, ஒருவனிடமிருந்த பிச்சுவாவைத்தான் பிடுங்கிக் கொண்டு விட்டதாக அவன் சொன்னபோது எல்லாரும் பயந்தார்கள். கொள்ளைக்காரர்கள், ‘செத்தேன்! பிழைத்தேன்!’ என்று ஓடும்போது ‘இக்கிராமத்தின் பக்கமே அடியெடுத்து வைப்பதில்லை’ என்று கூறியதாக வேலாயுதம் சொன்னபோது அவர்கள் கைதட்டி ஆர்ப்பரித்து ஆரவாரம் செய்தார்கள்.

* * *

மறுநாள் காலை பொன்தாமரைக் குளக் கிராமவாசிகளுக்கு மற்றொரு அதிசயம் காத்துக் கொண்டிருந்தது.

பூங்கோதையையும் அவள் தாயாரையும் காணோம் என்ற செய்திதான் அது. முதல் நாள் இரவு நடந்த ரகளையில் அவர்கள் எப்போது கிராமத்தை விட்டு வெளியேறினார்கள் என்று எல்லோருக்கும் புரியாத விஷயமாயிருந்தது. ஆனால் இந்தச் செய்தி கொள்ளைக்காரர்களையே துரத்தியடித்த வேலாயுதத்திற்கு மிகவும் அற்பமானதாகத் தோன்றியது!

பூங்கோதையின் பூர்வோத்தரத்தை அறியவும், கொள்ளைக்காரர்களை எதிர்த்துச் சமாளிப்பதுமான இரண்டு லட்சியங்களும் நிறைவேறி விடவே, வீர வாலிபர் சங்கமும் வேலாயுதத்தால் கலைக்கப்பட்டு விட்டது!

வேலாயுதத்தின் தீரத்தைச் சொல்லிச் சொல்லிக் கிராமத்தார்கள் அலுத்து ஓய்ந்தும் போனார்கள்! பூங்கோதையும் போய், சங்கமும் கலைக்கப்பட்டதால் வீர வாலிபர்கள் சலித்துச் சோர்ந்து போனார்கள்!

பொன் தாமரைக் குளத்தை விட்டுப் பூங்கோதை போன பிறகு அக் கிராமத்தின் உயிரே போய் விட்டது போலிருந்தது! அக்கிராமத்து வாலிபர்களெல்லாம் பழையபடி அழுக்கு வேஷ்டியையே கட்டிக் கொள்ள ஆரம்பித்தார்கள். அக்கிராமத்துப் பெண்களெல்லாம் பழையபடி வம்பிலும் வழக்கிலுமே பொழுதைப் போக்க ஆரம்பித்தார்கள். அக் கிராமத்து எருமைகள் கூட, பழையபடி சாலையின் குறுக்கே சாவதானமாகப் படுத்துறங்க ஆரம்பித்தன.

# அமுதனைக் கண்ட





நல்லதொரு க்ஷேத்திரமாகிய கும்பகோணத்தில் நான் பிறந்து வளர்ந்தவன். இதோடு மட்டுமல்ல; அசல்—ஒரிஜினல்—ஒன்னும் நம்பர்—டிரேட் மார்க்கு ஸ்ரீ வைஷ்ணவன். எங்கள் தாத்தாதான் அந்த ஊர்ப் பெருமாள் கோவிலின் பெரிய தேரை மேற்பார்வை பார்த்துக் கட்டியவர் என்றுகூடச் சொல்லுவதுண்டு. இப்படி இருக்கும்போது எனக்கே அந்த ஊர்ப் பெருமாள் கோவிலில் வருஷா வருஷம் தீபாவளிப் பண்டிகையன்று நடக்கும் விஷயம் தெரியாம லிருந்தால் ஆச்சரியப்பட வேண்டியதுதானே!

அன்று தீபாவளிப் பண்டிகை. கடைத் தெருவிற்குச் சில சாமான்கள் வாங்கவேண்டிய தற்காக நான் போகவேண்டியிருந்தது—சாரங்கபாணி கோவில் கிழக்கோபுர வாசல் வழியாக நுழைந்து மேலக்கோபுர வாசல் வழியாக வெளியே வந்தால் கடைத் தெரு. அந்தக் கோவில் வழியாக நுழைந்து செல்வதென்றால் எங்களுக்கொரு ஆவல்; தவிர அந்த வழிதான் சுலபமான வழி. அன்று நான் போனபோது கிழக் கோபுர வாசல் மூடப்பட்டிருந்ததைப் பார்க்க எனக்கே ஆச்சரியமாயிருந்தது. 'தினமும் திறக்கப்பட்டிருக்கும் கதவு அன்று மூடப்பட்டிருப்பானேன்! அதுவும் தீபாவளிப் பண்டிகை அன்று...!' என்று யோசித்தபடியே தயங்கி நின்றேன்.

அந்தச் சமயம் பிராமணர் ஒருவர் வந்தார். அவருக்கு வயது எண்பதுக்கு மேலிருக்கும். கையில் கோலொன்று ஊன்றித் தள்ளாடி நடந்து வந்தார். பார்வையிலேயே பரம வைதீகராய்த் தோன்றியது. தேகத்தை மறைத்துப் பன்னிரண்டு திருமண்ணும் பாங்காகச் சாத்தியிருந்தார். காஞ்சிபுரம் பட்டுக்கரை வேஷ்டியில் காவேரியின் காவிச் சாயம் ஏறியிருக்கப் பஞ்சகச்சம் கட்டி இருந்தார். மெதுவாக அவரிடம், 'கோவில் கதவு ஏன் இன்று சாத்தப்பட்டிருக்கிறது?' என்று விசாரிக்கலாமா என எண்ணினேன். நல்ல வேளை, அவரும் கைத் தண்டைக் கோவில் படிக்கட்டில் போட்டு, "ஹரே முகுந்தா! நீயே சரண்யா!" என்று சொல்லி உட்கார்ந்தார். நான் மெதுவாக அவரிடம் நெருங்கிப் பணிவாக, "தாத்தா! இன்று கோவில் கதவைத் திறக்கவே மாட்டார்களோ?" என்று கேட்டேன்.

அவர் என்னை மேலும் கீழுமாக ஒரு தடவை பார்த்து விட்டு, "இப்போது திறக்கமாட்டார்கள்; சாயந்தரம்தான் திறப்பார்கள்...... நீ யார் வீட்டுப் பையன்?" என்றார்.

"நான் காட்டூர் ரகுநாதாசாரியார் பேரன்" என்றேன். என் தாத்தாவையே நான் பார்த்திரா விட்டாலும், என் தாத்தாவின் பெயருக்குள்ள பெருமையைச் சமயா சமயம் அறிந்து நான் உபயோகித்துக் கொள்ள எப்பொழுதுமே தவறியது இல்லை.

இதைக் கேட்டதும் அவர் ஒரு தடவை துள்ளிக் குதித்து உட்கார்ந்தார். "அப்படி யென்றால் நீ காட்டூர் சாமி பிள்ளைன்னு சொல்லு. அதுதான் பார்த்தவுடனே சந்தேகப் பட்டேன். உன் மூக்குத்தான் பிதாமகன், பிதுர்ப் பிரபிதாமகன் எல்லோரையும் அடையாளம் காட்டுகிறதே! நானும் உங்கள் தாத்தாவும் இந்தக் கோவில் வாசலிலே தான் கோலி விளையாடுவோம். ஹூம்! அதொரு காலம்......" என்றார்.

"அது சரி, தாத்தா! இன்று கோவில் சாத்தியிருக்கக் காரணம் என்ன?" என்றேன் ஆவலோடு.

"கோவிலில் சிராத்தம் நடக்கிறது. சாயந்தரம் வரையில் திறக்க மாட்டார்கள்" என்றார்.

வீட்டில் சிராத்தம் செய்யச் சௌகரியமில்லாதவர்கள் கோவிலில் வந்து செய்யும் வழக்கம் உண்டு. அப்படித்தானிருக்கும் என்று நான் மனதுள் நினைத்துக் கொண்டேன்.

"இந்தத் தீபாவளி நாளில் கோவிலில் வந்து சிராத்தம் செய்கிறவர்கள் யார்?" என்றேன் சிறிது வெறுப்போடு.

புடவை வாங்கும் பெண்மணி:—இந்தப் பழைய புடவை என்ன விலை?
கடைக்காரர்:—அது பழசு இல்லே; புதுப் புடவைதான், அம்மா!
பெண்மணி:—என்ன, ஐயா! பழைய புடவை இல்லே என்கிறீர்கள்? இதே புடவையை அந்த அம்மாளுக்கு ஆறு மாதமாகக் கட்டி வைத்திருக்கிறதே?

கோயில் திருப்பணிக் கைங்கர்யமெல்லாம் முடிவுற்றவுடன் தன்னிடம் மரணம் நெருங்குவதை உணர்ந்தார். ஆயிரந்தான் பக்திமானும் இருந்தாலும், வைராக்ய சீலராய் இருந்தாலும் நம்மைப்போல் மனிதராய்ப் பிறந்தவர்தானே! மரணம் அவரை நெருங்கி வரும்போது மனம் சிறிது சபலமடைந்தது. 'வாழ் நாள் முழுவதும் அமுதனுக்கே அடிபட்டு இகத்தையோ பரத்தையோ நினைக்காமல், உண்ணாமல், உறங்காமல் அவன் திருப்பணிக்கே ஓடி ஓடி உழைத்தோமே, இதனால் என்ன லாபம்! இன்றோ நாளையோ என் ஜீவன் பிரியப்போகிறது. நான் இறந்த பிறகு வருஷத்திற்கு ஒரு முறையாவது என்னை நினைத்துச் சிராத்தம் செய்யும் ஒரு புத்திரனைக் கொடுக்காமல் வஞ்சித்து விட்டாரே!' என்ற எண்ணம் எப்படியோ அவர் மனத்தில் எழுந்ததாம்.

அந்தச் சமயத்தில் அவர் எதிரில் அமுதன் பிரஸன்னமாகிப் புன்னகை பூக்கும் முகாரவிந்தத்தோடு, "நீர் இவ்வளவு பக்திமானும்ப் பரம பாகவதராயிருந்தும் உமக்கு உண்மை தெளிவாக விளங்கலையே. உமக்குப் புத்திரன் இல்லை யென்று யார் சொன்னது!" என்றாராம்.

"பரம புருஷா! என்னிடம் விளையாடுபவா! எனக்கெங்கே இருக்கிறான் புத்திரன்! நான்தான் மனை, சம்சாரம் எல்லாவற்றையும் துறந்து ஆதியிலிருந்தே உன் திருவடித் தாமரைக்கே தொண்டு புரிந்து வருகிறேனே!" என்றார் பக்தர்.

"அமுதன் மறுபடியும் சிரித்தார்; இல்லை, உமக்கொரு புத்திரன் இருக்கின்றான், கற்பகோடி காலத்திற்கும் சிராத்தம் செய்ய. அவனை நீர் அறிந்துகொள்ளாமல் சஞ்சலமடைகிறீர்" என்றார்.

"எனக்கொரு புத்திரன் இருக்கிறானா! யாரவன்!" என்றார் நரசிம்ம ஸ்வாமி ஆச்சர்யத்துடன்.

பகவான் புன்னகை மாறாமல் சொன்னார்: "நீர் என்னைத் தெய்வமாக மதித்தே பக்தி செய்து கொண்டிருந்தீர். ஆனால் நீர் ஒரு நாளாவது என்னைப் புத்திரனாக நினைத்து அன்பு செலுத்த மாட்டாரா என்று ஏங்கிக் காத்திருந்தேன் நான். இன்று வரையில் நீர் அப்படி நினைக்கவே இல்லை. கடைசியில் நானே உமக்குப் புத்திரனாக வேண்டுமென்று வலிய வந்து விட்டேன்."

இதைக் கேட்டதும் நரசிம்ம ஸ்வாமிக்கு ரோமாஞ்சனம் ஏற்பட்டது. ஆனந்தத்தால் தன்னிலையிழந்தார். "தீனதயாளா! நீயே எனக்குப் புத்திரனாக வலிய வந்தாயா! இந்தப் பாக்கியம் உலகில் யாருக்குக் கிடைக்கும்! அமுதா! நீயே எனக்குச் சிராத்தமும் செய்வாயா...!" என்று நடுங்கிய வண்ணம் தயக்கத்தோடு கேட்டார்.

"புத்திரனாகி விட்டால் சிராத்தம் செய்யவேண்டியதுதானே! அதுதானே மகன் தந்தைக் காற்றும் முக்கியக் கடன். யுகங்கள் புரண்டு புரண்டு வந்தாலும் உமக்காகக் கையில் புல்லேந்திப் பிண்டம் வைப்பேன். கவலைப்பட வேண்டாம்" என்று சொல்லி மறைந்தார் அமுதன்.

"இந்த ஆனந்தத்திலேயே நரசிம்ம ஸ்வாமி ஜீவன் நீத்துப் பரம பதம் சேர்ந்தார். தீபாவளி நன்னாளில் தாம் ஜீவனை விடுவோமே என்று அவர் அப்பொழுது கவலைப்படவில்லை. தீபாவளி நன்னாளில் தாம் சிராத்தம் செய்ய நேர்ந்ததே என்று பெருமாளும் கவலைப்படுவதில்லை. எல்லாம் அவன் கருணை, அவன் இச்சை தானே" என்று சொல்லி முடித்தார் அந்தக் கிழவர்.

இத்தனை நாளும் கேட்டறியாத அந்த ஸ்தல மகாத்மியத்தைக் கேட்டதில் எனக்கொரு மன ஆறுதல். நான் அந்தக் கிழவரிடம் விடை பெற்றுக்கொண்டு அவ்விடத்தினின்றும் மெதுவாக நடந்தேன்.

நான் தெருக்கோடி வந்த பொழுது திருமலாச்சாரி அவன் வீட்டு வாசலில் நின்று கிழக்கும் மேற்கும் பார்த்துக் கொண்டிருந்தான். தீபாவளிப் பண்டிகையான அன்று அவன் இருந்த திருக்கோலம் எனக்குத் திகைப்பூட்டியது. "என்னடா, யாரைப் பார்க்கிறாய்! இந்த வருஷமும் உனக்குத் தீபாவளி கிடையாதா! என்னமோ போலிருக்கிறயே" என்றேன்.

"எங்க வாத்தியாரைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். தீபாவளியும் அதுவுமாய் அவர் எப்போ வருவாரோ!" என்றான் அலுப்புடன்.

"வாத்தியாரைப் பார்க்கிறாயா! எதற்கு, தர்ப்பணத்திற்காகவா!" என்றேன்.

"தர்ப்பணத்திற்கில்லே. அதை நானே செய்துவிடுவேன். இன்றைக்குத் திவசம்..." என்றான்.

"திவசமா! யாருக்கு!"

"அப்பாவுக்கு; சாஸ்திரங்கள் தீபாவளிக்கு ஒரு நாள் முன்போ பின்போ சாகக்கூடாதா! தீபாவளியன்றுதான் நம்ம பிராணனை வாங்கணுமா! எல்லோரையும் போல் மங்களகரமாக எண்ணெய் ஸ்நானம் செய்து புதிது உடுத்திச் சந்தோஷமாக இருக்கும்படி வைக்கவில்லை என்னை என் அப்பன். இது என்னைப் பிடித்த தரித்திரம் தான்" என்று கணக்கெடுப்பே சொன்னான் திருமலாச்சாரி. நானும் அவனுக்காக அனுதாபப் படுகிறவன் போல் முகத்தை வைத்துக்கொண்டு அந்த இடத்தை விட்டு நகர்ந்தேன். ஆனால் என் மனம் வேறு எதையோ நினைத்தது.

பிள்ளையைப் பெற்று, சீரும் சிறப்புமாக வளர்த்து, படிக்க வைத்து, உத்தியோகம் தேடிக்கொடுத்து, கல்யாணம் செய்து வைத்து, சொத்து சுதந்திரங்களையும் தேடிக்கொடுத்து, மதிப்புள்ள மனிதனாக்கி விட்டுச் சென்றான் தகப்பன். தகப்பனுடைய சிராத்தம் தீபாவளியன்று வந்ததற்காக முகம் சுளிக்கிறான் புத்திர சிகாமணி. ஆனால் கடவுள் கடவுளேதான். ஆம்; கடவுளுக்குக் கடவுளேதான் நிகர். இல்லாவிட்டால் ஒரு பக்தனுக்குப் புத்திரனாகத் தானே வலிய வந்து தீபாவளி, சங்கராந்தி என்று பாராமல் சிரத்தையோடு சிராத்தம் செய்வாரா! நரசிம்ம ஸ்வாமி மகா புண்ணிய புருஷர். மனை, மக்கள், சுற்றம் என்பனவற்றைக் கண் கொண்டு நோக்காமல் அமுதனையே அன்புடன் கண்ட கண்கள் அல்லவா அவருடைய கண்கள்!



வானுலகைத் தாம் அணுகிச் சென்ற போதிலே
வாசலிலே நின்றுவர வேற்றவர் யாரோ?
வானவரும் தேவியரும் வந்து வணங்கி
வாசமலர் ஏந்தி ஜய போற்றி சொன்னாரோ?




குற்றாலச் சிற்பம் 1.

கல்கி
தீபாவளிமலர்
1950


ஓடி விளையாடு பாப்பா – நீ
ஓய்ந்திருக்கலாகாது பாப்பா
– பாரதியார்

# இந்தியன் பாங்க், லிமிடெட்



(ஸ்தாபிதம் 1907)

தலைமை ஆபீஸ்: 'இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்' - மதராஸ்



| | | |
|---|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் | - ரூ. | 1,00,00,000 |
| வழங்கப்பட்ட மூலதனம் | - ரூ. | 72,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | - ரூ. | 53,00,000 |
| ரிஸர்வ் நிதி | - ரூ. | 62,00,000 |



டைரக்டர்கள்:

டாக்டர் Rm. அழகப்ப செட்டியார்
ராவ் சாகிப் E. M. முத்தப்ப செட்டியார்
ஸ்ரீ M. Ct. முத்தையா
ஸ்ரீ K. பாலசுப்ரமண்ய அய்யர்
ஸ்ரீ M. A. சிதம்பரம் செட்டியார்
ஸ்ரீ R. K. வெங்கடாசலம்
ஸ்ரீ R. சுந்தரம் அய்யர்
ராவ் பஹதூர் M. R. M. S. பெரியண்ணன் செட்டியார்
ஸ்ரீ O. M. SP. L. M. மெய்யப்ப செட்டியார்
ஸ்ரீ A. M. A. MR. முருகப்ப செட்டியார்
ராவ் பஹதூர் டாக்டர் M. R. குருஸ்வாமி முதலியார்
ஸ்ரீ C. கிருஷ்ணமூர்த்தி முதலியார்



எல்லாவித பாங்கின் அலுவல்களும் செய்யப்படும்

N. கோபாலய்யர்
காரியதரிசி

# ஆசி மொழிகள்

கி. ஸரஸ்வதி அம்மாள்



டையை ரேழிச் சுவர் ஓரமாகச் சாத்தி விட்டு நான் வீட்டின் உள்ளே நுழைய நதற்குள், என் சம்சாரம் அவ்விடத்திற்கே என்னை எதிர்கொண்டழைக்க வந்து விட்டாள். ஏதோ விஷயம் என்னிடம் சொல்ல அவளுக்குப் பரபரப்பும், அவசரமுமாக இருக்கிறது என்பதை நானும் ரசித்துக் கொண்டேன். நான் "என்ன!" வென்று கேள்வி கேட்க ஆரம்பிக்கு முன்னமே, "உங்களுக்கும் எனக்கும் அழைப்பு வந்திருக்கிறது" என்று அவளாகவே சொன்னாள்.

"அழைப்பா!" என்று நான் புரியாமல் கேட்டதற்கு, "அதுதான்னு, உங்கள் பிரிய சிஷ்யை கமலமும் அவள் அகத்துக்காரருமாக வந்து, உங்களையும் என்னையும் அவர்களின் தலை தீபாவளிக்கு அவசியம் வரவேணுமென்று அழைத்து விட்டுப் போயிருக்கள். இதோ பாருங்கள்" என்று அவள் கூடத்தைச் சுட்டிக் காண்பித்தாள்.

அவள் காண்பித்த இடத்தில் சுவர் ஓரமாக ஒரு தட்டில் வெற்றிலை பாக்கு சகிதம் புடவையும் வேஷ்டியும் கல்யாண தம்பதிகளுக்கு ஆசீர்வதித்து ஒதிவிடச் சித்தமாக வைத்திருப்பது போல வைக்கப்பட்டிருந்தன. "இதைக் கொண்டுவந்து கொடுத்து விட்டு, தீபாவளியன்று நானும், நீங்களும் இதைத் தரித்துக்கொண்டு அவள் வீட்டிற்குக் கட்டாயம் சாப்பிட வரவேணுமாம், அவள் உங்கள் பாதங்களில் வணங்கி ஆசி பெறப் போகிறாளாம், சொல்லி விட்டுப் போயிருள். என்ன அடக்கம், போங்கள். குழந்தை கமலமா இவள்! எனக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. எவ்வளவு நேரம் உங்களுக்காக இந்தச் சாண் கூடத்தில் அகத்துக்காரருடன் காத்திருந்தாள் தெரியுமா! எனக்குத்தான் என்னவோ போலிருந்தது. நேற்றுத்தான் கணவர் உத்தியோகம் பார்க்குமிடத்தி லிருந்து தீபாவளிக்கு வேண்டி மாமனார் அகத்திற்கு, மாமனார் என்ன, மாமா அகத்திற்கு வந்திருக்கிறாளாம், சொன்னாள். இவ்வளவு அடக்கமும் மரியாதையும் அவளுக்கு எங்கிருந்து வந்தன!" என்று கமலத்தைப் மெச்சிப் பேசினாள். "பத்மாவதி யம்மாள் இருந்து பார்க்கவில்லையே; என்னவோ, சொல்லக்கூடாதாக்குகிறது. பெண் இப்படிச் சென்று குடித்தனத்துக்கு லாயக்கில்லாமல் போய் விடுவாளோ என்று தவித்துப் போனாளே!" என்று அவள் தாயாருக்காகவும் வருத்தினாள்.

'அவள் அம்மா இருந்து பார்க்கிறதா! ஏது! தாயார் மனமுடைந்து இறந்து போனதால் அல்லவா, பெண் இவ்விதம் நல்லதனமாக மாறி விருக்கிறாள்! தாயின் ஆத்மத் தியாகம் தானே பெண்ணின் வாழ்க்கைத் தீபம் சுடர்விட்டெரியக் காரணமாயிற்று!' என்று நான் நினைத்துக் கொண்டேன்.

என் சம்சாரம் புடவையைக் கையில் எடுத்துக் காண்பித்தாள். நானும் வியந்துப் பார்த்துக் கொண்டு, "பேஷ்! உனக்குத்தான் யோகம் அடிக்கிறது. கமலத்தின் விவாகத்தின் போது கிடைத்த புடவையைவிட உயர்ந்ததாக இருக்கிறதே இது!" என்று அதிசயித்துச் சொன்னேன்.

"அப்பொழுது மாமா வாங்கினாராம். இப்பொழுது அவளும் அவள் அகத்துக் காரருமாகப் பார்த்து வாங்கி வந்திருக்கிறார்களாம்; சொன்னாள். நான் அவளுக்குக் குரு பத்தினியல்லவா, அதனால் இவ்வளவு சிரத்தை" என்று என் சம்சாரம் விளையாட்டாகச் சொல்லிக் கொண்டாள்.

உண்மையும் அதுதான். நான் கமலத்திற்கு ஸம்ஸ்கிருதம் போதிக்கும் ஆசிரியன். என்னிடத்தில் அவளுக்குக் குரு பக்தி இருந்தது. ஸம்ஸ்கிருதத்தில் முதலெழுத்தி லிருந்தே அவள் என்னிடம்தான் கற்கத் தொடங்கினாள். கமலத்தின் தகப்பனார் தம்முடைய முயற்சியினால் ஸம்ஸ்கிருதக் கலாசாலையில் என்னை உபாத்தியாயராகச் செய்து ஒருவிதக் கௌரவத்தைச் சமூகத்தில் எனக்குச் சம்பாதித்துக் கொடுத்தவர். அதற்கு நான் நன்றி காண்பிக்க வேண்டாமா! அதற்கு வேண்டி அவர் அருமை மகளுக்குப் பாடம் கற்பிக்கும் பதவியை நான் ஏற்க வேண்டியதாயிற்று. அவர் அதற்குச் சும்மா இருந்து விடவில்லை.

பணத்தை நிறைய மாதா மாதம் தக்ஷிணையாகக் கொடுத்து ஈடு செய்து விட்டார். சிறுமி கமலமும், விளையாட்டாகவே இருந்தாள் என்றாலும், பாடங்களை வேகத்தில் ரசித்து, புத்தி சாதுர்யத்தைக் காண்பித்து, அவளுக்குப் பாடம் போதிப்பதில் ஒரு ஆசை தோன்றும்படி செய்து விட்டாள். தகப்பனாருடைய சலுகையும், அன்பும் மகளைச் சற்றுத் துடுக்காகவே பேசவும், இஷ்டம்போல் நடக்கவும் இடம் கொடுத்திருந்தன. தாயாருக்கும் பெண்ணிடம் அன்பில்லாமல் இருக்குமா; மேலும் ஒரே அருமை மகளல்லவா! ஆயினும் ஒன்று சொல்ல வேண்டும். 'தாயைப் போல் மகள், நூலைப்போல் சேலை' என்கிற பழமொழி 'எல்லாவற்றிலும் தாய்க்கும், மகளுக்கும் ஒற்றுமை காணும்' என்பதற்காக ஏற்பட்ட ஒரு சொல்தான். ஆனால் கமலத்திற்கும், அவள் தாயார் பத்மாவதி அம்மாளுக்கும் ஒரு ஒற்றுமையும் தென்படவில்லை.

பத்மாவதியம்மாள் அடக்கத்தின் அவதாரம். குரலெடுத்துப் பேசமாட்டாள். பூமி அதிர நடந்து விடமாட்டாள். கொஞ்சம் பழம் மாதிரி என்றுகூடச் சொல்லலாம். ஹைந்தவ ஆசார அனுஷ்டானங்களில் விசேஷப் பற்றுக் கொண்டவள். புருஷர்களுக்குச் சமமாக எதற்கும் ஸ்திரீகள் செய்வதைக் கட்டோடு விரும்பாதவள். கணவருடைய புது நாகரிகப் பழக்க வழக்கங்களுள் ஒன்றையும் ஏற்காமல், அவர் உயிருடன் இருக்கும் பரியந்தம் ஒன்றிலும் கலந்து கொள்ளாமல் தன் போக்கில் ஒதுங்கி இருந்தாள். பார்வையிடம் செல்லாததைப் புத்திரியிடம் நடத்திக் கொண்டார் தந்தை. பெண்ணைப் புது நாகரிகத்தில் சுதந்திர எண்ணங்கள் தோன்ற வளர்த்தார். ஸ்திரீ, புருஷர்கள் வித்தியாசமின்றி யாருடனும் தாராளமாய் ஒன்றிப் பழகி, எல்லா வேடிக்கை விநோதங்களிலும் கலந்து கொள்ளும்படி செய்தார். அதற்குத் தகுந்த சௌந்தர்யமும், வித்தையும், திரவியமும், அதோடு வயதையும் அப்பொழுது அடைந்திருந்தாள் கமலம். அவளுக்கு ஆடிப்பாடிச் சுதந்திரமாய் இருக்கத்தான் ஆசை ஏற்பட்டிருந்தது. 'இவைகளெல்லாம் ஒரு வயதுவரையும் தான்' என்று புரிந்துகொண்டு பார்க்காமல் பத்மாவதியம்மாள் மிகவும் கஷ்டப்பட்டுப் போனாள். கணவர் இறந்த

பிறகு தகப்பனற்ற பெண்ணை, அவள் போக்கை நினைத்துக் கவலையோடு பார்த்தாள். என்னைக் காணும்பொழுதெல்லாம், "இந்தப் பெண் இப்படி அடங்காப்பிடாரியாகப் போகிறாளே. மனம் போனபடி போய் விடுவாள் போலிருக்கிறதே. இவளுக்குப் புத்தி புகட்டுகிறது யார்! என் வார்த்தை இவள் காதிலேயே ஏறமாட்டேனென்கிறதே" என்று சொல்லி மிகவும் விசனிப்பாள்.

"அப்படி யெல்லாம் சொல்லாதீர்கள் அம்மா, குழந்தையிடம் ஒரு தப்பும் கிடையாது. அவளுக்கு ஒரு குறையும் வராது, சமர்த்தா யிருப்பாள். நான் சொல்லுகிறேன், பாருங்கள்" என்று நான் அந்த அம்மாளுக்குச் சமாதானம் சொல்லுவேன்.

"ஏதோ ஆசீர்வாதம் போலச் சொல்லுகிறீர்கள். இருக்கட்டும். இப்போ பாருங்கள். உங்களைப் பாடத்திற்கு வரச் சொல்லிவிட்டு அவள் இன்னும் வீடு வரவில்லை. காலை ஒன்பது மணிக்குப் போனவள், மணி ஏழாகிறது. வர வர இது மாதிரிதான் செய்கிறாள்" என்று சொல்லித் துக்கிப்பாள்.

இதற்கு நான் பதில் சொல்லத் தெரியாமல் திகைக்கும் பொழுதே, காரைத் தானே வேகமாய் ஓட்டிக்கொண்டு வந்து சேருவாள் கமலம்.

"ஸார்! ரொம்ப நேரம் உங்களைக் காக்க வைத்துவிட்டேனா, ரொம்ப வருத்தம், மன்னிக்கவும். டென்னிஸ் கோர்ட்டில் நேரமாகிவிட்டது. இதோ நொடியில் உடை மாற்றிக்கொண்டு வந்துவிடுகிறேன். அம்மா! நான் டிபன் சாப்பிடவில்லையே என்று கவலைப்பட்டுப் போனாயா! நான் பட்டினி கிடக்க விடவில்லை. 'காண்டீ'னில் வயிறு புடைக்கத் தின்றிருக்கிறேன், தெரியுமா!" என்று கூறி, 'விழுப்போடு என்மேல் படாதே' என்று ஒதுங்கிக் கொள்ளும் தாயின் கன்னத்தைக் கையால் தடவிவிட்டு மாடிப்படிகளில் தாவி ஏறிச் செல்லுவாள். அவள் அவ்வளவு வேகமாக அன்பு பொங்கச் சமாதானம் கூறிச் செல்லும் பொழுது, யார் என்ன எடுத்துக் கூறிக் கண்டிப்பது என்பது தெரியாமல் போகும். இது மாதிரி எவ்வளவோ சிறு விஷயங்கள் எவ்வளவோ தடவைகள் நடந்திருக்கின்றன. பத்மாவதியம்மாள் யாரிடமும் மனம் விட்டுப் பேசாதவள் என்னிடம் மட்டும் அந்தரங்கத்தில் இதற்குக் கவலைப்பட்டு வருந்துவாள். அந்த அம்மாளுக்கு என்னிடத்தில் அப்படி ஒரு விசுவாசம். அவளுக்கு மட்டுமென்ன, வீட்டில் கமலத்திற்கு, அவள் தகப்பனார் உயிருடன் இருக்கும்பொழுது அவருக்கு, எல்லாருக்கும்தான். அந்த வீட்டில் நான் பாடம் கற்பிக்கும் ஆசிரியன் மட்டுமல்ல, ஒரு பந்து போலவும் கருதப்பட்டேன். இவ்விதம் ஒன்றன் பின் ஒன்றாகப் பல எண்ணங்கள் என் உள்ளத்திற்குள் பாரமான பெருமூச்சை எழுப்பின.

* * *

"என்ன இது, புடவையைப் பார்க்கவும் வாயடைத்து மௌனியாகிப் பெருமூச்சு விடுகிறீரே. எனக்கு இவ்வளவு நல்ல புடவை கிடைத்ததில் உங்களுக்கு வருத்தமா!" என்று கேட்டு என் சிந்தனையைக் கலைத்தாள் என் சம்சாரம்.

"எனக்கொரு வருத்தமும் இல்லை. உனக்குத்தான் புடவை கிடைத்த சந்தோஷம் தாங்கவில்லை, கமலத்தைப் புகழ ஆரம்பித்துவிட்டாய்" என்றேன்.

"நன்றாக இருக்கு, என்னை அவ்வளவு தாழ்வாக நினைத்து விட்டீர்களா! உங்களுக்கு மட்டும் தான் கமலத்தினிடம், [illegible] மிடத்தில் போலப் புத்திர வாத்ஸல்யமா, எனக்கொன்றும் கிடையாதா! பெண்ணில்லாத எனக்கு அவளிடம் பெண்ணிடம் போல அபிமானம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் இவ்வளவு அமரிக்கையாய்க் கணவனுக்கு அடங்கிக் குடித்தனப் பெண்ணாக அவள் ஆவாள் என்று நான் நினைக்கவில்லை. 'முதலில் விவாஹமே செய்து கொள்ள மாட்டாள். அப்படிக் கல்யாணம் பண்ணிக் கொண்டாலும், தாயாருக்கு அடங்காமல் போனது போல அகமுடையானுக்கும் அடங்கமாட்டாள்' என்றுதான் நான் நினைத்தேன்" என்றாள் என் சம்சாரம்.

"கமலத்தை நான் அறிந்திருந்த மாதிரி நீ அறிந்திருந்தால், அப்படி நினைத்திருக்க மாட்டாய்" என்று நான் சொன்னதற்கு, "ஏன்! நீங்கள் மட்டும் அவளுக்காகக் கவலைப்படவில்லையா! எத்தனையோ பட்டிருக்கிறீர்கள். இப்போது மறந்து போய் விட்டதோ! அவள் அம்மா சாகிறதற்குக் கொஞ்ச நாளைக்கு முன்னேயிருந்து, அவர்கள் வீட்டுப் பாடத்திற்குப் போய்த் திரும்ப வருகிற போதெல்லாம் என்னிடம், 'சாமிதான் கமலத்திற்கு நல்ல புத்தி கொடுக்க வேணும்; வர வரத் தாயார் சொல்லைக் கேளாமல் தன் போக்கில் போகிறாள்' என்று வருந்தினதில்லையா!" என்று எனக்கு எடுத்துச் சொன்னாள்.

ஆமாம், சிறிது காலம் நான் வீட்டிற்கு வந்த பிறகு கூட, கமலத்தின் வருங் காலத்திற்காகக் கவலைப் பட்டதுண்டு. அவள் தன் தாயார் முகத்திற்கு எதிரிலேயே எதிர்த்துப் பேசத் தொடங்கின அன்றையிலிருந்து என்னை இந்த விசாரம் பற்றிக்கொண்டது. முதலில் அவள் எதிர்த்துக் கொள்ள ஆரம்பித்தது என் மனத்தில் தெளிவாய் இன்று போலப் பதிந்திருக்கிறது. மாலை ஐந்து மணி யிருக்கும். அவள் என்னிடம் அவசர அவசரமாகப் பாடத்தை முடித்து விட்டு, "ஸார்! இன்று இத்துடன் நிறுத்திக் கொள்வோம். எனக்கு வெளியே போக வேண்டியிருக்கிறது. துஷ்யந்தன் சகுந்தலையை நிராகரிப்பதில் நமக்கு மனமில்லை. அதுதான் அங்கம் முடியாமல் நீண்டு கொண்டே போகிறது" என்று விளையாட்டாகச் சொல்லிக்கொண்டே எழுந்தாள். இரண்டு மூன்று நாட்களாக எங்கள் பாடம் ஏதேதோ காரணத்தினால் தடைப்பட்டுக்கொண்டே இருந்தது. நாங்கள் அப்பொழுது சாகுந்தலப் பாடத்தில் நான்காம் அங்கத்திற்கு வந்திருந்தோம்.

"ஏன், முழுதும் படியேன், எங்கே போகணும்!" என்று கமலம் சொன்னதைக் கேட்டுக் கொண்டே வந்த அவள் தாயார் சொன்னாள்.

"இல்லையம்மா, ஸினிமாவுக்குப் போக வேணும். என் ஸ்நேகிதர்களுக்குக் கட்டாயம் வருவதாக வாக்குக் கொடுத்திருக்கிறேன்" என்றாள் கமலம்.

"ஆமாம், பெரிய சத்திய வாக்கு, தட்டக்கூடாது! இன்றைக்கு நீ ஓரிடத்திற்கும் போகவேண்டாம். மாமா வரப் போகிறார். எங்கும் போகாதேன்று சொல்லத்தான் நான் வந்தேன்" என்றாள் பத்மாவதியம்மாள். வழக்கத்தைவிட அந்தம்மாள் குரலில் கொஞ்சம் அதிகமாகக் கண்டிப்பு தென்பட்டது.



★★★ சென்னை மேல் சட்டசபை அங்கத்தவரா யிருந்த ஆந்திர தேச பக்தர் ஒருவர் திருச்சி சிறையில் ராஜாஜியுடன் தங்கியிருக்க நேர்ந்தது. சில வருஷங்களுக்குப் பிறகு அவர் மறுபடியும் ராஜாஜியைச் சந்தித்தார். எங்கே, எப்படி என்பதைக் கீழே படித்தறியலாம். ★★★

# புதுடில்லி யாத்திரை

◊ கே. பி. மல்லிகார்ஜுனுடு எம்.ஏ., பி.எல். ◊

**1948**-ம் வருஷம் ஜூன் மாதம் இருபத்தொன்றாம் தேதி நமது பாரத தேசத்துச் சரித்திரத்தில் மிக முக்கியமான நாளாகும். அன்றுதான் முதன் முதலில் ஓர் இந்தியர் இந்திய அரசாங்கத்தின் தலைவர் ஆனார்! நமது அருமைத் தலைவர் ராஜாஜி பாரத தேசத்தின் கவர்னர் ஜெனரல் பதவிக்கு வந்தவுடன் அவரை ஒருமுறை நேரில் சென்று பார்த்து விட்டு வரவேண்டுமென்ற ஆசை என் உள்ளத்தில் இருந்து வந்தது.

ராஜாஜி எளிய வாழ்க்கையை நடத்தி வந்தவர். கடுமையான ஒழுக்கமும் சீலமும் நிறைந்த வாழ்க்கையைக் கைக்கொண்டிருந்தவர். எதிலும் பற்றுக் கொள்ளாமல் வைராக்ய நெறியைக் கடைப்பிடித்து ஒழுகியவர். இந்த ராஜாஜியைத்தான் நாம் பார்த்திருக்கிறோம். ஆனால் இப்பொழுது அவர் பிரிட்டிஷ் வைஸ்ராய்கள் நூற்றுக்கணக்கான ஆண்டுகள் ராஜ்யம் செய்த அந்த மா பெரும் அரண்மனையில் எப்படி வாழ்கிறார்? அந்தப் பதவியின் பொருட்டு ஏற்க வேண்டிய ஆடம்பரத்தை எப்படிச் சமாளிக்கிறார்? —இதைப் பார்க்கவேண்டும் என்ற ஆசை எனக்கு ஏற்பட்டது. இதைப் பற்றிச் சொன்னால் சிறு பிள்ளைத்தனமாகத் தோன்றலாம். "இப்படியும் ஒரு ஆசையுண்டா? பைத்தியக்காரத் தனம்!" என்றும் தோன்றலாம். ஆனால் இந்த ஆசை என் அந்தராத்மாவில் உதித்து என் உடல் பூராவும் வியாபித்து விட்டது போல் தோன்றியது. நாள் செல்லச் செல்லக் கவர்னர்-ஜெனரல் ராஜாஜியைப் பார்க்க வேண்டும் என்ற துடிப்பும் எனக்கு அதிகரித்தது.

"ஒருவர் மற்றொருவர் பால் வசீகரிக்கப்படுவதன் காரணம் வார்த்தைகளால் விளக்கக் கூடியதன்று. அதுவும் கடவுள் தத்துவம் போன்றதுதான்!" என்று மகாகவி பவபூதி ஓரிடத்தில் சொல்லியிருக்கிறார்.

"எதற்காக நீ ராஜாஜியைப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்படுகிறாய்?" என்று கேட்டால் மேலே பவபூதி கூறியதைத்தான் நானும் கூற வேண்டியிருக்கிறது.

என் விருப்பம் எப்படி நிறைவேறும் என்று யோசித்துக் கொண்டிருந்த போது அதிர்ஷ்டவசமாக என் நண்பர் ஸ்ரீ மல்லப் பிரசாத ராவ் வந்தார். அவரிடம் என் விருப்பத்தைத் தெரிவித்ததும், தாம் என் புதுடில்லி யாத்திரையை நடத்தி வைப்பதாக ஒப்புக்கொண்டார்.

நண்பரின் உதவியால் 1949-ம் வருஷம் ஜூலை மாதக் கடைசியில் புதுடில்லி சென்று 'சவுத் இண்டியன் போர்டிங் ஹவுஸ்' என்ற பிரபல தென்னிந்திய ஹோட்டலில் தங்கினேன். கவர்னர் ஜெனரலைப் பேட்டி காணப் பெறுவது மிகவும் கஷ்டமாக இருக்கும் என்று எண்ணினேன். ஆகவே, முதலில் ராஜாஜியின் ராஜ்யக் காரியதரிசிக்கு டெலிபோன் மூலம் கவர்னர் ஜெனரலை நான் பார்க்க விரும்புவதாகச் சொல்லி, கவர்னர் ஜெனரல் எனக்குப் பேட்டி யளிப்பாரா, அளிப்பாராயின் என்றைக்கு, எப்பொழுது,—என்ற விவரங்களைத் தெரிவிக்குமாறு கேட்டுக்கொண்டேன். சில மணி நேரத்தில் எனக்கு டெலிபோன் மூலம் பதில் வந்தது. பிறகு எழுத்து மூலமும் வந்து விட்டது. அதாவது ஜூலை மாதம் 29-ம் தேதி காலை பதினொரு மணிக்குக் கவர்னர் ஜெனரலை நான் சந்திக்கலாம் என்று ராஜாஜியின் உதவிக் காரியதரிசி எழுதியிருந்தார்.

இத்தகைய மேலிடங்களுக்குச் சென்று பழக்கமில்லாதவர்களுக்கு ஏற்படும் ஒருவித அச்சத்துடன் 29-ந் தேதி காலை குறித்த நேரத்துக்கு முன்பாகவே கவர்னர் ஜெனரல் மாளிகைக்குப் போய் விடத் தயாரானேன்.

அரசாங்கக் காரியாலயங்கள் உள்ள கட்டிடங்களின் முன்னா லிருக்கும் பரந்த சதுக்கத்தை என் வாடகை மோட்டார் வண்டி அடைந்தபோது ராஜ கம்பீரம் பொருந்திய அந்தக் கட்டிடத்தைப் பார்த்தேன். என் உள்ளத்தில் அச்சமும் ஆச்சரியமும் ஒருங்கே தோன்றின. முதலில் என் வாடகைக் கார் பிரதான வாயில் வழியாகச் சென்று, பிறகு விசாலமான அழகிய பாதையில் சென்றது. அந்தச் சாலையின் இருமருங்கும் அரசாங்கக் காரியாலயங்களிருக்கும் சிவப்பு நிறக் கட்டிடங்கள் வரிசையாக இருக்கின்றன. இவ்வழியில் கொஞ்ச தூரம் சென்ற கார் இடதுபுறமாகத் திரும்பியது. இப்பொழுது கார் இரண்டு சுவர்களிடையிலிருந்த சாலையில் சென்றது. இந்த இரு சுவர்களும் பழங்காலக் கோட்டைகளின் மதிற் சுவர்கள் போலிருந்தன.

மேலும் கொஞ்ச தூரம் சென்ற பிறகு ஓர் இடத்தை அடைந்தோம். உடனே மோட்டார் ஓட்டி, "இதற்கு மேல் கார் போகக்கூடாது" என்றான். நான் காரை விட்டு இறங்கினேன். அங்கே ஒரு உத்தியோகஸ்தர் நின்று கொண்டிருந்தார். அவர் கவர்னர் ஜெனரலின் அரண்மனை உத்தியோகஸ்தராக இருக்க வேண்டும் என்று நினைத்து நான் வந்த காரியத்தைப் பற்றி அவரிடம் தெரிவித்தேன். உடனே அவர் கவர்னர் ஜெனரல் அரண்மனையைச் சேர்ந்த உடுப்பணிந்த ஒரு உத்தியோகஸ்தரை என்னுடன் துணையாக அனுப்பி வைத்தார். அவர் என்னை ஒரு விசாலமான ஹாலுக்கு அழைத்துச் சென்றார். அந்த ஹாலில் வேறு சில பெரிய அரசாங்க உத்தியோகஸ்தர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அந்த ஹாலில், அதிக உஷ்ணத்தைக் குறைத்துக் குளிர்விக்கும் மின்சார யந்திரம் ஒரு புறம் இருந்தது. நல்ல அழகிய மெத்தைகள் தைத்த ஸோபாக்கள் போடப்பட்டிருந்தன. மகாத்மா காந்தி படம் ஒன்றும் அங்கே மாட்டப்பட்டிருந்தது. கனம் பெருமாள்சாமி செட்டியார் உட்கார்ந்திருந்தார். அவர் கவர்னர் ஜெனரலைப் பத்தரை



மணிக்குப் பேட்டி காண ஏற்பாடாகியிருந்தது. நான் அவர் பக்கத்தில் சென்று உட்கார்ந்து பேசத் தொடங்கினேன். கொஞ்ச நேரத்தில் அவர் அழைக்கப் பட்டார். சரியாக 10-50க்கு அவர் திரும்பி வந்தார். உடனே நான் கவர்னர் ஜெனரலைப் பேட்டி காண அழைக்கப் பட்டேன்.

வெண்ணிற உடுப்பு அணிந்திருந்த ஒரு ராணுவ அதிகாரி அந்த அறையிலிருந்து குறுகிய நீண்ட தாழ்வாரங்கள் வழியே வேறொரு அறைக்கு அழைத்துச் சென்றார். அந்த ஹாலின் கதவுக்கு ஒரு பிடியிருந்தது. அந்தப் பிடியைத் திருகித் திறந்தார் அந்த ராணுவ அதிகாரி. திறந்தவுடன் இன்னொரு கதவு காணப்பட்டது. அதையும் அந்த உத்தியோகஸ்தர் திறந்துவிட்டுப் பின்வாங்கிச் சென்றார்.

கதவு திறந்து உள்ளே நுழைந்ததும் என் பார்வை அங்கே உட்கார்ந்திருந்த பெரியார்மீது விழுந்தது. அவர் மாசு மறுவற்ற தூய கதராடை அணிந்திருந்தார். அதைவிட மாசு மறுவற்ற தூய உள்ளத்தின் பிரதிபலிப்பை அவருடைய இனிய சிரிப்புத் தவழ்ந்த முகத்தில் கண்டேன். அவர் வேறு யாருமில்லை; நம் ராஜாஜிதான்.

என்னைப் பார்த்தவுடன் தமது ஆசனத்தை விட்டு எழுந்து என்னை நோக்கி வந்தார். நான் நமஸ்கரித்தேன். பதிலுக்கு அவரும் கைகூப்பி நமஸ்கரித்தார். பிறகு என்னை ஒரு சோபாவுக்கு அழைத்துச் சென்று உட்காரச் சொன்னார். நான் உட்கார்ந்த பிறகுதான் அவர் உட்கார்ந்தார்! எங்கள் பேச்சு ஆரம்பிக்குமுன் அங்கு அனுசரிக்கப்பட வேண்டிய சடங்கு முறைகளில் நான் ஏதாகிலும் தவறு செய்திருந்தால் மன்னிக்கும்படி கோரினேன். "அதெல்லாம் ஒன்றுமில்லை!" என்று சொல்லிவிட்டார் ராஜாஜி.

அவருடைய அன்பு நிறைந்த வரவேற்பு, சம்பிரதாயமாகப் பேசாமல் மனம் விட்டுப் பேசிய தன்மை, மகிழ்ச்சி ததும்பிய முகம் இவற்றின் முன்னர் ஆரம்பத்தில் நான் கொண்ட அச்சம், கூச்சம், பயம் எல்லாம் சூரியனைக் கண்ட பனி போல் மறைந்தன.

சுமார் அரை மணி நேரம் மனம் விட்டு அளவளாவிப் பேசிக் கொண்டிருந்தோம். அவர் எதையும் ஒளித்துப் பேசவில்லை; மறைத்துப் பேசவில்லை. தாமும் மனதில் தோன்றியது எதையும் சொல்லாமல் அடக்கிக் கொள்ளவில்லை. அவருடைய உயர் பதவி எங்கள் அன்யோன்ய அன்புப் பேச்சுக்கு இடையூறாக இருக்கவில்லை! அவர் கூறிய ஒவ்வொரு மொழியிலும் உண்மையும் உணர்ச்சியும் இருந்தன. அவர் மொழிகளில் அரவணைப்பு இருந்தது. எல்லையற்ற அன்பு தொனித்தது. அப்பொழுது, திருச்சிராப்பள்ளிச் சிறையில் அதிர்ஷ்டவசமாக ராஜாஜியுடன் கழித்த இன்ப நாட்கள் மறுபடியும் என்னுடைய மனத்திரையில் ஓடலாயின.

எனக்கு அளிக்கப்பட்டிருந்த அரை மணி நேரம் வெகு சீக்கிரம் தீர்ந்துவிட்டது. ஆனால் எங்கள் இருவருக்குமே 'எங்கள் பேச்சு இன்னும் சற்று நேரம் நீடிக்கக்கூடாதா?' என்று தோன்றியது. எனினும் எனக்குக் கொடுக்கப்பட்டிருந்த காலத்துக்கு மேல் அவரிடம் பேசிக் கொண்டிருக்க நான் விரும்பவில்லை. அப்படிச் செய்வேனாயின் அவருடைய அன்பின் வரம்பைக் கடப்பவனாவேன் என்று ஏதோ ஒன்று உணர்த்திற்று. ஆகவே, நான் எழுந்து அவரிடம் விடைபெற்றுக் கொண்டேன்.

அன்று அவருடன் சம்பாஷித்ததானது எல்லையற்ற ஆனந்தத்தை எனக்குக் கொடுத்தது. ஆனால் அவரை விட்டுப் பிரியும்போது மனசுக்கு வருத்தமாகத்தான் இருந்தது.

* * *

சான்றாண்மை என்பதன் பொருள் அன்று ராஜாஜியைச் சந்தித்த பிறகு தான் எனக்குத் தெரிய வந்தது. உண்மையான அறிவாளிகள் உயர்ந்தோர்க்கும் தாழ்ந்தோர்க்கும், பெரியவர்களுக்கும் சிறியவர்களுக்கும், பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்கும் வித்தியாசமின்றி எப்படி நடந்து கொள்வார்கள் என்பது தெரிய வந்தது. இவ்வியல்பு ராஜாஜியிடம் பரிபூரணமாக இருப்பதைத் திருச்சி சிறையில் அவரைச் சந்தித்தபோதே கண்டிருக்கிறேன். ஆனால் எந்த இந்தியனும் இதுவரையில் பெறாத அந்த உயர்ந்த ஸ்தானத்தை யடைந்தும் ராஜாஜி பழைய ராஜாஜியாகவே இருக்கிறார் என்பதைக் கண்டு என் மனம் சொல்லத் தெரியாத ஆனந்தத்தில் மூழ்கியது. என் மனம் இத்தனை நாளும் ராஜாஜியிடம் கண்டு வந்த இவ்வியல்புக்கு ஒரு ஸ்தூல அத்தாட்சியை எதிர்பார்த்து ஏங்கிக் கொண்டிருந்ததோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

சிலர் துன்பம் நேர்ந்த காலத்தில் பெருந்தன்மையுடன் நடந்துகொள்வார்கள்; செல்வம் கொழிக்கும் காலத்தில் அற்பத்தனமாக நடந்து கொள்வார்கள். வேறு சிலர் செல்வம் பொங்கும்போது பெருந்தன்மையோடும், துன்பம் வந்தால் கேவலமாகவும் நடந்து கொள்வார்கள். ஆனால், உண்மையான சால்பு, இன்பத்திலும் துன்பத்திலும் ஒரேமாதிரி நடந்துகொள்வதுதான். இக் குணம் ராஜாஜியிடம் பரிபூரணமாக விளங்குவதைப் பார்த்து அளவு கடந்த ஆனந்த மடைந்தேன்.

பகவத் கீதையில், "இன்பத்தையும் துன்பத்தையும், லாபத்தையும் நஷ்டத்தையும் ஒன்றாகக் கருதவேண்டும்" என்ற பொருள் உள்ள சுலோகம் ஒன்றிருக்கிறது. இந்தச் சுலோகம் தான் பகவத் கீதையில் மிக முக்கியமான சுலோகம் என்று கூறி ராஜாஜி விளக்குவார். இதே கருத்தை, நமது மாபெரும் இதிகாசமாகிய மகாபாரதம், சூரியனுடன் ஒப்பிட்டு வெகு நன்றாக விளக்குகிறது. ஆம், சூரியன் உதிக்கும் போதும் சிவந்து தோன்றுகிறான்; அஸ்தமிக்கும்போதும் சிவந்தே காட்சியளிக்கிறான் அன்றோ?


ஸ்ரீ மகாலக்ஷ்மி உங்கள் வீட்டில் தாண்டவ
மாடட்டும். செல்வம் செழித்து, ஆரோக்
கியமும் அழகும் பெருகி, உங்கள் இல்லம்
க்ஷேமத்துடனும், பாதுகாப்புடனும் இருக்
கட்டும். உயர்தரமான சுதேசிப் பொருள்
களைப் பெருவாரியாக நம் வீடுகளிலும்
காரியாலயங்களிலும் பொது ஸ்தாபனங்
களிலும் உபயோகப்படுத்துவது மகா
லக்ஷ்மியின் அருளால்தானே. இந்த ஒரே
நோக்கத்துடன் கோத்ரேஜ் ஐம்பது
வருஷங்களுக்கு மேலாகப் பாடுபடுகிறது.
Godrej கோத்ரேஜ்
கோத்ரேஜ் அண்டு பாய்ஸ் மானுபாக்சரிங் கம்பெனி, லிமிட்.
கோத்ரேஜ் சோப்ஸ், லிமிட்.

# வைர மாங்கல்யம்

ஜெயமணி




தேகிக்குத் தலை சுற்றியது. உலகமும் சுழல்வது போல் இருந்தது. அரை மணிக்கு முன் வரையில் இன்பக் கடலில் ஆனந்தமாக மிதந்து சென்று கொண்டிருந்த அவளுடைய வாழ்க்கைப் படகு திடீரென்று ஒரு பாறைமீது மோதிச் சுக்கல் சுக்கலாக நொறுங்கி விட்டது!

அந்த எண்ணத்தை அவளால் சகிக்க முடியவில்லை. தன் கணவன் மீது அவள் தன் உயிரைக் காட்டிலும் அதிகமாகப் பாசம் வைத்திருந்தாள். பல நல்ல குணங்களும் வாய்க்கப் பெற்ற ஆதர்ச புருஷன் என்று பெருமிதம் கொண்டிருந்தாள். ஆனால் அவள் கனவெல்லாம் கனவாகிவிட்டது! அவள் எண்ணமெல்லாம் மண்ணோடு மண்ணாகிவிட்டது.

உத்தமன் என்று தான் எண்ணி வந்த அவன் ஒரு கொடிய கொலைகாரன் என்ற உண்மையை அறிந்ததும், வைதேகி துடி துடித்துப் பதை பதைத்துப் பிரமித்துச் சிலை போல் சமைந்து விட்டாள்.

"ஐயோ! கொலைகாரனா!" என்று அவளுடைய வாய் முணுமுணுத்தது.

அதுவும் தனக்கோ, பிறருக்கோ, தேசத்துக்கோ யாதொரு தீங்கும் செய்யாத நிரபராதியான தேசபக்தர் ஒருவரைக் கொலை செய்தவன்! என்ன அக்கிரமம்! அவளை அறியாமல் அவளுடைய வாய் என்னவெல்லாமோ சொல்லி அரற்றியது.

"ஓ! கொடிய கொலைகாரனின் மனைவியா நான்!... இன்பமயமாக இருந்த என் வாழ்க்கை நொடிப் பொழுதில் முடிவற்ற துன்ப வாழ்க்கையாக மாறி விட்டதே!....

"இந்தத் துன்ப வாழ்க்கை என் முடிவு அற்றதாக இருக்க வேண்டும்! இதற்கு ஒரு முடிவை நிர்ணயிக்கும் சக்தி என்னிடம் இருக்கிறது.... அத்தகைய கொலைகாரன் இந்த உலகில் இருக்கலாமா!... ஐயோ! என்ன பயங்கரமான எண்ணம்! அதனால் என் வாழ்க்கைக்கு இந்த நரக வேதனையிலிருந்து எவ்விதம் விடுதலை கிடைக்கும்! அதற்கு மாறாக, என் மீது வேதனை இன்னும் பன்மடங்கு அல்லவா அதிகமாகிவிடும்!...சீ, எனக்கு ஒரு முடிவு ஏற்பட்டு விட்டால்...நரக வேதனையிலிருந்தும், கொலைகாரனிடமிருந்தும் ஏக காலத்தில் விடுதலை கிடைத்து விடாதா!"

அங்கிருந்து வீட்டுக்கு நடக்கலானாள். அஸ்தமித்து விட்டதால் தெருக்கள் எங்கும் மின்சார விளக்குகள் ஜொலித்துக் கொண்டிருந்தன. எனினும் வைதேகிக்கு எல்லாப்புறத்திலும் ஆழ்ந்த அந்தகாரம் சூழ்ந்திருப்பதாகவே தோன்றியது. அவளது பரிதாப நிலையை அவளுடைய மனமே வர்ணிக்கத் தொடங்கியது!

"அதோ பார்! இருவர் உல்லாசமாகச் சிரித்துக் கொண்டே போகிறார்கள் அல்லவா! அவர்கள் உன்னைத்தான் ஏளனம் செய்கிறார்கள்...இதோ உனக்கு எதிரில் வருபவரின் முகம் வாடியிருப்பதற்குக் காரணம் என்ன தெரியுமா! உன் துர்ப்பாக்கிய நிலை அவருக்கு எப்படியோ தெரிந்திருக்கிறது!...அடாடா! அந்தப் பெண் உன்னைக் கண்டு ஏன் அப்படி ஒதுங்கிச் செல்லவேண்டும்! ஒருவேளை நீ கொலைகாரனின் மனைவி என்பது அவளுக்குத் தெரிந்து விட்டதோ, என்னவோ!... தூரத்தில் செல்லும் அந்த டிராமும் பஸ்ஸும், 'பாவியின் மனைவி' 'பாவியின் மனைவி' என்று இடைவிடாது கூக்குரலிடுவது காதில் விழவில்லையா!"

கர்ணகடூரமான அந்தக் கூக்குரலைக் கேட்டதும் வைதேகி காதைப் பொத்திக் கொண்டாள். தெருவில் செல்லும் ஒவ்வொருவரும், 'கொலைகாரனின் மனைவி' 'கொலைகாரனின் மனைவி' என்று சுட்டிக் காட்டுவது போன்ற பயங்கரமான பிரமை அவளுக்கு ஏற்பட்டது. வேகமாகச் சென்று வீட்டுக்குள் நுழைந்தாள். அவளிடம் ஏதோ சொல்வதற்கு வந்த சமையற்காரியை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. உள்ளே சென்று குப்புறப் படுத்துக் கொண்டு இருதயமே வெடித்து விடும் போல் விம்மி விம்மிக் கதறினாள்.

## 2

வைதேகியின் கணவன் கேதார்நாத் பம்பாயில் இரகசிய போலீஸ் இலாகா (சி. ஐ. டி.) தலைவர் சர்தார் ஜெங்கின்ஸின் அந்தரங்க குமாஸ்தாவாக வேலை பார்த்து வந்தான். கேதார்நாத்துக்கு அந்த வேலை கிடைத்தது ஆச்சரியமான விஷயமாகும். கேதார்நாத்தின் தந்தை

''...... நீ கேடிகாரனின் மனைவி''

வந்த பெரிய ஆபத்து அவனுக்கு மகத்தான அதிர்ஷ்டமாக முடிந்தது!

வங்காளத்தில் தேசபக்தர்களான இளைஞர்கள் பயங்கர இயக்கத்தில் தீவிரமாக ஈடுபட்டிருந்தபோது ஒரு விசித்திரமான சக்கரம் சுழன்று கொண்டிருந்தது. பயங்கரவாதிகளின் சார்பில் போலீஸ் இலாகாவிலே சில இளைஞர்கள் உளவாளிகளாக இருந்து வந்தார்கள். அதைப் போலவே பயங்கரவாதிகளிடமும் சிலர் போலீஸ் சார்பில் உளவாளிகளாக இருந்து வேலை செய்து வந்தார்கள்.

அதன் காரணமாக இரு சாராரும் ஒருவரையொருவர் ஏமாற்ற முடியவில்லை. இளைஞர்களின் சதித்திட்டம் சம்பந்தமான விவரங்களை அப்போதைக்கப்போது போலீஸார் அறிந்து வந்தனர். போலீஸாரின் வலை எந்த இடத்தில் விழப் போகிறது என்பதைப் பயங்கரவாதிகள் முன்னதாகவே அறிந்து அதில் அகப்பட்டுக் கொள்ளாமல் தப்பி வந்தார்கள். அதன் விளைவாகச் சில சமயங்களில் நிரபராதிகளான அப்பாவிகள் போலீஸ் வலையில் சிக்கி அவதிப்பட நேர்ந்தது!

போலீஸ் இலாகாவில் இருந்த பயங்கரவாதிகளின் உளவாளிகள், ஒரு சமயம் அவர்கள் செய்த சிறு தவறு காரணமாகக் கண்டு பிடிக்கப்பட்டு விட்டார்கள். பரம சாது என்று எல்லோரும் கருதிய கேதார்நாத் அந்த உளவாளிகளின் தலைவன் என்று தெரிந்தபோது ஜெங்கின்ஸ் பிரமித்துப் போய்விட்டார். மிகவும் நல்ல பிள்ளையாகத் தோன்றிய கேதார்நாத் ஆபத்தான பேர்வழி என்பதை ஜெங்கின்ஸனால் நம்பவே முடியவில்லை.

சட்டம் வெகு துரிதமாக வேலை செய்யத் தொடங்கியது. போலீஸ் இலாகாவிலிருந்த கேதார்நாத்தும் அவனுடைய மூன்று சகாக்களும் உடனே கைது செய்யப் பட்டார்கள்.

அப்போது வைதேகிக்கு விவாகம் நடந்து சில மாதங்களே ஆகியிருந்தன. கேதார்நாத் சிறைப்பட்ட இரண்டு மூன்று நாட்கள் வரையில் அவளுக்கு எல்லாம் கனவுபோல் தோன்றின. ஏதோ சித்தப் பிரமை பிடித்தவள்போல் இருந்தாள். பல் தேய்க்கவில்லை; சாப்பிடவில்லை; தூக்கமும் இல்லை. அழுது அழுது உள்ளமும் உடலும் சோர்ந்துவிட்டன.

மூன்றாவது நாள் மாலை ஆறுமணி இருக்கும். வைதேகி ஏதோ புதிய சக்தி பெற்றவள்போல எழுந்தாள். "பராசக்தி! நீயே கதி! உன்னையே நம்பிச் செல்கிறேன்" என்று பெருமூச்சு விட்டுக் கூறினாள். புடவையைச் சீர்படுத்திக் கொண்டு, முகத்தைச் சுத்தம் செய்து குங்குமம் இட்டுக்கொண்டு, ஒரு 'டாக்ஸி'யில் ஏறி, நேராக ஜெங்கின்ஸனின் பங்களாவை அடைந்தாள்.

அப்போது ஜெங்கின்ஸனும் அவரது மனைவியும் பங்களாவுக்கு வெளியிலே தோட்டத்தில் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் உட்கார்ந்து உல்லாசமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

மோட்டாரிலிருந்து இறங்கிய வைதேகி 'கேதார்நாத்தைக் காப்பாற்றுங்கள், கேதார்நாத்தைக் காப்பாற்றுங்கள்' என்று அலறிக் கொண்டே, கணவனுக்கு உயிர்ப்பிச்சை கேட்டு யமனின் காலில் விழுந்த சாவித்திரியைப் போல ஜெங்கின்ஸனின் காலடியில் போய் விழுந்தாள்.

கேதார்நாத் என்ற பெயரைக் கேட்டதுமே ஜெங்கின்ஸனுக்கு விஷயம் விளங்கி விட்டது. அவள் கேதார்நாத்தின் மனைவி என்பதை உடனே ஊகித்துக் கொண்டார். "அடாடா! இந்த அழகிய பெண்ணை மனைவியாக அடையும் பாக்கியம் பெற்ற கேதார்நாத்தின் புத்தி ஏன் இப்படிப் போகவேண்டும்!" என்று தமக்குள் அங்கலாய்த்துக் கொண்டார்.

அதிகம் வளர்த்துவானேன்! தேவியின் அருளால் வைதேகி கோரிய வரம் கிடைத்தது! கேதார்நாத்தைப் பிடித்த நல்ல காலம் ஜெங்கின்ஸனுக்கு வைதேகியின்மீது இரக்கம் உண்டாயிற்று.

போலீஸார் தொடர்ந்த சதி வழக்கின் முதல் விசாரணையிலேயே கேதார்நாத் விடுதலையானான். "போதிய ஆதாரமில்லாததால் கேதார்நாத் விடுதலை செய்யப்பட்டிருக்கிறார்" என்று மாஜிஸ்திரேட் கூறிய தீர்ப்பைக் கேட்டு, கேதார்நாத்தின் மூன்று சகாக்களும் ஒருங்கே திகைப்பும் ஆச்சரியமும் அடைந்து ஒருவரை ஒருவர் பார்த்து விழித்தனர்.

கேதார்நாத்தின் விடுதலைக்காக ஜெங்கின்ஸன் திரைமறைவில் வேலை செய்தது போலீஸ் இலாகாவிலேயே இரண்டொரு முக்கியஸ்தர்களுக்குத் தான் தெரியும். அப்படியிருக்க, அவன் விடுதலையடைந்த மர்மம், பாவம்! அவனுடைய சகாக்களுக்கு எப்படித் தெரிய முடியும்!

கேதார்நாத் விடுதலை யடையும்படி செய்ததுடன் ஜெங்கின்ஸன் திருப்தி அடைந்து விடவில்லை. சாதாரணக் குமாஸ்தாவாக இருந்த கேதார்நாத்துக்குப் புத்திமதி கூறி அவனைத் தன்னுடைய அந்தரங்க குமாஸ்தாவாக நியமித்தார்!

போலீஸ் இலாகாவில் உளவாளிகளாக இருந்த கேதார்நாத்தின் சகாக்களான மூவரில் ஒருவன் சிறையில் விஷத்தைத் தின்று இறந்தான். மற்ற இருவருக்கும் விசாரணை முடிவில் கோர்ட்டார் முறையே ஜன்ம தண்டனையும் ஏழு வருஷம் கடுங்காவல் தண்டனையும் விதித்தனர். அப்போதுதான் கேதார்நாத்துக்குத் தான் எத்தனை பெரிய ஆபத்திலிருந்து தப்பினோம் என்பது தெரிந்தது.

ஜெங்கின்ஸன் ஒரு தடவை ரஜாவில் இங்கிலாந்துக்குச் சென்றபோது கேதார்நாத்தையும் தம்முடன் அழைத்துச் சென்றிருந்தார். 'ஸ்காட்லாந்து யார்ட்' என்ற பிரிட்டிஷ் இரகசிய போலீஸ் இலாகாவில் கேதார்நாத் ஆறு மாதம் பயிற்சி பெறுவதற்கு ஏற்பாடு செய்தார்.

பிரிட்டிஷ் இரகசியப் போலீஸில் பயிற்சி பெற்று வந்த பிறகு கேதார்நாத் ஜெங்கின்ஸனின் குமாஸ்தாவாக இருந்தான் என்பதைக் காட்டிலும் அவருக்கு வலது கையாக விளங்கினான் என்பதே பொருத்தமாக இருக்கும். ஜெங்கின்ஸனுடைய விசேஷ சிபார்சு காரணமாகக் கேதார்நாத்தின் சம்பளம் ஓர் அதிகாரியின் சம்பளத்துக்குச் சமமாக உயர்ந்தது.

3

வைதேகி-கேதார்நாத்தின் வாழ்க்கை இன்ப மயமாக நடந்து வந்தது. பின்னர் ஜெங்கின்ஸன் பம்பாய்க்கு மாற்றப்பட்டு வந்தபோது கேதார்நாத்தும் வைதேகியுடன் பம்பாய்க்கு வந்து சேர்ந்தான்.

கேதார்நாத்தும் வைதேகியும் மாலை வேளையில் அடிக்கடி கடற்கரைக்கு உலாவச் சென்றபோது வைதேகி எத்தனையோ பேர்களையும் காட்சிகளையும் காண நேர்ந்தது. என்றாலும் ஒரே ஒரு சோகக் காட்சி மாத்திரம் அவளுடைய மனத்தில் ஊடுருவிப் பாய்ந்தது.

சிற்சில சமயங்களில் இராப் பகலாக அந்த முகம் அவளுக்கு எதிரில் வந்து நின்றது. எவ்வளவோ முயற்சி செய்தும் அதை அவளால் மறக்க முடியவில்லை.

கொண்டு மிருந்த சோகத்துடன் இருப் பாய். இன்று என்ன பிரமாத குதூகலத் துடன் இருக்கிறாயே!" என்று ஆச்சரியத் துடன் கேட்டான் கேதார்நாத்.

"அதை ஏன் கேட்கிறீர்கள்! இன்று கனியின் வீட்டில் ஒரே அமர்க்களமும் ஆனந்தமுமாக இருக்கிறது. கனி தலையை வாரிப் பின்னிப் புஷ்பம் வைத்துக்கொண்டு புதிய மணப் பெண்ணைப் போல் குதூகலமாக இருக்கிறாள். என்னைக் கண்டதும் ஏதோ மென்று விழுங்கினாள். அதற்குள் கனியின் அப்பா, பசுபதியிடமிருந்து ரேடியோ மூலம் செய்தி வந்திருப்பதாகச் சொன்னார். வெட்கத்திலும் சந்தோஷத்திலும் கனியால் பேசக்கூட முடியவில்லை."

இவ்வாறு வைதேகி சொன்னதைக் கேட்டதும், "போகிறது! பசுபதி உயிருடன் இருக்கிறான் என்பது இப்போது தெரிந்து விட்டது" என்று சந்தோஷம் அடைந்தான் கேதார்நாத்.

## 6

கேதார்நாத் அன்று ஆபீஸில் படி ஏறியதும் ஏறாததுமாக ஜெங்கின்சன் ஓடி வந்து அவனுடைய கையைக் குலுக்கினார். "கேதார்நாத்! நீங்கள் 'ஸ்காட்லண்டு யார்டு'ல் பயிற்சி பெற்றது வீண்போகவில்லை. அலட்சியமாக நீங்கள் கூறிய யோசனை மகத்தான பலனைக் கொடுத்து விட்டது" என்று அவனுடைய முதுகில் அன்புடன் ஒரு தட்டுத் தட்டினார்.

கேதார்நாத் ஒன்றும் தெரியாமல் விழித்தான். ஜெங்கின்சன் அவனுடைய கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய்த் தம் மேஜைமீது வைக்கப்பட்டிருந்த ஒரு சிறிய ரப்பர்ப் படகைக் காட்டினார். அதைக் கண்டதும் கேதார்நாத் ஏனோ திடுக்கிட்டான்.

செம்படவர்கள் அந்தப் படகைக் கொண்டுவந்து கொடுத்ததை ஜெங்கின்சன் விவரித்துக் கூறிவிட்டு, "உன்னால் அந்த இரண்டு ஏழைச் செம்படவர்களும் ஐந்நூறு ரூபாய் அதிர்ஷ்டப் பிரைஸ் அடிக்கப் போகிறார்கள்" என்று மகிழ்ச்சியுடன் சொன்னார்.

கேதார்நாத் தன் கலக்கத்தை வெளியே காட்டிக் கொள்ளவில்லை. தன்னுடைய இடத்தில் போய் அமர்ந்தான்.

திடீரென்று அவனுடைய மூளை அதி தீவிரமாக வேலைசெய்ய ஆரம்பித்தது. சென்ற ஒரு வாரத்திய தினசரிப் பத்திரிகைகளில் வெளியாகியிருந்த ரேடியோச் செய்திகளை — புத்தகாலயத்தில் மலேயா முதலிய இடங்களில் சிக்கிக் கொண்டவர்கள் இந்தியாவில் உள்ள தங்களுடைய உறவினர்களுக்கு அனுப்பியிருந்த ரேடியோச் செய்திகளைத் துருவித் துருவிப் படித்தான். ஆனால், அவற்றில் பசுபதி என்ற பெயரையோ, கனி என்ற பெயரையோ காணவில்லை!

அப்படியானால் வைதேகி குறிப்பிட்ட நாடகத்தின் மர்மம் என்ன? பசுபதி ரேடியோச்செய்தி அனுப்பியிருந்தால் அவனது பெயர் எங்கே! கனியின் க்ஷேமத்தைப் பற்றி அவன் கேட்டிருந்தால் அவனுடைய பெயர், விலாசம் முதலியன எங்கே!

இந்தக் கேள்விகளைக் கேதார்நாத் தனக் குத்தானே கேட்டுக் கொண்டபோது, அவனது மனக்கண் முன்னே ஒரு சிறிய ரப்பர்ப் படகு திரை கடலில் ஆடி அசைந்து கொண்டிருந்தது!

அவன் சட்டென்று எழுந்திருந்தான். தன் வீட்டுக்குப் போவதாகச் சொல்லி விட்டுச் சிற்சில இடங்களுக்குச் சென்றான். பிறகு நேராக கனியின் வீட்டுக்குப் போனான். தன்னுடைய 'ஸ்காட்லண்டு யார்ட்'வேலையை ஆரம்பித்தான்!

கனியும் அவளுடைய தந்தையும் கேதார் நாத்தை அறிவார்கள். எனினும் அவன் இதுவரை ஒரு நாளும் அவர்களுடைய வீட்டுக்கு வந்ததில்லை. இன்று கேதார் நாத் அபூர்வமாக வந்ததைக் கண்டு அவர்கள் மகிழ்ச்சியடைந்திருக்க வேண்டும். ஆனால் அதற்கு மாறாக அவர்கள் ஏன் இப்படி திடுக்கிடுகிறார்கள்! பூனையைக்கண்ட எலியைப் போல் கனி ஏன் இப்படி பீதியடைந்து உள்ளே சென்று பதுங்கவேண்டும்!

"கேதார்நாத்! வாருங்கள்" என்று வேண்டா வெறுப்பாக கனியின் தந்தை அவனை வரவேற்றார். பீதியால் அவர்



உடல் முழுதும் நடுங்கிற்று. அவரால் பேசுவதற்குக்கூட முடியவில்லை.

கேதார்நாத்தும் அவருக்கு அதிகக் கஷ்டத்தைக் கொடுக்கவில்லை. தான் வந்த காரியத்தைச் சுருக்கமாக 'வெட்டு ஒன்று துண்டு இரண்டு' என்ற ரீதியில் கனியின் தந்தைக்கு விளங்க வைத்தான்.

"உங்கள் மாப்பிள்ளை பசுபதி பம்பாய்க்கு வந்திருப்பது போலீசாருக்குத் தெரிந்துவிட்டது. அவன் இப்போது எங்கே பதுங்கிக்கொண்டிருக்கிறான் என்பது உங்களுக்குத்தெரியும்! எனக்கும் தெரியும்! இதற்கு முன் மலேயாவிலிருந்து நீர்மூழ்கியில் வந்த ஐவர் தூக்கிலிடப்பட்டதை நீங்கள் அறிந்திருக்கலாம். அவர்களைக் கண்டுபிடித்த எங்களுக்குப் பசுபதியைக் கண்டு பிடிப்பது பிரமாதமான காரியம் என்று நினைக்கிறீர்களா! இனி அவன் தப்ப முடியாது. பொறியில் அகப்பட்ட எலியைப் போலத்தான்!" என்று கேதார் நாத் ஒரு போடு போட்டான்.

ஒன்றிரண்டு நிமிஷங்கள் அந்த வீட்டில் நிசப்தமும் மௌனமும் நிலவின. திடீரென்று உள்ளே யிருந்து விம்மல் சப்தம் கேட்டது. கனி தன் தாயாரைக் கட்டிக் கொண்டு 'ஓ'வென்று கதற ஆரம்பித்து விட்டாள். கனியின் தந்தையினுடைய கண்களிலும் நீர் ததும்பியது. அவர் சிலையைப் போல் வாயடைத்துப் போய் உட்கார்ந்திருந்தார்.

கேதார்நாத் அதற்கு மேல் அங்கே தங்கவில்லை. தான் வந்த காரியம் முடிந்து விட்டதால், அங்கிருந்து புறப்பட்டான்.

அன்று அவனுக்கு ஏனோ தலைக்கு மேல் வேலை யிருந்தது. இரவு ஒன்பது மணிக்கு மேல் வீடு வந்து சேர்ந்தான்.

வீட்டுக்குள் நுழைந்ததும் வைதேகி தலைவிரி கோலமாகத் தரையில் படுத்து விம்மிக் கொண்டிருப்பதைக் கண்டு பதை பதைத்துப் போனான். பாவம்! அன்று மாலை வைதேகி கனி வீட்டுக்குச் சென்றிருந்தது அவனுக்குத் தெரியுமா!

பசுபதி தங்கள் வீட்டில் இருப்பது எப்படியோ வைதேகிக்கு தெரிந்து விட்டது என்றும், அவள்தான் கேதார் நாத்துக்கு உளவு சொல்லிக் கொடுத்திருக்கவேண்டும் என்றும் கனியும் அவளது பெற்றோர்களும் உறுதி செய்து விட்டனர்.

அன்று வைதேகி தன் வீட்டுக்கு வந்ததும், சோகத்திலும் துக்கத்திலும் ஆழ்ந்து கிடந்த கனி தன்னுடைய ஆத்திரம் முழுவதையும் வைதேகி மீது கொட்டி விட்டாள். வைதேகி தன்னை அண்டிக் கெடுத்த ராக்ஷஸி என்றாள். நிரபராதிகளான ஐந்து தேச பக்தர்களைக் கொலை செய்த பாவியின் பெண்டாட்டியும் கொலைக்கு உடந்தையாகத்தானே இருந்திருக்கவேண்டும் என்று சீறினாள்.

வைதேகி ஒன்றும் தோன்றாமல் திகைத்துப் போனாள். ஏதோ சொல்ல வாயெடுத்தாள். அதற்கு கனி இடம் கொடுக்கவில்லை. தலைக்கு மேல் வெள்ளம் வந்து விட்டது. இனி சாண் ஏறினால்தான் என்ன! முழம் ஏறினால்தான் என்ன!

"சீ! வெளியே போ! உனக்கு ஒரு வெள்ளைக்காரன் மாங்கல்யப் பிச்சை கொடுத்தான். அந்த இரக்கம்கூட உனக்கும் உன் கணவனுக்கும் இல்லையே! ஆனால் அதற்கு மாறாக என்னுடைய மாங்கல்யத்துக்கு உலை வைக்கும் பாவிகளாக வந்தீர்களே" என்று கனி கண்ணீரும் கம்பலையுமாக ஆவேசம் வந்தவள்போல் எழுந்தாள். அதைக் கண்டு வைதேகி நடு நடுங்கிப் போனாள்; வைத்த காலும் ஒடுங்க அங்கிருந்து வெளியேறினாள்.

அவளுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. என்ன நடந்தது என்றும் தெரியவில்லை. எனினும் விஷயத்தை ஒருவாறு ஊகித்துக்கொண்டாள். சில தேச பக்தர்கள் தூக்கிலிடப்பட்டதற்குக் கேதார் நாத் பொறுப்பாளியாக இருந்திருக்க வேண்டும். கனியின் கணவன் பசுபதிக்கு ஆபத்தாகக் கேதார்நாத் ஏதோ சூழ்ச்சி செய்திருக்கவேண்டும்.

## 7

'வைதேகி, வைதேகி' என்று பரிவுடன் கூப்பிட்டான் கேதார்நாத். வைதேகியிடமிருந்து பதிலே இல்லை. உடனே அவன் முதுகைத்தட்டி, 'வைதேகி' என்றான். அவள் அவனுடைய கையை அப்பால் தள்ளினாள். 'பாவி' என்று

அவள் வாய் முணு முணுத்தது கேதார் நாத்தின் காதிலும் விழுந்தது! உயிரைக் காட்டிலும் தன் மீது அதிக அன்பும் பக்தியும் பாசமும் கொண்டிருந்த வைதேஹி 'பாவி' என்று முணு முணுத்தது கேதார் நாத்தின் உடலையும் உள்ளத்தையும் உலுக்கி விட்டது.

எனினும் கஷ்டப்பட்டுத் தன்னைச் சமாளித்துக்கொண்டு "என்ன நடந்தது?" என்று கேட்டான்.

"இந்த வேஷம் எதற்கு! எல்லாம் உங்கள் மனச் சாட்சிக்குத் தெரியும்" என்று வெறுப்புடன் கூறினாள் வைதேஹி.

அதற்குமேல் வைதேஹி ஒன்றும் பேசவில்லை. தன் சுயரூபம் வெளியாகிவிட்டது என்று கேதார்நாத்தும் அவளை அதற்கு மேல் ஒன்றும் கேட்கவில்லை.

அவனது மனத்தில் பெரும் போராட்டம் ஆரம்பமாயிற்று. நாற்காலியில் போய் உட்கார்ந்து யோசனையில் ஆழ்ந்தான்.

மணி பத்து, பதினொன்று, பன்னிரண்டு அடித்தது. திடீரென்று கேதார் நாத்தின் சிந்தனையும் கலைந்தது. வெகு நேரம் யோசித்து யோசித்து என்னவோ எழுதிக்கொண் டிருந்தான்.

## 8

வைதேஹி காலையில் எழுந்தாள். தலைவலி பிரமாதமாக இருந்தது. பல நாள் ஜுரம் அடித்தது போல் அங்கங்கள் எல்லாம் சோர்ந்து கிடந்தன.

முதல் நாள் நடந்த சம்பவங்கள் ஒன்றன் பின் ஒன்றாக ஞாபகத்துக்கு வந்தன. கேதார் நாத்தையும் தன்னையும் இணைத்திருந்த அன்புச் சங்கிலி தவிடுபொடியாகத் தகர்ந்து விட்டது என்று எண்ணினாள்.

ஒரு நாள் ஆயிற்று. இரண்டு நாட்கள் சென்றன. மூன்றாவது நாள் கேதார் நாத்துக்கு அவனது ஆபீஸிலிருந்து ஒரு கடிதம் வந்தது. வேறு எங்கிருந்தோ ஒரு கடிதமும் வந்தது. அவ்விரண்டையும் வாங்கி வைதேஹி கேதார்நாத் மேஜையின் மீது வெறுப்புடன் எறிந்தாள்.

திடீரென்று 'வைதேஹி, வைதேஹி' என்ற குரல் எழுந்தது.

"அது யார்! கமலிபோல் அல்லவா இருக்கிறது!"

ஆமாம்! கமலிதான்! கமலி ஓடோடியும் வந்தாள். வைதேஹியை இறுகத் தழுவிக்கொண்டாள். இருவரும் உணர்ச்சி வசப்பட்டுத் தங்களையே மறந்தனர்.

இருவருடைய மனத்திலும் அடித்துக் கொண்டிருந்த அலைகள் சிறிது ஓய்ந்ததும், "வைதேஹி! இந்தக் கடிதத்தைப் பார்!" என்றாள் கமலி அன்புடன்.

என்ன ஆச்சரியம்! கேதார் நாத்தின் கையெழுத்தாக அல்லவா இருக்கிறது!

வைதேஹி வாசித்தாள்.

"அன்பார்ந்த சகோதரி கமலிக்கு, பசுபதி இருக்கும் இடத்தை இனி மும்மூர்த்திகளாலும் கண்டு பிடிக்கமுடியாது. கவலைப்படவேண்டாம். சந்தோஷமாக இருக்கவும்" என்று அந்தக் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தது.

"வைதேஹி, உன்னை அன்று மிகவும் கொடுமைப் படுத்தி விட்டேன். எங்கள் குடும்பத்தை ரக்ஷிக்க வந்த கேதார் நாத்தைத் தவறாக எண்ணி உன் மனம் அடிக்கும்படி என்ன வெல்லாமோ சொல்லி விட்டேன். என்னை மன்னித்து விடு. மன்னிப்பாயா!" என்று விம்மினாள் கமலி உணர்ச்சி ததும்ப.

அப்போதும் வைதேஹிக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் ஒரு எண்ணம் தோன்றியது. சட்டென்று எழுந்து சென்று கேதார் நாத்துக்கு வந்த கடிதத்தின் உறையைப் பிரித்தாள். உள்ளே இரண்டு கடிதங்கள் இருந்தன.

ஒரு கடிதம், "அன்பார்ந்த கேதார் நாத்துக்கு" என்று எழுதப்பட்டிருந்தது. அதைப் பரபரப்புடன் வாசித்தாள்.

"அன்பார்ந்த கேதார்நாத்துக்கு,

தங்கள் கடிதம் கிடைத்தது. ஒரு வேளை அந்தக் கடிதத்தை எழுதாமல் தாங்கள் மறைத்திருந்தால் நான் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருப்பேனோ, சொல்ல முடியாது. ஆனால் உண்மையை ஒளிக்காமல் எல்லா விஷயங்களையும் தாங்கள் ஒப்புக் கொண்டது எனக்கு உங்கள் மீதுள்ள இனம் தெரியாத பாசத்தைப் பன் மடங்கு அதிகப்படுத்தி யிருக்கிறது.



நீங்கள் எழுதிய கடிதத்தை, உங்களைக் கையும் களவுமாகக் காட்டிக் கொடுக்கும் கடிதத்தை நான் உங்களுக்குத் திருப்பி அனுப்பியதே அதற்கு அத்தாட்சி. பரஸ்பரம் அன்பு வைத்துள்ள நாம் இனி சந்திக்க முடியும் போலயில்லை. ஏனென்றால், 'என்னுடைய அந்தரங்கக் காரியதரிசி பயங்கர வாதிகளின் கூட்டத்தைச் சேர்ந்தவனுதலால் மறைந்து விட்டான்' என்பதை என்னால் சகிக்க முடியவில்லை. எனவே, அடுத்த வாரம் நான் லீவு எடுத்துக் கொண்டு இங்கிலாந்துக்குச் செல்லுகிறேன். அப்படியே ரிடையராகிவிடப் போகிறேன். உங்களுடைய ஆபத்தான வாழ்க்கையை விட்டு விட்டு, உயர்ந்த குணம் வாய்ந்த உங்கள் மனைவியுடன் அமைதியாக இல்லற வாழ்க்கையை நடத்துங்கள். இதுதான் நான் உங்களுக்குச் சொல்லும் புத்திமதி. போய் வருகிறேன்! ஜெங்கின்ஸன்"

மற்றொரு கடிதம், "அன்பார்ந்த ஜெங்கின்ஸனுக்கு" என்று ஆரம்பிக்கப் பட்டிருந்ததைக் கண்டு வைதேஹியின் கண்கள் ஆச்சரியத்தால் அகல விரிந்தன. மனம் படபடக்க அதை வாசித்தாள்.

"அன்பார்ந்த மிஸ்டர் ஜெங்கின்ஸனுக்கு,

இந்தக் கடிதம் உங்கள் கைக்கு வரும் போது நான் 'பாதாள உலகத்தில்' என்னுடைய சகாக்களுடன் இருப்பேன். தாங்கள் என்னிடம் காட்டிய அன்பு ஈடு இணையற்றது. அதற்கு நான் சரியான பாத்திரமா என்று சில சமயங்களில் சந்தேகப்பட்டது உண்டு. நான் உங்களுக்கும் போலீஸ் இலாகாவுக்கும் துரோகம் செய்ததாக நீங்கள் நினைக்கலாம். ஆனால் உங்களுக்குத் துரோகம் செய்வது தேசத்துக்கு நன்மையாகிறது; உங்களுக்கு நன்மை செய்வதாயின், அது தேசத் துரோகம் செய்வதாக முடியும். இந்த நிலையில் நான் என்ன செய்வது! எந்தக் காலத்திலும், என்ன ஆபத்து நேர்ந்தாலும் தேசத் துரோகம் செய்வதில்லை என்று நாங்கள் காளி தேவியின் முன்னிலையில் கடின சபதம் செய்துகொண்டிருக்கிறோம். அதற்கிணங்க, சொன்னேன், சொல்லவழக்குகளில் நான் போலீஸ் இலாகாவுக்குத் துரோகமாக நடந்து கொண்டதில்லை. ஆனால் அரசியல் விஷயங்கள் சம்பந்தப் பட்ட வரையில் இடைவிடாமல் தேச பக்தர்களுக்கு எச்சரிக்கைசெய்து போலீஸ் வலையில் விழாமல் தப்பும்படி செய்து வந்தேன். மலேயாவிலிருந்து வந்த முதல் கோஷ்டியினர் எல்லோரையும் பாதாள உலகத்தில் கொண்டுபோய் மறைத்துவிட நாங்கள் முயன்றோம். ஆனால் துரதிர்ஷ்ட வசமாக ஐந்து பேர்களை மாத்திரமே காப்பாற்ற முடிந்தது. சமீபத்தில் மலேயாவிலிருந்து வந்த இருவரையும் போலீஸ் வலை விழ முடியாத இடத்தில் கொண்டுபோய்ச் சேர்த்து விட்டோம். எல்லா விஷயங்களையும் ஒளிக்காமல் உங்களிடம் சொல்லி விட்டேன். நீங்கள் என்ன தண்டனை விதித்தாலும் சரி! இவ்விதம் என்னுடைய சுயரூபத்தை நான் அம்பலப்படுத்தியதற்கு என்னுடைய மனைவிதான் காரணம் என்பதையும் சொல்ல விரும்புகிறேன்.

என்றும் உங்கள் அன்பு மறவாத
கேதார் நாத்."

அவ்விரண்டு கடிதங்களையும் வாசித்த வைதேஹிக்கு எல்லா விஷயங்களும் விளக்கமாயின. தனக்குக்கூடத் தெரியாமல் கேதார்நாத் தேச பக்தர்களுடன் தொடர்பு கொண்டிருந்தது அவளுக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது.

மற்றொரு கடிதத்தையும் வைதேஹி அவசரமாக எடுத்து வாசித்தாள்.

"என் உயிரினும் இனிய வைதேஹிக்கு,

நான் நிரபராதி. என் மனச்சாட்சி இட்டுக் காட்டும்படி நான் எதுவும் செய்யவில்லை. உன் அன்பார்ந்த தோழி கமலியின் கணவன் பசுபதி என்னுடன் கூட இருக்கிறான். நீயும் கமலியும் எதிர்பாராத விதமாகத் தோழிகள் ஆனதைப் போல நானும் பசுபதியும் எதிர்பாராத விதமாக நண்பர்கள் ஆகிவிட்டோம்! உன் மாங்கல்யமும் கமலியின் மாங்கல்யமும் வைரம் பாய்ந்தவை! நாம் எல்லோரும் ஆனந்தமாகச் சந்திக்கும் சுபதினம் அதிக தூரத்தில் இல்லை என்பது உறுதி!

எப்போதும் உன் ஞாபகமாக இருக்கும்
கேதார் நாத்"

வைதேஹியும் கமலியும் மாறி மாறி அக்கடிதங்களை வாசித்தனர். அவர்களுடைய அழகிய கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் பொங்கியது!

# பழி விலகியது




பாவளிக்கு எங்கள் அத்திம்பேர் வரப் போகிறாரே! ஒரு 'மூட்டை பட்டாசுக் கட்டு, மத்தாப்பு, எங்க ராஜிக்குப் பட்டுப் புடவை எல்லாம் வாங்கிக் கொண்டு வரப் போகிறாரே!..."

"எங்க அத்திம்பேர் மாத்திரம் தீபாவளிக்கு வரமாட்டாரோ! அவர் மாத்திரம் பட்டாசுக் கட்டு, மத்தாப்பு எல்லாம் வாங்கிக் கொண்டு வரமாட்டாரோ!" என்று பதிலுக்குக் கேட்டான் பாலு.

"ஐயையே! உனக்கு அத்திம்பேர் எங்கே இருக்கிறார்! உங்க அக்காவுக்குத் தான் இன்னும் கல்யாணமே ஆகவில்லையே!" என்றாள் ஜானி, 'இடி இடி' என்று சிரித்துக்கொண்டு.

"உனக்குத் தெரியுமோ, ரொம்ப!..."

"தெரியாமல் என்ன! அதுதான் உங்க அக்காவுக்கு அந்த வைகாசியும் இன்னும் கல்யாணம் ஆகவில்லையே!"

ஜானி பாலுவைவிடக் கொஞ்சம் பெரியவள்; தவிர ஒரு பெண்ணல்லவா!

"ஓகோ! இரு, இரு; எங்கள் அக்காவிடம் சொல்லி உன்னை என்ன செய்யச் சொல்லுகிறேன், பாரு!" என்று முகத்தில் ரோஷம் பொங்கித் ததும்ப வீட்டிற்குள் ஓடி வந்தான் பாலு.

இந்தச் சிறு குழந்தைகளின் வாய்ச் சண்டை கடுவாசலில் நடந்தாலும் ரேழி அறையில் படுத்துக்கொண்டு இருந்த கல்யாணியின் காதில் விழத் தவறவில்லை. ஏற்கெனவே நொந்து வெந்திருந்த அவள் உள்ளத்தில் இந்தச் சம்வாதம் வேலேப் போலப் பாய்ந்து பச்சைப் புண்ணாக்கிற்று.

கல்யாணி அந்த அறையில் சும்மா இருக்கவில்லை; அவளுடைய இருதயத்தில் குமுறி எழுந்த கண்ணாறுத் துக்கத்தை வெளிப்படுத்துவதுபோல அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தாள்; அவளுடைய கையில் ஒரு காகிதம்—பழைய கடிதம் ஒன்று—இருந்தது. கண்களில் இரு துருவத்திலும் லேசாகக் கண்ணீர் துளித்திருந்தது.

ஆம், கல்யாணி, அவளுடைய கேலிநி நான்கு நாட்களுக்கு முன் எழுதியிருந்த கடிதத்தைத்தான் ஐந்தாவது தடவையாகப் படித்துக்கொண்டிருந்தாள்.

"கல்யாணி!

நேற்று 'அவ'ரிடமிருந்து முதல் முதலாகக் கடிதம் வந்திருக்கிறது. தீபாவளிக்கு அவர் வரும்போது எனக்கு என்னென்ன சாமான்கள் வாங்கி வர வேண்டுமென்று ஒரு லிஸ்டு போட்டு அனுப்பச் சொல்லியிருக்கிறார். எனக்கு... முதல் முதலாக....அவருக்குக் கடிதம் எழுத வெட்கமாகத்தான் இருக்கிறது! ஆனாலும் எழுதாமலும் இருக்க மனம் வரவில்லை...... நடுநடுவே எத்தனையோ இங்கிலீஷ் வார்த்தைகளைப் போட்டும் 'லீனந்து கட்டி'யிருக்கிறார்! கையெழுத்து முத்துப் போல—கண்களில் ஒத்திக்கொள்ளலாம் போலத் தோன்றுகிறது...... இவ்வளவு சந்தோஷத்திலும் உன்னை நினைக்காமல் இருக்க முடியவில்லை, கல்யாணி! நினைத் தால் உடனே மனம் கலங்குகிறது! கடவுள் எப்போது கண்ணைத் திறப்பாரோ? தைரியமாக இரு; உற்சாகப் படுத்திக்கொள்.........

ஹேமா..."

**பூவாளூர் சுந்தரராமன்**

அந்தக் கடிதத்தைப் படிக்கப் படிக்க, கல்யாணிக்கு இருதயமே சுக்கு நூறாக வெடித்து விடும்போல இருந்தது. அதிர்ஷ்டம்... விதி... தலையெழுத்து... என்ற கண்காணாத ஒரு சக்தியினைச் சபித்து எரித்து விடவேண்டும் போல வாய் துடிதுடித்தது.

ஹேமாவுக்கு என்ன குறைவு! தகப்பனார் தாசில்தார்; மேலும் பரம்பரைப் பணக்காரக் குடும்பம்; நல்ல அழகு; சாதாரண குணம்; பொன் மலருக்கு மணமும் இருந்தது... இந்த ஆனி மாதம் தான் கல்யாணமும் நடந்தது. அவளுடைய கல்யாணப் பத்திரிகையைக் கூட இன்னும் கல்யாணி தன் பெட்டியில் வைத்திருக்கிறாள். ஹேமாவின் அதிர்ஷ்டத்திற்கு யார் பிறந்திருக்கிறார்கள்!

நியாயமாகப் பார்க்கப் போனால் கல்யாணிக்குச் சென்ற வருஷமே தலை தீபாவளி நடந்திருக்க வேண்டும்; சென்ற வருஷம் வைகாசி மாதத்தில் தானே அவளுக்கும் கல்யாண ஏற்பாடுகள் பிரமாதமாக நடந்தன! ஆனால் அதிர்ஷ்டம் வேறு மாதிரியாக இருந்ததே! பாவம் கல்யாணி அதற்கு என்ன செய்வாள்!

## 2

அந்த ஊருக்கு மாற்றலாகி வந்திருந்தார் ஸப்ரிஜிஸ்தரார் சுடேசையர். சமீபத்தில், ஆறு மாதங்களுக்கு முன்தான், அவருடைய வீட்டிற்கே அழகையும், லக்ஷ்மீகரத்தையும் கொடுத்துக் கொண்டிருந்த அவரது பதினைந்து வயதுள்ள ஒரே பெண் டைபாய்டு ஜுரத்தில் எமனுக்கு இரையாகிவிட்டாள். அந்த மாளாத துக்கத்தை அவரால் மறக்கவே முடியவில்லை. வீடு வெறிச்சென்றிருந்தது. அவள் உடுத்திக்கொண்ட புடைவைகள் கொடியில் தொங்கிக் கொண்டிருப்பது அவ

னுடைய துரதிர்ஷ்டம், உன்னைக் கல்யாணக் கோலத்தில் வந்து பார்க்க முடியவில்லை... மனத்தினால் தான் கற்பனை செய்து பார்க்கிறேன்... அவசர அவசரமாகச் செய்த மங்கள ஸ்நான எண்ணெய்ப் பூச்சும், பதினெட்டு முழக் கூறைப் புடவையுடன்!... நலங்குக் கோலத்துடன், ஹோமப் புகையில் உன் கண் மை கரைந்து உன் தங்க ரேக்கு மஞ்சள் முகத்தில் வழிவதையும் பார்க்கக் கொடுத்து வைத்து இருக்க வேண்டும்!... அவர் பக்கத்தில் இருக்கிறார் என்கிற நினைவில் என் ஞாபகம் உனக்கு ஏன் வரப்போகிறது? அவர் கை பிடிக்கும்போது, நீ முதலில் கிள்ளினாயா, அவர் உன் பூப் போன்ற கையைக் கிள்ளினாரா என்றெல்லாம் நான் உன்னைக் கேட்கப்போவதில்லை. உனக்கு வெட்கமாக இருக்கும்! அந்த ஊர்க் குறும்புக்காரக் குட்டிகள் உன் புடவைத் தலைப்பையும் அவர் வேஷ்டித் தலைப்பையும் முடிபோட்டு விட்டு உன்னைத் திண்டாட விடும்போது உன் முகத்தைப் பார்க்கவேண்டும் போலத் தோன்றுகிறது!

என்னுடைய ஆசீர்வாதம்; நீ மலர், அவர் மணம். உன் குங்குமம் என்றும் அழியாத பாக்கியமாக இருக்க வேண்டுமென்று எங்கள் குல தெய்வமான குங்குமாம்பிகையைப் பிரார்த்திக்கிறேன். இத்துடன் உனக்கு ஒரு வெள்ளிக் குங்குமச் சிமிழ் அனுப்பியிருக்கிறேன். அதன் பாக்கியம் என்றும் உனக்கு இருக்கட்டும்!''

இவ்வளவையும் படிக்கும் வரையில் கல்யாணியின் மனம் எங்கோ ஆனந்தக் கடலில் துள்ளி நீந்திக் கொண்டிருக்கும். பக்கத்தில் உள்ள எந்தப் பொருளும், மனத்தில் உறைக்காது. படித்து முடித்ததும், உண்மையான பயங்கரமான சூழ்நிலை உருவெடுக்கும்; உடனே நீண்ட ஒரு பெருமூச்சு. உள்ளத்தில் ஒரு குமுறல் பாரமாய் வெடிக்கும்.

3

அத்தகைய நிலையில் தான் கல்யாணி அன்றும் இருந்தாள்.

'கல்யாணி, புடவை வேண்டாமென்று யாமே!...' என்று கேட்டுக்கொண்டே அவள் தாயார் உள்ளே வந்தாள். தூக்கி வாரிப் போட்டதுபோல் கல்யாணி எழுந்து உட்கார்ந்து கொண்டாள்.

இன்னும் இரண்டு நாட்கள் இருந்தன, நவராத்திரிப் பண்டிகைக்கு. அன்று சாமி ஐயர் பண்டிகைக்கு ஒன்றும், தீபாவளிக்கு ஒன்றுமாக இரண்டு புடவைகளைக் கல்யாணிக்கு வாங்கிவைத்திருந்தார். ஆனால் கல்யாணி புடவைகள் தனக்கு வேண்டாமென்று சொல்லிவிட்டாள்.

தன் தாயார் கேட்டதற்குக் கூடப் பதில் சொல்லாமல் தலை கவிழ்ந்து கொண்டிருந்தாள்.

''என்னடி! நான் கேட்கிறேன்; நீ ஒன்றும் சொல்லாமல்......!''

''என் லட்சணத்துக்குப் புடவை ஒன்று தான் பாக்கி!'' என்று வெடுக்கென்று சொன்னாள் உதடு துடிக்க.

''அடி பைத்தியம்! அதற்குள் என்னடி, உனக்கு அவ்வளவு விரக்தியும் வெறுப்பும்! இந்த வருஷம் இல்லாவிட்டால் அடுத்த வருஷம் நடந்துவிட்டுப்போகிறது! இனி மேலா உனக்குப் புருஷன் பிறக்கப் போகிறான்!'

''அடி, அம்மா! என்னைக் கடவுள் நிர்த்துக் கொட்டிக்கிறது போதுமடீ! நீ வேறு வந்து என் தொந்தரவு செய்கிறாய்!''

''கல்யாணி, நல்ல நாளும் இதுவுமா இப்படியெல்லாம் பேசாதேயடீ! புடவை பிடித்திருக்கா, இல்லையா!''

''எனக்கு ஒன்றும் வேண்டாம்......''

''கலர் பிடிக்கவில்லையா? அப்படியானால் நாமிருவரும் கடைக்குப் போய்ப் பார்த்து வேறு எடுத்துக்கொண்டு வருவோமடீ!''

''எனக்குப் புடவையும் வேண்டாம்; நாளும் எதுவும் வாணவில்லை'' என்று கோபத்துடன் சொல்லிக்கொண்டிருக்கும் போதே வாசலில் ஒரு குதிரைவண்டி வந்து நின்றது.

வண்டியிலிருந்து முதலில் ஒரு அமங்கலி ஸ்திரீயும், பின்னால் ஒரு வாலிபனுமாக இருவர் இறங்கினர். கல்யாணியின் தாயாருக்கு முதலில் அவர்களை அடையாளமே தெரியவில்லை.

'நானே இரண்டாவது தடவையாக உங்கள் வீட்டைத்தேடி வந்து இருக்கிறேன்!' என்று சொல்லிக்கொண்டே அந்த ஸ்திரீ உள்ளே வந்தாள். அதற்குள் கல்யாணியின் தாயார் அந்த வாலிபன் ஸ்வேதாரண்யம் என்றும், அந்த ஸ்திரீ அவனுடைய தாயார் என்றும் கண்டு கொண்டுவிட்டாள்.

''என்ன......இது......அவர்...!'' என்று கல்யாணியின் தாயார் ஸ்வேதாரண்யத்தின் தாயாரைத் துக்கம் விசாரிக்க ஆரம்பித்தாள்.

''ஆமாம்! எனக்குக் கொடுத்துவைத்தது அவ்வளவுதான்! போன தை மாதத்தில் தான் அவர் காலமாகி விட்டார்......''

''த்ஸ்ச்சு...ச்சு... மாட்டுப் பெண் வந்து விட்டாளோ!''

''இல்லையே! மாட்டுப் பெண் இந்த அகத்திலேயல்லவா இருக்கிறாள்!'' என்று சொல்லிவிட்டுச் சிரித்தாள். ஸ்வேதாரண்யம் தனக்கு வந்த சிரிப்பை அடக்கிக் கொள்ள உத்திரத்தை எண்ண ஆரம்பித்தான்.

''முதலிலேயே கல்யாணியைத் தான் வேண்டுமென்று கோரினேன்; இப்போதும் அதே விஷயமாகத்தான் வந்திருக்கிறேன்'' என்றாள் தொடர்ந்து.

''ஆமாம், அவனுடைய நக்ஷத்திரம்!...'' என்று கல்யாணியின் தாயார் சொன்னாள்.

''அதுதான் கிளேச்சு கிளேச்சுப் பார்க்கிறேன்! அப்பவே இந்தக் கல்யாணம் குதிர்ந்து, நடந்தும் இருந்து, தெய்வ பத்தனத்தால், 'இந்தப் பிராமணர்' ஸ்வேதாரண்யத்தின் தகப்பனார் காலமாகி இருந்தால் எல்லாரும் இந்தப் பெண்ணைத் தானே பழித்துக் கொண்டிருப்பார்கள்! அதற்காகத்தான் அப்போது இந்தக் கல்யாணமே நின்று விட்டதோ என்று நினைக்கிறேன்......' என்றாள் ஸ்வேதாரண்யத்தின் தாயார்.

கல்யாணியின் தாயாருக்கு 'விறுவிறு' என்று சந்தோஷமும் பூரிப்பும் பொங்க ஆரம்பித்தன.

''ஆமாம், இனி தை மாதத்திலேதானே முகூர்த்தம் வைத்துக்கொள்ளவேண்டும்!''

''அவ்வளவு தூரம் எதற்கு! எனக்கு வீட்டிலே இருப்பே கொள்ளவில்லை. இப்பொழுதுதான் நவராத்திரியில் கல்யாணம் பண்ணலாம் என்று பெரியவர்கள் எல்லோரும் சொல்லுகிறார்களே! அப்படியே நாளும் வைத்துக்கொண்டால்...!''

''எங்களுக்கு ஒரு ஆட்சேபணையும் இல்லை; கல்யாணி என்றைக்கோ உங்களுடைய உடைமை ஆகிவிட்டாள்!'' என்று சொல்லி விட்டுச் சிரித்தாள்!

அந்த வருஷம் பாதுவின் அத்திம்பேர் ஸ்ரீமான் ஸ்வேதாரண்யம் வரத்தான் செய்தார்! ஒரு மூட்டை பட்டாசும், மத்தாப்பும் வாங்கியும் வந்திருந்தார்!


பகீரதன்
தவம்
சிற்பம் :
மாமல்லபுரத்து
மகா சிற்பிகள்
நடனம் :
கி. கோபாலகிருஷ்ண மேனன்
போட்டோ :
எம். ஆர். சுப்பிரமணியம்
ஏ. எம். உசேன்

# ஈழநாட்டுப் பெருங்குடி

சி. அம்பிகைபாகன்

வாழையடி வாழையாக அரசியல், சமயம், கல்வி, கலை முதலிய துறைகளில் அருந் தொண்டு ஆற்றி வரும் ஒரு பெருங்குடி ஈழ நாட்டில் உண்டு. இந்தக் குடும்பத்தில் முதல் முதல் பிரசித்தி பெற்றவர் டாக்டர் ஆனந்தகுமார சுவாமியின் தந்தையும், சேர் பொன்னம்பலம் இராமநாதனின் மாமனுமாகிய சேர் முத்துக்குமார சுவாமியாரும். இவர்களின் மூதாதையர் யாழ்ப்பாணத்திலுள்ள மானிப்பாய் என்னும் கிராமத்திலிருந்து கொழும்பிற்கு வந்து குடியேறியவராவர்.

சேர் முத்துக்குமார சுவாமியின் தந்தையார் முதலியார் குமாரசுவாமி என்பவர், ஆங்கிலேய அரசாங்கத்தில் தமிழ் மொழி பெயர்ப்பாளராயிருந்து கடைசிக் கண்டி அரசனான ஸ்ரீ விக்கிரமராச சிங்கனுக்கும் ஆங்கிலேய கவர்னருக்கு மிடையே தூது போய், கி. பி. 1815-ஆம் ஆண்டில் கண்டி அரசாங்கத்தை ஆங்கில அரசாட்சிக்குள் கொண்டு வருவதற்குப் பேருதவி புரிந்தவர். இதற்காக ஒரு பதக்கமும் சங்கிலியும் இவருக்குப் பரிசளித்தனர். மேலும் இலங்கைச் சட்ட சபையில் முதல் தமிழ்ப் பிரதிநிதியாயிருந்து இலங்கையில் அதுகாறும் இருந்து வந்த அடிமை முறையை அகற்றுவதற்குப் பேருதவி புரிந்தவர் இவரே.

## முதல் பாரிஸ்டர்

சேர் முத்துக் குமாரசுவாமி பிராயமடைந்த சிறிது காலத்திற்குள் சட்டசபை அங்கத்தவராக நியமிக்கப்பட்டார். இவரின் பேச்சு வன்மையும் வசீகரமான தோற்றமும் எல்லோருடைய மனத்தையும் கவர்ந்தன. சட்ட சபையிலிருந்து பொது மக்களுக்காகப் பெரிதும் வாதாடினார். ஆங்கிலேய அரசாங்கம் இலங்கையில் கிறிஸ்தவ சமயத்தைப் பரிபாலிப்பதற்கு அரசாங்கப் பணத்தை உபயோகித்தது. இதை எதிர்த்துச் சட்ட சபையில் சேர் முத்துக்குமாரசுவாமி ஒரு பிரேரணையைக் கொண்டு வந்தார். தமது பிரேரணையின் சார்பாகப் பேசுகையில் புத்தர், இந்துக்கள், முகம்மதியர் முதலியோரிட மிருந்து பெறும் பணத்தைக் கிறிஸ்துமத பரிபாலனத்துக்கு உபயோகிப்பது அநியாயமான செயலென்றும், கிறிஸ்து மதக் கொள்கைகளுக்கே மாறானதென்றும் பல ஆதாரங்களைக் காட்டிச் சிறந்ததோர் சொற்பொழிவு செய்தார். இச் சொற்பொழிவைப் படித்த குடியேற்ற நாட்டு மந்திரி, "இப்படிப்பட்ட சொற்பொழிவை நிகழ்த்தக் கூடியவரைக் கொண்ட நாடு சுதந்திர மடைவதற்குத் தகுதி வாய்ந்தது" என்று கூறினாராம். கடைசியில் சேர் முத்துக்குமாரசுவாமியின் கட்சியே வெற்றியடைந்தது.'

இங்கிலாந்தில் இவர் சில வருஷங்கள் தங்கிப் 'பாரிஸ்டர்' பட்டம் பெற்றார். ஈழ நாட்டு மக்களில் இவரே இப்பட்டத்தை முதன் முதல் பெற்றவர். இலங்கை வாசிகளுக்குள் முதன் முதல் 'சேர்'ப் பட்டம் பெற்றவரும் இவரே. இங்கிலாந்தில் இருந்த காலத்தில், 19-ஆம் நூற்றாண்டில் பிரபல பிரிட்டிஷ் பிரதம மந்திரிகளாய் விளங்கிய லார்ட் பார்மஸ்ரன், டிஸ்ராலி முதலியோரின் சிநேகிதராகி அவர்களின் விருந்துகளிலே கலந்து கொண்டார். இவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த அரிச்சந்திர நாடகத்தின் மூலம் இவருடைய கலைத்திறனை அறியலாம். இந் நூலை விக்டோரியா ராணியின் அனுமதிபெற்று அவருக்கு அர்ப்பணஞ் செய்தார்.

சேர் முத்துக்குமார சுவாமிக்கு அந்தக் காலத்திலிருந்த மதிப்பை நாம் இன்னுமொரு சம்பவத்திலிருந்தும் அறியலாம். தமது அரசுரிமையை இழந்த தஞ்சை மஹாராஷ்டிர மன்னர் அதை மீளவும் பெறுவதற்கு இங்கிலாந்தில் சேர் முத்துக்குமார சுவாமிக்கு இருந்த செல்வாக்கை அறிந்து இவர் உதவியை நாடினார். இதன் பொருட்டு, மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் நண்பருள் ஒருவரும், திருவாவடுதுறை ஆதீனத்துக்கு மிகவும் வேண்டியவருமான இலக்கணம் இராமசாமிப் பிள்ளை என்னும் பெரியாரை இலங்கைக்கு அனுப்பி வைத்தார்.



சேர் முத்துக்குமாரசுவாமி

## ஒரு ஞானி

இதன்பின்னர் இலக்கணம் இராமசாமிப் பிள்ளைக்கும் இந்தக் குடும்பத்துக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. இவரே சேர் இராமநாதனுக்கும் சேர் அருணாசலத்துக்கும் குருவாய் அமைந்து அவர்களை மேல் நாட்டு நாகரிக வலையிலிருந்தும் காப்பாற்றிச் சைவத்தின் மகிமையையும் தமிழின் பெருமையையும் எடுத்து விளக்கியவர். சேர் அருணாசலத்தின் நண்பரும் பிரபல எழுத்தாளரும் சீர்திருத்தவாதியுமான எட்வேட் கார்ப்பென்ரர் என்னும் ஆங்கிலேயர், இலக்கணம் இராமசாமிப் பிள்ளையைத் தரிசித்தது பற்றி ஒரு நூல் எழுதியுள்ளார். இந் நூல் அக் காலத்தில் மிகவும் பிரபல்ய மடைந்து 17 பதிப்புக்கள் வெளிவந்ததாகக் கூறப்படுகிறது. இப் பெரியாருடைய மகளின் புத்திரனே சேர் இராமநாதனின் மகளை விவாகஞ் செய்துகொண்ட ஸ்ரீ சு. நடேச பிள்ளை அவர்கள். இவர் இப்பொழுது பரமேஸ்வரக் கல்லூரி அதிபராயிருந்து, சேர் இராமநாதனின் தருமங்களைப் பரிபாலிப்பதற்கு லேடி இராமநாதனுக்குப் பக்கபலமாயிருந்து வருகிறார்.

## மூன்று சகோதரர்

சேர் முத்துக்குமார சுவாமிக்குப் பின் பிரசித்தி பெற்ற ஸ்ரீ பொ. குமார சுவாமி, சேர் இராமநாதன், சேர் அருணாசலம் என்னும் மூன்று சகோதரரும் இவருடைய சகோதரியின் புத்திரரே. இவர்களுள் மூத்தவரான ஸ்ரீ குமார சுவாமி என்பவர் தமிழ்ப் புலவர்களை ஆதரித்தும், அரசியல் துறையில் சேவை புரிந்தும் புகழ் பெற்றவர். டாக்டர் சாமிநாதையர் சங்க இலக்கியங்களைப் பதிப்பித்த பொழுது அவருக்குப் பொருளுதவி செய்து ஊக்கப்படுத்தியவருள் இவர் விசேஷமாகக் குறிப்பிடப்பட வேண்டியவர். டாக்டர் சாமிநாதையர்

அனுப்பிய சிந்தாமணிப் பிரதியைப் பெற்றபொழுது ஸ்ரீ பொ. குமாரசாமி அவருக்கு எழுதிய கடிதத்தின் ஒரு பகுதி பின்வருமாறு :—

“தாங்கள் என்பேரில் வைத்த அன்பினால் அனுப்பிய சீவக சிந்தாமணிப் புத்தகத்துக்காகத் துதி கூறுகின்றேன். மேற்படி புத்தகத்தைப் பார்த்தவளவில் என் மனத்தில் எழுந்த மகிழ்ச்சி இவ்வள



சேர் பொ. இராமநாதன்

வென்று சொல்லத் தக்கதன்று. இப்படிப்பட்ட அரிய நூலின் அருமையை அறியத்தக்கவர்க்கு ஏட்டுப் பிரதிகளாயிருந்தமையால் அறிதற்கரிதா யிருந்த குறையை நீக்கிய பரோபகார சிந்தைக்காகவும் முயற்சிக்காகவும் நாமெல்லாம் மிகக் கடமை பூண்டிருக்கிறோம். இன்னும் இப்படிப்பட்ட அரிய பெரிய நூல்களைத் திருத்தி அச்சிட்டு வெளிப்படுத்தி வரக் கடவுள் துணை செய்வாராக.”

இவர் சட்டசபை அங்கத்தவரா யிருந்தபொழுது பொது ஜனங்களுக்காக உழைத்தார். வெறுந்தரை நிலத்தைப் பற்றிய சட்டத்தை அரசாங்கம் கொண்டு வந்தபொழுது அதைப் பகற்கொள்ளை யென்றார். இன்னுஞ் சில கிரிமினல் வழக்குகளுக்கு அப்பீல் கேட்கும் உரிமையை எடுத்துவிட அரசினர் சட்டங் கொண்டு வந்த பொழுது பல காரணங்களைக் காட்டி ஒரு பொதுக் கூட்டத்தில் அதை எதிர்த்தார். மது அருந்திய மயக்கத்தோடு வழக்குகளை விசாரிக்கும் நீதிபதி ஒருவரைத் தமக்குத் தெரியுமென்றும், அப்படிப்பட்ட நீதிபதிகள் இருக்கும் வரையில் அப்பீல் கேட்கும் உரிமை இருக்க வேண்டுமென்றும் அப்போது கூறினார். நீதிபதியைப் பற்றிக் கூறியவற்றை நிரூபிக்கும்படி அரசாங்கம் இவரைக் கேட்டபொழுது ஒரு விசாரணைச் சபையை ஏற்படுத்தினால் அதற்கு முன்பாகத் தாம் நிரூபிப்பதாகக் கூறினார். இதன்பின் அரசாங்கம் நடவடிக்கை எடுக்கவில்லை.

## முடிசூடா மன்னர்

இலங்கையின் முடிசூடா மன்னராக விளங்கிய சேர் இராமநாதனின் அரிய சேவைகளை விரிவாக எடுத்துக் கூற இடம் போதாமையால் முக்கியமானவையே இங்கு குறிப்பிடப்படுகின்றன. சேர் இராமநாதன் அரசியலில் ஈடுபட்ட அக்காலத்தில் சிங்களவர், தமிழர் என்ற வேற்றுமையின்றி எல்லா இலங்கை மக்களுக்கும் தலைவராக விளங்கினார். கல்வியறிவுடைய இலங்கை மக்களுக்கு ஒரு பிரதிநிதியைத் தேர்வு செய்யும் உரிமை 1912-ஆம் ஆண்டில் கொடுபட்ட போது சேர் இராமநாதன் டாக்டர் வேனுல்டோ என்னும் சிங்களவருடன் போட்டியிட்டு வெற்றி பெற்றார்.

பின்னர் 1915-ஆம் ஆண்டில் பள்ளிவாசல்களுக்கு முன் சிங்களவருக்கும் முகம்மதியருக்கும் ஏற்பட்ட கலகத்தில் சிங்கள மக்களை இலங்கை அரசாங்கம் மிகவும் அநீதியாக நடத்தியது. கலகத்தோடு தொடர்பில்லாத அநேக சிங்கள மக்கள் சுட்டுக் கொல்லப்பட்டனர். சரித்திர ஆசிரியர்கள் இதைப் பஞ்சாப் படுகொலையோடு ஒப்பிடுகின்றனர். மேலும் சிங்களத் தலைவர்களான காலஞ்சென்ற பிரதம மந்திரி சேர் பாரன் ஜெயதிலகா, தற்போதைய பிரதம மந்திரி கனம் டி. எஸ். சேனநாயகா முதலியோர் சிறையிலே போடப்பட்டனர். அந்தக் காலத்தில் இவர்களைக் காப்பாற்ற முன்வந்தவர் சேர் இராமநாதனே. சிங்கள மக்களின் குறைகளை எடுத்துக் கூறுவதற்காக முதலாம் உலக யுத்தம் நடந்த காலத்தில் நீர்மூழ்கிக் கப்பல் முதலியவற்றால் ஏற்படும் அபாயத்தையும் பொருட் படுத்தாது இவர் இங்கிலாந்துக்குச் சென்றார். அங்கு பார்லிமெண்டு அங்கத்தவருக்கு உண்மையை எடுத்துக் கூறி இலங்கைக் கவர்னர் லார்ட் சாமர்ஸைப் பதவியிலிருந்து நீக்குவித்தார். இவர் வெற்றியுடன் இலங்கை திரும்பிய பொழுது கொழும்புத் துறைமுகத்தில் இலங்கை மக்கள் பல்லாயிரக் கணக்கில் கூடி, கொடி, குடை, ஆலவட்டம் முதலிய விருதுகளுடன் வரவேற்றனர். அவர் ஏறியிருந்த கோச்சு வண்டியி லிருந்து குதிரைகளை அவிழ்த்து விட்டுத் தாங்களே இழுத்துச் சென்றனர். அப்பொழுதுதான் இவருக்கு ‘இலங்கையின் முடிசூடா மன்னர்’ என்ற பட்டம் ஏற்பட்டது.

யாழ்ப்பாணத்தில் பாதிரிமாரின் முயற்சியால் சைவப் பண்பும் தமிழ்க் கலாசாரமும் தலைகுன்றிய காலத்தில் சேர் இராமநாதன் தமது கல்விப் பணியை அவ்விடத்தில் ஆரம்பித்தார். பெண்கள் மூலமே கலாசாரத்தைக் காப்பாற்றலாம் என்பதை அறிந்து முதலில் ‘இராமநாதன் கல்லூரி’ என்னும் பெண்கள் கல்லூரியை 1913-ஆம் ஆண்டில் ஆரம்பித்தார். இக் கல்லூரியிற் கல்வி பயின்ற பெண்களின் மேதையை அறிந்த வாலிபர் அப்பெண்களை விவாகஞ் செய்யப் போட்டியிட்டனர். சில ஆண்டுகளுக்குப் பின்னர் ஆண்களுக்குப் ‘பரமேஸ்வரக் கல்லூரி’யை ஸ்தாபித்தார். இவ்விரண்டு கல்லூரிகளும் சேர் இராமநாதனுக்கு இரு பெரும் ஞாபகச் சின்னங்களாக விளங்குகின்றன.

கொழும்பு நகரில் இக் குடும்பத்தாரால் பரிபாலிக்கப்பட்டு வரும் சிவன் கோவில் ஒன்று உண்டு. சேர் இராமநாதன் இக்கோயிலுக்குத் தர்மகர்த்தாவாக இருந்தகாலத்தில் இதைக் கருங்கல்லால் அமைக்கத் தொடங்கி 20 லட்சம் ரூபாய் வரையில் செலவிட்டுள்ளார். முழுவதும் கருங்கல் திருப்பணி செய்யப்பட்ட கோயில் இலங்கையில் இது ஒன்றே.

சேர் இராமநாதனின் சேவைகளுக்கு மூலாதாரமாயிருந்தது அவர்களின் சிவபக்தியே. ஒரு முறை அரசாங்கத்தாரால் பட்டங் கொடுத்துக் கௌரவிக்கப்பட்ட ஒருவருக்கு நடைபெற்ற உபசாரணைக் கூட்டத்தில் சேர் இராமநாதன் தலைமை வகிக்க நேரிட்டது. அப்பொழுது இவர், ‘யார் பெரியவர்?’ என்பதை ஆராயத் தொடங்கி,

“ஆருக்குப் பொன்னம்பலன் கிருபை
யிருக்குதோ
அவனே பெரியவனும்”



சேர் பொ. அருணாசலம்

என்று கூறி முடித்தார். பரமேஸ்வரக் கல்லூரித் திறப்பு விழாவின் போது இவருக்குப் பிரியமான ‘முத்தி நெறி யறியாத’ என்னும் திருவாசகத்தை ஓதிக் கண்ணீர் விட்டதைக் கண்டார் கூறக் கேட்டுள்ளேன்.

சேர் இராமநாதனின் தருமங்களை அவர் கருத்தின்படி பரிபாலித்து வரு

வதையே தம் வாழ்க்கைப் பயனாகக் கருதும் வேடி. இராமநாதன் அவர்கள் கோடைக்கானலில் குறிஞ்சி ஆண்டவர் கோயிலும், யாழ்ப்பாணத்தில் சேர் இராமநாதன் சமாதியடைந்த விடத்து ஒரு கோயிலும் சிறப்பாக அமைத்துள்ளார்கள்.

## காங்கிரசின் தந்தை

இலங்கை அரசியல் முன்னேற்றத்துக்குக் காரணராக இருந்த சேர் அருணாசலம் கேம்பிரிட்ஜ் சர்வ கலாசாலையில் படித்துப் பட்டம் பெற்று இலங்கை சிவில் ஸர்வீஸ் உத்தியோகத்தில் அமர்ந்து அக்காலத்தில் அவ் வுத்தியோகத்திலே பெறக்கூடிய பதவிகளைப் பெற்று இளைப்பாறியவர். இதன் பின்பே அரசியல் வாழ்க்கையில் ஈடுபட்டார். 1917-ஆம் ஆண்டில் இலங்கைத் தேசிய சபையின் ஆதரவில் அவர் நிகழ்த்திய 'எமது அரசியற் குறைகள்' என்னும் அரசியல் சொற்பொழிவு இலங்கைச் சரித்திரத்தில் பிரசித்தி பெற்று விட்டது. பின்னர் 1918-ஆம் ஆண்டில் இலங்கை மக்களுக்கு வெளியிட்ட செய்தியில் அரசியல் வாழ்க்கையில் மக்கள் கைக்கொள்ள வேண்டிய இலட்சியங்களைத் தெளிவாக விளக்கினார். இதில், அரசியல் சுதந்திரம் நல்வாழ்வுக்கு அத்தியாவசியமானதென்றும், இந்தியத் தலைவர்களாகிய காந்தி, கோகலே முதலியவர்களை இலங்கை வாலிபர்கள் பின்பற்ற வேண்டுமென்றும் கூறினார்.



இலக்கணம் இராமசாமிப் பிள்ளை

மேலும் இவர்கள் தொடர்ந்து செய்து வந்த முயற்சியினாலேயே 1919-ஆம் ஆண்டில் இலங்கைத் தேசிய காங்கிரஸ் ஸ்தாபிக்கப்பட்டது. காங்கிரசின் முதல் தலைவர் சேர் அருணாசலம் அவர்களே ஆவார்.

இந்தியத் தோட்டத் தொழிலாளரின் சேவை 'இலங்கையின் பொருளாதார வளர்ச்சிக்கு அவசியமென அவர் கண்டு, அவர்களுக்கிருந்த குறைகளை நீக்கப் பெருமுயற்சி செய்தார். தோட்ட முதலாளிகளின் உத்தரவின்றி வெளியேறும் அநேக இந்தியப் பெண்களும் சிறுவர்களும் அக்காலச் சட்டப்படி சிறையில் இடப்பட்டனர். இச் சட்டத்தை நீக்குவதற்குக் குடியேற்ற நாட்டு மந்திரி முதலியோருக்கு விண்ணப்பஞ்செய்து கிளர்ச்சி செய்தார். இதன் பயனாக இச்சட்டம் நீக்கப்பட்டது.

சேர் இராமநாதனும் சேர் அருணாசலமும் இலங்கைக்குச் செய்த சேவைக்கு ஞாபகார்த்தமாக இவர்களின் உருவச் சிலைகள் இலங்கைப் பாராளுமன்றக் கட்டிடத்தின் இருமருங்கிலும் அழகாக அமைக்கப் பெற்றிருக்கின்றன.

## கலா யோகி

ஈழநாடு உலகத்துக்கு உவந்தளித்த புத்திரனான ஆனந்த குமாரசுவாமி சேர் முத்துக்குமாரசுவாமிக்கும் அவரது ஆங்கில மனைவிக்கும் மகனாக 1877-ம் ஆண்டு கொழும்பிலே பிறந்தார். இவர் பிறந்த 8 மாதத்துக்குள் தாயின் உடல் நிலை சரியாக இல்லாதபடியால் அவர் குழந்தையை அழைத்துக் கொண்டு இங்கிலாந்து சென்றனர். தமது அரசியற் கடமைகள் முடிந்த பின்பு இங்கிலாந்து வருவதாக உடன்பட்டிருந்த தந்தையாரின் உடல் நிலை வரவர மோசமாகி 1879-ம் ஆண்டிலே காலமானார். இதன் பின்னர் ஆனந்த குமாரசுவாமி தமது 23-ம் வயது வரைக்கும் இங்கிலாந்திலேயே கல்வி கற்று வந்தார்.

எட்டு மாதக் குழந்தையாய் இங்கிலாந்துக்குப் போனவர் 1903-ம் ஆண்டில் அதாவது தமது 26-ம் வயதில் இலங்கைக்கு வந்தார். இலங்கையில் உலோக ஆராய்ச்சிப் பகுதித் தலைமைப் பதவியை ஏற்றார். தமது கடமை சம்பந்தமாக இலங்கையின் பல பாகங்களுக்கும் பெரும்பாலும் கால் நடையில் அல்லது மாட்டு வண்டியில் சென்றார். இவர் உலோகங்கள் சம்பந்தமாகச் செய்த ஆராய்ச்சியின் பயனாக ஒரு புது உலோகத்தைக் கண்டு பிடித்தார். மற்றவர்களாயிருந்தால் சம்பிரதாயப்படி தம்முடைய பெயரையே அந்த உலோகத்துக்குக் கொடுத்திருப்பார்கள். ஆனால் ஆனந்த குமாரசுவாமி அதற்கு ஒரு விஞ்ஞானப் பெயரையே கொடுத்தார். இவர் இலங்கையிலிருந்து உலோகங்களைப் பற்றிச் செய்த ஆராய்ச்சியைக் கொண்டாடி, லண்டன் சர்வகலாசாலை இவருக்கு டாக்டர் பட்டம் வழங்கிற்று.

தமது கடமை சம்பந்தமாக நாட்டுப் புறங்களில் சுற்றிக் கொண்டிருக்கும் பொழுது விஞ்ஞானியான ஆனந்த குமாரசுவாமி கலைஞராக மாறினார். குக்கிராமங்களில் வசிக்கும் மக்களையும் மட்பாண்டங்களில் அழகைக் கண்டார். அவர்கள் நடையுடை பாவங்களிலும், நெசவு செய்யுஞ் சேலைகளிலும் அழகைக் கண்டார். மேலும் இவற்றை யெல்லாம் படிப்படியாக நசுக்கி வரும் மேல் நாட்டு நாகரிகத்



டாக்டர் ஆனந்த குமாரசுவாமி

தின் தாக்குதலையுங் கண்டார். இலங்கையின் பல பாகங்களிலும் பாழடைந்து கிடந்த விகாரைகளும் தகோபாக்களும் இவருடைய மனத்தைக் கவர்ந்தன. அவற்றிலே காணப்பட்ட சிற்பங்களையும் ஓவியங்களையும் ஆராயத் தொடங்கினார். அவற்றின் தத்துவங்களை அறிவதற்கு இந்திய இலக்கியங்களையும் இந்து பௌத்த மத சாஸ்திரங்களையும் கற்க வேண்டிய அவசியத்தை யறிந்து அவற்றை ஐயந்திரிபறக் கற்றார்.

இவற்றின் விளைவாக இலங்கைச் சீர்திருத்தச் சபை ஒன்றை ஏற்படுத்தி, அதன் மூலம் மக்களுக்கு இந்திய கலாசாரத்தைப் பற்றிப் பிரசாரஞ் செய்து வந்தார். இலங்கைக் கலாசாரத்துக்கும் இந்திய கலாசாரத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறதென்பது ஆனந்த குமாரசுவாமியின் கருத்து. சீர்திருத்தச் சபை வெளியிட்ட சஞ்சிகை மூலம் நாட்டுக் கல்வியின் அவசியத்தைப் பற்றியும், குடிசைத் தொழிலை வளர்க்க வேண்டிய அவசியத்தைப் பற்றியும் பிரசாரஞ் செய்தார். இந்தக் காலத்திலேதான் 'கலையும் சுதேசியும்', 'தேசியத்தின் இலட்சியங்கள்' முதலிய இவருடைய நூல்கள் வெளிவந்தன.

பின்னர் இலங்கை அரசாங்கத்தில் தாம் வகித்த பதவியை விட்டு விலகி இந்தியாவில் சுற்றுப் பிரயாணஞ் செய்து அரிய நுண் கலைப் பொருள்களைச் சேகரித்தார். அவற்றைக்

கொண்டு 1910-ஆம் ஆண்டில் அலகாபாத் நகரில் ஒரு கலைக் காட்சியை நடத்தினர். இக் கலைக் காட்சி இந்தியாவில் கலை சம்பந்தமான ஒரு புரட்சியை ஏற்படுத்தியது.

இவர் இந்தியாவில் இருந்த காலத்திலே தாகூர் சகோதரர்கள், சகோதரி நிவேதிதை முதலியோரின் நண்பரானர். ஒரு காலத்தில் தாம் சேகரித்த கலைப் பொருள்களைக் காசியில் ஒரு கலாபவனத்தை ஏற்படுத்தி அங்கு வைப்பதாக உத்தேசித்தார். ஆனல் இந்திய மக்கள் அப்போது அசிரத்தையாயிருந்த படியால் அப் பொருள்கள் அமெரிக்கா தேசத்துக்குப் போக வேண்டி. நேர்ந்து விட்டது.



கொழும்புத் துறைமுகத்தில் சேர் பொ. ராமநாதனுக்கு வரவேற்பு

இவர் 1919-ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் அமெரிக்காவில் வசித்துவந்தாராயினும் இவர் மனம் இந்தியாவிலேயே படிந்து கிடந்தது. இவர் எழுதிய சிவ நடனம் முதலிய எல்லா நூல்களும் இந்திய கலாசாரத்தை உலகுக்கு விளக்குவனவாகக் காணப்படுகின்றன. இவர் வாழ்க்கையின் இறுதிக் காலத்தில் வேதத்தின் தத்துவார்த்தங்களையெல்லாம் விளக்குவதில் ஈடுபட்டிருந்தார்.

அமெரிக்காவில் இவர் வசித்துவந்த போஸ்டன் என்னும் நகரிலே இவரது எழுபதாவது பிறந்த தினத்தைக் குறித்து ஒரு விருந்து உபசாரம் நடைபெற்றது. அப்பொழுது உலகத்தின் பல பாகங்களிலுமிருந்து வாழ்த்துச் செய்திகள் வந்தன. அந்த உபசாரங்களுக்கு விடையிறுக்கையில் பின்வருமாறு பேசினர்:

“அடுத்த வருஷம் என் மனைவியும் நானும் ஓய்வெடுத்துக் கொண்டு இந்தியாவுக்குப் போகப் போகின்றோம். அங்கே போய், கங்கேரி குருகுலத்தில் சமஸ்கிருதமும் இந்தியும் கற்றுக் கொண்டிருக்கும் எங்கள் மகன் இராமனைச் சந்திப்போம். ......அங்கிருந்து எனது அறிவினால் தெளிந்த உண்மைகளை அநுபவ மூலமாயறிய உத்தேசித்துள்ளேன்.”

பண்டைக் காலத்து ரிஷிகளைப் போல் வானப்பிரஸ்த வாழ்வை மேற்கொள்ள விரும்பினர் இவர். இந்த விருப்பம் நிறைவேறுமுன் இவரது வாழ்வு முடிவடைந்து விட்டது. இப் பெரியாரின் ஞாபகத்தைத் தக்க முறையில் நிலை நாட்ட வேண்டியது தமிழ் மக்களுடைய கடனாகும்.

○ ● ○

# பெண்ணின் பெருமை!




"அம்மா! இப்போது அப்பாவைப் பார்த்தால் வெறும் மனுஷராகவா தோன்றுகிறது?......
அஜந்தா வர்ண சித்திரம் மாதிரி ஜொலிக்கிருர், இல்லையா?"

# தீபாவளிக்கு வந்தால்...


அரிசி, விறகு எதுவும் இல்லாமல் ருசிகரமான உணவு வகைகளைத் தயார் செய்யும் வழியை நளன் நம் பெண்மணிகளுக்குக் கற்பிப்பார்.


மூன்றடி நிலம் யாசித்த வாமனர், "எனக்குக் குடியிருக்க ஒரு அறைதான் வேண்டும்" என்று கேட்பார்!
ஒரு அறைதான் வேண்டும்.


நாதப் பிரம்மமான தியாகப் பிரம்மம் அகில இந்திய ரேடியோவில் ஒரு முழுநேரக் கச்சேரிக்குச் 'சான்ஸ்' கேட்டு ஏமாற்றம் அடைவார்.
A.I.R.


தேவ கன்னிகையான மேனகையைப் பிரபல
சினிமா நட்சத்திர மாக்குவதற்கு நம் சினிமா
முதலாளிகள் பிரம்மப் பிரயத்தனம் செய்வார்கள்.


மகாகவி காளிதாசன் பத்திரிகை
ஆசிரியரிடம் கையெழுத்துப் பிரதி
யுடன் சென்று தோல்வி யடைவார்.
NOTICE


ராஜரிஷி விசுவாமித்திரரின் தவத்தை
ராஜரிஷி தாண்டன் கலைத்து
அவரை விரட்டி அடித்திருப்பார்!
SHASTRY




பெண்: என்னம்மா, இந்த வருஷம் எனக்குத் தீபாவளி 'ப்ரெஸெண்ட்' என்னம்மா?
தாயார்: அப்பா உனக்கொரு பாந் பங்கா வாங்கி வச்சிருக்கார்.
பெண்: ரொம்ப 'தாங்ஸ்' அம்மா. குஷியாப் போச்சு. பங்கா அகப்பட்டாலும் பாந் பங்காதான் அகப்படமாட்டேங்குது. இந்த வருஷம் இனிமேல் தொந்திரவு கொடுக்காமே உல்லாசமா இருக்கும்.

*Hearty Greetings from:* **THE INDIA ELECTRIC WORKS LTD.,**
"CHATNATH BUILDINGS"
MOUNT ROAD :: MADRAS - 2

# அதிர்ஷ்டம் அடித்தது!

எம். வி. வெங்கட்ராம்



மூன்று நான்கு மாதங்களைப் பரசுராமன் நடத்தி வந்த நாடகம் அன்று உச்சக் கட்டத்தை எட்டி விட்டது. அதற்கான சூழ்நிலையை அவன் மிகவும் அழகாகச் சிருஷ்டித்து விட்டான்.

அன்று மாலை ஆபீஸிலிருந்து திரும்பி வந்து, வீட்டு வாசலைத் தாண்டும்போதே அவன் முகத்தில் விசனம் படர்ந்துவிட்டது. லோக பாரம் முழுவதையும் சுமப்பவன் போல் அவன் தள்ளாடிக்கொண்டே வந்தான். அழுக்குச் சட்டையைக் கழற்றி லக்ஷ்மியிடம் விசிறி எறிந்துவிட்டு, கட்டை ஒன்றைத் தலையணையாக வைத்துக் கொண்டு தரையில் சாய்ந்தான்.

அவன் முகத்தைப் பார்த்த லக்ஷ்மி ஒரு வார்த்தையும் பேசத் தைரியம் வராமல் சட்டையை மாட்டிவிட்டு, காப்பியைக் கொண்டு வந்து அவன் பக்கத்தில் வைத்து விட்டுப் போகாமல் நின்றாள்.

"நாய்போல் உழைத்தாலும் நல்ல பெயர் இல்லை; நல்ல பிழைப்பு!" என்றான் பரசுராமன் கூரை முகட்டைப் பார்த்தபடி.

"பணம் சேருகிற இடத்திற்குத்தான் மேலும் மேலும் சேருகிறது; தரித்திரம் மகா தரித்திரம் ஆகிறது" என்றான் மறுபடியும் கூரை நோக்கியவாறு.

"இந்த வேலை செய்வதற்குப் பதிலாக எங்காவது கொள்ளை அடிக்கப் போகலாம்" என்றான் தூண் ஒன்றைப் பார்த்து.

லக்ஷ்மி ஒன்றுக்கும் பதில் சொல்லாதிருக்கவே அவன் சற்றுச் சூடாகவே சொன்னான்: "நாளையிலிருந்து இந்த வேலைக்கு ஒரு முழுக்குப் போட்டு விடப் போகிறேன்."

அவள் திகிலுடன் வாய் திறந்தாள்: "என்ன நடந்தது! எதற்காக வேலைக்கு முழுக்குப் போடப் போகிறீர்கள்!"

"என்ன நடந்ததா! குறையும் விலையில் கொள்முதல் செய்வதற்கு என் போன்ற முதலாளி ஐயாவுக்குத் தேவையாயிருக்கிறது. சரக்கு கிராக்கி ஆகும்போது விலை கூட்டி விற்க என் ஒத்தாசை அவனுக்கு வேண்டியிருக்கிறது. மிளகு மூட்டைகளில் மாத்திரம் அவனுக்கு இந்த மாசம் ஆயிரம் ரூபாய் முழுசாய் லாபம். லாபத்தை மூட்டை கட்டும்போது மட்டும் வாயெல்லாம் பல்லாகிறது......"

"அவர் முதல் போட்டுத் தொழில் செய்து லாபம் அடைகிறார்; அதனால் என்ன! பொறுமைப்பட்டு என்ன பிரயோஜனம்!"

"அவன் முதல் என்றால், என் மூளையில்லாமல் அவனுக்கு எங்கிருந்து லாபம் கிடைத்துவிடும்! உனக்கென்ன, வீட்டில் குந்திக்கொண்டு வேதாந்தம் பேசலாம். வெயிலில் மழை பாராமல் காடும் மேடும் சுற்றும் எனக்கல்லவா அந்த வயிற்றெரிச்சல் தெரியும்!"

"அதற்காக வேலையை விட்டால், இப்போது கிடைக்கிற அரைவயிற்றுச் சோற்றிலும் மண்தான் விழும்."

"நான் மானியாக இருக்க வேண்டுமானால் இனி இந்த வேலையில் இருக்கக் கூடாது."

"வர வர உங்களுக்குப் பைத்தியம் தான் முற்றுகிறது. ஆமாம்..."

பரசுராமன் கோபமாய் எழுந்து உட்கார்ந்தான். "என் எதைப் பேசினாலும் நான் தலைவணங்கிக் கேட்டுவரவேண்டும். பதில் பேசினால் நான் பைத்தியக்காரன்; அப்படித்தானே!"

"உங்களை யார் என்ன சொல்லி விட்டார்கள்! தலையும் காலும் இல்லாமல் இப்படிப் பேசினால் என்ன புரிகிறது!"

"வீட்டு வாடகை மூன்று மாதமாய்ப் பாக்கி; தெரியும் அல்லவா!"

"தெரியும்."

"வீட்டுக்காரன் பாக்கி கேட்டால் என்ன சொல்வது!"

லக்ஷ்மி மௌனமாயிருந்தாள்.

"சனிக்கிழமைக்குள் ரேஷன் அரிசி வாங்கவேண்டும், காப்பி பவுடர், அது, இது என்று உன் லிஸ்ட் ஒன்று இருக்கிறது. துரைசாமியின் பள்ளிக்கூடச் சம்பளமும் கட்டவேண்டும். இவ்வளவுக்கும் பணம் வேண்டுமா, வேண்டாமா!"

லக்ஷ்மி குனிந்த தலை நிமிரவில்லை.

"முதலாளியிடம் இதை எல்லாம் சொல்லிப் பணம் கேட்டால், அவன் கணக்குப் புஸ்தகத்தைத் தூக்கி மூஞ்சியில் அடிக்கிறான்!"

"மூஞ்சியில் அடித்தாரா!"

"அப்படித் தூக்கி எறிந்தான். முதலிலேயே இருநூறு ரூபாய்க்குமேல் அதிகப் பற்று இருக்க, மேலே கடன் கொடுப்பது எப்படி என்றான். சாப்பிடாமல் வேலை செய்வது எப்படி என்று கேட்டேன். அது அவனுக்குத் தெரியாதாம்! யாருக்குத்தான் கோபம் வராது! 'உனக்கு மாத்திரம் பசி என்றால் ஒரு நிமிஷம் தாங்க முடியவில்லை; நானும் பத்து முறை தின்னவில்லையே. அது போலத்தானே எனக்கும்!' என்று கேட்டேன். அதற்கு அந்த நன்றிகெட்டவன் என்ன சொன்னான் தெரியுமா! 'இஷ்டம் இருந்தால் வேலை பார், இல்லாவிட்டால் கடையை விட்டுக் கீழே இறங்கு' என்கிறான். இவ்வளவு தூரம் ஆனபின் அவன் கடையில் கால் வைப்பது எப்படி!"

"அவரிடம் நீங்கள் இன்னும் கொஞ்சம் சமயமாய்ப் பேசியிருக்க வேண்டும்."

"சமயமாய்ப் பேசாமல் 'லபலப' என்று விழுந்தேன்! நான் பேசுவதற்கு இனிமேல் உன்னிடம்தான் பாடம் கற்க வேண்டும்."

"கொஞ்ச காலமாய் நீங்கள் ஒருமாதிரியாய்த்தான் இருக்கிறீர்கள்......"

"ஒருமாதிரி என்ன, பல மாதிரியாய் இருக்கிறேன். நீ தான் ஒரே மாதிரியாய் இருக்கிறாய்!"

"சரி, நான் ஒன்றும் பேசவில்லை. காப்பி ஆறுகிறது, சாப்பிடுங்கள்."

சில்லிட்டுப்போன காப்பியைக் கையில் எடுத்த பரசுராமன் அதைத் தூக்கித் தூர எறிந்தான்: "சை, இந்த வீட்டில் ஒன்றுமே உருப்படாது. இதற்குப் பதிலாக, ஒரு டம்ளர் பாலை ஊற்றிக் கொண்டுவா; போ! காப்பியாம் காப்பி!"

கீழே கொட்டிய காப்பியைப் பார்த்ததும் லக்ஷ்மிக்கு அழுகை வந்தது. காப்பியானாலும் பால் அல்லவா! பால் சிந்துவதால் குடும்பத்துக்குக் கேடு அல்லவா!

"அழுகைக்கு ஆரம்பித்து விட்டாயா! ஒரு குறைச்சலும் இல்லை!"

கணவன்—மனைவி போராட்டம் மேலும் படருவதற்குள் வெளியிலிருந்து ஒரு குரல் கூப்பிட்டது. "பரசுராம், பரசுராம்!"

## 2

அது வீட்டுக்காரர் குரல்; வாடகை வசூலிக்க வந்திருந்தது. அதைக் கேட்டதும் லக்ஷ்மி எழுந்து உள்ளே சென்றாள். பரசுராமன் இருந்த இடத்தை விட்டு அசையாமல் அப்படியே உட்கார்ந்திருந்தான். வீட்டுக்காரர் உள்ளே வந்ததைக் கவனித்ததாய்க் கூட அவன் காட்டிக் கொள்ளவில்லை. அவர் நுழைந்த போதுதான், மடியில் கட்டி வைத்திருந்த சிகரெட் ஒன்றை எடுத்துப் பற்ற வைத்தான்.

எப்போதும் மரியாதையாகவும் பணிவாகவும் நடந்து கொள்ளும் பரசுராமன் இப்படித் தன்னை அலட்சியம் செய்வது வீட்டுக்காரருக்கு ஆச்சரியமாயிருந்தது.

"பரசுராம், நான் வந்திருப்பது கூட உனக்குத் தெரியவில்லையா!"

"நீர் வந்திருப்பது நன்றாய்த் தெரிகிறது. அதற்காக நான் என்ன செய்யவேண்டும்!"

வீட்டுக்காரருக்குத் தூக்கி வாரிப் போட்டது. 'நீங்கள்' என்பது 'நீர்' ஆக மாறியதுடன் அந்த 'நீர்'க்குப் பின், 'போடா' தொனியும் கேட்டது அவருக்கு.

"என்ன செய்யவேண்டும் என்றே உனக்குத் தெரியவில்லையா! வாடகைப் பாக்கியைக் கொடுத்தால் போகிறது...."

"தூக்கி எறிந்து விடவேண்டும் என்று தான் என் எண்ணமும்; முடியவில்லையே, கல்லேத்தான் எறியமுடியும்!"

"ஏது, பேச்சு ரொம்ப ஜோராய்த் தெரிகிறதே...!"

"ஆமாம், நீர் உழைத்து உழைத்து எனக்குப் போடுகிறீர் அல்லவா! அது தான் எனக்கு ஜோராய் இருக்கிறது."

"பரசுராம்! நீ பேசுவது கொஞ்சமும் ஒழுங்கா யில்லே."

"நீர் ரொம்ப ஒழுங்காய்ப் பேசி விட்டீர் களாக்கும்! மரியாதை கொடுத்தால் தான் மரியாதை கிடைக்கும்."

"உன்னை நான் என்ன அவமரியாதை யாய்ப் பேசிவிட்டேன்! சரி, வீண் பேச்சு எதற்கு! மூன்று மாசமாய் வாடகை பாக்கி நிற்கிறது. அதைக் கொடுத்து விட்டால் உன்னிடம் நான் எதற்காகப் பேசப் போகிறேன்!"

"வயிற்றுச் சோற்றுக்கு நான் தாளம் போடுகிறேன். வாடகை, வாடகை என்று நீர் குதித்தால் பணம் ஆகாசத்திலிருந்து குதித்து விடுமா!"

வீட்டுக்காரர் பொறுமை பூராவும் இழந்து விட்டார்.

"பாக்கி கொடுக்க வக்கில்லே என்றால் வீட்டைக் காலி செய்கிறது!"

"காலி செய்ய முடியாது. உம்மாலானதைப் பார்த்துக் கொள்ளும்!"

"பணத்துக்கு போக்கிலதை...."

"ஓய், போக்கிலதை, கேக்கிலதை என்று பேசவேண்டாம். வார்த்தைகளை அளந்து உபயோகியும். இல்லாவிட்டால் மரியாதை கெட்டுவிடும்" என்று சொல்லிக் கொண்டே எழுந்து நின்றான் பரசுராமன்.

வீட்டுக்காரர் பணக்காரர்; உடலில் தெம்பு இல்லாதவர்; துணையும் யாரும் இல்லை. ஆகையால் நிலைமையைக் கட்டுமீற விட அவர் துணியவில்லை.

"சரி, சரி, உன்னைப் பார்க்க வேண்டிய இடத்தில் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று சொல்லிக் கொண்டு, வேகமாக வெளியே சென்றார் அவர்.

"கும்பிக்குக் கொட்டக் கஞ்சியைக் காணோம். கேட்க வந்து விட்டானாம் வாடகைப் பாக்கி! கடன் பட்டுவிட்டால், என்ன வேண்டுமானாலும் பேசலாம் என்று நினைத்துவிடுகிறார்கள்! அயோக்கியர்கள்!" என்றான் பரசுராமன், உள்ளேயிருந்த லக்ஷ்மியின் காதுகளில் விழும்படியாக.

3

லக்ஷ்மி மறுபடியும் வெளியில் வந்தாள். வீட்டுக்காரருடன் அவன் பேசியதை எல்லாம் கேட்டு அவளுடைய கிலேசம் மிகுந்துவிட்டது. அவனால் குடும்பத்துக்குப் பெருங்கேடு வந்து விடுமோ என்று பயந்தாள். மிகவும் பொறுமையுள்ள அவளுக்கும் கோபம் பீறிக் கொண்டு வந்தது.

"வீட்டுக்காரரிடம் இப்படித் தானா பேசுவது! வாடகை பாக்கி நின்றால் கேட்காமல் விட்டு விடுவார்களா! அவரிடம் கொஞ்சம் நல்லபடியாகப் பேசியிருந்தால்தான் என்ன!"

"புறத்தியாரின் கஷ்டத்தைத் தெரிந்து கொள்ளாதவன் மனிதனா!"

"என்ன இருந்தாலும் நாம் இருக்கிற நிலைமைக்கு நாவை அடக்கமாய் வைத்துக் கொள்ளவேண்டும். நீங்கள் என்ன நினைத்துக் கொண்டு இப்படி யெல்லாம் செய்கிறீர்கள் என்று தெரியவில்லே. சோறுக்கு அரிசி வாங்கப் பணம் இல்லே. வாடகை தரப் பணம் இல்லை என்று சொல்லிவிட்டுச் சிகரெட் பிடிக்க மாத்திரம் எங்கிருந்து காசு கிடைக்கிறதோ தெரியவில்லே. இன்னும் சம்பளம் வாங்கினதும் ஹோட்டல், சினிமா என்றெல்லாம் கும்மாளம் அடிக்கிறீர்கள்..."

"இந்த வீட்டில் கிடைக்கிற சுகத்துக்கு வேறு என்ன செய்கிறது!"

"வீட்டில் இருக்கிறவர்கள் எக் கேடு கெடட்டும், நீங்கள் மட்டும் நன்றாகச் சுற்றலாம் என்கிறீர்களா!"

"வீட்டில் உள்ளவர்களுக்கு என்ன குறை வந்து விட்டது!"

"ஒன்றும் குறையில்லே! சம்பளப் பணத்தை..."

"சம்பளம் ஆயிரம் ரூபாய் வருகிறது. அது இல்லாமல் சுகம் தவறிப் போகிறது. ஐம்பது ரூபாய் பிச்சைக் காசில் ஒரு இரண்டு நாள் நிம்மதியாய் இருக்க ஆசைப் படக் கூடாது என்கிறாய்! நான் நிம்மதியாய் இருப்பது உனக்குப் பிடிக்கவில்லே!"

"எங்கள் எல்லோரையும் எங்கேயாவது அனுப்பி விட்டு நீங்கள் ஒரு பாடாய் நிம்மதியாய் இருங்கள்!"

அவள் கண்களில் மறுபடியும் நீர் பெருவாரியாய்ச் சுரந்தது.

"இந்த நீலிக் கண்ணீர் என்றைக்கு நிற்கிறதோ அன்றைக்குத் தான் நமக்கு விடிவு காலம்!"

"அப்பா, அப்பா! ராஜா ஞானவின் தல கண்ணி'ல எல்லாம் மண்ணைப் போட்டு விட்டான்...கேட்டால், என்னையும் அடிக்க வருகிறான்...." என்று புகார் செய்து கொண்டே உள்ளே வந்தான் மூத்த பையன் ஜயராமன்; குழந்தை ஞானம் அவன் பின்னால் விசித்துக் கொண்டு வந்தது. கடைசியாக, ராஜாராமன் பயந்து பயந்து உள்ளே வந்தான். பரசுராமன் தன் அஸ்திர பாணத்தை அவர்கள் மீது திருப்பிப் பொசுக்கத் தொடங்கினான்.

"பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் உங்களுக்குத் தெருவிலே என்னடா வேலை!" என்று கர்ஜித்தான் அவன். மூத்தவன் தலையில் ஒரு குட்டு விழுந்தது. அவன் அலறிக்கொண்டே தெருவில் ஓடினான். இளையவன் முதுகில் பளபள வென்று அறைகள் கொட்டின; அவன் கதறிக் கொண்டே தாயிடம் ஓடினான். குழந்தை ஞானத்தைக் கூடப் பரசுராமன் பதம் பார்த்திருப்பான்; ஆனால் அது முன்னாலேயே தாயின் இடுப்பில் ஏறிக் கொண்டு விட்டது.

"குழந்தைகளாம் கொட்டான்கள்! எனக்கென்று எங்கிருந்து வந்தனவோ!"

லக்ஷ்மி சீறினாள்: "தென்னை மரத்தில் தேள் கொட்டப் பனை மரத்தில் நெறி கட்டிய கதையாய், யார் கோபத்தை யாரிடம் காட்டுகிறீர்கள்! குடும்பத்தைக் காப்பாற்ற வக்கில்லாவிட்டால், குழந்தை களைப் போட்டா கொல்லவேண்டும்.....!"

அவள் மேலே பேசாமல் இருப்பதற்குள் 'விண்'ணென்று ஓர் அறை அவள் வாயை மூடியது: "வாயே வாயே, இடம்கொடுத்தால் மடியா கடிக்கிறாய்! மூடு வாயை!"— இரண்டாவது முறை அறைய ஓங்கிய அவன் கை தானாகக் கீழே இறங்கி விட்டது. இருந்தாலும் விட்டுக்கொடுக்க விரும்பாதவனாய், "எக்கேடு கெட்டுத் தொலை!" என்று சொல்லிக் கொண்டே வெளியில் பாய்ந்து சென்றான் அவன்.

எல்லாம் மின்னல் வேகத்தில் நடந்து விட்டன. கலியாணம் செய்துகொண்ட நாள்முதல் இன்றுவரை அவன் அவளை அடித்ததே இல்லை. இன்றைய புது அனுபவம் அவளைப் பிரமிக்கச் செய்து விட்டது. அங்கேயே, அப்படியே உட்கார்ந்து அழத் தொடங்கினாள் அவள்.

4

அவள் ஆறு குழந்தைகளைப் பெற்றவள்; உடம்பில் ரத்த பலம் இல்லாதவள்; அவளுடைய மிருதுவான கன்னத்தில் பரசுராமன் ஓர் அறை அறைந்து விட்டாலும் இரண்டாவது அறை விழுவதற்குள் அவன் கை வலித்தது. வெளியில் வந்து விட்டான். அவனுக்குப் பச்சாத்தாபம் உண்டாயிற்று. 'பாவம், அவள் அழுது கொண்டிருப்பாள்' என்று வருத்தமும் பட்டான். ஆயினும் அந்த அறை காரணமாக அவனுக்கும் சரி, அவளுக்கும் சரி, பிற்காலத்தில் மிகவும் நிம்மதி உண்டாகலாம் என்பதை நினைத்தபோது அவனுக்குச் சந்தோஷமும் தழைத்தது.

அவன் பிறவிக் குமாஸ்தா அல்ல; எப்போதும் எளிய வாழ்க்கையில் வாழ்ந்து வந்தவனும் அல்ல.

அவனுடைய தகப்பனார் பெரிய மளிகைக் கடை ஒன்று சொந்தத்தில் வைத்து, அந்தஸ்தாய் வியாபாரம் நடத்திக்கொண்டிருந்த காலத்தில் அவனை மிகவும் செல்லமாய் வளர்த்து, 'ஸ்கூல் பைனல்' வரை படிக்கவும் வைத்தார். அவர் அவனிடம் அளவுக்கு மீறி அபிமானம் வைத்ததற்குக் காரணம், அவருக்குப் பிறந்த எட்டுக் குழந்தைகளில் மிஞ்சி நின்றவன் அவன் ஒருத்தன்தான். மற்ற எல்லோரும் ஜனிக்கு முன் பட்டார்கள்; அல்லது பிஞ்சிலேயே உதிர்ந்துவிட்டார்கள். ஆகையால் அவர் அவன் மீது உயிரையே வைத்திருந்தார் என்று சொல்லலாம். ஆனால், துரதிர்ஷ்டவசமாக, அவன் 'ஸ்கூல் பைனல்' படித்து முடித்த சமயத்தில் அவருடைய வியாபாரம் நொடித்தது; அவரும் மனம் நொடித்து மரணம் அடைந்தார்.

பரசுராமன் சாமர்த்தியமாகவே குடும்பப் பொறுப்பை ஏற்று நடத்தினான். தந்தை பட்ட கடன்களை எல்லாம் அடைத்தான். அவனிடம் மிச்சப்பட்டது, நான்காவது வகுப்பில் படிக்கும்போது கலியாணம் செய்துகொண்ட மனைவி மட்டும்தான். அவன் உள்ளூரிலேயே ஒரு மளிகைக் கடையில் குமாஸ்தா வேலையில் அமர்ந்து, தன் புத்திக் கூர்மையாலும், நேர்மையாலும் முதலாளியின் அன்புக்குப் பாத்திரம் ஆகி, ஐம்பது ரூபாய் சம்பளம் என்ற பெரிய கோட்டையையும் பிடித்து விட்டான். அந்த சமயத்தில் அவனுடைய முப்பதாவது வயதுக்குள் ஒன்று ஒன்றாக ஆறு குழந்தைகளுக்குத் தகப்பனும் ஆகிவிட்

டான். ஆறில் மிச்சம் மூன்று; பாக்கி மூன்றும் அகாலத்தில் காலம் ஆயின.

நிதானமான பழக்க வழக்கங்களில் தயாரான அவன், தன் குறைவான சம்பளத்தில், கௌரவம் குன்றாமல், கடனும் படாமல் குடும்பத்தை நிர்வகித்து வந்தான். அவனுடைய இந்த அமைதியான வாழ்க்கையில், எங்கிருந்தோ வந்த ஓர் அதிர்ஷ்டம் புகுந்து குலைக்கவும் ஆரம்பித்தது.

அவனுக்குத் தாய் மாமன் ஒருவர்; பணக்காரர்; இருபது இருபத்தைந்து ஆயிரத்துக்குச் சொத்திருக்கும். வீடு வாசல், சொந்த சுதந்திரம் எல்லாம் இருந்த அவருக்கும் ஒரு குறை இருந்தது; புராணப் பிரசித்தமான பிள்ளையில்லாக் குறைதான் அது. க்ஷேத்திராடனம், சுமைதாங்கி ஸ்தாபனம், அரச மரம் சுற்றல் முதலிய பல உபாயங்களின் மூலம் முயன்றும், அக் குறை தீரவில்லை. கடைசியில் அவருடைய வயது நாற்பத்தைந்தைத் தாண்டி, உடம்பில் தென்பும் குறைந்து விடவே அவருக்குக் குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கையும் குறைந்துவிட்டது. இனி யாருடைய குழந்தையையாவது தத்து எடுத்துக் கொள்ளவேண்டும் என்று அவர் நிச்சயித்த போது அவருடைய பார்வை மருமான் பரசுராமனின் இரண்டாவது மகன் ராஜா மீது விழுந்தது.

அவர் அவனுக்குத் தாய் மாமன் ஆனாலும் இரு குடும்பங்களுக்கும் இடையில் பந்தம் குறைந்து வெகு காலம் ஆகிவிட்டது. பரசுவின் தந்தை உயிருடன் இருந்த காலத்திலேயே விரோதம் புகைந்து கொண்டிருந்தது. அவர் தம் மைத்துனனிடம் கடனும் கொஞ்சம் வாங்கியிருந்தார். ஊராருடன் சேர்ந்து அவரும் பரசுராமனின் தகப்பனார் மீது வியாஜ்யம் போட்டு, வட்டிப் பணத்திலும் தம்பிடி தள்ளுபடி செய்யாமல் பாக்கி பூராவும் வசூல் செய்துகொண்டார். இதனால் இரு குடும்பங்களுக்குள் பேச்சு வார்த்தையும் நின்றுவிட்டது.

பரசுராமன் தலையெடுத்த பிறகு இந்த விரோதம் ஓரளவு மறைந்துவிட்டதென்றே சொல்லலாம். சுபாவத்திலேயே பரசுராமன் மிகவும் சாது; யாரிடமும் விரோதம் பாராட்ட மாட்டான். ஆகவே எப்போதாவது மாமாவைக் கண்டால் க்ஷேம லாபங்களை விசாரிப்பதும், ஏதாவது விசேஷ காலத்தில் அவர் வீட்டுக்குச் சென்று வருவதுமாய் அவருடன் சகஜமாய்ப் பழகி வந்தான்.

ஆகவே, அவர் அவனுடைய மகனை ஆயிரம் ரூபாய் கொடுத்து ஸ்வீகாரம் செய்துகொள்வதாய்க் கூற அவன் சம்மதத்தைக் கேட்டபோது அவன் மிகவும் மகிழ்ச்சி கொண்டான். அப்படிச் செய்வதன் மூலம் அவர் தங்களுக்கு இழைத்த அநியாயம் நிவர்த்தி ஆவதுடன், அவனுடைய கஷ்டங்களுக்கும் விமோசனம் ஏற்படும் என்று நம்பினான். அந்த அதிர்ஷ்டத்தை ஏன் உதற வேண்டும்? கொஞ்சமும் தயங்காமல் தன் சம்மதத்தைத் தெரிவித்து விட்டான்.

ஆனால் வீட்டில் லக்ஷ்மி அவனுடைய எண்ணத்தை ஆதரிக்காதது மட்டும் அல்ல; உக்கிரமாக எதிர்க்கவும் தொடங்கினாள். அவள் சிறுமியாயிருந்தபோதே குடும்ப பாரத்தை ஏற்றவள். மாமனார் வாழ்ந்த வாழ்வைக் கண்ணால் கண்டவள்; அவளுக்குத் தன் மாமனாரிடம் மிகுந்த பக்தியும் இருந்தது. அவர் அவமானத்தால் குன்றிக் குமுறி, தெருவில் தலை நீட்டுவதற்கும் பயந்து, வீட்டிலேயே ஒடுங்கி உயிர் விட்டதற்குக் காரணம், அந்த 'தாய் மாமன்' தான் என்று அவள் உறுதியாக நம்பினாள். ஆகவே தன் மகனை அவருக்குத் தத்துக் கொடுக்க அவள் சிறிதும் இஷ்டப்படவில்லை.

அதற்கு மற்றொரு காரணமும் இருந்தது. பரசுராமன் பரம்பரை ஒற்றைப் பிள்ளைப் பரம்பரை. அவன் தகப்பனுக்கு பட்டுக் குழந்தைகள் பிறந்து, கடைசியாக எஞ்சியவன் அவன் ஒருவன் தான். அவனுடைய பாட்டனார் பதின்மூன்று குழந்தைகளைப் பெற்றும் இறுதியில் பிழைத்தவர் பரசுராமனின் தந்தை மட்டுமே. அவருடைய தந்தையைப் பற்றியும் இப்படித்தான் சொல்லுகிறார்கள். பரசுவுக்கும் பிறந்தது ஆறில் மூன்று தொலைந்து விட்டன; விதியை யாரால் அறிய முடியும்!

பரசுராமன் எவ்வளவோ சொல்லிப் பார்த்தான், அவளுடைய நம்பிக்கை மூடத்தனமானது என்று. ஸ்வீகாரம் கொடுப்பதால் தங்கள் குடும்பமும் நல்ல நிலைக்குத் திரும்பும், பையனும் ஸ்ரீமானாய் வாழ்வான் என்பதை விளக்கினான். என்ன சொன்னாலும் அந்த யோசனைக்கு இணங்க முடியாது என்று அவள் கூறிவிட்டாள். அவன் மிகவும் நிர்ப்பந்தம் செய்தபோது, அவள் கிணறு, குளம், ஆறு, ஏரி ஏதாவது ஒன்றில் ஐக்கியம் ஆவதாய்ச் சொல்லவே அவன் அவளை மேலும் வற்புறுத்தாமலிருந்து விட்டான்.

அவனுக்கு மாமா வீட்டுப் பக்கம் போகவும் வெட்கமாயிருந்தது. ஆறுமாதமாய் அவர் கண்ணிலும் படவில்லை. அவரிடம் வாக்குக்கொடுத்துவிட்டு அதன்படி செய்ய முடியவில்லை என்கிற வெட்கம் ஒரு காரணம்; வந்த அதிர்ஷ்டத்தை வீணாக்கினோமே என்கிற வருத்தம் இன்னொரு காரணம்.

இரண்டாவது காரணம், அவனுக்குள் நிரந்தரமாய் வேலை செய்தது. இதுவரை திருப்தி அளித்துவந்த குமாஸ்தா வேலையில் அலுப்பு தோன்றிவிட்டது. கைகட்டிச் செய்யும் சேவகம்தானே! சுதந்திரமாய் என்ன செய்ய முடியும்! ஒரு வேளை சினிமாவுக்குப் போனாலும் கால் வயிற்றுச் சோற்றைக் குறைக்கவேண்டும்; கொஞ்சம் ருசியான பொருளை இச்சித்தால், நாக்கு குளிப்பதற்கே ஒன்றும் கிடைக்காது; வெள்ளை வேஷ்டி ஒன்றுக்கு இரண்டாக ஆசைப்பட்டால் வீட்டுக்காரரிடம் பல்லை இளிக்க வேண்டும். ஆகையால் ஆசாபாசம் இல்லாத ஞானி போல ஒரு நிர்ப்பந்த வாழ்க்கையை அவன் நடத்தவேண்டியிருந்தது.

இவ்வளவுக்கும் அவனுக்கு உள்ள தொழில் திறமை அபாரமானது. மளிகைச் சாமான்களை எந்த எந்தப் பருவங்களில், எந்தெந்த இடங்களில் சல்லிசாய்க் கொள்முதல் செய்யலாம் என்பதை அவனைப்போல் அறிந்தவர்கள் மிகவும் சொற்பம்; எந்தச் சரக்குடன் எந்தப் பொருளைக் கலப்படம் செய்யலாம் என்பதைப்பற்றி அவன் பெரிய ஆராய்ச்சியே செய்திருந்தான்; எந்தக் காலத்தில் எந்தச் சாமானைப் பதுக்கி வைத்தால் லாபகரமாயிருக்கும் என்பது அவனுக்குத் தலைகீழ்ப் பாடம். எல்லாவற்றுக்கும் மேலாக வருமானவரி ஆபீஸின் கண்களில் மண்ணைப் போட்டு, லாபத்தைக் குறைத்துக் காட்டும் கணக்குத் தயாரிப்பதில் அவன் ஒரு புலி. அவனுடைய இந்தத் திறமை முழுவதும் யாரோ ஒருவனுக்காகப் பயன்படுகிறது. அதைத் தன் சொந்த நலத்திற்காக உபயோகித்துக்கொள்ள ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது; அதை அவன் மனைவி அழிக்க முயன்றாள்.

சொந்தக்கடை, சுகவாழ்வு என்ற கனவு அவன் மனத்தைத் தட்டிக்கொடுத்தது. மனைவியின் விருப்பத்துக்கு விரோதமாய் அவன் குமாரனை ஸ்வீகாரம் கொடுக்கத் துணியவில்லை. கடைசியில், கடுமையான யோசனைகளின் விளைவாக அவன் ஒரு தீர்மானத்துக்கு வந்தான்.

அதற்கிணங்க, ஐம்பது ரூபாய்ச் சம்பளத்தில் நூறு ரூபாய் வாழ்க்கை நடத்தத் தொடங்கினான். சம்பளம் வாங்கியவுடன் ஹோட்டல், சினிமா, நாடகம் என்று குஷாலாய்ச் செலவழித்தான். கடனே வாங்காத அவன் முதலாளியிடம் 'முடை, முடை' என்று கடன் வாங்கி அது இருநூறுக்கு மேல் சென்றது. வீட்டிலும் எதிலும் சிரத்தை ஏற்கவில்லை. சிரமங்களைக் குவியலாய்ப் போட்டுக் காண்பித்தால்தான் மனைவி வழிக்கு வருவாள் என்பதுதான் அவன் திட்டம்; திட்டத்தை நிறைவேற்றுவதற்காக அவன் பெரியதொரு நாடகமே ஆடவேண்டியிருந்தது; சில சமயம் அவன் மனம் முரண்டது; இருந்தாலும், அவன் விட்டுக்கொடுக்கவில்லை.

கணவனுடைய செலவுகள் குடும்பத்தை அதோகதிக்கு இழுத்துச் செல்வதைக் கண்டு கவலை கொண்டாள் லக்ஷ்மி. அவனிடம் இதைப்பற்றி ஏதாவது கேட்டால், அவன் வழக்கமில்லாத வழக்கமாய்ச் சிடுசிடுவென்று எரிந்து விழவே ஆரம்பித்தான்.



இந்த விபரீத நாடகம் தான் அன்று ஒரே உச்சநிலைத் தொட்டு, லக்ஷ்மியின் கன்னத்தில் அறையாகவும் விழுந்தது.

5

**ப**ராசராமன் அதிக நேரம் வெளியில் தங்கவில்லை. பரிவை என்றுமே அடைந்திராத அவனுடைய உள்ளுணர்வு அந்த நாடகத்தின் முடிவைத் தீர்மானித்துத் தூண்டியது. அவன் திரும்பிய சமயம் வீட்டில் அமைதி நிலவியது. குமாரன், ராஜாராமன் இருவரும் புஸ்தகங்களைக் கையில் வைத்துக் கொண்டு படிப்பது போலப் பாசாங்கு செய்து கொண்டிருந்தனர். குழந்தை தூளி பக்கத்தில் கிடக்க, லக்ஷ்மி சமையலறையில் படுத்திருந்தாள். அவளிடம் அழுகை இப்போது தான் விடை பெற்றது என்பது அவள் முகத்தினின்றும் நன்றாகத் தெரிந்தது.

பராசராமன் அவள் தலைமாட்டில் உட்கார்ந்து கொண்டான். கொஞ்ச நேரம் அவனும் பேசவில்லை. அவளும் பேசவில்லை; அவள் பேசுவாள் என்றும் தோன்றவில்லை; ஆகையால் அவனே முதலில் பேச ஆரம்பித்தான்.

"லக்ஷ்மி, அறை பலமாய் விழுந்து விட்டதா?"—அவள் அசையவில்லை.

"அறைய வேண்டும் என்ற எண்ணமே எனக்கு இல்லை. காரமாய்ப் போகிற கோபத்தில் ஒன்றும் புரியாமல் செய்து விட்டேன்."

அவனை ஏறிட்டுப் பார்த்து விட்டு அவள் ஒருக்களித்துப் படுத்தாள். அவளுடைய பார்வையில் இருந்த அனுதாபம் அவனுக்குத் தன் வெற்றியில் நம்பிக்கை அளித்தது.

"லக்ஷ்மி, உனக்கு என் மேல் கோபமாயிருக்கும். நமக்குக் கல்யாணம் ஆகி இவ்வளவு காலமாய் உன்னை நான் அடித்ததுண்டா! எழுந்திரு."

அவன் அவளைத் தூக்கி உட்கார வைத்தான். அவளுடைய இந்தப் பரிவினால் அவளுக்கு மீண்டும் அழுகை வந்தது.

"பார்த்தாயா, பார்த்தாயா, இன்னும் அழுகிறாயே!" என்று அவன் மிகவும் கெஞ்சினான்.

"நீங்கள் ஏன் இப்படி மாறி விட்டீர்கள்!" என்றாள் அவள் தேம்பிக் கொண்டே.

"இல்லை, லக்ஷ்மி, இனிமேல் நான் சீட்டாடத் தொடப் போவதில்லை. மேலே, ஹோட்டல் பக்கம் போக மாட்டேன். இனிமேல் பாரேன்!"

அவன் சொன்ன விதம், முதலிலேயே குழைந்து விட்ட அவள் மனத்தை மேலும் இளக்கி விட்டது. சினம் மறைய இரக்கம் தலை தூக்கியது.

'அவன்தான் என்ன செய்வான்! விவரம் தெரிந்த காலம் முதல் அவனுக்கு இந்தப் பாடுதானே! அவனிடம் அவள் வைத்த அன்பிலும் ஆதரவிலும் பாக காண முடியுமா! இடைவிடாத தொல்லைகளுக்கு இடையில், அவனுக்கும் அலுப்பு ஏற்பட்டு விட்டால் அதில் தவறு ஒன்றும் இல்லை' என்று நினைத்தாள் அவள்.

"லக்ஷ்மி நீ சொன்னது ரொம்ப உண்மை. எனக்கு என்னவோ பைத்தியம்தான் பிடித்து விட்டது. நான் முதலாளியிடம் அப்படி யெல்லாம் பேசியிருக்கக் கூடாதுதான். எந்த மனிதன் கடை முதலாளியாவது குமாஸ்தாவுக்கு ஐம்பது ரூபாய் சம்பளம் தருகிறான்! அதை எண்ணாமல் அவரிடம் தாறுமாறாகப் பேசி விட்டேன்......"

"அவருக்கு எவ்வளவு பாக்கி!"

"இருநூற்றுச் சில்லறை இருக்கும். எவ்வளவாவது இருக்கட்டும். காலையில் அவர் வீட்டுக்குச் சென்று, காலில் விழுந்து கெஞ்சி மன்னிப்புக் கேட்கிறேன். இந்த வேலை போய் விட்டால் நம் கதி அதோ கதி ஆகிவிடும்."

எதையோ யோசித்துக் கொண்டிருந்த லக்ஷ்மி சொன்னாள்: "இல்லை, இனிமேல் நீங்கள் அவரிடம் போவது தப்பு."

"தப்போ, சரியோ, வேறு வழி! வீட்டுக்காரரிடம் வேறே நாய் போல விழுந்து விட்டேன். அவரையும் சமாதானம் செய்ய வேணும்."

"எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது" என்றாள் அவள் நிதானமாய்.

"என்ன அது?" என்றான் அவன் ஆவலாய்.

"நீங்கள் இப்படிக் கஷ்டப்படுவதை என்னால் சகிக்க முடியவில்லை. சுமக்க முடியாத அளவுக்குச் சுமந்தால் இடுப்பு ஒடிந்து விடும். நீங்கள் சொன்னதுபோல் ராஜாவை உங்கள் மாமாவிடம் தத்து கொடுத்து விடுவோம். கையில் ஆயிரம் ரூபாய் கிடைக்கும். கடனை அடைத்து விட்டுச் சின்னக்கடை ஒன்று வைத்துக் கொள்ளலாம். அப்புறம், நம் அதிர்ஷ்டப் படி நடக்கட்டும்!"

அப்பாடா! பராசராமனின் நாடகம் அற்புதமான வெற்றி பெற்றது. ஆனாலும் அவன் நிஜக்கிட்டவன்போல் சொன்னான்: "அது சரி, லக்ஷ்மி, உனக்கு மனம் இல்லாத காரியத்தைச் செய்ய எனக்கு இஷ்டம் இல்லை."

"மனம் ஒப்பித்தான் சொல்லுகிறேன். மாமா என்றால் எனக்கு ஆத்திரம் பொத்துக் கொண்டு வருகிறது. இருந்தாலும் எவ்வளவு காலம்தான் இப்படி இருப்பது! அவர் நம் பணத்தையும் சொத்தையும் பறித்ததற்குப் பதிலாக நம் ராஜா அவர் சொத்தை ஆளட்டும்!"

"இது என்ன லக்ஷ்மி, திடீரென்று! எனக்கு ஒன்றும் பிடிக்கவில்லை. முதலில் அவர் சொன்னபோது எனக்கும் கொஞ்சம் ஆசை தட்டியது. அப்புறம் நீ சொன்னது சரியென்று பட்டு அந்த எண்ணத்தையே கைவிட்டு விட்டேன். நீ என்னடா என்றால்......"

"சரி, நீங்கள் இப்போது மறுக்க ஆரம்பித்து விடவேண்டாம். நல்ல காலத்தை அதிக காலம் ஒத்திப் போடக்கூடாது."

"உம்...ம்..." என்று அவன் தயங்கினான்.

"ஒன்றும் யோசிக்காதீர்கள். ஒவ்வொருத்தர் பட்டினிக்கும் பயந்து ஒரு ரூபாய்க்கும் இரண்டு ரூபாய்க்கும் குழந்தையை விற்கிறார்களாம். நம் குழந்தை நம் கண் முன்னால் ஸௌக்கியமாய் இருக்கும். நம் குடும்பமும் ஸௌகரியம் அடையும். நாம் பட்டது போதும்."

"நான் இனி மேல் என்ன சொல்ல இருக்கிறது! உன் இஷ்டம்!...... டேய் ராஜா, அந்தப் பாப்லின் ஷர்ட்டைப் போட்டுக் கொண்டு புறப்படு."

அழகாகவும், சுறுசுறுப்பாயும் வந்த ராஜாவை அழைத்துக் கொண்டு மாமா வீட்டுக்குப் புறப்பட்டான் பராசராமன்.

6

"**ரா**ஜா, இனி நீ ராஜாதான்!" என்று நினைத்தான் பராசராமன்.

"ராஜா, மாமா வீட்டுக்குப் போனதும் என்ன செய்ய வேண்டும், தெரியுமா! மாமியிடம் ஓடிப்போய், 'அம்மா' என்று கட்டிக் கொள்ள வேண்டும், என்ன!"

"வெட்கமாயிருக்குமே அப்பா!"

"என்னடா வெட்கம்! இனிமேல் மாமி தான் உனக்கு அம்மா; மாமாதான் அப்பா."

சிறுவனுக்குச் சரியாய்ப் புரியவில்லை; "நீயும், அம்மாவும்......"

"நாங்களும் இருப்போம். மாமா, புது அப்பா; மாமி புது அம்மா. மாமியை அம்மா என்று கட்டிக் கொள்வாயா!"

ராஜா தயக்கத்துடன் ஒப்புக் கொண்டான். இருவரும் மாமா வீட்டை அடைந்தபோது, இரவு எட்டரை மணி இருக்கும். ஜாஜ்வல்யமான மின்சார விளக்கின் பிரகாசத்தில் அந்தப் பெரிய வீடு ஒரு காலத்தில் தன் ஆட்சியின் கீழ் வரும் என்று நினைத்தபோது அவனுக்கும் பெருமிதம் உண்டாயிற்று. மாமா பெட்டியடியில் உட்கார்ந்து கையிருப்புப் பணத்தை எண்ணிக் கொண்டிருந்தார்.

"அட, பராசராமனா! வா, அப்பா வா. சௌக்கியம்தான் இருக்கிறாயா! ஆறு மாசமாய் ஆள் இந்தப் பக்கம் தலை காட்டவில்லை; எங்கேடா போயிருந்தாய்!"

"ராஜா, நீ உள்ளே மாமியிடம், போ" என்று அவனை அனுப்பி விட்டு, மாமனுடன் ஒண்டிக் கைகட்டி நின்று கொண்டு பராசராமன் சொன்னான்: "ஸௌக்கியந்தான் இருக்கிறேன் மாமா; கடையிலே வேலைத் தொந்தரவு ஜாஸ்தி. ஒழிவே இல்லை."

"ஆளைக் காணவே காணோமே என்று நாளைக்கு உனக்கும் லக்ஷ்மிக்கும் சொல்லி அனுப்பலாம் என்றிருந்தேன்; நல்லவேளை, நீயே வந்து விட்டாய்."

பராசராமனின் ஆனந்தம் கரையை உடைத்துக் கொண்டது. அன்று மாலையிலிருந்து அவனுடைய அதிர்ஷ்டம் ஆரம்பித்து விட்டது.

"பாரு, லக்ஷ்மியிடம் சொல்லு. அவள் ரொம்பவும் பிடிவாதக்காரி. போனதை எல்லாம் மறந்து நாம் ஒரு குடும்பம்போல் ஒற்றுமையாய் இருக்க வேண்டும். எனக்கும் வேறு யார் இருக்கிறார்கள்!"

பராசராமனின் இதயமும் சந்தோஷத்தால் துள்ளி வெளியில் குதித்து விடும் போல் இருந்தது: "இல்லை மாமா, லக்ஷ்மி முன்னைப் போல இல்லை" என்று அவன் வாயிலிருந்து வந்த சொற்கள் நிறைந்தன.

"இன்னும் மூன்று நாள்தானே இருக்கிறது! நீங்கள் எல்லோரும் நாளையிலிருந்தே இங்கே வந்து விட வேண்டும்!"

"என்ன விசேஷம் மாமா!" என்றான் பராசராமன், ஒன்றும் தெரியாதவன் போல்; அவர் வாயிலிருந்தே விஷயம் வெளிவரட்டுமே என்று அவன் நினைப்பு.

"என்ன விசேஷமா! உனக்குத் தெரியாதா! நீ இந்தப் பக்கம் வந்தால்தானே! உங்கள் மாமிக்கு வருகிற வியாழக்கிழமை வளைகாப்பு" என்றார் மாமா.





## அஜாக்ஸ் உப்புத்தாள்கள்

நேர்த்தியான நகாஸ் அளிப்பது

ப்ளிண்ட் (ஸாண்ட்)
கார்னெட், எமெரி
அஜாக்ஸைட் பேபர்
க்ளாத், டிஸ்க்ஸ்
ரோல்ஸ், பெல்ட்ஸ்
டேப்ஸ் முதலியன.

★

## பாதுகாப்புச் சின்னம்




அநாதி காலந்தொட்டு
அரசுக்குப் பாதுகாப்பு
அளிப்பது அரண்,
அகழ், காவற்கூடங்கள்.
இன்று மிகவும் விலை
யுயர்ந்த ஆடையாபர
ணங்கள், தஸ்தாவேஜி
களுக்குப் பாதுகாப்பு
அளிப்பது அஜாக்ஸ்
எஃகு சாமான்கள்.

# அஜாக்ஸ் பிராடக்ட்ஸ் லிமிடெட்

106, அரண்மனைக்காரத் தெரு, சென்னை - 1

பிராஞ்சு ஆபீஸ்கள்:

பம்பாய்: யுனைடெட் இந்தியா பில்டிங்ஸ், ஸர் பிரோஜா மேதா ரோடு - கோயமுத்தூர்: 14/290, ராஜா தெரு

மானேஜிங் ஏஜண்டுகள்: முருகப்பா அண்ட் ஸன்ஸ்

# கொரியாவும் காஞ்சீபுரமும்

ஜி. வெங்கடாசலம்

★ ★ ★ சென்ற ஆண்டு சிறு கொரியா தேசத்தின்மீது அமெரிக்கா, பிரிட்டன் முதலிய பல நாடுகளைச்சேர்ந்த யு.என்.ஓ. சைன்யங்கள் கடின பயங்கர ஆயுதங்களுடன் படை எடுத்துச் சென்று வெற்றி பெற்றன அல்லவா?

பல நூறு வருஷங்களுக்கு முன் இந்தியாவிலிருந்து ஒரு படை கொரியாவுக்குள் நுழைந்தது. அந்தப் படை ஆயுதந்தாங்கிய சிப்பாய்ப் படையில்லை. அன்பையும் அஹிம்சையையும் சத்தியத்தையும் ஆயுதமாகக் கொண்ட படை. அந்தப் படை கொரியா பூராவையும் பிடித்து ஜயக் கொடியை நாட்டி அழியாத அன்பையும் கலைகளையும் ஸ்தாபித்தது.

அந்தப் படையில் வந்த காஞ்சீபுரத்தார் ஒருவரும் இருந்தார். அவர் 'போதி தர்ம' என்னும் புகழ் வாய்ந்த பெயருடன் புத்த மத சரித்திரத்தில் விளங்குகிறார். சுமார் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் இந்தப் புத்த சந்நியாசி காஞ்சிபுரத்திலிருந்து உலக யாத்திரை கிளம்பினார். சீனம், ஜப்பான், கொரியா முதலிய நாடுகளுக்குச் சென்றார். பாலி மொழியிலிருந்த புத்த மத நூல்கள் பலவற்றை மேற்கூறிய தேசங்களின் மொழிகளில் பெயர்த்து எழுதினார். அந்த நாடுகளில் பல இடங்களில் புத்த மடங்களை ஸ்தாபித்தார். பௌத்த ஆலயத்தை நிறுவினார். அவ்வாறு போதிதர்மர் கொரியாவின் மலை உச்சியில் ஸ்தாபித்த மடங்களில் ஒன்றுக்கு இந்தக் கட்டுரையின் ஆசிரியர் ஸ்ரீ ஜி. வெங்கடாசலம் சில வருஷங்களுக்கு முன்பு சென்றிருந்தார். அங்கு அவர் பெற்ற அநுபவங்களைக் கீழே காணலாம். ★ ★ ★

ஜப்பான் தேசத்திலுள்ள ஒடானி சர்வகலாசாலையார் இந்தியக் கலாசாரம் பற்றிச் சொற்பொழிவு செய்வதற்காக என்னை 1935-ம் ஆண்டில் அழைத்திருந்தார்கள். அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு சீனா, கொரியா முதலிய கீழ் நாடுகளுக்கும் நான் சென்றிருந்தேன். கொரியாவில் என்றும் மறக்க முடியாத சில அநுபவங்களைப் பெற்றேன்.

கொரியாவின் வடகிழக்குப் பகுதியில் உள்ள காங்கோ மலைகள் இந்த உலகிலேயே அபூர்வமானவை. அவைகளை வைரமலைகள் என்பார்கள். அழகிற்கும், உன்னதமான இயற்கையழகுக்கும் பெயர்போனவை. இயற்கையின் தனி அழகிற்கும், பெருமைக்கும் ஒப்பிடக்கூடிய வெகு சில மலைகளே உலகில் இருக்கின்றன. இவ்வளவு குறுகிய விஸ்தீரணத்தில் பிரம்மாண்டமான இயற்கைக் காட்சிகளும், பசுமையான பள்ளத்தாக்குகளும் அடங்கியுள்ள மலைப் பிரதேசங்களைக் காண்பது அரிது. நீண்டு வளர்ந்த பைன் மரங்களும், குளிர்ந்த தடாகங்களும், வெள்ளிக் கதிர்கள் போன்ற நீர் வீழ்ச்சிகளும் அவ்விடத்தை ஒரு சுவர்க்க பூமியாக்கி விடுகின்றன.

காம்பைச் சுற்றி இருக்கும் மலர்கள்போல், காங்கோமலை உச்சிகள் மிகவும் அழகாகவும், கம்பீரமாகவும் பரவியிருக்கின்றன. பறவைகள் போலவும், மிருகங்கள், மனிதர்கள் போலவும் தோற்றமளிக்கும் ஆயிரக் கணக்கான உச்சிகள் கற்பனையையே திகைக்க அடிக்கும். இயற்கை மிகவும் சிரமப்பட்டு மலைக் குன்றுகளையே சிற்பங்களாக நிர்மாணித்ததுபோல் இருக்கிறது இக்காட்சி.

இமயமலையின் பள்ளத்தாக்குகளை போன்ற இந்தப் பிரம்மாண்ட மலைக் காட்சியின் மத்தியில் உலகத்திலேயே மிகவும் புராதனமான பௌத்தக் கோவில்களையும், மடங்களையும் காணலாம். இங்கே உள்ள பௌத்தாலயம் ஒன்றைப் பார்த்தபோது என் மெய் சிலிர்க்கப் பரவசம் அடைந்தேன்.

காங்கோ மலைகளிலேயே மிகவும் கம்பீரமான, 'இமெங்கான்', 'சான் செங்கான்' என்ற இரண்டு சிகரங்கள் மீதும் ஏறி, 'சிங்கோயி—ஜி' என்ற கோவிலில் அன்றைய இரவைக் கழித்தேன். இந்தக் கோவில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்டது. 'அன்சேரி' என்னும் கிராமத்தின் அருகிலிருக்கிறது. அங்கிருந்து மறுநாள் காலை மலைமீது ஏறினேன்.

"நாளைக்கு 'சேயோஜி' மடத்திற்குப் போகலாம். இங்கிருந்து ஒரு நாளைய பிரயாணம்தான்" என்று என்னுடன் கூட வந்தவர் சொன்னார். அவர் ஜப்பான் சர்வ கலாசாலையைச் சேர்ந்த கொரிய மாணவர். அவரும் அவ்விடங்களில் கால் நடையாக யாத்திரை செய்து வந்தார்.

"அவ்விடத்தின் விசேஷமென்ன?" என்று கேட்டேன்.

"எங்கள் நாட்டிலேயே அது மிகப் புராதனமான பௌத்த மடம். பல நூற்றாண்டுகளுக்கு முன் ஒரு இந்திய புத்த சன்னியாசியால் ஸ்தாபிக்கப்பட்டது" என்றார்.

செங்குத்தான ஏற்றமானதால் காலையிலேயே கிளம்பினோம். கதிரவனின் செங்கிரணங்கள் இன்னும் வீசத் தொடங்கவில்லை. வெளியில் நடுக்கும் குளிர்; வழி முழுவதும் தலைக்கு மேல் குடைகள்போல் கவிழ்ந்திருந்த பைன் மரங்கள் அடர்ந்த காடுகள். அங்குள்ள சிறிய குளிர்ந்த

கொரியாவில் உள்ள ஒரு பௌத்த ஆலயம்





காங்கோ வரை மலைகளின் கம்பீரமான சிகரங்கள்

தடாகத்தில் மரக்கிளைகளின் நிழல்கள் படிந்திருந்தன. ஏற ஏற மலைமுச்சிகளின் இடைவெளிகள் தோன்றின. எங்களைச் சுற்றி மலை அருவிகளின் சத்தங்கள் கோஷமிட்டுக் கொண்டிருந்தன. இக்காட்சிகளின் இன்பமும் அழகும் வர்ணனைக்கெட்டாதவை.

செங்குத்தான மலைப்பாதை நடுவில், பழைய ஆசிரமம் ஒன்று தாம்பிர ஸ்தம்பத்தின் பலத்தால் தாங்கப்பட்டு நின்றது. இந்த ஆசிரமத்தில் பகற் பொழுதைக் கழித்தோம். மேலே போகப் போக, ஏறுவது சிரமமாக இருந்தது. இலங்கையிலுள்ள 'ஆதாம் உச்சி'யைப்போல் இங்கும் இரும்புச் சங்கிலி, ஏணிகளின் உதவியால்தான் ஏறவேண்டியிருந்தது.

தொடர்ந்து ஏறிச் செல்லும்போது ஆகாயத்திலுள்ள காற்றெல்லாம் பலமாக வீசி எங்களைத் தாக்கியது. மலை உச்சியில் ஒரு இடத்தை அடைந்தோம். அங்கிருந்து மிகவும் அபூர்வமான காட்சியைக் கண்டோம். கரடு முரடான மலைமுச்சிகள், கீழேயுள்ள பறவைகளைக் கொத்திக் கொண்டு போக மரத்தின் மேல் காத்திருக்கும் பெரிய கழுகுகளின் தோற்றத்துடன் காட்சியளித்தன. உருண்டு அழகான உருவங்கொண்ட பாறைகள் பெண்மைப் பொலிவுடன் விளங்கின.

பல சிக்கல்களின் நுழைவிடையே, மரஞ் செடி கொடிகள் அடர்ந்த கணவாய்களின் வழியாக இறங்கி மாலையில் சூரியாஸ்தமன வேளையில் நாங்கள் சேரவேண்டிய இடத்தை அடைந்தோம். அந்தி வேளையில் அந்த சேயோஜி மடமும், அதில் உள்ள தூண்களும், சிற்பங்களும், ஒரு மாயமாளிகை போல் காணப்பட்டன. அவ்விடத்தின் அமைதியும், இருண்ட காடுகளும், அடர்ந்த மரங்களடங்கிய செங்குத்தான பாறைகளும், எங்கள் மனத்தைக் கவ்விக் கவர்ந்தன. அங்கே சூழ்ந்திருந்த மாயக்காட்சி ஒரு பிரமிப்பையே உண்டு பண்ணிற்று.

மத்தியில், சிவப்பு வர்ணம் தீட்டப்பட்ட எட்டுத்தூண்களால் ஆன, பல கோணங்களடங்கிய கட்டிடம் இருந்தது. ஒரு புறம் இரண்டு வெள்ளை யானைகள் தாங்கிய ஒரு பெரிய கதவும் இருந்தது. கொரிய மோஸ்தரில் கட்டப்பட்ட சில ஓட்டுவில்லைக் கட்டிடங்களும் இந்த நடு மண்டபத்தைச் சுற்றியிருந்தன. இந்தக் கட்டிடங்களுக்கு வெகு சமீபத்திலேயே, மூன்று மாடிகள் கொண்ட ஒரு கோபுரத்தின் சின்னமும், ஒரு கல்விளக்கும், மிக மிகப் புராதனமான ஒரு கோயிலின் அடையாளமும் காணப்பட்டன.

நாங்களிருவரும் மிகவும் மெதுவாக, சத்தம் செய்யாமல், அடிமேல் அடி வைத்துச் சென்று மண்டபத்துக்குள் நுழைந்தோம். திடீரென்று வந்த எங்களைக் கண்டதும் அங்கிருந்த பிக்ஷுக்களுக்கெல்லாம் மிகவும் ஆச்சரியம் ஏற்பட்டது. மிகவும் திகைப்புற்ற பிக்ஷு ஒருவர் அந்த இருட்டில் மங்கலான வெளிச்சமுள்ள ஒரு அறைக்கு எங்களை அழைத்துச் சென்றார். தியானத்திலும் தவத்திலும் ஆழ்ந்திருந்த பல துறவிகளின் உருவங்களை அங்கே கண்டோம்.

உட்புறத்தில் மற்றொரு அறையிலிருந்து, கம்பீரமான ஒரு பெரியவர் தோன்றி என் நண்பருடன் கொரிய பாஷையில் ஏதோ பேசினார். என் நண்பர் 'நாங்கள் யார்' என்பதைக் கூறி, இந்தியாவிலிருந்து வந்த ஒரு யாத்ரீகர் என்று என்னை அவருக்கு அறிமுகப் படுத்தினார். 'ஜென்' கோயிலை நிறுவிய 'போதி தர்மர்' நாட்டைச் சேர்ந்தவன் நான் என்று கேள்விப்பட்டதும் அந்தப் பெரியவர் மிகவும் மகிழ்ச்சி கொண்டு கையைத் தட்டிக் கூவினார். உடனே எங்களை அநேக பிக்ஷுக்கள் சூழ்ந்து கொண்டு பலவிதமான ஜாடைகளால் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தனர். அவர்கள் அன்புடன் அளித்த உணவை உட்கொண்டபின் மிகவும் சௌகரியமாக இரவைக் கழித்தோம்.

அன்பு ததும்பும் அவருடைய குறுகுறுத்த கண்களும் கம்பீரமான தோற்றமும், அவர் தாடியும், பழைய காலைய சீனச் சித்திரங்களிலுள்ள சாதுக்களின் தோற்றத்தை எனக்கு நினைவூட்டின. அடுத்த நாள் அக்கோயிலைச் சுற்றிப் பார்க்க எங்களை அழைத்துச் சென்றார். எங்கள் வரவைக் கொண்டாடுவதற்காகவும், எங்களை ஆசிர்வதிப்பதற்காகவும், பல விசேஷச் சடங்குகளும் நடைபெற்றன. அநேக நூற்றாண்டுகளுக்கு முன் காஞ்சிபுரத்தைச் சேர்ந்த போதி தர்மர் என்ற தென்னிந்திய பௌத்த சன்னியாசியால் அந்த மடம் ஸ்தாபிக்கப்பட்டதென்று அந்தப் பெரியவர் கூறினார். போதி தர்மருக்குப் பிறகு அந்த மடத்துக்கு வந்த முதல் இந்தியன் நான்தான் என்றும் அந்த சந்நியாசி களிப்புடன் தெரியப்படுத்தினார்.

ஆபோவில் அமைதியான கோடியில் உட்கார்ந்து அவர் பிரசங்கத்தைக் கேட்டுக்கொண்டிருக்கும்போது நம் பண்டைய இந்தியாவின் பெருமையெல்லாம் என் மனக் கண்முன் தோன்றின. நம் இந்தியத் தாய் உலகிற்கு எவ்வளவு நாகரிகத்தையும், பண்பையும், கலைகளையும், விஞ்ஞான சாஸ்திரங்களையும், ஞானோபதேசங்களையும், ஞானிகளையும், தபோதனர்களையும், மஹாத்மாக்களையும், வீரர்களையும், வீராங்கனைகளையும் அளித்திருக்கிறாள் என்று நினைக்கும் போது என் உள்ளம் பெருமையால் பொங்கிற்று. நம் முன்னோர்கள் எவ்வளவு தீரத்துடனும் திடத்துடனும், பல இன்னல்களைப் பொருட்படுத்தாமல், எல்லையற்ற பூமியையும், கடல்களையும் கடந்து சென்று, சைனா, கொரியா, ஜாவா, கம்போடியா, போர்னியோ போன்ற தேசங்களில் தங்கள் ஜயக் கொடியையும் அழியாத அன்பையும் கம்பீரத்தையும் ஸ்தாபித்துள்ளனர்! அவர்களின் சாதனையை என்னவென்று கூறுவது?

ஆயிரத்து முந்நூறு வருஷங்களுக்கு முன் ஸ்தாபிக்கப்பட்ட அந்தப் புராதன பௌத்த மடத்தையும், அந்த மேன்மையான சூழ்நிலையையும், அதைவிட மேன்மையான அப்பெரியார்களின் சத் சங்கத்தையும் விட்டுப் பிரிய மனமில்லாமல் மிக்க வருத்தத்துடன் அங்கிருந்து திரும்பினேன்.

மேன்மையான
"மேட்டூர் கெமிகல்ஸ்" தயாரிப்புகள்



மேட்டூர்
சந்தன சோப்
பரிமளமிக்கது
பரிசுத்தமானது



சுத்தமான சலவைக்கு
உத்தமமான
காவேரி
பார் சோப்



**மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.**

மேட்டூர் அணை, சேலம் ஜில்லா.

பூரண விற்பனை ஏஜண்டுகள்:
அலைட் இண்டஸ்ட்ரியல் டிஸ்ட்ரிப்யூடர்ஸ் லிமிடெட்
120, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-1 & கிளைகள்

# Coffee
Ours for Quality

RAW
ROAST
OR
GROUND





**GANESH & Co (MADRAS) LTD.**
T. NAGAR


கிளி மார்க் பீடி
கிளி மார்க் பீடி
௫0. வரு அனுபவ பிரசித்திபெற்றது

## 'பாவ' சங்கீதம்!



ஹ்ம் ஹ்ம்..ம்..ம்....




வா...தா...பி..கணபதிம்...பஜேஹம்
வாஅ-அஅ..தா...பி.கணபதிம்-பஜேஹம்.




வாரணாஸ்யம்... வரப்ரதம்...ஸ்ரீ........




பூதாதிஸம் ஸேவித சரணம்...




ப்ரணவஸ்வரூப... வக்ர துண்...டம்
நி.................. ரந்...தரம்...




"சபையோர்களே! நமது கர்நாடக சங்கீதத்தைப் பூரண அர்த்த 'பாவ'த்துடன் பாடமுடியும் என்பதை நமது சங்கீதவித்வான் ராமமூர்த்தி...... பாகவதர் அவர்கள் பக்க வாத்திய கோஷ்டியுடன் அழகாக நிரூபித்துக் கச்சேரி செய்ததை என்னைப்போலவே நீங்களும் பாராட்டுவீர்கள்!.. இப்போது 'காலைத்தூக்கி நின்று' என்னும் 'யதுகுல காம்போதி கீர்த்தனம் பாடப் படும்!"



# சிங்கமும் சிங்காரமும்

அடர்ந்த காடு. அதற்குச் சமீபத்தில் ஒரு குடிசை. 'வெள்ளை' என்ற பெயருள்ள ஓர் குடியானவன் அங்கு வசித்து வந்தான். காட்டிலுள்ள மரங்களை வெட்டி விறகுகளாக விற்பதுதான் அவன் வேலை. அவனுக்கு வயதான தாயாரும், மதுரம் என்ற பெயருள்ள மனைவியும் இருந்தார்கள். குடிசையின் வெளியிலே எப்பொழுதும் ஓர் கரடிக் குட்டியிடம் விளையாடிக் கொண்டே இருக்கும் சிறுவன் 'சிங்காரம்' வெள்ளையனுடைய ஒரே மகன். இரண்டு வருஷங்களுக்கு முன்பு காட்டில் தனியாக அகப்பட்ட கரடிக் குட்டியை வெள்ளையன் வளர்த்து வந்தான்.




கரடிக் குட்டி அடிக்கடி இரை தேடுவதற்காகக் காட்டிற்குச் சென்று திரும்பி வருவது வழக்கம். சிங்காரத்திற்கும் கரடிக் குட்டியுடன் போக வேண்டும் என்ற ஆசை உண்டு. ஆனால் சிங்காரத்தின் தாயார் மதுரம், "சிங்காரம்! உனக்கு வயது ஆறு கூட நிறையவில்லை. நீ கரடியோடு காட்டுக்குப் போகாதே. காட்டிலே சிங்கம் இருக்கும். புலி இருக்கும். கொடிய மிருகங்கள் எல்லாம் இருக்கும். உன்னைப் பார்த்தால் அவைகள் தூக்கிக்கொண்டே போய்விடும். போகாதே அப்பா" என்று சிங்காரத்தைச் சமாதானப்படுத்துவாள். ஆனால் சிங்காரத்திற்கு மனத்தில் பயமே தோன்றவில்லை. இளங்கன்று சிறிதும் பயமறியாது அல்லவா?

"பாட்டி, பாட்டி, எனக்குப் புலிக் கதை சொல்லு. சிங்கக் கதை சொல்லு" என்று சிங்காரம் பாட்டியைத் தொந்தரவு செய்வான். பாட்டியும் தனக்குத் தெரிந்த பழைய கதைகளையெல்லாம் சொல்லுவாள். சிங்காரம் அந்தக் கதைகளை மிகவும் ஆவலுடன் கேட்பான். இப்படிப் பல கதைகளைக் கேட்கக் கேட்க, சிங்கத்தையும் புலியையும் பார்க்க வேண்டும் என்று அவனுக்கு ஆசை அதிகரித்தது.

ஒருநாள் வெள்ளை விடியற்காலையில் விறகு வெட்டப் புறப்பட்டு விட்டான். மதுரமும் அருகாமையிலுள்ள கடைக்குச் சென்றிருந்தாள். மறு நாள் தீபாவளியாதலால் பாட்டி மட்டும் அடுப்பில் ஏதோ பட்சணங்கள் செய்து கொண்டிருந்தாள். சிங்காரம் இதுதான் சமயம் என்று மெதுவாக ஓடி வந்து, காட்டிற்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிற கரடிக் குட்டியின் மீது ஏறி, அதன் பிடரிமயிரைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். கரடிக் குட்டியின் மீதுள்ள அடர்த்தியான மயிர் சிங்காரத்துக்கு மெத்தை போல இருந்தது. சிங்காரம் அடிக்கடி கரடிக் குட்டியின் மீது ஏறி விளையாடுவது வழக்கம் ஆனதால், அவன் தன் முதுகில் ஏறி உட்கார்ந்ததும் கரடிக் குட்டி ஒன்றும் செய்யவில்லை. மெதுவாகக் காட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

வீட்டில் சிங்காரத்தின் பாட்டியோ தன் பேரனின் சப்தத்தைக் காணவில்லையே என்று சமையலறையிலிருந்து வெளியே] பார்த்தாள். "சிங்காரம், சிங்காரம்" என்று கூப்பிட்டாள். பதில் இல்லை. இங்கும்



## பாப்பா ◊ மலர்

அங்குமாக எங்கும் ஓடிப் பார்த்தான்.

"ஐயோ, மழை இருட்டிக் கொண்டு வருகிறதே! இந்தப் பாவி மகனைக் காணோமே" என்று கையைப் பிசைந்து கொண்டாள். மழையும் தூற ஆரம்பித்தது. வெளியே போயிருந்த மதுராவும் ஓடி வந்தாள். "எங்கே என் சிங்காரம்?" என்று தன் முகத்தில் விழுந்திருந்த மழைத்துளிகளைத் துடைத்துக்கொண்டே குடிசையை நெருங்கினாள்.

"சிங்காரத்தைத் தான் காணவில்லை, தேடுகிறேன்" என்றாள் பாட்டி. அடுத்த நிமிஷத்தில் வானத்தில் மின்னல் மின்னிற்று. பிரமாதமாக இடி இடித்தது. மழையும் பெருவாரியாக வந்தது. "ஐயோ! குழந்தையைக் காணுமா?" என்று கேட்டுக்கொண்டே மழையில் ஓடிவந்தான் வெள்ளை.

ஆனால், சிங்காரமோ மழைக்குப் பயப்படவில்லை. சந்தோஷமாக மழையில் நனைந்து கொண்டே கரடிக் குட்டியின் மீது சவாரி செய்து கொண்டிருந்தான். மழை பெய்த பொழுது அவன் நடுக் காட்டை அடைந்து விட்டான். மழை நின்றது. கரடிக் குட்டியும் சற்று நின்றது. சிங்காரமும் கீழே இறங்கினான். உடனே கரடிக் குட்டி வேகமாக ஓரிடத்திற்குச் சென்றது. கூர்மையாக வளர்ந்த நகங்களினால் பூமியை வேகமாகத் தோண்டிற்று. மழை பெய்து பூமி நனைந்திருந்ததனால் அரை நொடியில் தோண்டி, அகப்பட்ட கிழங்குகளை அவசர அவசரமாகத் தின்றது. பிறகு பாசி படிந்த தன் முகத்துடன் சிங்காரத்தின் பக்கத்தில் வந்துநின்றது. சிங்காரம் அதன் மீது ஏறிக் கொண்டான். பின்பு அது மெதுவாகச் செல்ல ஆரம்பித்தது.

அப்பொழுது எதிரே ஓர் பெரிய யானை வந்து கொண்டிருந்தது. அதன் பக்கத்தில் இரண்டு யானைக் குட்டிகள் இருந்தன. கரடிக் குட்டியின் மீது ஏதோ ஒரு புதிய உருவம் வருவதைப் பார்த்தவுடன் யானை தன் குட்டிகளுக்கு ஏதாவது ஆபத்து வந்து விடுமோ என்று பயந்து தனது துதிக்கையினால் குட்டிகளை அணைத்துக் கொண்டது. அவற்றைப் பார்த்த சிங்காரம், "யானைக் குட்டி, யானைக் குட்டி" என்று கைகளைக் கொட்டிக் கொண்டு கரடிக் குட்டியின்மீது குதித்தான். அப்படிக் குதித்தது சிங்காரத்திற்கு இன்பமாக இருந்தாலும், அது கரடிக் குட்டிக்குத் துன்பமாகவே இருந்தது. ஆனாலும், அதைப் பொருட்படுத்தாத கரடி, 'எங்கே, சிங்காரத்திற்கு யானை ஏதாவது தீங்கிழைக்குமோ?" என்று எண்ணியது போல வேறு வழியாகச் செல்ல ஆரம்பித்தது. அப்பொழுது சிங்காரத்தின் எதிரே ஓர் மிருகம் குறுக்கிட்டது. பல பெரிய புள்ளிகள் அதன் உடலில் தென்பட்டன. அதன் வால் இங்கும் அங்குமாக அசைந்தது. அது ஒரு புலிதான்!




புலி சிங்காரத்தையும் அவன் ஏறிச் சவாரி செய்யும் கரடிக் குட்டியையும் ஒருமுறை ஏற இறங்கப் பார்த்தது. கோபத்தினால் தன் பற்களைக் கடித்தது. தன்னைப் பார்த்துத்தான் புலி சிரிக்கிறது என்று எண்ணிச் சிங்காரம் தானும் கை கொட்டிச் சிரித்தான். அப்பொழுது புலி கரடிக் குட்டியையும் சிங்காரத்தையும் ஒரு முறை சுற்றி வந்து பாய்வதற்காகப் பதுங்கிற்று. ஆனால் கரடிக் குட்டியோ வரும் அபாயத்தை அறிந்தது. சிங்காரத்தை ஒரு முறை திரும்பிப் பார்த்தது. அது திரும்பிப் பார்த்தானது, "நான் வேண்டுமானால் புலியினிடமிருந்து இப்பொழுது தப்பித்துக் கொள்ளுவேன். ஆனால் உன் கதி என்ன?" என்று சொல்லுவதுபோல் இருந்தது. பின்பு, எப்படியாவது சிங்காரத்தைக் காப்பாற்ற வேண்டும் என்று கரடி எண்ணியது.

உடனே அது தன் முழு பலத்துடன் பயங்கரமாகப் பலமுறை கத்திற்று. கரடிக் குட்டியின் குரலைக் கேட்ட மூன்று பெரிய கரடிகள் எங்கிருந்தோ வேகமாக ஓடி வந்தன. "இங்கிருந்தால் இனிமேல் அபாயம் தான்" என்று தெரிந்து பதுங்கிய புலி ஒரே பாய்ச்சலில் அந்த இடத்தை விட்டு ஓடிற்று. 'புலியின் அபாயம் நீங்கிற்று' என்று அறிந்த கரடிக் குட்டி மூன்று கரடிகளிடமும் நெருங்கிற்று. அவற்றின் சகோதரக் கரடி பிடிபட்டுக் காட்டை விட்டுப் போன பிறகு மூன்று கரடிகளும் அதைக் காண்பது இதுதான் முதல் தடவை. ஏதோ கரடிக் குட்டியுடன் பேசுவது போல மூன்று கரடிகளும் கரடிக் குட்டியின் முகத்தருகில் அவைகளின் முகங்களை வைத்துக் கொண்டன. பிறகு கரடிக் குட்டியின் மீது



உட்கார்ந்திருக்கும் சிங்காரத்தைப் பார்த்துக் கொண்டே சென்றன.

எப்படியாவது ஜாக்கிரதையாகச் சிங்காரத்தை வீட்டுக்குத் திருப்பி அழைத்துப் போகவேண்டும் என்று நினைத்தது போலக் கரடிக் குட்டி வீடு நோக்கித் திரும்பியது. அப்பொழுது சூரிய அஸ்தமனமும் ஆயிற்று. வானத்தில் சந்திரன் உதயமானான். சமீபத்தில் உள்ள வீடுகளிலிருந்து வெளிச்சம் தெரியவே சிங்காரத்தின் வீடும் சமீபத்தில் வந்து விட்டது என்று தெரிந்தது.

வீட்டுக்குச் சமீபத்தில் வரும் சமயத்தில் எதையோ பார்த்துப் பயந்தது போல் பறவைகளெல்லாம் பலத்த சப்தத்துடன் இங்கும் அங்குமாகப் பறந்து சென்றன. பதுங்கியிருந்த முயல்களெல்லாம் ஓடி ஒளிந்து கொண்டன. மான்கள் குட்டிகளுடன் தப்பி ஓடுவது போல நாலுகால் பாய்ச்சலில் ஓடின. குரங்குகள் 'கீச் கீச்' என்று கத்தின. அருகாமையில் வெடிகளையும் வாணங்களையும் கொளுத்திக் கொண்டிருந்த சில குடியானவச் சிறுவர்கள், "ஓடி வாருங்கள், ஓடி வாருங்கள்" என்று அவர்கள் கையிலிருந்த வாணங்களையும் வெடிகளையும் சிதற எறிந்து விட்டு ஓட்டம் ஓட்டமாகப் பக்கத்தில் இருக்கும் அவர்களின் வீட்டிற்குள் நுழைந்தார்கள். வேகமாகப் போய்க் கொண்டிருந்த கரடிக் குட்டியும் தடால் என்று நின்றது. அந்த அதிர்ச்சியினால் சிங்காரம் கீழே விழுந்து எழுந்து நின்றான்.

அப்பொழுது ஒரு பெரிய சிங்கம் ஓடிவந்தது. அது ஓடிவந்ததைப் பார்த்தால் அதை யாரோ துரத்திக் கொண்டு வருவது போலத் தோன்றியது. சிங்கம் சிங்காரத்தைப் பார்த்ததும் கர்ஜித்துக்கொண்டே வாயைத் திறந்த வண்ணமாகச் சிங்காரத்தினிடம் நெருங்க ஆரம்பித்தது. அடுத்த நிமிஷம் தன்னை விட்டுச் சிங்காரம் பிரிந்து விடுவான் என்று அறிந்த கரடிக் குட்டி சிங்காரத்தின் அருகில் போய் நின்றது. ஆனால் இவைகளுக்கெல்லாம் சிங்காரம் பயப்படவில்லை.

அவனுக்கு எல்லாம் வேடிக்கையாகவே காணப்பட்டன. அவன் கீழே குனிந்தான். கற்களை எடுத்து நாய்களைத் துரத்துவது போலச் சிங்கத்தையும் அடித்து ஓட்டிவிடலாம் என்று எண்ணினான். அவன் கையில் வெள்ளைக்கல்போல ஒன்று அகப்பட்டது. அந்தக் கல்லைத் தன் முழு பலத்துடன் சிங்கத்தின்மீது விட்டெறிந்தான் சிங்காரம். ஆனால் அந்தக் கல் திறந்திருந்த சிங்கத்தின் வாயில் புகுந்து ஓர் பெரிய சத்தத்தை உண்டாக்கியது.

சிங்காரம் எடுத்து எறிந்தது வெள்ளைக்கல் அல்ல. குடியானவச் சிறுவர்கள் விட்டுவிட்டுப் போன ஓர் வெங்காய வெடிதான்! தனது வாயிற்குள் வெடித்த அந்த வெங்காய வெடியினால் துன்பப்பட்டு கீழே விழுந்து புரண்டு புரண்டு கர்ஜித்தது சிங்கம். அடுத்த நிமிஷத்தில் சிங்கம் எழுந்து நின்று புதருக்குள் ஓடிற்று. சிறு பையன் சிங்காரம் கையில் அகப்பட்டோமே என்று அவமானத்தினால் ஓடிற்றோ, அல்லது சின்னப் பயல் சிங்காரத்தின் எதிரில் இறக்கக் கூடாது, மறைவாக இறக்கலாம் என்று நினைத்து ஓடிற்றோ? யார் கண்டார்கள்? அல்லது ஒரு சமயம் வெங்காய வெடி வாய்க்கு ருசியாக இருக்கிறது என்று தன் இனத்தாரிடம் சொல்லவே ஓடியிருக்கலாம். அல்லது, தன்னைப் பின்பற்றி ஓடி வரும் கூட்டத்தினிடம் அகப்பட்டு, "தீபாவளி அன்று இறக்க வேண்டாம் என்று எண்ணி ஓடிற்றோ,

★★★'காலினில் சதங்கை கொஞ்ச, கைவளை குலுங்க'க் குழந்தைகள் எத்தனையோ பேர் இக் காலத்தில் தமிழ் நாட்டில் நடனக் கலை பயின்று பெற்றோரையும் மற்றோரையும் மகிழ்விக்கின்றனர். அவர்களுள் பேபி சாந்தி என்னும் குழந்தை இங்கே ஒரு நடனக் காட்சியில் தோன்றுகிறாள்.

பேபி சாந்தி கும்பகோணம் ஸ்ரீ கே. என். ராஜகோபால ஐயங்காரின் பௌத்ரி. பிரபல எழுத்தாளரும், கொழும்பு "வீரகேசரி" தினசரி எடிட்டருமான ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ் எம். ஏ., அவர்களின் செல்வப் புதல்வி.

குழந்தை சாந்தியின் நடன அரங்கேற்றம் சில நாளைக்கு முன் கும்பகோணத்தில் ரஸிகர் மகா சபையின் முன்னால் நடைபெற்றது. பெற்றோர்களின் கண்மணியாக விளங்கும் குழந்தை சாந்தி நடனக் கலையில் தலைசிறந்து விளங்குமாறு பிரார்த்திக்கிறோம். ★★★



தெரியவில்லை. ஆனால் சிங்கம் அங்கிருந்து ஓடிப் போனது மாத்திரம் நிச்சயம்.

சிங்கம் ஓடிப் போகும் சமயத்தில் தீவட்டி வெளிச்சத்துடன் கையில் கத்தி, கோடாரி, சட்டி முதலியவைகளை எடுத்துக்கொண்டு ஓர் கூட்டம் அங்கு வந்தது. கூட்டத்தில் ஒருவன், "நம்மைப் பார்த்துவிட்டு அதோ ஓடுகிறதடா நாம் துரத்தி வந்த சிங்கம்" என்றான். அப்பொழுது தீவட்டி வெளிச்சத்தில் அங்கே நின்றுகொண்டிருந்த சிங்காரத்தை ஒருவன் பார்த்தான். "வெள்ளை, வெள்ளை! இதோ இருக்கிறான் உன் மகன்" என்றான் ஒருவன். "ஆமாம், ஆமாம்!" என்று ஓடிவந்தான் வெள்ளை. 'நயினா, நயினா!' என்று கத்தினான் சிங்காரம். சிங்காரத்தை எடுத்துக் கட்டிக் கொண்டான் வெள்ளை. "என் கண்ணே சிங்காரம்! உன்னை எங்கெல்லாமடா தேடுவது?" என்று சிங்காரத்தை எடுத்துக் கொண்டு வீட்டுக்கு ஓடினான். அந்த இருட்டில், பாவம், கரடிக் குட்டியை ஒருவரும் கவனிக்கவில்லை. மெதுவாக அதுவும் வீடு நோக்கி நடந்தது.

சிங்காரத்தைப் பார்த்த மதுரமும், பாட்டியும் 'தீபாவளி நல்ல தீபாவளியாக ஆச்சுடா!' என்று அவனை வாரி அணைத்துக் கொண்டார்கள். கரடிக்குட்டி எங்கே என்று ஓடோடியும் வந்து பார்த்தான் சிங்காரம். கரடிக்குட்டி ஒன்றுமே நடக்காததுபோல, தன் முன் கால்களை நாக்கினால் நக்கிக் கொண்டே சாவதானமாக உட்கார்ந்திருந்தது.

வெள்ளை அடிக்கடி, "நாங்கள் போய்த் துரத்தா விட்டால் சிங்காரத்தைக் கட்டாயம் சிங்கம் கொன்றிருக்கும்" என்று நினைத்துக்கொள்வான். ஆனால் [சிங்காரத்தைக் காப்பாற்றியது கரடிக் குட்டி என்றும், சிங்கத்தைத் துரத்தியது சிங்காரம் என்றும் யாருக்குத் தெரியும்?



# கதம்பம்



மாப்பிள்ளை :—அம்பி, இங்கே அடிக் கடி வரப்படாது. இந்தா ஒரு ரூபாய்......

பையன் :—போன வருஷம் மாதிரியே கொடுக்கிறீர்களே! விலைவாசி யெல் லாம் ஏறிக்கிடக்கிறது. அத்திம்பேரே! சேர்த்துக்கூடப்போட்டுக்கொடுங்கள்.



மனைவி :—அதோ அந்த மனுஷர் மனைவியோடு எவ்வளவு ஆசையா யிருக்கிறார், பார்த்தீர்களா?

கணவன் :—அவர் அப்படி யிருப்ப தற்கு இன்னார் முதலாளியிடம் எவ்வளவு பணம் வாங்குகிறார் தெரியுமா?



தெருப்பாடகன் :—"புகை நடுவினில் தீயிருப்பதைப் பூமியில் கண்டோமே ......!"





பெரியவர் :—ஏண்டா, நீ கோலம்போட ஆரம்பித்துவிட்டாய், கீழே படுத்துக் கொண்டிருப்பவன்கூட உன் கண்ணில் படாமல் போய்விட்டேனோ?

சாமா


GOLD LINK
VIRGINIA
10 GOLD LINK CIGARETTES
கோல்டு
லிங்க்
வர்ஜீனியா
சிகரெட்டு

# ஸ்டார் ஆப் இந்தியா
# பென்ஸில்கள்

லக்ஷக்கணக்கான சுதந்திர
இந்தியர்களுக்கு
சேவை செய்கின்றன

அகில இந்தியா
ஆவலுடன் உபயோகிக்கும்
லட்சிய பென்சில்

ஸ்டார் ஆப் இந்தியா★

இந்தியாவின்
பெருமை






3, ஸ்டிரிங்கர் தெரு, மதராஸ் 1




## காட்சி 1

சித்தூர்க் கோட்டை முற்றுகையிடப்பட்டிருக்கிறது. அதனுள்ளே அரண்மனையில் இரவு எட்டுமணிசுமாருக்கு இரு பெண்மணிகள் அமர்ந்து உரையாடிக் கொண்டிருக்கிறார்கள். ஒருத்திக்கு வயது அறுபது இருக்கும். அந்த வயதிலும் அவள் முகத்தில் கம்பீரமும் உறுதியும் தெரிகின்றன. அவள்தான் இறந்துபோன ராணா சங்காவின் தாய் ஜவாஹர் பாய். மற்றவள் ராணா சங்காவின் மனைவி கருணவதி. அவளுக்கு இருபத்தைந்து வயதிருக்கும். அழகும் வீரமும் பொருந்தியவள்.

ஜவாஹர்பாய்:—கருணவதி, நம் கோட்டைக்குப் பெரிய ஆபத்து நேரிட்டிருக்கிறது. சென்ற இரண்டு மாத காலமாக அதைப் பகைவர்கள் நெருங்காதபடி காத்துவந்தோம். ஆனால் இன்று தெற்குப் பக்கத்துக் கோட்டைச் சுவரிலே வெடிமருந்து வைத்துத் தகர்த்துப் பெரும் பிளவை உண்டாக்கி விட்டார்கள்.

கருணவதி:—(கவலையோடும் சந்தேகத்தோடும் பார்த்து) என்ன! சித்தூர்க் கோட்டைச் சுவரும் தகர்ந்து போய் விட்டதா!

ஜவா:—ஆமாம், வெடிமருந்தில்லையானால் இதை யாரும் அசைக்க முடியாது. ஆனால்......இன்றைக்கு யுத்த முறையே மாறிக்கொண்டு வருகிறதல்லவா!

கருணவதி:—அந்தக் குஜராத் சுல்தானுடைய பகதூர் கோட்டைக்குள் நுழைந்து விடுவானா!

ஜவா:—கோட்டைச் சுவரைப் பழுது பார்ப்பதென்பதும் முடியாத காரியம்.

கருணவதி:—அப்படியானால்...... அதன் வழியாகப் பகதூரும் அவனது சேனைகளும்......

ஜவா:—மதில் சுவர் தகர்ந்து போன இடத்தைப் பாதுகாக்க முடியாவிட்டால் அந்த மிலேச்சனுடைய கால் இந்தப் புண்ணிய பூமியை மிதித்து விடும்.

கருணவதி:—நமது வீரர்களின் எண்ணிக்கையோ குறைந்துவிட்டது. மதில் சுவரின் பலத்தால் இதுவரை அவர்கள் தாக்குப் பிடித்து நின்றார்கள். இனிமேல் நாம் என்ன செய்வது!

ஜவா:—இனி என்ன செய்வதா! நமது உயிருக்குள்ள வரை போரிட வேண்டியது தான். வேறென்ன யோசனை!

(அவள் கண்கள் ஜொலிக்கின்றன.)

கருணவதி:—அம்மா, ரஜபுத்திர திலகமான எனது கணவரைப் பெற்றெடுத்த தாங்கள் வேறு எந்த யோசனையும் செய்ய மாட்டீர்கள் என்று எனக்குத் தெரியாதா! எனக்கும் வேறு யோசனை கிடையாது. ஆனால்...... (தயக்கத்தோடு ஜவாஹர்பாயைப் பார்க்கிறாள்.)

ஜவா:—ஆனால்......ஆனால் என்ன! நீ எதையோ நினைத்து ஏக்கம் கொள்வது போல் தெரிகிறதே!

கருணவதி:—ஏக்கம் ஒன்றுமில்லை. உங்கள் மைந்தன் உயிரோடிருந்திருந்தால் எனக்குக் கவலை இருக்காது. அவர் மாண்ட பிறகும் நான் இந்த உயிரை வைத்துக் கொண்டிருக்க வேண்டியதாயிற்று.

ஜவா:—கருணவதி, என் மைந்தன் உயிர் இழந்தபோது நீ கர்ப்பிணியாய் இருந்ததை மறந்து விட்டாயா! நமது வீர வம்சம் நிலைத்து நிற்பதற்காக, அவனுடைய புத்திரன் உதயனைப் பெற்றுக் கொடுப்பதற்காகத் தானே நீ உயிர் வாழச் சம்மதித்தாய்! உன்னுடைய கணவனுடைய விருப்பமும் அதுதானே!

கரு:—அம்மா, அந்த வீர வம்சம் அற்றுப்போகக் கூடாதென்பது தான் இப்பொழுதும் என்னுடைய கவலை.

ஜவா:—அதைப் பற்றி நான் முடிவு செய்து விட்டேன். இன்றிரவு உதயனைச் சுரங்க வழியின் மூலம் ரகசியமாக வெளியே அனுப்பிவிடலாம். நீயும் அவனுடன் செல்ல வேண்டும்.

கரு:—உங்களை இங்கே விட்டுவிட்டா!

ஜவா:—ஆமாம். உதயன் இன்னும் குழந்தை. உன்னை விட்டுப் பிரிந்திருந்தால் அவன் ஏங்கிப் போய்விடுவான்.

கரு:—அவன் உங்களிடம் தானே உயிராக இருக்கிறான்! நீங்கள் தான் அவனோடு போகவேண்டும். உங்களை இந்த விரோதிகளிடையே விட்டுவிட்டு நான் போகமாட்டேன்.

(பேச்சிலே உறுதி தொனிக்கிறது.)

ஜவா:—நீ இங்கிருந்து என்ன செய்வாய்!

கரு:—(கம்பீரமாக) நீங்கள் எதைச் செய்வீர்களோ அதை நான் செய்கிறேன். என் உடம்பில் அதிக வலிமை இருக்கிறதே.

ஜவா:—நீ என்னதான் செய்வாய், சொல் பார்க்கலாம்!

கரு:—நீங்கள் என்ன கட்டளையிட்டுச் செல்கிறீர்களோ அதைச் செய்கிறேன்.

ஜவா:—அதிருக்கட்டும், உன் இஷ்டப்படி நடப்பதானாலும் இந்த நிலைமையைச் சமாளிக்க நீ என்ன செய்வாய்!

கரு:—எனக்கு ஒன்று தோன்றுகிறது; அதை ஆமோதிப்பதாக இருந்தால்......

ஜவா:—வெளிப்படையாக உனது யோசனையைச் சொல்: இதிலென்ன தயக்கம்!

கரு:—நமக்கு உதவி புரிய டெல்லி அரசரை அழைக்கலாம்.

ஜவா:—(கோபத்துடன்) என்ன சொன்னாய்! டெல்லி அரசன் அந்த ஹுமாயூனா! உன் கணவனை ஏமாற்றித் தோற்கடித்த அந்த வஞ்சகன் பாபருக்குப் பிறந்த மகனா!

கரு:—உங்கள் மகனை பாபர் ஏமாற்றி ஜயித்தது மெய்தான்.

ஜவா:—அந்தத் தோல்வியினாலேயே மனமுடைந்து என் மகன் இறந்தது உனக்குத் தெரியாதா!

கரு:—அதுவும் எனக்குத் தெரியும்.

ஜவா:—அப்படியிருந்தும் இந்த வார்த்தையை நீ சொல்லலாமா!

கரு:—நான் பாபரின் உதவியை நாடவில்லையே! அவர் தான் இறந்து போய்விட்டாரே! நான் ஹுமாயூன் உதவியைத் தான் கேட்க விரும்புகிறேன்.

ஜவா:—கருணவதி, நீ ஒரு ராஜபுத்திர மங்கையா! கணவனை வஞ்சித்த கயவனின் மகன் உதவியை நீ கனவிலும் கருதலாமா! அதற்குப் பதிலாக இந்த பகதூரின் படைக்கு நடுவே புகுந்து, வீராவேசத்தோடு போர் செய்து வீரசுவர்க்கம் புகுவது நமது குலக் கீர்த்திக்கு உகந்ததென்று உனக்குப் படவில்லையா!

கரு:—அம்மா, நான் போருக்குப் பயப்படவில்லை. என் உயிருக்கும் பயப்படவில்லை. ஆனால் இன்று உங்கள் இளைய மகனுக்கும், மந்திரிப் பிரதானிகளுக்கும் உள்ள மனவேற்றுமையைப் பயன்படுத்திக் கொண்டு, பேடித்தனமாகப் போருக்கு வந்திருக்கும் இந்த பகதூரை முறியடித்து அவன் கையில் சிக்குண்ட தங்கள் மகனை மீட்டு வரவேண்டாமா!

ஜவா:—விக்ரமஜித்தை என் மகனென்று சொல்லிக் கொள்ளவும் எனக்கு வெட்கமாயிருக்கிறது.

கரு:—அவருக்கு அனுபவம் போதாது. இளம் வயதானதால் சபையோர்களோடு ஏதோ விரோதம் செய்து கொண்டு விட்டார். அதை அறிந்த இந்த வஞ்சகன் அவர் கோட்டைக்கு வெளியே சென்றிருந்த தருணத்தில் சிறைப் பிடித்துக்

கொண்டானே; அவனுக்குத் தகுந்த தண்டனை கொடுக்க வேண்டாமா!

ஜவா:—ஹுமாயூனும் இந்த பகதூரைப் போல ஒரு மிலேச்சன்தானே! அவன் உனக்கு எப்படி உதவிக்கு வருவான்!

கரு:—அவர் நிச்சயமாக வருவாரென்று நான் நம்புகிறேன்.

ஜவா:—நீ இந்த மிலேச்சர்களை யெல்லாம் மனிதர்களென்று நினைத்துக் கொண்டிருக்கிறாய். நமது தேசத்திற்குள் புகுந்த அவர்கள் எத்தனையோ அட்டூழியம் செய்திருப்பதைக் கண்ட பிறகும் உனக்கு இது தெரியவில்லையே!

கரு:—அவர்கள் எல்லோரும் அப்படிக் கொடியவர்கள் என்று நான் கருதவில்லை.

ஜவா:—அந்த ராட்சஸர்களில் நல்லவனென்றும் ஒருத்தன் இருப்பானா!

கரு:—ஹுமாயூனை அரக்கனாக நினைக்க என்னால் முடியாது.

ஜவா:—பாபரின் மகன்தானே அவன்!

கரு:—ஹுமாயூன் சுத்த வீரர்.

ஜவா:—சுத்த வீரனாக இருந்தாலும் அவன் உனக்கு எப்படி உதவிக்கு வருவான்!

கரு:—நமக்கு உதவிசெய்யக் கடமைப் பட்டிருக்கிறார். அவர் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவார் என்று நம்புகிறேன்.

ஜவா:—(கோபத்தோடு) கருணாவதி, நீ சொல்வது எனக்கு விளங்கவில்லை. அவன் என்ன வாக்குக் கொடுத்திருக்கிறான்!

கரு:—அவர் என்னிடமிருந்து கங்கணத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

(கருணாவதி மெதுவாக எழுந்து நின்று பதிலை எதிர்பார்க்கிறாள்.)

ஜவா:—(சட்டென்று வெறுப்புடன்) அவனா! அவனுக்கு எப்பொழுது இந்தப் பரிசைக் கொடுத்தாய்!

கரு:—என் கணவர் மரணப் படுக்கையிலிருந்தபோது ஹுமாயூன் அவரைப் பார்க்க வந்தாரல்லவா!

ஜவா:—அவன் முகத்திலே விழிக்க ராணாசங்கர் மறுத்து விட்டாரே!

கரு:—ஆமாம், என் கணவர் பார்க்க மறுத்து விட்டார். ஆனால் ஹுமாயூன் தமது தந்தை பாபர் செய்த வஞ்சனையை வெறுத்து என் கணவரிடம் நட்புக் கொள்ளவே வந்தார் என்பதை நான் அறிந்தேன்.

ஜவா:—கருணாவதி, இந்த மிலேச்சனுக்குக் கங்கணத்தின் பெருமையைப் பற்றி என்ன தெரியப்போகிறது!

கரு:—எனக்கென்னவோ அவர் வாக்கைக் காப்பாற்றக்கூடிய உயர்ந்த குணமுடையவராகத்தான் தெரிகிறது.

ஜவா:—அவன் நிச்சயமாக உதவிக்கு வரப்போவதில்லை. அப்படி வருவதாகப் பாசாங்கு செய்தாலும் கடைசியில் பகதூரோடு சேர்ந்து கொண்டு சித்தூரைக் கொள்ளையடிக்கத்தான் முயலுவான்.

கரு:—(மெதுவாக) நீங்கள் பாபரின் மேலுள்ள வெறுப்பால் பேசுகிறீர்கள்.

ஜவா:—(சட்டென்று கோபத்தோடு எழுந்து நின்று) இவ்வளவு தூரம் நீ பேசியது போதும். ஹுமாயூன் கங்கணத்திற்குக் கட்டுப்பட்டு வருவதாக இருந்தாலும் என் உயிருள்ளவரை அவனுடைய உதவியை நான் ஏற்றுக் கொள்ள முடியாது. அவன் இந்தக் கோட்டைக்குள் அடிவைக்கவும் கூடாது.

[சற்றுநேரம் யாரும் பேசவில்லை. பிறகு நிதானமாகக் கருணாவதி பேசுகிறாள்.]

கரு:—அம்மா, புத்திரனை இழந்த சோகத்தால் உங்கள் மனம் புண்பட்டிருக்கிறது. அதை மாற்ற முடியாதென்று தெரிந்து கொண்டேன். இனி உங்கள் இஷ்டம் போல் செய்யுங்கள். உங்கள் கட்டளையை நிறைவேற்ற நான் சித்தமாக இருக்கிறேன்.

ஜவா:—குழந்தை உதயசிம்மனை ரகசியமாக வெளியேற்ற ஒரு ஏற்பாடு செய்திருக்கிறேன். அவனை அனுப்பிவிடு. நீ அவனுடன் போகவேண்டாம். உன் மனப் போக்கை அறிந்த பிறகு உன்னை வெளியே அனுப்ப எனக்குச் சம்மதமில்லை.

கரு:—உங்களை விட்டுவிட்டுப் போகவும் நான் விரும்பவில்லை.

ஜவா:—நான் நாளைக் காலையில் போர் முனைக்குச் செல்லுகிறேன். என் உயிருள்ள வரையில் பகைவன் உள்ளே நுழையாமல் காப்பேன். பிறகு நடக்கிறது நடக்கட்டும்.

[அவள் மற்றொரு அறைக்குள் செல்கிறாள். கருணாவதி சோகத்தோடு நிற்கிறாள்.]

## காட்சி 2

சித்தூர் அரண்மனையிலே கருணாவதியின் அறை. இரவு 8 மணிக்குக் கருணாவதியும் அவளுடைய அந்தரங்கத் தோழி வாசந்தியும் சகஜமாக அமர்ந்து பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

கரு:—வாசந்தி! ராணியம்மாள் அந்தத் தகர்ந்து போன கோட்டைச் சுவரின் துண்டுகள் பெயர்ந்து விழுந்த போதும் அவர் முகத்திலே எவ்வளவு கம்பீரமிருந்தது பார்த்தாயா!

வாசந்:— அவருடைய வீராவேசத்தைக் கண்டு தான் சென்ற இரண்டு நாட்களாய்ப் பகைவர்கள் உள்ளே நுழையாதபடி மதில் சுவர் தகர்ந்து போன பாகத்தை நமது வீரர்கள் தமது உடம்பினால் அடைத்துப் போர் செய்தார்கள்.

கரு:—ராணியம்மாளை யுத்த கோலத்தில் பார்த்தபோது எனக்குச் சித்தூரின் காவல் தெய்வமே உருவத்திலே வந்தது.

வாசந்:— இரவிலே பார்த்தால் ராணி ஜவாஹர்பாய் பகைவர்களின் கண்ணிலே காளிதேவியைப் போலத் தோன்றினாராம்.

கரு:—காளிதேவியின் அருள் நமக்கு இனிமேலும் இராமல் போகாது.

வாசந்:—கருணாவதி தேவி, இனி நீங்கள் தானே இக்கோட்டைக்கு ராணி! உங்கள் உத்தரவை எல்லோரும் எதிர்பார்த்திருக்கிறார்கள்.

கரு:—ஆமாம், நான்தான் கோட்டையைப் பாதுகாக்க வேண்டும். வாசந்தி, என் குழந்தை உதயன் பத்திரமாய்ப் போய்ச் சேர்ந்திருப்பானா! [அவள் குரலிலே கவலை தொனிக்கிறது.]

வாசந்:—அவனைப் பற்றி நீங்கள் கவலைப் பட வேண்டியதில்லை.

கரு:—உன்னை ஒன்று கேட்க வேண்டுமென நினைத்தேன். மூன்று வருஷங்களுக்கு முன்பு ஹுமாயூனிடம் என்னுடைய கங்கணத்தைக் கொடுத்தாயே, அப்பொழுது அவர் என்ன சொன்னார்!

வாசந்:—கங்கணத்தை ஏற்றுக் கொண்டவர் எப்படி நடந்து கொள்ள வேண்டுமோ அப்படி நடந்து கொள்வதாகத் தான் சொன்னார்.

கரு:—ஹுமாயூன் உண்மை வீரரென்றுதான் நினைக்கிறேன். ஆனால் இன்றைக்குச் செய்தி அனுப்பியும் அவர் வரும் வரையில் நாம் கோட்டையைக்





# பளபளப்பான கூந்தலழகினால்

## அவளுக்குச் சிறந்த தோற்றம் - அவனுக்குமப்படியே

உங்கள் கேசம் அழகாயிருக்கிறதா? அது அடர்த்தியாக வளர்ந்து அழகாக வாரிக்கொள்ள வருகிறதா? ஒவ்வொரு நாளும் கோட்டி டானிக் ஹேர் ஆயிலை உங்கள் சிரஸில் நன்றாகத் தேய்த்து உங்கள் கேசத்திற்குப் போஷாக்கு அளியுங்கள். அதன்மூலம் உங்கள் கேசம் இயற்கை அழகுடன் ஜொலிக்கச் செய்யுங்கள். ஜாஸ்மின், ரோஸ், பொக்கே அல்லது கார்டனியா என்ற பல்வேறு பரிமளங்களில் உங்களுக்கு எது பிடித்தமானதோ அதில் கோட்டி டானிக் ஹேர்ஆயிலை வாங்கிக்கொள்ளுங்கள்.

ஆடவரின் தலை மயிரானாலும் சரி அல்லது ஸ்திரீகளின் கட்டுக்கடங்காத சுருட்டைகளானாலும் சரி எதையும் கட்டுப்படுத்தி அழகாக வாரிக்கொள்ள கோட்டி பிரில்லியன்டைன் — கெட்டியாகவும், திரவமாகவும் கிடைக்கும்...தலைமயிர் உலர்ந்து போகாமல் நீடித்த பரிமளத்துடன் வாரிக்கொள்ள உதவும்.



Coty

**கோட்டி**

உங்கள் கேசம் பரிமளத்துடன் பளபளப்பாக இருக்கச் செய்யும்

பூரண விநியோகஸ்தர்கள்: ஜ்யாப்ரே மானர்ஸ் & கோ., லிட்., பம்பாய் - கல்கத்தா - மதராஸ் - டில்லி

# நம் தேசத்தின் முதல் தீபம்

# Bengal

## LAMPS

பெங்கால் பல்புகள்



எங்கும் கிடைக்கும்

•

வெளியிடுவோர்:

ஜி. ஏ. ஆச்சார்யா

"பெங்கால் ஹவுஸ்" : பெங்களூர்-3

FAS. 550

இந்த உறுதியும், குயிலின் தந்தை குரங்கனுக்குத் தன் பெண்ணைத் தருவதாக அளித்த வாக்கும் காதற் புயலின் முன் சிதறி விடுகின்றன. எங்கிருந்தோ காட்டின் நடுவிலே வந்து முளைத்தான் சேர இளவரசன். சின்னக் குயிலியைக் கண்டதும், மையல் கரைபுரள,

'வேடர் தலைமகனே, விந்தை அழகுடையாய்
ஆடவருந் தோன்றி அதன்பயனை இன்றுபெற்றேன்'

என்று பேசினான். சின்னக் குயிலியும்,

'மன்னவனைக் கண்டதும் மாமோகம் கொண்டுவிட்டாள்.
... ... ... ... ... ...
வாரிப் பெருந்திரைபோல் வந்த மகிழ்ச்சியிலே
நாணம் தவிர்ந்தாள்.'

பொங்கிவந்த இன்ப வெள்ளத்தில் மாடனையும் குரங்கனையும் மறந்தாள்.

ஆனால் அவர்கள் மறக்கவில்லை. சின்னக் குயிலியைத் தேடிக் கொண்டு காட்டுக்குள்ளே குரங்கன் வந்தான். அவன் வந்ததைக் கேள்வியுற்று,

'நீரோடுமேனி நெருப்போடுங் கண்ணுடனே'

மாடனும் அங்கு வந்தான். இவர்கள் வந்தது இளவரசனுக்கும் கன்னிக்குயிலிக்கும் தெரியாது. அவர்கள்,

'தேமலர்கள் கண்டு விழியே திறக்கவில்லை.
ஆவிக்கலப்பின் அமுத சுகந்தனிலே
மேனி அந்து மூடி இருந்த விழிநான்கு
ஆங்கவற்றைக் கண்டவுயிராம் ஆவியிலே தீப்பற்றி
ஓங்கும் பொறிகள் உதிர்க்கும் விழிநான்கு.'

வேந்தன் முதுகிலே இரு வாள்கள் பாய்ந்தன. திரும்பிய வேந்தன் தன் ஒரு வாளால் குரங்கனையும் மாடனையும் வெட்டி வீழ்த்தினான். பிறகு தானும் கீழே சாய்ந்தான். சாகுமுன்,

'இன்னும் பிறவி உண்டு, மாதரசே, இன்பமுண்டு
நின்னுடனே வாழ்வன் இனி நேரும் பிறப்பினிலே'

என்று சொல்லிவிட்டு மாய்ந்தான்.

சின்னக்குயிலி மறு பிறப்பில் வேடன் மகளாக மறுபடியும் பிறந்தாள். மாடனும், குரங்கனும் பேய்களாக மாறித் திரிந்து வந்தார்கள். குயிலைக் கண்டதும், அவளைத் தம் சூழ்ச்சியால் குயிலாக மாற்றி, அந்தக் குயில் சென்ற இடமெல்லாம் விடாமல் சுற்றி வட்டமிட்டார்கள். சேர அரச குமாரனோ தொண்டை நாட்டில் உள்ள பட்டினம் ஒன்றில் மானிடனாகத் தோன்றிக் கவிஞனாக வளர்ந்து வந்தான்.

'குயில் வடிவம் உடைய உன்னை ஒருநாள் வேந்தன் மகன் காண்பான். மறுபடியும் காதல் கொள்ளுவான். மாடனும் குரங்கனும் செய்யும் மோசத்தால் மதிமருண்டு உன்னைச் சந்தேகிப்பான். பிறகு நடப்பதை நீயே அறிந்து கொள்ளலாம்' என்று தன்னிடம் உரைத்து முனிவர் போய்விட்டதாகக் குயில் தன் கதையை முடிக்கிறது. பிறகு,

'காதல் அருள்புரிவீர்; காதலில்லை என்றிடிலோ
சாதல் அருளித் தமது கையாற் கொன்றிடுவீர்'

என்று கூவிக் கவிஞன் கையில் விழுகிறது.

கவிஞன் மனம் உருகிவிடுகிறது. குயிலை முத்தமிடுகிறான். உடனே கோலம் மறைந்து விடவும், கவிஞன்முன்னே 'ஆசைக் கடலின் அமுதாம்'ப் பெண்ணொருத்தி நிற்கிறாள்.

'கவிதைக் கனி பிழிந்த
சாற்றினிலே பண் கூத்தெனும் இவற்றின் சாரமெலாம்
ஏற்றி அதனோடே இன்னமுதைத் தான்கலந்து
காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினால்
மாது அவளின் மேனி வகுத்தான் பிரமன்'

என்று எண்ணும்படி இருக்கிறது அவளுடைய அழகு. அவளைத் தழுவி மோகப் பெரு மயக்கில்,

'சித்தம் மயங்கிச் சிலபோழ் திருந்தபின்னே
பக்கத்து இருந்த மணிப்பாவையுடன் சோலையெலாம்
ஒக்க மறைந்திடலும் ஓஹோ! எனக்கதறி'

கவிஞன் விழிக்கிறான்.

விழிதிறந்து பார்த்தால் அவ்வளவும் கனவு என்பது கவிஞனுக்குத் தெரிகிறது. பக்கத்திலே தினசரி வாழ்க்கையின் சின்னங்களான பண்டைச்சுவடி, எழுதுகோல், பத்திரிகைக் கூட்டம், பழம்பாய்—இவை கிடக்கின்றன. சோலை—குயில்—காதல்—சொன்ன கதை அத்தனையும் வெறும் கற்பனை என்பது தெளிவாகிறது. "கற்பனையே யானாலும் இதற்கு,

'வேதாந்தமாக விரித்துப் பொருளுரைக்க'

இடமிருக்கிறதா, இருந்தால் உரையுங்கள்" என்கிறான் கவிஞன்.

வேதாந்தம் இருக்கட்டும். விட்டு விடுதலையாகி நிற்பதே வேதாந்தத்தின் முடிவு என்றால், அதை இங்கே எல்லையற்ற வெளியில் சிறகு விரிக்கும் கவிதையே சாதித்து விடுகிறது. மாலைப்பொழுதின் அழகிலே தன்னை மறந்து நின்ற கவிஞர் பாரதி, இவ்வுலகத்தின் சிறுமைகளையும், வரம்புகளையும் கடந்து கணநேரத்திற்கு எங்கேயோ கனவுலகில் சஞ்சாரம் செய்தார். அங்கே குயில் பேசுகிறது. மனிதன் குயில் ஒன்றின்மேல் காதல் கொள்ளுகிறான்: பல துன்பங்களின் விசித்திரமான வலைப் பின்னல் கண்முன்னே செய்யப்படுகிறது. குயிலின் பாட்டில் உள்ள இனிமைக்கும் வேதனைக்கும் பொருள் தென்படுகிறது. காதலும் பொறாமையும், அழகும் அகங்காரமும் பெறுகின்றன. இந்தக் கனவுலகில் பாரதி செய்த சஞ்சாரத்தின் கதை வடிவமே 'குயில்' என்ற கற்பனை; அதன் கவிதை வெளியே 'குயில்' என்ற அற்புதமான காவியம்.

பெறுவதற்குச் சக்தியுள்ள ஒளி பிறந்தது. இதுவரை எனக்குத் தெரியாத உண்மைகளைக் கண்டுபிடிக்க வேண்டி வந்தது; இதுவரையில் நான் கண்டறியாத அநுபவங்கள் கிட்டின! இதுவரை நான் படிக்காத புத்தகங்களைக் கரைத்துக் குடித்தேன். இதுவரை நான் சந்திக்காத நிபுணர்களைத் தேடினேன். சுருங்கச் சொன்னால் குழந்தை வளர்க்கும் ஆராய்ச்சியில் ஈடுபட்டேன். நான் மட்டும் ஈடுபட்டேன் என்றால் என் சகதர்மிணி சண்டைக்கு வருவாள். ஆனால் குழந்தை வளர்ப்பு வித்தை, குழந்தையைப் பெற்ற தாய்க்கு இயற்கையாக வரும். ஆண்மகனான தகப்பனுக்கோ இது ஒரு கலை, விசித்திர வித்தைதான்; சில சமயங்களில் சித்திர வதைதான்! அதை நான் என் அநுபவத்தில் கண்டு பிடித்து விட்டேன்.

சந்துரு உதயமாவதற்குச் சில நாட்கள் முன்பே, அவனைத் தாங்கின தாயைவிடத் தகப்பனுகிய எனக்கு ஏற்பட்ட வேதனை சொல்லுக்கடங்காதது. "தகப்பன் என்ன செய்ய வேண்டும்!" என்ற விஷயத்தைப் பற்றிய சகல புத்தகங்களையும் சாஸ்திரங்களையும் தத்துவங்களையும் அலசி ஆராய்ச்சி செய்தேன்.

"தகப்பனார் ஆகப் போகிறவர் தினம் இரண்டு வரட்டு ரொட்டியும் பல வெண்ணெயும் சாப்பிட வேண்டும்" என்றார் ஒரு ஆரோக்கிய நிபுணர். அவர் சொன்னதை அப்படியே விழுங்கினேன்.

"குழந்தை பிறப்பதற்கு முன், தாயைவிடத் தகப்பனுக்குத்தான் மூளையில் உஷ்ணம் உண்டாகும்; ஆகையால் மூளைக் குளிர்ச்சிக்குத் தினசரி அரை மணி நேரம் தொட்டியில் குளிர்ந்த நீரில் தலை மூழ்க நின்றால் நலம்" என்றார் மற்றொருவர். அவர் சொன்னபடியே தொட்டியில் தலையை விட்டு நின்று பார்த்தேன்.

வாரத்தில் மூன்று நாள் உபவாசம் இருக்கச் சொன்னார் மற்றொருவர்; இருந்தேன். காலையில் விடியற்காலையில் ஆறு மைல் நடக்க வேண்டும் என்றார் இன்னொருவர்; நடந்தேன். நடு இரவில் எழுந்து ஓடுவது நல்லது என்றார் வேறொருவர்; ஓடினேன். தாலேலோ பாட்டுகள் கற்றுக் கொண்டால் வருங்காலத்துக்கு உதவும் என்றார் அநுபவஸ்தர்; பாடினேன்; ஆடினேன்; பரதநாட்டியம் கூட, அலாரிப்பு ஜதிஸ்வரம் வரையில் கற்றுக் கொண்டேன்.

இவ்வளவு போதனைகள் கூறியவர்களில் ஒருவராவது "சும்மா இருந்தால் நலம்" என்று ஏனோ சொல்லவில்லை.

சந்துரு இந்த உலகத்தில் தோன்றுவதற்குப் பல மணி நேரம் முன்னரே அவனைப் பெற்றவளைவிட எனக்குத்தான் அவஸ்தை அதிகமாக இருந்தது! "ஆணாயிருக்குமோ! பெண்ணாயிருக்குமோ! மூக்கு முழி இருக்குமோ! மூச்சு இருக்குமோ! அழுமோ! சிரிக்குமோ! சிகப்பாயிருக்குமா! கறுப்பாக இருக்குமா! அப்பனைக் கொண்டிருக்குமா! தாயைக் கொண்டிருக்குமா!......" இப்படி பேய்களாம் கவலைகளும் குழப்பங்களும்; நெஞ்சு திக்குதிக்கென்று அடித்துக் கொள்ளும்; பசி எடுக்காது! தாகம் எடுக்கும்; தூக்கம் வராது; (தலை) நோவு வரும்......இப்படி ஒரு ஜுரஜன்னியை ஏற்பட்டு வாட்டியது தகப்பனையே என்னை!

சந்துரு அவதாரமான அன்றையிலிருந்து வீட்டில் ஒரே அமர்க்களம்தான். சத்தமே பிடிக்காத எனக்கு அவன் 'வீல்வீல்' என்று கத்தும் நேரம் போக, வீட்டில் உள்ளவர்கள் அவனைக் கொண்டாடிக் கும்மாளமடித்தது சகிக்கவில்லை. நாம் எல்லோரும் இப்படித்தான் பிறந்தோம்! அதற்காக ஏன் இவ்வளவு அமளிதுமளி!

சந்தோஷம் ஆனது முதல் என் மனைவியின் மனப்போக்கே ஒரு திசையாக மாறிவிட்டது. என்னைப் பற்றிப் பல விதங்களில் சிரத்தையுடனும் சிரிப்புடனும் கவலைப்பட்டுக் கவனித்து வந்த அவளுக்கு இப்போது நிமிஷமொன்று என்னைக் கடைக்கண்ணால் பார்க்கக்கூட அவகாசமில்லை. அவள் கவனம் பூராவும் சந்துருவின்மேல் தான். நான் வீட்டில் கேவலம் ஒரு புருஷன். அன்றாடம் சோப்புகளுக்கும் நாப்கின்களுக்கும் கடை தேடிப் போவதில் என் பாதி நேரம் கழிந்தது. மருந்துக் கடை வாசலில் மறியல் கிடக்கும் பாக்கியம் கிடைத்தது. பொழுது விடிந்தால் லேடி டாக்டர் பேட்டி; அந்தியிலோ குழந்தை டாக்டர் தரிசனம்... இப்படியாக நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தான் 'சந்துருக் கண்ணு!'. அவனுக்கு வளர்பிறை; எனக்குத் தேய்பிறை!

குழந்தை வளர்க்கும் வித்தையில் எனக்கு அபார ஊக்கம் உண்டாயிற்று—நான் விரும்பாமலே! "ஐயையோ! பார்த்தீர்களா! பாப்பா வாயில் விரல் போடுகிறது; அதற்கு ஏதாவது செய்யுங்களேன்" என்று தாயானவள் கூக்குரலிடுவாள். "நான் என்ன செய்யட்டும்! விரலை வெட்டி எறி" என்று சொல்லத் தோன்றினாலும், அதைச் சொல்லத் தைரியமில்லை. உடனே குழந்தை—பரிபாலன புத்தகங்கள், பத்திரிகைகள் எல்லாவற்றையும் விழுந்து விழுந்து படித்தேன். எல்லாக் குழந்தை நிபுணர்களும் ஓர் அபூர்வ உண்மையைக் கண்டுபிடித்து ஏகோபித்துச் சொல்லியிருந்தார்கள்— 'இளம் குழந்தைகள் வாயில் விரல் போடும்' என்று. பிறகுதான் அபிப்ராய பேதமெல்லாம்!

ஒரு நிபுணர், "இந்தப் பழக்கம் தலைமுறை தலைமுறையாக வந்திருக்கவேண்டும்; ஆகையால் அதற்கு ஆதாரத்தைப் பரம்பரைச் சரித்திரத்திலிருந்து கண்டு பிடித்துப் பரிகாரம் தேடவேண்டும்" என்றார். மற்றொரு பத்திரிகையில் ஒரு டாக்டர், "குழந்தைக்கு வைட்டமின் குறைவினால் ஏற்படும் குணம்" என்றார். அநுபவம் வாய்ந்த பெண்மணி ஒருவர், "குழந்தை வாயில் விரல் போட்டால் அது நல்ல அடையாளம்; கட்டை விரல் போடுகிறதா, ஆள்காட்டி விரலா, மோதிர விரலா என்று கவனித்து வாருங்கள். கட்டை விரலாக இருந்தால் குழந்தை பிற்காலத்தில் தைரியசாலி ஆவான்; ஆள்காட்டி விரலாயிருந்தால் அரசாளும் தன்மை இருக்கும்; மோதிர விரலாக இருந்தால் பெரிய கீர்த்திமானாவான்" என்று ஆணித்தரமாகக் குறிப்பிட்டிருந்தார். நம் பையன், இந்த விரல்களை எல்லாம்விட்டுவிட்டுத் தன் சுண்டுவிரலையோ, என் கைவிரலையோ, தாயார் கைவிரலையோதான் வாய்க்குக் கொண்டுபோவான்!

ஒரு பத்திரிகையில், 'குழந்தை வாயில் விரல் போட்டால் அதற்குப் பல் வலிக்கிறதென்று அர்த்தம்; நிச்சயமாக ஏதாவது க்ளூகோஸ், அல்லது சக்கரை அல்லது சாக்லேட்டை விரலில் தடவுங்கள்' என்று போட்டிருந்தது. மற்றொரு புத்தகத்திலோ, 'குழந்தைப் பருவத்தில் வாயில் விரல் போட்ட குழந்தைகளுக்குக் கிஷ்கிந்தா காண்ட வாசிகள் போல் வாய் உருவாகும், பல்லெல்லாம் கோரமாகும்' என்று பயமுறுத்தி, 'விளக்கெண்ணெய், நல்லெண்ணெய், வேப்பெண்ணெய் அல்லது கசப்பாக எதையாவது விரலில் தடவிவிட்டால் குழந்தை அந்தத் தீப்பழக்கத்தை விட்டுவிடும்' என்று கண்டிருந்தது. கசப்பாக எதைத் தடவுவது என்று யோசனைசெய்து கடைசியில் என் மனைவி வேப்பெண்ணெய் உடம்புக்கும் நல்லது என்று அதைத் தடவிப் பார்த்தாள். சந்துரு இலேசுப்பட்ட பயலா! பார் மகன் அவன்! அந்த வேப்பெண்ணெயைக்கூட அவன் ரசிக்க ஆரம்பித்து விட்டான். அதுமுதல் பாலில்கூட வேப்பெண்ணெய் வாசனை இருந்தால்தான் அதைக் குடிப்பான்!

சந்துருவின் இளம்பிராயம் என்னை ஒரு குழந்தை நிபுணனாக ஆக்கிவிட்டது.

ஒரு சமயம், சந்துருவின் மூன்றாவது வயதில் அவனுக்கு ஜுரம் கண்டது. அப்பொழுது வீட்டில் ஒரு இயற்கை—சிகிச்சை யோகியார் வந்திருந்தார்.

"இந்த ஜுரத்தை ஒருமணி நேரத்தில் இறக்கிவிடலாம். குழந்தையைக் குளிர்ந்த ஜலம் நிறைந்த தொட்டியில் அரை மணி அமுக்கிவையுங்கள். அப்புறம் உங்களுக்குக் கவலையே வேண்டியதில்லை" என்றார்.

அவர் சொன்ன கடைசி வாக்கியம் எனக்கு உண்மையென்றே பட்டது. என் மனைவியோ, "'ஜுரம் வந்த குழந்தையைக் குளிர்ந்த நீரில் அமுக்குவதா, அதைக் கொலை செய்வது போலாகுமே" என்று

பயந்தான். பேரிபோர், "பயப்படாதீர்கள்; அதுதான் தவறு; குளிர்ந்த ஜலம், உஷ்ணத்தை உடனே குறைக்கும். குழந்தை உயிருக்கு நான் ஜவாப்தாரி" என்று திட்டமாய்க் கூறினர்.

எனக்கு அவரிடம் நம்பிக்கை பிறந்தது; நாணம் பிறக்காவிட்டாலும் அவர் வாயுறும் தாயும் பிறக்க வைத்தன. தைரியமாக, என் மனைவியின் கூக்குரலைக் கூடச் சட்டைசெய்யாமல் சந்துருவைத் தொட்டியில் அமுக்கினேன். பத்து நிமிஷங்கள் ஆயின. எனக்குள்ளுக்குள் 'ஜபரா' தான். இருந்தாலும் பேரிபோர் தைரியம்சொல்லிக்கொண்டிருக்கையில் என்ன பயம்? பதினைந்து நிமிஷமும் ஆயிற்று. பேரிபோர் எங்கோ வெளியே சென்று வருவதாகவும், "பயப்பட வேண்டாம், ஆனால் சரியாக அரை மணி—முப்பது நிமிஷம் — குளிர்ந்த தண்ணீரிலேயே வைத்து—பிறகு காற்றுப்படாமல் உடம்பைத் துடைத்துப் போர்த்துங்கள்; ஜுரம் விட்டு விடும்" என்று கூறி விட்டுப் போனார். அவர் சொன்னபடியே செய்திருந்தால் ஒருவேளை ஜுரமும் விட்டிருக்கும்; கவலையும்விட்டிருக்கும்; ஆனால் அவர் வாசற்படி தாண்டியதும் தாண்டாததுமாக, என் மனைவி பத்ரகாளி ரூபம் எடுத்துக் கூச்சல்போட்டு, சந்துருவைப் பலாத்காரமாகத் தொட்டியிலிருந்து தூக்கிச் சென்றாள். அவள் தாயார் சப்தம் கேட்டு ஓடி வந்து, "இதேதடி காலம்! இப்படியும் ஒரு புருஷனுக்குப் புத்தி போகுமோ! பச்சைப் பாலகைக் கொதிக்கிற ஜுரத்தில் பச்சைத் தண்ணீரில் அமுக்கிச் சாகவைப்பார்கள்......ஜுரம்... இப்படிக் கொண்டா குழந்தையை..." என்று தாயிடமிருந்து சந்துருவைப் பிடுங்கிக் கொண்டு, சுக்கு, திப்பிலி, வாய்ப்பு, கோரோசனை, குங்குமப்பூ, கழுதைப்பால் முதலிய "கை வைத்தியங்கள்" செய்யத் தொடங்கினாள். அதற்குள் பக்கத்து வீட்டுப்பாட்டி வந்து "நன்றாயிருக்கு! இப்படியா குழந்தையைக் கோட்டுவார்கள்! குடுகுடுத் தெரு முனியாண்டியைக் கூப்பிட்டு மந்திரிக்கச் சொல்லுங்கள்; ஒரு நிமிஷத்தில் ஜுரம் விட்டு விடும்" என்றாள். வேப்பிலை, விபூதி சகிதமாக முனியாண்டி வந்து கணக்கில்லாத பிசாசுகளைக் கூப்பிட்டு விரட்டி அட்டகாசம் செய்தான்.

"குழந்தைக்குச் சுரம்தான். கல்லைக் கொதிக்கும் வெந்நீர் கொஞ்சம் கற்பூரத் தைலம் போட்டுக் குழந்தையை அதன்மேல் வைத்துக் கம்பளியைப் போட்டு அதன்மேல் மூடவையுங்கள்; கபம், ஜுரம் எல்லாம் பனிச் சென்று விட்டுப்போகும்" என்றாள் மற்றொரு அம்மாள்.

சந்துரு இதற்கெல்லாம் அஞ்சவில்லை; ஜன்னி பிறந்தது பிறகு ஒரு மாதம் சிறிய டாக்டர்களும் பெரிய டாக்டர்களும் வந்து சந்துருவை உலைத்தது விட்டு அலுப்புப் படாத பாடு பட்டார்கள். அப்படியும் சந்துரு பிழைத்து விட்டான்.

அவன் கண்டம் தப்பினான் — எனக்குத் தான் எமகண்டமாயிற்று. டாக்டர்கள், மருந்துகள் செலவு ஒரு பக்கம். "நன்றாய்க் கொல்லப் பார்த்தீர்கள் குழந்தையை!" என்று மனைவி இடித்துக் காட்டுவது ஒரு பக்கம். "அது உன் குற்றம்தான்; பேரிபோர் சொன்னபடி அரைமணி குளிர்ந்த ஜலத்தில் வைத்திருந்தால் இவ்வளவு அபத்தம் வந்திருக்காது" என்றேன். ஏனென்றால் இரண்டில் ஒன்று தெரிந்திருக்குமல்லவா! அப்போது இவ்வளவு கஷ்டத்துக்கும் செலவுக்கும் உள்ளாகி இருக்க வேண்டாமே!

சந்துரு வளர வளர என்னுடைய குழந்தைப் பராமரிப்பு ஞானம் முற்றி வந்தது. அவனுடைய பத்தாவது வயதுக்குள் பல பாஷைகளிலிருக்கும் குழந்தைப் பராமரிப்பு நூல்களையும் கரை கண்டு விட்டேன்.

"குழந்தைகளைச் சரியாக வளர்க்கும்வழி அவர்களை இஷ்டம்போல் விடுவதுதான்" என்று ஒரு புத்தகத்தில் எழுதியிருந்தது. 'இயற்கையாகக் குழந்தைகளின் அறிவு, குணம், பழக்கம் இவைகளை வளரவிட வேண்டும்; அப்பொழுதுதான் குழந்தைக்குத் தன்னம்பிக்கையும் தைரியமும் ஏற்படும்' என்பது இந்த நூலாசிரியரின் சித்தாந்தம். இதை எழுதியவர் சந்துருவைப் பார்த்ததில்லை. ஆகையினால் அவர் அப்படி எழுதியதை மன்னித்துவிட்டேன். மற்றொருவர் "குழந்தைகளை மனம்போனபடி விடக்கூடாது; விளையும் பயிர் முளையிலே. ஆதலால் அடக்குமுறையிலேயே இருக்கவேண்டும்; தடியிலே குட்டவேண்டும். சரியான கெடுபிடியில் வைத்து அடக்கிக்கொண்டு வரவேண்டும்" என்றார். மற்றொரு புத்தகம், ஆதாரங்களுடனும் சித்திரப் படங்களுடனும் இந்தக் கொள்கையை விளக்கியிருந்தது. இந்த நூலாசிரியருக்கு என் குடும்ப விஷயம் தெரியாது. சந்துருவைக் கண்டித்து விட்டு நான் உயிருடன் இந்த உலகத்தில் இருந்திருக்க முடியாதென்பது அவருக்கு என்ன தெரியும்!

இன்னும் பல நூல்களிலிருந்தும் குழந்தை — சாஸ்திரங்களிலிருந்தும் பல அரிய பெரிய தத்துவங்களையும் விஷயங்களையும் கற்றுக் கொண்டேன். அதுபோல நூதனமாக இதைவிட அதிகமான விஷயங்களைக் கற்றுக் கொண்டேன். சந்துருவை விடச் சிறு குழந்தையாக நடித்து அவனைக் களிப்பூட்டினேன். அவன் சவாரி செய்ய யானையாகவும் குதிரையாகவும் மாறினேன். அவன் ஹாஸ்ய உணர்ச்சியை உதைத்து எழுப்பக் கழுதையாகக் கத்தினேன். அவன் அன்பைப் பெறக் கெஞ்சிக் கொஞ்சினேன். அவன் ஆனந்திக்க மயிலாக ஆடினேன். அவன் ஆராரம் செய்யக் குயிலாகப் பாடினேன். என் குழந்தைப் பருவத்தில் விளையாடாத விளையாட்டெல்லாம் கற்றுக் கொண்டேன். நான் சிறுவனாக இருக்கும்போது கண்டறியாத விளையாட்டுக் கருவிகளை எல்லாம் கொண்டு வந்து சேர்த்தேன். ரயில் விளையாட்டு, கண்ணாமூச்சி, கோலி, பம்பர விளையாட்டு, கொண்டி விளையாட்டு, சண்டி விளையாட்டு எல்லாவற்றிலும் 'சாம்பியன்' ஆக மாறினேன்.

சந்துருவைப் படிக்க வைத்தேன். அதனால் பள்ளிக்கூடத்தில் எனக்கு விட்டுப் போன பாடமெல்லாம் கற்றுக்கொண்டேன். பாலர் பாடப் புத்தகங்கள் முதல் உலக மகா சரித்திரம் வரையில் எனது இரண்டாவது கல்வி பூர்த்தியடைந்தது.

இது தவிர, மனோதத்துவ சாஸ்திரம், வைத்திய சாஸ்திரம் முதலிய பல்கலைப் புலவனாகவும் ஆகவேண்டி வந்தது. சந்துருவை வளர்த்து மனிதனாக்கும் பணியில் ஈடுபட்ட நான் மீண்டும் குழந்தைப் பருவத்தை முற்றிலும் அடைந்து விட்டேன்.

* * *

இன்று சந்துருவின் குழந்தைக்கு முதல் ஆண்டு நிறைவு. சந்துருவும் அவன் மனைவியும் குழந்தையும் தீபாவளிக்கு இங்கு வந்திருக்கிறார்கள். சந்துருவுக்கு என் தீபாவளிப் பரிசு, இதோ என் முதிர்ந்த அனுபவத்தைக் கொண்டு நான் எழுதி வைத்திருக்கும் அரிய நூல் — "குழந்தை வளர்க்காதது எப்படி?" என்ற புத்தகம். இதைப் படித்து, அன்று என் வளர்ப்பிலிருந்து பிழைத்த சந்துருவின் குழந்தையாவது அவன் வளர்ப்பிலிருந்து பிழைக்கட்டும்!




# ராயல் என்பீல்ட், எக்ஸெல்ஸியர், ஏரியல் & பாந்தர்

125 முதல் 1000 C. C.

★ சுலபமான தவணைகளில் செலுத்த வசதியுண்டு.

★ ஸ்பேர் பாகங்கள் எப்போதும் கிடைக்கும்.

★ விற்பனைக்குப் பிறகு சர்விஸ் வசதிகள் உண்டு.

•

## தி மதராஸ் மோட்டார்ஸ் லிட்.

மோட்டார் சைகிள் ஸ்பெஷலிஸ்டுகள்

4-9, பிராட்வே :: மதராஸ்-1

# சுதந்திரமும் சுகாதாரமும்!



இந்தியா சுதந்திர மடைந்து உலக நாடுகளுக்கு முன் சரிநிகர் சமானமாக விளங்கி வருகிறது. "எல்லாரும் இந்நாட்டு மன்னர்" என்ற மகாகவி பாரதியாரின் வாக்கு உண்மையாகி விட்டது. நாமெல்லோரும் இப்பொழுது மன்னர்களாகவே திகழ்கிறோம். நமது தேசத்தை ஆளும் சர்க்கார் நம்முடைய சொந்த சர்க்கார். சர்க்கார் வேறு, நாம் வேறு அல்ல. ஆகையால் நாம் எல்லோரும் ஒவ்வொரு காரியத்திலும் நமது உரிமையை உணர்ந்து கடமையாற்ற வேண்டும். நமது சமுதாய வளர்ச்சிக்கும் பொருளாதார சுபிட்சத்துக்கும் நாம் சர்க்காருடன் சேர்ந்து உழைக்க வேண்டும்.

ஒரு சமுதாயம் சிறந்த முறையில் சீர்பட வேண்டுமானால் அதற்குப் போக்குவரத்துச் சாதனம் மிகவும் முக்கியமானது. நமது நாட்டுப் போக்கு வரத்து சாதனங்களில் தலையானது இந்திய ரயில்வேக்கள். இந்திய ரயில்வேக்கள் தேசத்தின் பொதுச் சொத்து. அதாவது நம்முடைய சொந்த சொத்து. அவற்றின் வளர்ச்சியில் நாம் ஒவ்வொருவரும் ஈடுபட்டு உழைக்க வேண்டும். ரயில்வேக்களின் நிர்வாகத்துக்கு நம்மால் ஆனவரையில் உதவி புரிய வேண்டும்.

வெளியூரிலிருக்கும் நோய்வாய்ப்பட்ட தாயைப் பார்க்க வேண்டுமானாலும் நாம் ரயில் ஏறித்தான் செல்லுகிறோம். நூற்றுக்கணக்கான மைல்களுக்கு அப்பால் உள்ள மாமனார் வீட்டுக்கு மனைவியுடன் தலை தீபாவளி கொண்டாட ரயிலில் ஏறித்தான் பிரயாணம் செய்ய வேண்டும். இன்னும் சரித்திரப் பிரசித்திபெற்ற இடங்கள், புண்ணிய க்ஷேத்திரங்கள் முதலியவைகளைப் பார்த்துக் களிக்க ரயிலின் மூலமாகத்தான் பிரயாணம் செய்ய வேண்டும். கோடிக் கணக்கான மக்களின் சுகவாழ்வு ரயில்வேக்களுடன் இணைந்திருக்கிறது. நமது சர்க்காரின் வருமானத்தில் முக்கிய அங்கம் வகிப்பது ரயில்வேக்களின் வருமானம்தான்.

இப்படிச் சர்க்காருக்கும் சமுதாயத்துக்கும் மிக முக்கியமாக விளங்கும் இந்திய ரயில்வேக்கள் சுபிட்சமாக இருப்பது நம்முடைய செயலில்தான் இருக்கிறது. அதற்கு நாம் செய்ய வேண்டியது என்ன தெரியுமா? காசு கொடுத்து டிக்கட் வாங்கிக் கொண்டு பிரயாணம் செய்தால் மட்டும் போதாது. இன்னும் சில காரியங்களிலும் நாம் கவனம் செலுத்த வேண்டும்.

ரயில்வே ஸ்டேஷனுக்குப் போகிறோம். ரயில் வரும் நேரம் வரையில் ஸ்டேஷனில் காத்திருக்கிறோம். ஸ்டேஷனும், ஸ்டேஷன் சுற்றுப்புறமும் சுத்தமாக இருப்பது நமது மனத்துக்குத் திருப்தியையும் சந்தோஷத்தையும் கொடுக்கிறது. அந்தச் சுத்தமான சூழ்நிலையைக் கெடாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது நமது கடமையாகும். நாம் சிறிது நேரம்தானே தங்கி விட்டுப் போகிறோம் என்று நினைத்து மிகவும் அநாகரிகமாக நடந்து விடுகிறோம். நமக்குப் பிறகு நம்முடைய சகோதரர்களில் ஒருவர்தான் அங்கு வந்து தங்கப் போகிறார் என்ற நினைப்பு நமக்குத் தோன்றுவதே இல்லை. அதனால் சில தவறுதல்களையும் செய்து விடுகிறோம். அதாவது கண்ட இடங்களில் எச்சில் துப்புவது, நல்ல வர்ணம் பூசியிருக்கும் அழகான சுவரில் சுண்ணாம்பைத் தடவுவது, பீடி சிகரெட்டுகளைப் பிடித்து, நினைத்த இடத்தில் எறிவது, வாழைப்பழத் தோலை வழியில் போடுவது, பொது ஜனங்கள் உட்காரும் இடங்களில் குழந்தைகளை மலஜலம் கழிக்க விடுவது — இது போன்ற நாகரிகமற்ற காரியங்களைச் செய்கிறோம்.

இந்த மாதிரியான காரியங்களையெல்லாம் செய்யாமல் ரயில்வே ஸ்டேஷன்களைப் பொதுஜனங்கள் வந்து சந்தோஷமாகத் தங்கும் ஒரு புனிதமான இடமாகக் கருதி நாம் நடந்து கொள்ள வேண்டும்.

ரயில் வந்துவிடுகிறது. ரயிலில் ஏறப்போகிறோம். ஒருவரை ஒருவர் முண்டியடித்துக்கொண்டு ஏறி நம்மை நாமே சிரமப் படுத்திக் கொள்ளுகிறோம். அப்படிச் செய்யாமல் ஒருவர் பின் ஒருவராக ஏற வேண்டும். அதனால் இறங்குபவர்களுக்கும் ஏறுபவர்களுக்கும் சௌகரியம். ரயில் வண்டியில் ஏறியவுடன் அங்கு நாம் நடந்து கொள்ளுவதை நினைத்துப் பார்க்கவே முடியவில்லை! எட்டுப்பேர் உட்கார வேண்டிய இடத்தில் மூன்று பேர் கோணல் மாணலாக உட்கார்ந்து கொண்டு இட நெருக்கடியை உண்டாக்கி விடுகிறோம். மேலே சாமான்கள் வைக்கும் இடத்தில் ஏறிப் படுத்து விடுவதால், சாமான்களை வழியில் வைக்கும்படி ஏற்படுகிறது. இதனால் ரயிலிலிருந்து இறங்குபவர்களுக்கும் ஏறுபவர்களுக்கும் அதிகமான சிரமத்தைக் கொடுத்து விடுகிறோம். கண்டதைச் சாப்பிட்டுவிட்டு வண்டிக்குள்ளேயே கை அலம்பி விடுகிறோம். வாழைப்பழம், மாம்பழம், கடலைக் கொட்டை, சாத்துக்குடி, ஆரஞ்சு முதலியவைகளின் தோலையும் வண்டிக்குள்ளேயே போட்டு விடுகிறோம். ரயில் வண்டியில் இருக்கும் தண்ணீரின் அவசியத்தை உணராமல் அதை வீணாக்கி விடுகிறோம். அப்பப்பா! இன்னும் எவ்வளவு தூரம் ரயில் வண்டியை அசுத்தப் படுத்தலாமோ அதையெல்லாம் செய்து விடுகிறோம்.

மேற்படி காரியங்களை எல்லாம் நாம் செய்யாமல் இருப்பதுடன் பிறருக்கும் எடுத்துச் சொல்லி, அவர்களையும் செய்ய விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்வது ஒரு சிறந்த பொதுஜன சேவையாவதுடன் நமது சொந்த ரயில்வேக்களுக்குச் செய்யும் ஒப்பற்ற தொண்டுமாகும். ஆகையால் ரயில்வே ஸ்டேஷன்களையும் நாம் பிரயாணம் செய்யும் ரயில் வண்டிகளையும் சுத்தமாகவும் சுகாதாரமாகவும் வைத்துக் கொள்ளுவதற்கு ரயில்வே நிர்வாகஸ்தர்களுடன் ஒத்துழைக்க வேண்டுமென்று ரயில்வே நிர்வாகிகள் எதிர்பார்க்கின்றனர். அவர்களுடைய நம்பிக்கையைக் காப்பாற்றுவோமாக!







"தூங்கக் கூடாதென்று கட்டிலில் எழுந்து உட்கார்ந்தார்!"

இவ்விதம் சொல்லிவிட்டுக் கடோத்கஜ ராவ் எழுந்து மின்சார விளக்கைப் போட்டார். கதவைத் திறந்து பார்த்தார்.

அவர் எதிர்பார்த்தது போலவே அங்கே ஒரு பேய் நின்று கொண்டிருந்தது!

ராவ் மியூஸியத்தில் மனிதனுடைய உடலின் எலும்புக்கூடு வைத்திருப்பதைப் பார்த்திருந்தார்.

அதேமாதிரி இந்தப் பேய் இருந்தது. ஆனால் பேசிற்று; காலையும் கையையும் கழுத்தையும் ஆட்டிற்று. அப்படி ஆட்டியபோது எலும்புப் பூட்டுகள் 'தலக்' 'தலக்' என்று சத்தமிட்டன.

"போய்விடு! போய்விடு!" என்று அந்தப் பேய் காலினால் தரையில் உதைத்துக் கொண்டு அலறியது.

கடோத்கஜ ராவ் தம் நெஞ்சை ஒரு கையினால் அமுக்கிக் கொண்டு சொன்னார்:— "இந்தா பார்! உன்னுடைய மிரட்டலுக்கெல்லாம் நான் பயந்துவிட மாட்டேன். இந்த வீடு பெரியது; தாராளமாயிருக்கிறது. என்னுடைய குடும்பம் பெரிதுதான் என்றாலும், இதில் நானும் என் குடும்பத்துடன் குடியிருக்கலாம்; நீயும் இருக்கலாம். நீ இருப்பதில் எனக்கு ஆட்சேபமில்லை. ஆனால் ஒரு நிபந்தனை. இராத்திரி நாங்கள் தூங்கும்போது நீ 'தலக்' 'தலக்' என்று சத்தமிட்டுக் கொண்டு நடமாடக்கூடாது. நடமாடாமலே யிருந்தால் நல்லது. அப்படி நீ நடமாடினாலும் சத்தம் கேட்காதபடி நடமாடவேண்டும். தெரிகிறதா! உன்னுடைய எலும்புப் பூட்டுகளில் இப்போது சதைப்பற்று இல்லாதபடியால் இப்படிச் சத்தம் கேட்கிறது. கொஞ்சம் மோபில் ஆயில் வாங்கித் தருகிறேன். அதைப் போட்டுக்கொண்டு நடமாடினால் இவ்வளவு சத்தம் கேட்காது!"

"அதெல்லாம் முடியாது. என்னை எண்ணெய் போட்டுக் கொள்ளும்படி சொல்ல நீ யார்! நான் நடமாடும்போது 'தலக்' 'தலக்' என்று சத்தம் கேட்டால்தான் எல்லாரும் பயப்படுவார்கள்."

"நீ சொல்வது தவறு. இதற்கெல்லாம் இந்தக் காலத்தில் யாரும் பயப்பட மாட்டார்கள். என் குழந்தைகள் பொல்லாதவர்கள். உன்னைப் பார்த்துவிட்டால், மியூஸியத்திலிருந்து நீ தப்பி வந்து விட்டதாக எண்ணி, உன்னை எலும்பு எலும்பாகக் கழற்றி எடுத்து விடுவார்கள்!"

இதைக் கேட்டவுடனே அந்தப் பேய் 'ஓய்ய்ய்' என்று ஒரு சத்தம் போட்டு விட்டு ஓடியது. மச்சுப்படியின் பக்கத்தில் போய் நின்று திரும்பிப் பார்த்து, "இரு! இரு! என் அண்ணனை வரச் சொல்கிறேன்" என்று சொல்லிவிட்டு ஓடியது.

ஸ்ரீ கடோத்கஜராவ் நின்ற இடத்திலேயே நின்றார். மற்றொரு பேய் இரண்டு கைகளாலும் தலைக்கு மேலே ஒரு பழம் பெட்டியைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு வந்தது. இதுவும் எலும்புக்கூட்டுப் பேய்தான். ஆனால் காலிரண்டிலும் ஆன ஒரு நீண்ட சங்கிலியைக் கழுத்திலிருந்து கால்வரை போட்டுக்கொண்டு வந்தது.

ராவின் அருகில் வந்ததும் "போடட்டுமா! போடட்டுமா!" என்றது.

ராவ், "பேயே! நீ சினிமா பார்ப்பதுண்டோ!" என்று கேட்டார்.

"உனக்கு எப்படித் தெரிந்தது!" என்றது பேய்.

"நீ பார்த்த ரத்னகுமார் படத்தை நானுந்தான் பார்த்தேன். அதில் ஒரு பேய் 'போடட்டுமா! போடட்டுமா!' என்று அசடு வழிய உளறுகிறதே, அதைப் பார்த்துத்தானே நீயும் உளறுகிறாய்!"

அதைக் கேட்ட அந்தப் பேய் திடீரென்று பெட்டியைக் கீழே போட்டது. பெட்டி அதன் கால் மேலேயே விழுந்தது! வலி பொறுக்காமல் 'வீல்' என்று கூச்சல் போட்டுக்கொண்டு ஓட்டம் பிடித்தது.

பிறகு, கடோத்கஜராவ் இனி நிம்மதியாகத் தூங்கலாம் என்று எண்ணிக் கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே போனார். பயன் என்ன! சற்று நேரத்துக்கெல்லாம் மறுபடியும் 'தலக்' சத்தம் கேட்டது. முன்னைவிட அதிகமாகவே கேட்டது. கதவைத் திறந்து பார்த்தால், உடம்பில் இரும்புக் கவசமும், தலையில் இரும்புத் தொப்பியும் தரித்த ஒரு எலும்புக்கூட்டுப் பேய் நின்றது. அது அணிந்திருந்த கவசங்களிலிருந்துதான் அந்த சத்தம் என்று ராவ் அறிந்து கொண்டார்.

"புழ்! புழ்!" என்று பேய் கத்திற்று.

"இந்தா பார்! வீண் கூச்சல் போடாதே! நீ ஹாம்லெட் நாடகத்தில் வரும் தகப்பன்—பேய்தானே!"

"ஆமாம்!...புழ்! புழ்!"

"நீ கையினால் ஆகாத உபயோகமற்ற பேய் என்பது எல்லாருக்கும் தெரியும். அதனால்தானே உனக்குத் துரோகம்செய்த மனைவியையும் சகோதரனையும் உன்னால் பழிவாங்க முடியவில்லை! உன் மகனை ஏவிவிட்டு அவன் வாழ்க்கையும் கெடுத்தாய்! சீ! முட்டாளே! கோழைப்பேயே! போ! நீ கெட்ட கேட்டுக்குக் கவசம் வேறே கேடா! இங்கே நின்றாயோ, பிடித்து மியூஸியத்துக்கு அனுப்பி விடுவேன்!"

ஹாம்லெட்டின் தகப்பன்—பேய் அங்கிருந்து ஒரே ஓட்டமாக ஓடிவிட்டது.

சற்று நேரத்துக்கெல்லாம் வந்த இன்னொரு பேயைப் பார்த்து, கடோத்கஜ ராவ், "நீ யார்!" என்றார்.

"நான் ஜோஸியப் பேய்!"

"எதற்காக வந்தாய்!"

"நீ என்னைப்பற்றி இன்று டிராம் வண்டியில் அவதூறு கூறினாய் அல்லவா! என் உண்மையை நிரூபிக்கவே வந்தேன். உன்னுடைய காரியம் பலிக்காமல் செய்வதற்காகவே வந்தேன்!"

"பாவம்! இதற்காகவா உயிரை விட்டாய்! உன்னுடைய விதி இன்னதென்று உன் ஜோஸியத்தில் தெரிந்ததா!"

"தெரியாமல் என்ன! பேஷாய்த் தெரிந்திருந்தது."

இச்சமயத்தில் "ஜய பேரிகை கொட்டடா!" என்ற ஒரு கம்பீர முழக்கம் கேட்டது.

முழக்கம் வந்த திசையைப் பார்த்தால் பாரதியார் வந்து கொண்டிருந்தார். அதே அங்கியான சட்டை; கழுத்தில் அதே விதத்துண்டு; அதே மீசை; தலையில் அதேமாதிரி குஞ்சம் விட்ட தலைப்பாகை.

"பயமெனும் பேய்தனை அடித்தோம்!" என்று பாரதியார் முழங்கினார்.

அவ்வளவுதான்; ஜோஸியப்பேய் ஓட்டம் பிடித்தது. அதைத் துரத்திக் கொண்டு பாரதியார் விரைந்து ஓடினார்.

மறுபடியும் இன்னொரு அசல்வாப் பேய் வந்தது. அது வாயைத் திறந்தால் தணல் சுடர்விட்டது. மநோகரா நாடகத்துப் பேய் அது என்று கடோத்கஜ ராவ் உடனே தெரிந்து கொண்டார்.

"ஏ பேயே! நானே மநோகரா நாடகத்தில் பேயாக நடித்திருக்கிறேன். உன்னைவிடப் பிரமாதமாக என்னுடைய வாயிலிருந்து அனலைக் கக்குவேன், தெரியுமா!" என்றார் ராவ்.

அந்தப் பேயும் ஓட்டம் எடுத்தது.

கடைசியாக, கடோத்கஜராவ் கூடச் சிறிது மிரளும்படியாகப் பத்துப்பதினைந்து பேய்கள் சேர்ந்தாற்போல் வந்து அவரைச் சூழ்ந்து கொண்டன. "பசி! பசி!" என்று அவை கூச்சலிட்டன.

கடோத்கஜராவ் இந்த நிலைமையை எப்படிச் சமாளிப்பது என்று ஒரு நிமிஷம் யோசனை செய்தார். அதற்குள் அப்பேய்கள், "பசி! பசி! உன்னை விழுங்கி விடப் போகிறோம்!" என்று ஏகமாக ஆர்ப்பரித்தன.

"ஏ பேய்களே! உங்களுடைய பொய் எனக்குத் தெரியாது என்று நினைக்கிறீர்கள்! பஞ்சத்தினால் நீங்கள் செத்துப் போனதாகப் பொய் சொல்லி என்னை ஏமாற்றப் பார்க்கிறீர்கள்! காங்கிரஸ் மந்திரிகளுக்கு அபகீர்த்தி உண்டாக்குவதற்காகவே ஸ்ரீ டி. பிரகாசத்துடனும் 'மெட்ராஸ் மெயில்' பத்திரிகையுடனும் சேர்ந்து இந்தச் சதியாலோசனை செய்திருக்கிறீர்கள். உண்மையில் நீங்கள் பஞ்சத்தினாலோ, பசியினாலோ சாகவில்லை. வயது முதிர்ந்ததினாலேயே செத்தீர்கள்.



"உன்னுடைய மிரட்டலுக் கெல்லாம்நான் பயந்து விட மாட்டேன்."

அது உங்கள் தலை விதி; யார் என்ன செய்ய முடியும்! உடனே எல்லோரும் ஓடிப்போய் விடுங்கள்! இல்லாவிட்டால் எங்களுடைய உணவு மந்திரி கனம் முன்ஷியைக் கூப்பிட்டுக்கொண்டு வருவேன்!" என்றார் ராயர்.

"உணவு மந்திரியுமா இங்கே வந்தால் எங்களை என்ன செய்வார்?"

"எலும்பிலே பாஸ்பரஸ் என்னும் சத்து இருக்கிறது. பூமிக்கு அது மிக நல்ல உரம். உங்கள் எலும்புகளை யெல்லாம் சுக்கு நூறாய் இயந்திரத்தில் கொடுத்து உடைத்து வயல்களுக்குப் போட்டு உரம் செய்து விடுவார்!"

இதைக் கேட்டதும் அந்தப் பஞ்சாப் பேய்கள் ஓரே ஓட்டம் பிடித்தன. அப்போது எழுந்த பெரும் 'ஹம்' ஓசையில் கும்பகர்ணன் கூட விழித்தெழுந்திருப்பான். ஸ்ரீ கடோத்கஜராவ் விழித்துக் கொண்டதில் வியப்பு இல்லையல்லவா! தாம் தூங்காமலிருக்கத் தீர்மானித்திருந்தும் எப்படியோ தூங்கிப் போய் விட்டதையும், அத்தனை நேரம் கண்டது கனவு என்பதையும் உணர்ந்து கொண்டார்.

எழுந்து உட்கார்ந்து கண்ணைத் துடைத்துக்கொண்டார்.

"பேயுமில்லை, பிசாசுமில்லை! எல்லாம் பிரமை! கனவு!" என்று அவர் எண்ணிக்கொண்டிருக்கும்போது மறுபடியும் ஏதோ சத்தம் கேட்டது. 'ஹிக்' 'ஹிக்' என்றும், 'சல்' 'சல்' என்றும், 'கிர் கிர்' என்றும் ஓசைகள் எழுந்தன.

இது என்ன கூத்து!

கடோத்கஜராவ் நன்றாக விழித்துக் கொண்டார். அறைக் கதவைத் திறந்தார். அந்த வீட்டின் மாடியில் ஏதோ ஒரு மூலை அறையிலிருந்து அந்தச் சத்தங்கள் வந்தன. அடிமேல் அடிவைத்து மெள்ள மெள்ள நடந்து மச்சுப்படி ஏறினார். சத்தம் வந்த அறைக்கு அருகே சென்று பார்த்தார். ஜன்னல் கதவு ஒன்றே ஒன்று மட்டும் திறந்திருந்தது. அதன் வழியாக எட்டிப் பார்த்தார். உள்ளே ஐந்தாறு ஆசாமிகள் உட்கார்ந்து பணம் வைத்துச் சீட்டு ஆடிக்கொண்டிருந்தார்கள். வெள்ளிப் பணத்தை அங்கு மிங்கும் நகர்த்திய சத்தந்தான் அவர் கேட்ட சத்தம். மேலே கூறிய விநோதமான கலவை உண்டாக்கிய ஓசையும் அதுதான் போலும்!

கடோத்கஜராவ் அடிமேல் அடிவைத்து நடந்து சென்று திறந்திருந்த வாசற்படி வழியாக வெளியேறினார். நேரே போலீஸ் ஸ்டேஷனைத் தேடிப் போனார். கதவை இடித்தார். ஒரு போலீஸ் சேவகர் கண்ணைத் துடைத்துக் கொண்டே வந்து கதவைத் திறந்தார்.

"அங்கே ஒரு வீட்டில் சூதாட்டம் நடைபெறுகிறது. உடனே வந்தால் குற்றவாளிகளைக் கையோடுபிடிக்கலாம்!" என்று சொன்னார் ராயர்.

"உமக்கு எப்படித் தெரியும்!" என்று போலீஸ்காரர் கேட்டார்.

"வாடகைக்கு அந்த வீட்டைப் பேசி யிருக்கிறேன். அந்த வீட்டில் இராத்திரி படுத்துக் கொண்டிருந்தேன்..."

"எந்த வீட்டில்!"

விலாசத்தையும் வீட்டு நம்பரையும் கடோத்கஜராவ் சொன்னதும், "ஐயோ!" என்று கூச்சல் போட்டு விட்டுப் போலீஸ்காரர் கதவைச் சாத்திக்கொண்டார்.

தம்மைப் பேய் என்று நினைத்து அவர் பயந்து போய் விட்டார் என்பது ராயருக்குத் தெரிந்து போயிற்று. அதிலிருந்து ஒரு யுக்தி உதயமாயிற்று.

திரும்பவும் அந்த வீட்டுக்கே போனார். திறந்த கதவு வழியாகப் பிரவேசித்தார்.

"ஓய்ய்ய்" என்று ஒரு கூச்சல் போட்டார். 'இய்ய்ய்' என்று இன்னொரு சத்தம் போட்டார்.

சீட்டாடிய அறையிலிருந்து குழப்பமான குரல்கள் வந்தன.

மறுபடியும் ராயர் 'ஹீச்' என்றும் 'ஐயோ!' என்றும் கத்தினார். கனவில் பேய்கள் போட்ட சத்தத்தை யெல்லாம் இவரும் போட்டார்.

மாடிப் படியில் இரண்டு முறை தட தடவென்று ஏறி இறங்கினார்.

சீட்டாட்ட அறைக் கதவு திறந்தது. சீட்டு ஆடுபவர்கள் வெளியில் வரத் தொடங்கினார்கள்.

மச்சுப் படியில் பத்து அடிக்கு மேலே கடோத்கஜராவ் நின்றுகொண்டார். தன்னுடைய கறுப்புக் கம்பளியை எடுத்துத் தலை முதல் கால் வரை போட்டு மறைத்துக் கொண்டு நின்றார்.

அறையிலிருந்து வந்தவர்களில் ஒருவன் அந்த உருவத்தைப் பார்த்தான். 'அதோ!' என்று பீதி நிறைந்த குரலில் சொன்னான். மற்றவர்களும் பார்த்தார்கள். அவ்வளவுதான்! ஓரே ஓட்டமாக ஓடி விட்டார்கள். அவசரத்தில் கொஞ்சம் ரூபாய்களைக்கூட இறைத்து விட்டுப் போனார்கள்.

4

மறு நாள் காலையில் கடோத்கஜராவ் அந்த வீட்டுச் சொந்தக்காரரிடம் சென்று வீட்டைக் கட்டாயம் தாம் வாடகைக்கு எடுத்துக் கொள்வதாகச் சொல்லி விட்டுப் போனார்.

வீட்டுக் கன்ட்ரோல் அதிகாரி லீவு முடிந்து காரியாலயத்துக்கு வந்ததாகத் தெரிந்தது. அவரைப் போய்ப் பார்த்தார். எல்லா விவரமும் சொன்னார்.

அதிகாரி அவரைப் பார்த்து, "வீடு ரொம்பப் பெரியதா! சௌகரியமானதா?" என்று கேட்டார்.

"ஆமாம், பெரிய வீடுதான். மிகவும் வசதியானது."

"நியாயமாக, அந்த வீட்டுக்கு என்ன வாடகை கொடுக்கலாம்."

"மாதம் இரு நூறு ரூபாய் கண்ணை மூடிக் கொண்டு கொடுக்கலாம்."

"வீட்டுக்காரச் செட்டியார் என்ன வாடகை கேட்கிறார்!"

"தொண்ணூறு ரூபாய்க்குத் தருவதாகச் சொல்லுகிறார்."

"ஒருவேளை இன்னும் கொஞ்சம் குறைக்கவும் சம்மதிக்கலாம் அல்லவா!"

"அதுவும் சாத்தியந்தான்!"

"சரி, நீர் போகலாம். தீர விசாரித்து உத்தரவு போடப்படும்."

வீட்டுக்காரச் செட்டியாரைப் போய்க் கேட்கலாம் என்று போனார். வழியில் மேற்படி வீட்டைச் சுண்ணாம்பு அடித்துச் சுத்தம் செய்து கொண்டிருந்ததைப் பார்த்து வியப்படைந்தார்.

செட்டியாரைப் போய்ப் பார்த்தபோது தான் விஷயம் தெரிந்தது.

வீட்டு வாடகை உத்தியோகஸ்தர் மிஸ்டர் பேயாழ்வார் நாயுடு மேற்படி வீட்டை அறுபது ரூபாய் வாடகைக்குத் தாமே எடுத்துக் கொண்டு விட்டார்!

அந்த வீட்டுக்குக் குடி வந்தவரின் பெயர்ப் பொருத்தம் ஸ்ரீ கடோத்கஜ ராயருக்கு மிக்க திருப்தி அளித்தது. அதோடு இன்னொரு ஆறுதலும் அடைந்தார். மிஸ்டர் பேயாழ்வார் நாயுடுவும் தம்மைப் போல் பெரிய குடும்பிதான் என்று தெரியவந்தது. ராயரைக் காட்டிலும் நாயுடுக்கு மூன்று குழந்தைகள் அதிகம்! மொத்தம் ஒரு டஜன்!

"புது வீட்டில் அம் மனிதர் குடியும் குடித்தனமுமாக நன்கு இருக்கட்டும். குடும்பத்தை மேலும் பெருக்கிக் கொள்ளட்டும்!" என்று ராயர் மனதிற்குள் ஆசீர்வதித்தார். ததாஸ்து!



# இன்பத் தவிப்பு

**வி. எஸ். ஆர்.**

தீபாவளி வருவதற்குப் பத்து நாட்களுக்கு முன்பாகவே பங்கஜம் கிடைகொள்ளாமல் தவித்தாள். அவள் மனதில் குதூகலம் பொங்கி வந்தது. எப்பொழுதும் ஒரே பரபரப்பாக இருந்தாள். இதற்கெல்லாம் காரணம் என்ன என்பதை அறிந்துகொள்ள அவள் சிநேகிதி மாலாவுக்கு வெகு நேரம் ஆகவில்லை. பங்கஜத்தின் கணவன் சந்திரசேகரன் தலை தீபாவளிக்கு வரப்போகிறான். மாதம் பிறந்ததுமே, அவள் முகம் சிவக்க, நாணிக்கொண்டு கோணிக் கொண்டு, பெருமையுடனும் குதூகலத்துடனும் பட்டும் படாமலும் ஒரு தடவை மாலாவிடம் இதைப் பற்றிப் பிரஸ்தாபித்தாள். ஏனெனில் அவள் ரொம்ப சங்கோஜி. கோபத்தையோ மகிழ்ச்சியையோ வெளியில் விடாமல் அடக்கமாக வைத்திருப்பவள். மேலும் அடக்கமில்லாமல் உணர்ச்சியை வெளியிடுவது பெண்களின் பண்பாட்டுக்கு உகந்தது அல்ல என்ற எண்ணம் உள்ளவள். ஆனால் வாயைத் திறந்து சொன்னால்தான் ஒருவர் மனத்திலிருப்பது தெரியுமா! பங்கஜத்தின் இன்பத் தவிப்பைப் பார்த்ததும் மாலாவுக்குச் சிரிப்பு வரத்தான் செய்தது. ஐயோ, பாவம்! தன் சந்தோஷத்தை மறைத்துக் கொள்வதற்கு இவள் என்ன பாடு படுகிறாள் என்று எண்ணி மாலா மனத்திற்குள் சிரித்துக் கொண்டாள்.

பங்கஜத்தின் வீட்டிற்கு அடுத்த வீட்டில் மாலா இருந்தாள். இருவரும் பெண்கள் கலாசாலையில் ஒரே வகுப்பில் படித்து வந்தனர். பல வருஷங்களாக இருவரும் நெருங்கிய சிநேகிதிகள். ஆனால் மாலாவுக்கு இன்னும் கல்யாணமாகவில்லை. இந்தச் சித்திரையில் பங்கஜத்தின் கல்யாணம் நடந்தபோது அவள் மணப்பெண்ணின் தோழியாக இருந்தாள். அவள் அப்பொழுது தன் சிநேகிதியைக் கேலி செய்தது கொஞ்சமா நஞ்சமா! பங்கஜத்தின் கணவன் சந்திரசேகரன் தந்தி இலாகாவில் வேலையாக இருந்தான். "உன் அகத்துக்காரர் உனக்குக் காதல் கடிதங்களே எழுதப் போவதில்லை" என்றாள் மாலா, கல்யாணம் முடிந்து மாப்பிள்ளை வீட்டார் ஊருக்குப் புறப்பட்டபோது. "ஏன்!" என்று பயந்து போய்க் கேட்டாள் பங்கஜம். "அவரிடமிருந்து 'காதல் தந்திகள்' இனிமேல் உனக்கு வரும்" என்று கேலி செய்தாள் மாலா.

கல்யாணம் ஆன சில நாட்களுக்கெல்லாம் அவள் தன் சிநேகிதியைப் பார்த்து, "பங்கஜம்! கல்யாணமானதும் இப்படி மாறி விடுவாய் என்று நினைக்கவில்லை. உன் இருதயமே மாறிவிட்டதே!" என்றாள். "எப்படி மாறிவிட்டது!" என்று திடுக்கிட்டுக் கேட்டாள் பங்கஜம். "உன் இருதயம் 'கடகடா கட்டுக்கட' என்று அடித்துக் கொள்ள ஆரம்பித்து விட்டது. தந்தி இலாகா அதிகாரியைக் கல்யாணம் செய்து கொண்டு விட்டாயோ இல்லையோ!" என்றாள்.

என்னவெல்லாம் தன் சிநேகிதி தன்னைக் கேலி செய்த போதிலும் பங்கஜத்துக்கு அவளிடம் உயிர். தான் வெளியில் சொல்லக் கூடாது என்று தீர்மானம் செய்த போதிலும், சங்கோஜம் மென்மையை அடைந்த போதிலும் அவ்வப்பொழுது சேகர் எழுதும் காதல் கடிதங்களைப் பற்றி அவள் தன் சிநேகிதியிடம் பிரஸ்தாபிக்காமல் இருப்பதில்லை. பங்கஜம் அதைச் சொல்லா விட்டால்தான் என்ன, அவளது நடை உடை பாவனைகளைப் பார்த்ததுமே, 'சரி, இன்றைக்கு இவள் புருஷனிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது!' என்று கிரகித்து விடுவாள் மாலா. 'இவளுக்குக் கடிதம் வந்தால் எனக்கென்ன!' என்று அவளால் இருந்துவிட முடியவில்லை. அதைப்பற்றித் தெரிந்து கொள்ள என்ன காரணத்தினாலோ தாங்க முடியாத ஆவல் அவளுக்கு உண்டாகும். மெதுவாக அதைப் பற்றி விசாரிப்பாள். சற்றுத் திகைப்பு, சற்றுக் கூச்சம், தயக்கம் ஏற்பட்ட பிறகு கொஞ்சம் கொஞ்சமாகக் காதல் கடிதத்தில் அட்டப் பிட்டென்று சேகர் எழுதி வைத்திருக்கும் அந்தரங்க விஷயங்களையும் பங்கஜம் மாலாவிடம் சொல்லிவிடுவாள். இதைத் தொடர்ந்து கொஞ்சம் கேலிப் பேச்சுக் கிளம்பும். பங்கஜத்தின் முகம் சிவந்து அரட்டு தட்டும். "போமா, அம்மா! இதற்குத்தான் ஒன்றும் உன்னிடம் சொல்லக் கூடாது என்கிறது. இருக்கட்டும், பேசிக் கொள்கிறேன். உனக்குக் கல்யாணமாகி உன் அகமுடையான் கடிதம் எழுதும்போது நானும் உன்னைக் கேலி செய்யாமல் விடப் போகிறதில்லை!" என்பாள் பங்கஜமும் ஒருவித ஆத்திரத்துடன்.

## 2

தீபாவளிக்கு இன்னும் இரண்டு தினங்களே இருந்தன. பங்கஜம் மாலாவின் வீட்டில் சுவாரஸ்யமாகப் பேசிக்கொண்டிருந்தாள். "பங்கஜம்! உன் அகத்துக்காரர் நாளைக்கு வரப் போகிறாரா! அல்லது நாளைக்கு மறுநாளா!" என்று விசாரித்தாள் மாலா.

"நாளை சாயங்காலம்!"

"அவர் வந்தவுடன் அவரை எப்படி வரவேற்பாய்!"

"அப்படியென்றால்!"

"அவர் உன்னை வரும்போது, 'தங்கள் வரவு நல்வரவாகுக!' என்று கீட்டி முடக்கிக்கொண்டு வரவேற்கவேண்டிய அவசியமில்லை. தந்தி பாஷையில் சுருக்கமாக 'வருக!' என்று சொன்னால் போதும். நான் மறைவில் நின்று சொல்லாமல் எதிரில் நின்று ஒரு புன்னகை பூத்தாலும் சரிதான். அவரும் உன்னைப் பார்த்துப் புன்னகை புரிவார். தந்திக் கம்பியில் மின்சாரம் பாய்வது போல் உன் உடம்பில் அதிர்ச்சி ஏற்படலாம்.'

"மாலா! உன் கேலிக்கு அளவில்லாமல் போய் விட்டது!"

இந்த சந்தர்ப்பத்தில் 'தட தட'வென்று பங்கஜத்தின் தாயார் மரகதம்மாள் திடும் பிரவேசமாய் உள்ளே வந்தாள்.

"பெண்ணே! ரொம்ப நன்றாயிருக்கிறது. நாளைக்கு மாப்பிள்ளை வரப்போகிறார். நீ சதா சர்வ காலமும் இங்கே உட்கார்ந்து அலப்பரித்து கொண்டிருக்கிறாய். எப்பொழுதும் பேச்சு, பேச்சு, பேச்சுத்தானா! தையல்காரனிடம் போய் என்ன ஆயிற்று என்று பார்க்க வேண்டாமா! வீட்டில் என்ன நடக்கிறது என்று பார்க்காமல் இன்றைக்குக்கூட இப்படியா பேசுவார்கள்!" என்று சத்தம் போட்டாள். பங்கஜம் மாலாவைப் பார்த்துச் சிரித்துவிட்டுத் தாயாரைப் பின் தொடர்ந்து சென்றாள்.

ஆனால் சிறிது நேரத்திற்கெல்லாம் அவள் திரும்பி வந்து விட்டாள். எப்பொழுதுமே அவள் இப்படித்தான் செய்வது வழக்கம். ஒரு நிமிஷங்கூட அவளால் தன் சிநேகிதியைப் பிரிந்திருக்க முடியாது. மாலாவும் அப்படித்தான்.

* * *

மறுநாள் மாலை மாப்பிள்ளை சந்திரசேகரன் வந்து சேர்ந்தான். பங்கஜத்தின் தந்தை காருடன் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போய்ப் பிள்ளையாண்டானை அழைத்துக்கொண்டு வந்து விட்டார். அரக்குக் கரை போட்ட பச்சைப் புடவை அணிந்து கொண்டு, சர்வாலங்கார பூஷிதையாக, முகத்தில் புன்னகை தாண்டவமாட எதி

"மாமாவுக்கு ஒரு தந்தி கொடுக்க வேண்டும்" என்றான் சேகர். "தந்தியா! என்னத்துக்கு?" என்றார் அவர் திடுக்கிட்டு. "ஒன்றுமில்லை. எனக்கோ பொழுது போகவில்லை. என் சிநேகிதன் சூரியை வரவழைக்கலாம் என்று பார்க்கிறேன். அவன் பெரிய 'செஸ்' சாம்பியன். அவனுடன் 'செஸ்' விளையாடிக் கொண்டிருக்கலாம் என்று பார்க்கிறேன்" என்றான் சேகர். அவன் குரலில் இருந்த ஏக்கத்தையும் வருத்தத்தையும் மாமனார் தெரிந்து கொள்ளாமல் இல்லை.

"சபாஷ்! பேஷான யோசனை. உன் சிநேகிதனும் நம்முடன் தீபாவளியை இங்கே கொண்டாடி விடட்டும். உடனே வரவழை!" என்று கூறினார் மாமனார்.

மறுநாள் காலை, சூரி வந்துவிட்டான். அன்று இரவுதான் தீபாவளி. வந்ததும் சேகரின் மாமனார் அவனைக் கடைத்தெருவுக்கு அழைத்துக் கொண்டு போய்விட்டார், அவனுக்கு உடுப்புகள் வாங்குவதற்கு. சேகருக்கு ஆத்திரம் பொங்கியது. அவனுடனாவது 'செஸ்' விளையாடிக் கொண்டு பொழுதைப் போக்கலாம் என்று எண்ணினால், வந்ததும் வராததுமாக மாமனார் அவனையும் அழைத்துக் கொண்டு போய்விட்டார். பேசப் வெகு நேரமாகியும் சூரி திரும்பி வரவில்லை. சேகருக்கு இருப்புக் கொள்ளவில்லை. ஊரைச் சுற்றிப் பார்க்கப் போய்விட்டானோ!

சாப்பிடும் நேரத்தில் சூரி வந்து சேர்ந்தான். சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது, சேகர், "சூரி! எங்கே ஓடி ஓடிப் போய்விடுகிறாய்! உன்னிடம் ஒரு முக்கிய சமாசாரம் சொல்லவேண்டும். என்னுடன் 'செஸ்' ஆடவேண்டும். நீ எங்கேயும் போகக் கூடாது" என்றான் கோபமாக. சூரி சிரித்துக் கொண்டு, "நான் எதற்காக இடைஞ்சலாக வீட்டில் உட்கார்ந்து கொண்டிருக்க வேண்டும் என்றுதான் தங்கவில்லை" என்றான். பாவம், சேகரின் விஷயம் அவனுக்கு என்ன தெரியும்!

அவ்வப்பொழுது சேகர் பரிமாறிக் கொண்டிருந்த பங்கஜத்தை ஆத்திரத்துடன் பார்த்தான். அவன் அப்படிப் பார்த்ததும் பங்கஜத்தின் கை வெட வெடவென்று நடுங்க ஆரம்பித்து விட்டது. கையில் வைத்திருந்த பாத்திரம் கீழே தடாலென்று விழுந்தது. அதற்குப் பிறகு சேகர் அப்படிப் பார்ப்பதை அடியோடு நிறுத்தி விட்டான்.

சாப்பிட்டுக் கை அலம்பிய சூரியைக் காணவில்லை. "சூரி! சூரி!" என்று உரக்கக் கூப்பிட்டான். ஆனால் ஆள் இருக்குமிடம் தெரிந்தால் தானே! இவ்வளவு தூரம் சொல்லியும் சூரி எங்கே போய்விட்டான்! சேகருக்கு அளவு கடந்த ஆத்திரம் உண்டாயிற்று.

மரகதத்துக்கும் வருத்தமாகத் தானிருந்தது. பங்கஜம் அடுத்த வீட்டில் பழியாய்க் கிடக்கிறாள் என்றால், காலையிலிருந்து வந்த சிநேகிதனும் அருகில் இல்லாமல் ஊர் சுற்றிக்கொண்டிருந்தால் யாருக்கும் கோபம் வரத்தானே செய்யும்! வேலையாட்களைக் கூப்பிட்டுச் சூரியைத் தேடி அழைத்து வரும்படி அனுப்பினாள். ஊரில் நாலாப் புறமும் வேலையாட்கள் அலைந்து தேடினர். எங்கும் சூரியைக் காணவில்லை என்று திரும்பி வந்துவிட்டனர். அவன் எங்கே போய் விட்டானோ என்ற கவலையும் ஏற்பட்டது. காப்பி சாப்பிடும் நேரத்தில்கூட அவன் வரவில்லை.

## 5

சாயங்காலம் ஐந்துமணி இருக்கும். கோபமும் ஏமாற்றமும் மனத்தை வாட்டச் சேகர் உட்கார்ந்து கொண்டிருந்தான். கதவை யாரோ திறக்கும் சத்தம் கேட்டது. அலட்சியமாகத் திரும்பிப் பார்த்தான். எதிரில் கண்ணீரும் கம்பலையுமாகப் பங்கஜம் நின்று கொண்டிருந்தாள்.

"ஏன் பங்கஜம்! ஏன் அழுகை!" என்று திடுக்கிட்டுக் கேட்டான் சேகர்.

"இன்னும் ஒத்திகையே முடியவில்லை. ஆனால் அம்மா என்னை உள்ளே பிடித்துத் தள்ளிவிடுகிறாள்."

"ஒத்திகையா! என்ன ஒத்திகை!" என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

"எனக்கு உங்களுடன் எப்படிப் பேசுகிறது, நடந்துகொள்கிறது என்று தெரியவில்லை. சங்கோஜமும் வந்து விடுகிறது. நான் கோணு மாணு என்று பேசி விட்டால் நீங்கள் என்ன நினைப்பீர்கள்! மாலா யோசனை சொல்லிக் கொடுத்தாள். அதன்படி நான் நேற்றிலிருந்து ஒத்திகை செய்து கொண்டிருக்கிறேன்."—இந்தச் சமயத்தில் அவள் கையிலிருந்து ஒரு காகிதம் கீழே விழுந்தது. சேகர் எடுத்துப் பிரித்துப் பார்த்தான். அதில் பின்வருமாறு ஆரம்பித்து எழுதி யிருந்தது.

"ஸ்ரீ சேகர் எதிரில் நாலு அடிக்கு அப்பால் நின்று கொண்டு புன்னகை புரியவும். இது அசட்டுச் சிரிப்பாக மட்டும் இருக்க வேண்டாம். அவர் எழுந்து வந்து, 'ஏன், இப்படி வந்து உட்கார்!' என்பார். நீ திரும்பி நின்றுகொண்டு, அவர் முகத்தைப் பாராமல், 'ஊரில் எல்லோரும் சௌக்கியந்தானே!' என்று கேட்கவும். அவர் முகத்தைப் பார்த்து விட்டால் உனக்குக் கேட்கத் தைரியம் இராது. 'சௌக்கியந்தான்' என்று சொல்லிக்கொண்டு உன்னை ஸ்பரிசிப்பார். 'ஷாக்' அடித்ததுபோல் குதிக்கக் கூடாது. மெதுவாக, மெதுவாக அவர் பிடியிலிருந்து விடுவித்துக்கொண்டு, 'உங்கள் தங்கை பானுவையும் அழைத்துக் கொண்டு வந்திருக்கக்கூடாதா!' என்று கேட்கவும்......குரலில் கொஞ்சல் இருக்க வேண்டும்......"

சேகர் உரக்கச் சிரித்தான். "சரியாக முப்பத்தாறு பக்கங்கள் இருக்கின்றன. உன் சிநேகிதி பெரிய சினிமா டைரக்டராக ஆகி விடலாம். முதல்தரமான டைரக்டர்!" என்றான்.

"இது முதல் ஸீன்தான். முதல் ஸீனை நான் உங்களிடம் நடித்த பிறகு, அதன் தொடர்ச்சியைத் தெரிந்து கொண்ட பிறகு இரண்டாவது ஸீன் எழுதித் தருவதாகச் சொன்னாள். ஆனால் இதில் பாதிகூட நான் ஒத்திகை நடத்தவில்லை!" என்றாள். துக்கம் அவள் நெஞ்சை அடைத்துக் கொண்டது.

"ஏன் ஒத்திகை நின்று விட்டது!"

"உங்கள் சிநேகிதர் இருக்கிறாரே, உங்கள் சிநேகிதர்......"

"எங்கே யிருக்கிறார்!"

"மாலா வீட்டில் உட்கார்ந்துகொண்டு அவள் அப்பாவுடன் காலையிலிருந்து 'செஸ்' ஆடிக் கொண்டிருக்கிறார்......"

"அடேடே! சூரி அடுத்த வீட்டிலா உட்கார்ந்து கொண்டிருக்கிறான் இத்தனை நேரமாய்! இது தெரியாமல் ஊரெல்லாம் தேடுகிறார்களே!"

"ஆமாம், மாலா ஜன்னலண்டை உட்கார்ந்துகொண்டு அவரையே பார்த்துக் கொண்டிருக்கிறாள். அவரும் மாலாவைப் பார்த்து அடிக்கடி சிரிக்கிறார். காப்பிகூடச் சாப்பிடாமல் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள் எல்லாரும். ஒத்திகையைப் பற்றிக் கேட்டேன். 'போடி போ! இனி மேல் ஒத்திகை வேண்டாம். உன் சுய புத்தியைக்கொண்டு பிழைத்துப்போ!' என்று சொல்லிவிட்டாள்!" என்று விம்ம ஆரம்பித்தாள் பங்கஜம்.

"பங்கஜம்! என்ன பித்துக்குளித்தனம் இது! சங்கோஜத்திலும் நீ சரியாகப் பேசாவிட்டால் என்ன! கோணு மாணுவென்று பேசினால்தான் என்ன! மற்றவர்களைப் போல் தம்பதிகள் 'கரெக்'டாகப் பேச வேண்டுமா! தம்பதிகள் கோணு மாணு வென்று பேசுவதில்தானே அலாதி ஆனந்தமும் திருப்தியும் ஏற்படுகின்றன! இப்படி உட்கார்! நான் உன்னைத் தொடுகிறேன் என்று மெதுவாக மெதுவாக விடுவித்துக்கொள்ள வேண்டிய அவசியமே இல்லை" என்று கூறி அவள் கரங்களைப் பற்றினான்.

பங்கஜம் இன்பத் தவிப்பிலிருந்து விடுதலை கிடைத்த இன்பத்துடன் அவனைத் தன் கரிய பெரிய விழிகளால் ஏறிட்டுப் பார்த்தாள். 'பளிச்'சென்று மின்சார தீபம் அந்த அறையில் பிரகாசித்தது. அப்பொழுதே பங்கஜத்தின் உள்ளத்தில் புதிய ஒளி தோன்றியது.

சிறிது நேரத்துக்கெல்லாம் சேகரும் சூரியும் பேசிக் கொண்டிருந்தனர்.

"சூரி! உன்னை நான் வரவழைத்த காரணம் என்ன தெரியுமா! மாலாவிடமிருந்து பங்கஜத்தைக் காப்பாற்றுவதற்குத்தான். ஆனால் நான் சொல்வதற்கு முன்பாகவே, என் இஷ்டத்தைப் பூர்த்தி செய்து விட்டாய்!"

"சேகர்! நான் வந்ததுமே நீ படும் வேதனையின் காரணத்தைத் தெரிந்து கொண்டேன். இதைக்கூட என்னால் ஊகிக்க முடியாதா! உடனே அடுத்த வீட்டுக்காரரைச் சிநேகம் பிடித்துக்கொண்டு 'செஸ்' ஆட உட்கார்ந்துவிட்டேன். நான் மாலாவிடமிருந்து உன் அருமை மனைவியைக் காப்பாற்றி விட்டேன். ஆனால் என்னைக் காப்பாற்றிக்கொள்ள முடியாது போலிருக்கிறதே! அவள் ரொம்ப பொல்லாதவளாகத் தோன்றுகிறாள்!"

"ஏன் உன் முகம் இப்படி மாறிவிட்டது! என்ன தவிப்பு!" என்று கேட்டான் சேகர் விஷயம் புரியாமல்.

"இதுதான் இன்பத் தவிப்பு. அவளுடன் எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது என்றுதான் தெரியவில்லை. 'காதலர்கள் பேசிக் கொள்ளும் ஆரம்ப வார்த்தைகள்தான் அவர்கள் எதிர்காலத்தை நிச்சயிக்கின்றன' என்று எங்கோ படித்திருக்கிறேன். பேசுகிற வார்த்தையை யோசித்துப் பேச வேண்டாமா!"

"சரி சரி! நல்ல இன்பத் தவிப்பு!" என்றான் சேகர் பரிகாசமாக.

எங்கள் மனமார்ந்த
தீபாவளி
வாழ்த்துகள்!




'அனில்' தீப்பெட்டிகள் மழை காலத்திற்கு உத்திரவாதமுள்ள தாகவும், உறுதியாகவும், நேர்த்தி யாகவும் குச்சிகள் சரியாகவும் வெண்மையாகவும் இருக்கின்றன.

V.V. Natarajan

நேஷனல் மேச் ஒர்க்ஸ், சிவகாசி.



ப்ரதிபாவின்

# சொப்பன சுந்தரி

தமிழ் - தெலுங்கு...



அஞ்சலிதேவி... ஜி. வரலக்ஷ்மி...
நாகேஸ்வரராவ...சிவராவ்...முக்காமலா...

Studio
VAUHINI



டைரக்ஷன், தயாரிப்பு.... ஸி. பலராமய்யா

**விநியோகஸ்தர்கள்:**

தமிழ்நாடு, மைசூர்:
தில்லை பிக்சர்ஸ் சர்க்யூட், பெங்களூர்-2
ஆந்திரா, ஸீடட், நைஜாம்: பூர்ணா பிக்சர்ஸ், பெஜவாடா
வட, தென்னாற்காடு: ரிபப்ளிக் பிக்சர்ஸ், வேலூர்

கோயமுத்தூர், நீலகிரி:
ராஜா பிலிம் சர்க்யூட் லிமிடெட், பொள்ளாச்சி
பம்பாய்: ஸ்ரீநிவாஸ் பிக்சர்ஸ், கடக்
எப். எம். எஸ்.: ஷா பிரதர்ஸ் லிமிடெட், சிங்கப்பூர்



முன்னேற்றப்பாதையில்..

தற்கால மங்கை வெறும் சமையல் அறைவாசியாக இருப்பதில்லை. நாகரீகமாக இருக்க விரும்புகிறாள் ......

அவள் கடைகளுக்குப் போகும் போது முதல்தரமான டி. எஸ். ஆர். கூந்தல் தைலங்கள் போன்ற சிறந்த பொருள்களையே தேர்ந்தெடுக்கிறாள்.



# டி. எஸ். ஆர்.

## கோகுல் ஹேர் ஆயில்
## அரைக்கீரைவிதை தைலம்
## சந்தனாதி தைலம்








FAS-406

**டி. எஸ். ஆர். & கோ. கும்பகோணம்.**

---




ஜெய் ஹிந்த்!

எமது அன்பர்களுக்கும்

ஆதரவாளர்களுக்கும்



எங்களது மனமார்ந்த

## தீபாவளி நல்வாழ்த்துக்கள்!

## ஸ்வஸ்திக் புகையிலை தொழிற்சாலை

வேதாரண்யம்

மதராஸ் டிஸ்ட்ரிப்யூடர்ஸ்:

**ஆனந்தா பன்னீர் தொழிற்சாலை**

ராயப்பேட்டை :: மதராஸ்

# ARMSTRONG

## THE BETTER BICYCLE

# ஆம்ஸ்டிராங்

## சிறந்த பைஸைகிள்



சிறந்த பைஸைகிளாகிய **ஆம்ஸ்டிராங்** ஒன்று உங்களிடம் இருந்தால் போதும்: வேலை நிமித்தமாகவோ வேடிக்கையாகவோ எவ்வித தொந்தரவும் இன்றி நீங்கள் ராஜ பாட்டை போல சவாரி செய்யலாம். ஒரு **ஆம்ஸ்டிராங்** வாங்குங்கள். ஸைகிள் தொழிலில் பிரசித்திபெற்ற தயாரிப்பாளர்களின் சிறந்த தயாரிப்பு உங்களுக்குச் சொந்தமாயிருக்கிறது என்கிற பெருமை உங்களுக்கு விரைவில் ஏற்படும். அதன் பெயரே குறிப்பிடுவதுபோல், வலிவாகவும், இந்தியாவின் கரடுமுரடான ரஸ்தாக்களில் நீடித்து நின்று வருஷக்கணக்கில் நம்பிக்கையளிக்கத் தக்கவாறு உழைப்பதாகவும் அது விளங்குகிறது. ஆம்ஸ்டிராங் — மிகவும் பிரபலமான பைஸைகிள் — ரஸ்தாவில் அதை நம்புங்கள். அதற்குக் கொடுக்கும் விலை அதற்குத் தரும்.

விநியோகஸ்தர்கள்:

**ராயல் ஸைகிள் அண்டு மோட்டார் கம்பெனி**

**13/14, பிராட்வே, தபால் பெட்டி நெ. 219, சென்னை-1.**




RCZ-4TM




விலைகள் குறைக்கப்பட்டிருக்கின்றன!

சந்திரன் மார்க்கு
உயர்தரத்தின் சின்னம்

உத்தரவாதமானதும்
ஒவ்வொரு குடும்பத்திற்கும்
தேவையானதுமான பலவித

**ஸ்டெயின்லெஸ்**
**ஸ்டீல் பாத்திரங்கள்**

தயாரிப்பவர்கள்

## மிதிலா மெட்டாலிக் இண்டஸ்டிரிஸ்

கும்பகோணம்

ஷோ ரூம்: 39, பெரிய தெரு - பாக்டரி: ஆயிகுளம் ரோடு

## தென்னிந்திய மில் முதலாளிகள் சங்கம்

கோயமுத்தூர்

★

தென்னிந்தியாவில் சகல நெசவு ஆலைகளின்
பிரதிநிதிகளும் அடங்கிய ஸ்தாபனம்

அபரிமிதமான உற்பத்தியே சுதந்திர இந்தியாவின்
சுபிட்சத்திற்கு மிகவும் இன்றியமையாதது!

★

தேசத்தின் பல பாகங்களிலும் கஷ்ட நிலைமையின் காரணத்தால் அநேக ஆலைகள் மூடப் படவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளபோதிலும் தென்னிந்தியாவின் நெசவு உற்பத்தி ஸ்தாபனங்கள், கஷ்ட நிலை நெருக்கடியைச் சமாளித்து, ஆலைகளை மூடாவண்ணம் துணி, நூல் இவைகளைத் தொடர்ந்து உற்பத்தி செய்துகொண்டே, தேசத்தின் நலனைப் பாதுகாத்து வருவது மிக்க மகிழ்ச்சியுடன் போற்றத் தக்கது.




77, போலாபஜார் தெரு, கல்கத்தா-12

மெஸர்ஸ். வி. வி. ராமலிங்கம் & ஸன்ஸ், 2/422, தங்கசாலை தெரு, மதராஸ்-1

---




# Every inch a QUALITY PRODUCT

The improved method of Nicco insulation gives all its cables and wires a robustness that will stand any punishment of the rigorous tropical conditions. This super protection is built into every inch of them which makes them free from all dangers of short circuit and power break-down.

*Nicco is on Govt. of India Rate Contract and is supplier to Central and State Govts. All NICCO V. I. R. cables are tested, sealed and certified by the Govt.*

## NICCO

CABLES & WIRES

**THE NATIONAL INSULATED CABLE CO. OF INDIA LTD.**
STEPHEN HOUSE, DALHOUSIE SQUARE, CALCUTTA
Telephone : City 5102 (4 Lines) Telegram : Megohm Branch: Delhi

Agents for Madras and surrounding Districts:

**P. NATESAN & CO., LTD., 10, Mount Road, Madras**

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Rd, Kilpauk, Madras

தஞ்சைபுரியில் ராஜராஜ சோழனால் நிர்மாணிக்கப்பட்ட 'இராஜ ராஜேச்சுரம்' பெருங்கோயிலின் உட்பிராகாரச் சுவர்களில், அழகின் தேவதைகள் அணிவகுத்து ஆடும் தோற்றமாகிய இச் சித்திரங்கள், எழுதிப் பல நூற்றாண்டுகளாகியும் வர்ணம் அழியாமல் நிற்கின்றன.




ஜனக மகாராஜா அரண்மனை ஆடம்பர வாழ்வை விட்டுவிட வேண்டுமென்று தம் பத்தினிக்கு இதோபதேசம் செய்கிறார். மகாராணி அதைச் சிரத்தையுடன் கேட்கிறாள். சுற்றிலும் நிற்கும் தாதிமார்களோ, "இதென்ன வம்பு" என்று ஒருவரை யொருவர் பார்த்துத் திகைக்கிறார்கள். — அஜந்தாவிலுள்ள இதுபோன்ற வர்ண சித்திர அற்புதங்களை இன்றைக்கும் உலகம் பார்த்து வியக்கிறது.

# வீரன் கை வேல்!

வீர ரசத்தின் தாதுக்களை விவரித்து வகுத்த கவிஞர் பெருமான் திருவள்ளுவர் ஒரு சமயம் ஒரு மகா வீரனைக் காணச் சென்றிருந்தார்.

வீரன் வீட்டுத் திண்ணையில் ஒரு மூதுமகள் உட்கார்ந்திருந்தாள். அவளைப் பார்த்து, "வீரன் இங்கிருக்கிறானா?" என்று கேட்டார். உடனே அந்த மூதுமகள் கைகொட்டிச் சிரித்தாள். காரணம் அறியாத கவிஞர், "ஏன் சிரிக்கிறீர்கள்?" என்றார்.

"அவனை இங்கே வந்து காண்பவரை நான் இன்றே கண்டேன்" என்றாள் மூதுமகள் மீண்டும் சிரித்தபடி. கவிஞருக்கு ஆச்சரியமாக இருந்தது.

"அவன் எங்கே? அதைத்தான் சொல்லுங்களேன்" என்றார்.

"அம்பொடு வேல் நுழையும் வழியெல்லாம் அவன் நிற்பான். அங்கே சென்றால் காணலாம்" என்று கம்பீரமாய்ச் சொன்னாள் மூதுமகள்.

"ஆகா! அப்படியா? தாங்கள் யார்?" என்று ஆவலுடன் கேட்டார் புலவர்.

"அந்தப் புலி என் வயிற்றில்தான் கிடந்தது" என்று பெருமிதத்தோடு கூறினாள் மூதாட்டி. உடனே புலவர் போர்க்களம் நாடிச் சென்றார். வீரன் புரியும் தீரச் செயல்களைக் கண்ணாரக் காணும் ஆர்வம் பன்மடங்காய் மூண்டெழுந்தது.

தனி ஒருவனாய் நின்று மத்தகஜங்களையும், மாற்று வீரர்களையும் எதிர்க்கும் அவன் சூரத்தைக் கண்டவர் பிரமித்துப் போய் நின்றார். யானைகள் புறமுதுகிட்டுப் பிளிறிக்கொண்டு ஓடும் விநோதத்தைக் கண்டதும், "ஆகா! இவன் அல்லவோ வீரன்! புல்நுனி மடப்பிடி நாணக், குஞ்சரமெல்லாம் புறங்கொடுத்தனவே!" என்று மகிழ்ச்சி கொண்டார். ஆனால் இதைவிடப் பேரதிசயம் ஒன்றும் நிகழ்ந்தது. அதுவே வீரனின் ஆற்றலுக்கு உரைகல்லாய் விளங்கியது.

வீரன் கைவேல் கொண்டு தாக்கும் வேகத்தில் ஓடிய மத்தகஜங்கள் பல. மாண்டு போனவை பல. மண்டி எதிர்த்தவைகளும் சில உண்டு. அவ்வாறு எதிர்த்த ஒரு களிற்றின்மீது கைவேலை வீசினான் வீரன். வீசிய வீச்சின் பலத்தால் அவ் வேல் அக் களிற்றின் உடலுள் புகுந்து பாய்ந்து ஆழ்ந்து விட்டது; களிறும் இறந்தது.

தோளைத் தட்டிக் கொண்டபடி, "இனி இந்த யுத்த பூமியில் எனக்கு வேலையே கிடையாதா?" என்று கம்பீர நடை போட்டுக் கொண்டு முன் நோக்கி வரலானான் வீரன். அப்போது அவன் முன்னே ஒரு களிறு வீரகர்ஜனையுடன் எதிர்த்து வந்தது.

வீரன் ஆவலுடன் தன் கையை நோக்கினான். வேலைக் காணவில்லை. 'என்ன செய்வது' என்று ஒரு கணநேரம்தான் யோசித்திருப்பான். அதற்குள் அவன் பார்வை மார்பிலே பாய்ந்தது. பகைவனுடைய மார்பிலே குத்தப்பட்டிருந்த வேலைச் சிறிதும் கூசாமல் உடனே பறித்து எடுத்தான். பற்கள் மின்ன அட்டகாசமாய்ச் சிரித்தான். அடிக்கின்ற கோலுக்கு அஞ்சாமல் மண்டியெழும் பாம்புபோல் சீறினான். அவனைக் கொல்ல வந்த அந் நெடு வேல் அந்தப் பகை யானையின்மீது பாயத் தயாராகிவிட்டது ......

கண்ணை இமைக்காமல் பார்த்தபடியே நின்றுகொண்டிருந்த கவிஞருக்கு வீர உத்வேகம் கரைமீறி விட்டது. உணர்ச்சியின் எல்லைக்கோட்டில் நின்றுகொண்டு,

"கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்."

என்ற மணியான குறளை வெளியிட்டு வீரர் திலகத்தைத் தழுவிக் கொண்டார்.

* * * *

மார்பிலிருந்து உருவிய வேலைக் கையில் ஏந்தி, சினந்து சீறும் சிங்கம்போல் குஞ்சரத்தை நோக்கிக் கொக்கரிக்கும் வீரனையும், வீரப் போர்க்களத்தையும் கவிஞர் நேரில் கண்டதே போல், நாமும் இந்த ஓவியத்தில் கண்டு விடுகிறோம் அல்லவா?

# மலர்ப் படுக்கை

"பூக்கள் பட்ட(து)அப்
பூவையும் பட்டனள்!"

வேடனது அம்பு தைத்த மான் போல் மலர்ப் படுக்கையில் சுருண்டு கிடக்கும் இந்த நங்கை யார்? பாலும் கசந்து, படுக்கையும் நொந்து, மலரோடு மலராக வாடிக் கிடக்கும்படி அவளுக்கு அப்படி என்ன தாபம்தான் ஏற்பட்டு விட்டது! பக்கத்தில் பாங்கியரையும் காணவில்லையே! தனிமையும் தானுமாய் அவள் ஏன் தவித்துக் கொண்டிருக்கிறாள்?

ரகுராமனைக் கன்னி மாடத்தில் இருந்தபடி முதன் முதலாகப் பார்த்தன சீதையின் கண்கள். அண்ணல் ராகவனின் பார்வை ஒரு கூர்வேலாய்த் தன்னைத் தாக்குமென்று அவளுக்கு முதலில் தெரியாது. போதாக் குறைக்கு மன்மத பாணமும் சேர்ந்து விட்டது! எல்லாவற்றையும் தூக்கி யடித்தாற்போல் நிலாவின் நீண்ட கதிர்களும் நீக்கமின்றித் தாக்கத் தொடங்கிவிட்டன.

எல்லை கடந்த ஸௌந்தரியத்தின் தேவனைப் பின்பற்றியபடி தன் சிந்தையும், நிறையும், எழிலும் செல்ல, ஓவியப் பாவைபோல் மலர் மஞ்சத்தில் செயலற்றுக் கிடப்பவளை அப்போது அவளுடைய இனத்தில் பிறந்த தாமரை மலர்கள் பார்த்தன! ஜானகியும் நோக்கினாள். அவளைப் போலவே அம் மலர்களும் வாடிக் குவிந்திருப்பதன் காரணம் அவளுக்குப் புரியவில்லை. பெண்ணுள்ளம் அல்லவா! மலரின் வாட்டத்திற்குக் காரணம் அறிய விரும்பினாள்.

ஒரு தாமரையைத் தன் தாமரைக் கரத்தில் எடுத்துத் தன் பவழவாய் அருகே கொண்டுபோய், "மலரே! நான்தான் விரஹ தாபத்தால் உள்ளமும் முகமும் வாடியிருக்கிறேன். உனக்கென்ன வந்தது?" என்று கேட்டாள்.

மலர் அவளை மிகவும் கருணையோடு பார்த்தது.

"மகளே! இதில் என்ன ஆச்சரியம்! நான் தினமும் படுகின்ற அவஸ்தையைத்தான் இன்றைக்கு நீ படுகிறாய்! இது எனக்குப் புதிதில்லை. காலையில் வருவான் என் ஆசை நாயகன் கதிரவன். முகம் மலர்ந்து ஆனந்தம் அடைவேன். ஆனால் அது நீர்க் குமிழி போலத்தான். மாலை வந்துவிடும் உடனே. என் மாறனும் மறைந்து விடுவான்! அப்புறம் இந்தக் கதிதான்!" என்றது.

"என் இன்னுயிர்த் தோழி நீ ஒருத்திதான்!" என்று தன் நன்றி நிறைந்த பாசத்தை உதிர்த்தாள் சீதை.

* * *

கவிச் சக்கரவர்த்தி கம்பர் கைதேர்ந்த கலைஞர். இந்தச் சந்தர்ப்பத்தைத் தம் ரஸ வர்ணங்களால் குழைத்து இனிய பாடலாக்கி விடுகிறார்.

"நீக்க மின்றி நிமிர்ந்த நிலாக்கதிர்
தாக்க வெந்து தளர்ந்து சரிந்தனள்
சேக்கை யாகி மலர்ந்தசெந் தாமரைப்
பூக்கள் பட்ட(து)அப் பூவையும் பட்டனள்!"

ஓவியர் கனு தேசாய் அவர்களின் சித்திரம் இது. உணர்ச்சி பாவமும், அந்த பாவத்துக் கேற்ற சூழ்நிலையும் தாங்கி, காவிய லோகத்திலிருந்து கலா மண்டலத்துக்கே தள்ளிக்கொண்டு போய் விடுகிறது சித்திரம்.

கல்கி
தீபாவளி மலர்
1950

# ஆனந்த நடனம்

எங்கே பார்த்தாலும் அற்புதங்கள்தான்.

பிராணிகளைப் பார்க்கிறோம்; தாய்த்தத்துவம் ஒன்று இருந்து,—குட்டியும் தாயும், குஞ்சும் தாயும், குழந்தையும் தாயும் என்று கோடானு கோடி வருஷமாக வளர்ந்து வந்திருக்கிறது.

பிரமன் உற்பத்தி பண்ணுகிறான், விஷ்ணு வளர்க்கிறார், பார்வதி தேவி அன்பு செலுத்துகிறாள்,—குழந்தை விநாயகர் உல்லாசமாக விளையாடுகிறார். இனி:

சங்கீதம் என்று ஒன்று உண்டாகி, எட்டாத உண்மைகளை மக்களுக்கு விளக்கி விடுகிறது: கலைமகளது கருணைதான் அது.

ஆனாலும் ஒன்று. இத்தனை வேறுபட்ட அற்புதங்களும் ஒரே தத்துவத்தின் தொழில்தான். அந்த ஒரு தத்துவந்தான் எங்கும் நிறைந்து, ஆனந்த மயமாய் நின்று தொழில் செய்கிறது.

அப்படி இருக்கிறது நடராஜ மூர்த்தியின் அற்புத தத்துவம்.

அந்த ஆனந்தத் தொழிலை நடனம் என்கிறார்கள்.

இந்த நடன சொரூபத்தோடு உணர்ச்சி ஒட்ட ஒட்ட, மக்களது உள்ளம் இறைவனது இறுதியில்லாத சத்தியமான தத்துவத்தோடு ஒன்றிவிட முடிகிறது.

“நான்” என்கிற ஆணவத்துக்குள் ஊடுருவி எட்டிப் பார்க்கும் போது இறைவன் வெளிப்படுகிறான்,—ஒரே பிரகாசமாய் வெளிப் படுகிறான்,—இருட் பிழம்புக்குள் கோடி சூரியப் பிரகாசம் தோன்றியது போலத்தான்.

சித்திரக் கலையின் மர்மம் கை வந்த குமாரி ஸ்ரீமதியின் அற்புதமான நடராஜர் படம் இத்தனை உண்மைகளையும் நமக்கு எடுத்து விளக்குகிறது. சரி.

இந்த நடனத்துக்கான அரங்கின் ஆழம், உயரம், அகலம் எப்படி?

அடிஒன்று, பாதலம்
ஏழிற்கும் அப்புறம்
பட்ட(து); இப் பால்

முடிஒன்(று)அவ் அண்டங்கள்
எல்லாம் கடந்தது;
முற்றும்வெள் ளைப்

பொடிஒன்று தோள்எட்டும்
திக்கின் புறத்தன ;—
பூங்கரும் பின்

செடிஒன்று இல்லைச்சிற்
றம்பலத் தான்தன்
திருநட மே.

—பட்டினத்தார்

[அடி ஒன்று பாதலம் ஏழிற்கும் அப்புறம் பட்டது: ஒரு பாதமானது பாதாளங்கள் ஏழுக்கும் கீழாய் நிற்கிறது; இப்பால் முடி ஒன்று அவ் அண்டங்கள் எல்லாம் கடந்தது: இப்படி மேலாகப் பார்ப்போமானால் மேலுள்ள அண்டங்கள் ஏழுக்கும் அப்பால் உள்ளது முடியாகிய அது; பொடி ஒன்று தோள் எட்டும்: திரு நீறு தோய்ந்த தோள்கள் எட்டும்; திக்கின் புறத்தன: எட்டுத் திசைகளுக்கும் அப்பால் உள்ளன; பூங்கரும்பின் செடி ஒன்று இல்லை: அழகிய வளமான கரும்பானது களையாய் வேண்டாத இடம் எல்லாம் முளைத்திருக்கும் சிதம்பரத்து; சிற்றம்பலத்தான் தன் திரு நடமே: சிற்றம்பல மூர்த்தியின் திரு நடனமானது.]

கல்கி
தீபாவளி மலர்
1950

# மாலை மாற்றம்

**வ**ஸந்த காலம். மந்த மாருதம் மனோரம்மியமாய் வீசுகிறது. எங்கும் ஒரே உத்ஸாகம். செடி கொடிகள் பூத்துக் குலுங்குகின்றன. தருக்கள் மலரைச் சொரிகின்றன. நறுமணம் நெஞ்சை அள்ளுகிறது.

ஹேமகூட பர்வதத்திலேயே பெயர் பெற்ற 'சைத்ர ரதம்' என்ற வனம் அது. கந்தம் கமழும் சந்தன விருக்ஷங்களையும், தழைத் தடர்ந்த லதா மண்டபங்களையும் கண்டு களித்து விட்டு, 'அச்சோத சரஸ்' என்ற பொய்கையில் நீராட வந்தாள் அழகின் கொழுந்தாகிய கந்தர்வ கன்னி மஹாச்வேதை.

அங்கே திடீரென்று ஒரு புதிய நறுமணம் கமழவே திரும்பிப் பார்த்து ஸ்தம்பித்து நின்றாள் அவள். லக்ஷ்மீ புத்திரனும் பிரம்மசாரியுமான புண்டரீகன்தான் அப்போது அங்கு வந்து கொண்டிருந்தான். அவனது காதில் மின்னிய மலரைக் கண்டதும், மஹாச்வேதை சுகந்தத்தின் காரணத்தைப் புரிந்து கொண்டாள். அதுமட்டுமல்ல; அவள் மனத்திலே அப்பொழுது முற்றிலும் புதியதோர் இன்பகரமான உணர்ச்சி மணம் கமழவும் கண்டாள்.

இளந் தபஸ்வியின் ஸௌந்தரியம் கந்தர்வ கன்னியை வசிகரித்தது. அவன் அருகே சென்று நின்றாள். பெருமூச் செறிந்தாள். அவளுடைய பொன் முகத்தில் வியர்வை முத்துக்கள் அரும்பின.

இளந் தபஸ்வியும் அவளைக் கண்டபோது தன் நிலையை மறந்தான். நியம நெறிகளைத் துறந்தான். அவளுடைய பார்வையில் மிதந்த அமுதத் துளிகளைப் பார்த்தவன், வேறு பக்கம் திரும்பவில்லை. அப்படியே நின்றபோது, அதற்கு அறிகுறியாக அவனுடைய கையிலிருந்த ஜெபமாலை நழுவிக் கீழே விழுந்தது. மஹாச்வேதை மெல்லக் குனிந்தெடுத்தாள். அழகுத் தேனுண்ட மயக்கத்தில் ஆழ்ந்திருக்கும் முனிபுங்கவன் அதைக் கவனிக்கவில்லை. அவள் அந்த ஜெபவடத்தைத் தன் கழுத்தில் அணிந்து கொண்டாள். அதையும் அவன் அறியவில்லை. அவள் தன் கண்டத்திலிருந்து முத்து மாலை ஒன்றை எடுத்தாள். அவன் அதைப் பார்த்ததாகவே தெரியவில்லை. கடைசியில் அந்த முத்து மாலையை அவன் கையில் கொடுத்தாள். அவன் தன் ஜெபமாலை என்றே கருதி அதை வாங்கிக் கொண்டான்!

தோழியின் வருகையால் இருவரும் உடனே பிரிய நேர்ந்துவிட்டது. ஆனாலும், அந்தக் கந்தர்வ கன்னி மஹாச்வேதை தன் காந்தர்வ மணத்திற்கு அறிகுறியாக 'மாலை மாற்றி'க் கொண்டு விட்டாள்!

வடமொழியில் மகாகவி பட்டபாணனின் மகா காவியமாகத் திகழும் 'காதம்பரி'யில் வரும் ஒரு சம்பவம் இது. காதம்பரியில் உபகதா நாயக நாயகிகளாய் இருந்து புனிதப் பிரேமையால் இணைந்து, விதியால் பிரிந்து வருந்தும் சோக பாத்திரங்களே இவர்கள்! இந்தப் புனித ஆத்மாக்களின் முதல் சந்திப்பில் நிகழும் அந்த ரஸமான காட்சியையே நமது சித்திரக்காரர் வண்ண ஓவியமாக வரைந்திருக்கிறார்.



போட்டோ: மணியம்

பல்லவர்களின் சிற்ப சிகரமாக விளங்கும் காஞ்சி கைலாசநாதர் கோயில்

# ராஜோபசாரம்

**ப**ழந் தமிழ்நாட்டு அரசர்களுக்குள்ளே மிகப் புகழ் பெற்ற மன்னர் மன்னன், — மாமல்லபுரத்து அழியாச் சிற்பங்களிலே தன் பெயரை அழியாமல் நிலைநாட்டி வைத்த மாமல்லரின் தந்தை, — பல்லவ நாட்டின் சக்கரவர்த்தி மகேந்திர வர்மர் தம்முடைய சாம்ராஜ்யத்தின் தலைநகரான காஞ்சியின் பிரதான ஆஸ்தான மண்டபத்தில் வாதாபிச் சக்கரவர்த்தி புலிகேசிக்குப் பிரிவுபசாரம் நடத்துவதற்காகச் சபை கூட்டி யிருக்கிறார்.

அந்த மகா சபையில் மகேந்திர சக்கரவர்த்திக்கு அருகில் வாதாபிச் சக்கரவர்த்தி அமர்ந்திருக்கிறார். பல்லவ ராஜ்ய மந்திரிகள், தளபதிகள், மண்டலத் தலைவர்கள், நகரத் தலைவர்கள் முதலானோர் அமர்ந்திருக்கின்றனர். இன்னும் சைவ வைஷ்ணவ குருமார்கள், வடமொழி, தமிழ் மொழிப் புலவர்கள், சங்கீத வித்வான்கள், சிற்பிகள், சித்திரக்காரர்கள் முதலியோரும் வீற்றிருக்கின்றனர்.

ஆயனச் சிற்பியின் அருமைக் குமாரி, பரத நாட்டியக் கலைக் கடலின் கரைகண்ட சுகுமாரி, மாமல்லரின் உள்ளங் கவர்ந்த செல்வி சிவகாமி நடனமாடுகிறாள்.

காஞ்சியின் செல்வ வளத்தைக் கண்டு முன்னமே புகைந்து கொண்டிருந்த புலிகேசியின் உள்ளத்தில் சிவகாமியின் கலைத்திறன் பொறாமைக் கனலை மூட்டுகிறது. இதிலிருந்து பல்லவ — சளுக்கப் பகைமை மூண்டு வளர்ந்து 'வாதாபி தகனம்' முதலிய பல சரித்திர நிகழ்ச்சிகள் தொடர்கின்றன.

காஞ்சி அரண்மனை மண்டபத்தில், இரு பெரும் சக்கரவர்த்திகளின் முன்னிலையில், சிவகாமி நடனமாடும் காட்சியை நமது சித்திரக் கலைஞர் கற்பனைக் கண்ணால் கண்டு இங்கே சித்திரித்திருக்கிறார்.

கல்கி
தீபாவளி மலர்
1950

# சில்லறைத் தகராறு!




மாமனார்:—அடியே! மாப்பிள்ளை சில்லறைத் தகராறு பண்ணிக் கொண்டிருக்கிறார்;
சீக்கிரம் உள்ளேயிருந்து சில்லறை எடுத்துக் கொண்டு வா!



*Courtesy* BRITISH INFORMATION SERVICES

இங்கிலாந்து தேசத்தில் ஓர் இனிய இயற்கைக் காட்சி

# வண்ணத் திலகம்

அன்று ராதை யமுனைக் கரையில் வெகு நேரம் காத்திருந்தாள். கடைசியில் வந்தான் ராதா மணாளன். அவனைப் பார்த்தவுடன் அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாய் வந்தது. பார்வையை ஒரு மாதிரியாக வைத்துக்கொண்டு மறுபுறம் திரும்பித் தன் ஊடலைக் காட்டினாள்.

ஆனால் இதை முன்கூட்டியே எதிர்பார்த்திருந்த கண்ணன், அதற்குத் தக்க ஏற்பாடுகளுடன் தான் அங்கு வந்திருந்தான். இனிய சுவைக் கனிகள் அவனுடன் வந்திருந்தன. சந்தனம், சவ்வாது, அத்தர், தைலம், மை, செம்பஞ்சு, மயிலிறகு, செஞ் சாந்து எல்லாம் வந்திருந்தன

அவற்றை யெல்லாம் கடைக் கண்ணால் பார்த்து விட்ட ராதைக்கு உள்ளுக்குள் ஆனந்தம் தாங்க முடியவில்லை. அதை வெளிக்காட்டிக் கொள்ளவோ இஷ்டமும் இல்லை.

வன்ன மகளிர் வசப்படவே — பல
மாயங்கள் சூழ்ந்திடுவான்!

அல்லவா கண்ணன்! யமுனையைப் பார்ப்பதுபோல் பார்த்துக் கூறினான்; "நீயே சொல், யமுனே! எனக்கு எவ்வளவு வேலைகள்! எல்லாவற்றையும் ஒருவிதமாய் முடித்துவிட்டுத் தானே வரவேண்டும்!" என்றான்.

ராதை கொஞ்சம் திரும்பினாள். "ஆகா! மின்வெட்டல்லவா இது!" என்றான்.

அவள் தலையைக் குனிந்து கொண்டாள். "அப்பப்பா! என்ன நாணம்!" என்றான்.

அவள் மெல்ல நகர்ந்தாள். "அடடா! அன்னமும் தோற்றுவிடுமே!" என்றான்.

அவளுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. "முல்லைச் சிரிப்பு என்பது இதுதான்" என்றான்.

இனிமேலும் அவளால் பேசாமல் இருக்க முடியுமா!

கனிகளைக் கொடுத்தான்; "மிக்க ருசி" என்றாள்.

சந்தனம் பூசினான்; "மிகவும் குளுமை" என்றாள்.

அத்தர் தெளித்தான்; "அதி வாஸனை" என்றாள்.

"திலகம் இடட்டுமா! கலைந்து போயிருக்கிறதே" என்றான்.

உடனே ராதை உட்கார்ந்து கொண்டாள். சவ்வாது கலந்த செஞ்சாந்துக் குழம்பை மயிலிறகில் தோய்த்து வண்ணப் பொட்டிட முனைந்தான் கண்ணன். அவள் சாந்துக் கிண்ணத்தைத் தன் இரண்டு தாமரைக் கைகளிலும் ஏந்தி, ஆடாமல் அசையாமல் நெற்றியைக் காட்டினாள். அப்பொழுது எத்தகைய ஐக்ய பாவம் அங்கே நிலவுகிறது! கண்ணனின் மாயா லீலா விபூதிகளுக்கே திலகமிட்டாற்போல் அல்லவா இருக்கிறது இக்காட்சி!

கவிஞர் பாரதியார் இவற்றை யெல்லாம் மனத்திற் கொண்டு, கண்ணனின் மாயா லீலா பாட்டுகளுக்கு ஒரு அட்டவணையே தந்துவிடுகிறார், பாருங்கள்.

"கனிகள் கொண்டு தரும் — கண்ணன்
கற்கண்டு போலினிதாய்
பனிசெய் சந்தனமும் — பின்னும்
பலவகை அத்தர்களும்
குனியும் வாண் முகத்தான் — கண்ணன்
குலவி நெற்றியிலே
இனிய பொட்டிடவே — வண்ணம்
இயன்ற சவ்வாதும்
கொண்டை முடிப்பதற்கே — மணம்
கூடு தயிலங்களும்
வண்டு விழியினுக்கே — கண்ணன்
மையும் கொண்டுதரும்."

ஓவியர் கருத்தோடு ரமணீயமான ஒரு கட்டமும், பாவ விலாசமுள்ள பாத்திர நிர்மாணமும் செய்து ஒரு சிருங்கார மண்டலத்தையே நம் கண்முன் கொண்டு வந்திருக்கிறார்.

# காதில் விழவில்லை!



பையன் :—மாமி! உங்கள் பேச்சைக் கொஞ்சம் மெதுவாகப் பேசுங்களேன்!
பட்டாசு வெடிச் சத்தம் காதிலேயே விழவில்லை!

# நாரையார் விஜயம்

பொழுது புலர்ந்தது...

குளிக்கப் போகலாம்!

அடடா! என்ன ஜில்லிப்பு!

மூக்கை விட்டுப் பார்க்கலாம்!

ஆனந்த நடனம் ஆடினர்!

பதினறு அவுன்ஸ் விருந்து!

போட்டோ: ஏ. எம். உசேன்

# நான்முகன் தேவி

"ஆடிக் களிக்கும் மயிலே உன்பாதம்
அடைக்கலமே!"

உலகத்தின் படைப்புக் கடவுள், தம் சிருஷ்டிகளுக்கெல்லாம் சிகரமாக ஒரு திவ்ய வடிவத்தை உண்டுபண்ண முனைந்தார். தம்முடைய கற்பனைக் கலவையைப் பூசி மானஸீகத் திரையிலே அந்த மங்களகரமான வடிவத்தை நடமாடச் செய்தார். பின்பு அதற்கு ஒரு ஸ்தூல வடிவத்தையும் அளித்துத் தம் நாலிரண்டு கண்களாலும் நோக்கினார்.

"தேவி! நீ யார்! எங்கிருந்து, எப்படி வந்தாய்! உன்னைப் படைத்த நானே என்னை இழந்து உன் வசமாகி விட்டேனே!" என்றார்.

தேவி புன்னகை பூத்தவளாய், "தேவா! என் ஸௌந்தரியத்தில் மூழ்கிப் பின் பேசாமலே இருந்துவிடப் போகிறீர்கள்! எனக்குத் தாங்கள் விதிக்கும் கட்டளை என்ன!" என்று கேட்டாள்.

"தேவி! அழகுக்கும், அறிவுக்கும் நீயே நாயகி. கலைக்கும் கல்விக்கும் காரணம் நீயே. நீ இல்லாத அழகில்லை; கலையில்லை! இயற்கையிலும், செயற்கையிலும் கோயில் கொண்டு இந்த உலகை நீ உய்விக்கவேண்டும்! அதற்காகவே உன்னைப் படைத்தேன்!" என்றார் பிரம்மதேவர்.

"தேவா! இது அடியாள் பாக்யம்!" என்று கூறி ஆனந்த பாஷ்பத்தைச் சொரிந்து, பூலோகத்தை நோக்கி வந்தாள் கலாதேவி.

முதன் முதலில் கலை அன்னையின் கண்களில், வானை நோக்கி வாழ்கின்ற நிலத்திலே பயிரை வளர்த்து உயிரைக் காக்கும் உழைப்பாளிகளின் மேழிக் கரங்கள் தென்பட்டன. பின்பு, செஞ்சொற் கவிவாணர்கள் இன்னிசையோடு பாடுவது புலனாயிற்று. அதன் பின்பு, கலைஞானம் மலைபோல் ஒளிரும் அறிவாளிகளின் நெஞ்சத் துடிப்புத் தென்பட்டது.

உடனே, "நாம் நடமாடத் தகுந்த இடங்கள் இவைகளே" என்று அறிந்து கொண்ட கலையன்னை அவ்வாறே அங்குக் கோயில் கொண்டு வண்ண மயில் போல் கலைநடம் புரியத் தொடங்கி விட்டாள். அன்று முதல் உலகம் பாட்டும், பண்ணுமாய், கலையும் கல்வியுமாய்த் தளிர்க்கலாயிற்று.

வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணி பூண்டு வெள்ளைக் கமலத்தின் மேல் அடியார்கள் மனத்தில் வீற்றிருந்து, வீணையும் கையுமாய்க் குரலும் இசையும் இணைய, அன்னை முதன் முதல் எழுப்பிய கீதத்தின் நாதம் உலகம் முழுவதும் தாண்டி அண்ட கடாகங்கள் எல்லாம் பரவி ஓங்காரம் இட்டது. அந்த இனிய வீணாகானம் இன்றும் கேட்கிறது, இனி என்றும் கேட்கும்! அவளுடைய பாதங்களை அஞ்சலி செய்வோம். மலர் தூவி வணங்குவோம்! இருள் அகலும்; ஒளி படரும்.

"நாடிப் புலங்கள் உழுவார் கரமும் நயவுரைகள்
தேடிக் கொழிக்கும் கவிவாணர் நாவும் செழுங்கருணை
ஓடிப் பெருகும் அறிவாளர் நெஞ்சும் உவந்துநடம்
ஆடிக் களிக்கும் மயிலே உன்பாதம் அடைக்கலமே."

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

கல்கி
தீபாவளி மலர்
1950

# புதியதோர் புன்னகை

"ஆதித் தாய்தந்தை நீவிர் உமக்கே
ஆயிரம் தரம் அஞ்சலி செய்வேன்."

கொஞ்ச நேரத்துக்கு முன்புதான் உஷையின் நடனம் முடிந்தது. அருணனின் ரத சாரத்ய ஒலி கீழ்த்திசையில் 'ஜல், ஜல்' என்று கேட்கத் தொடங்கியது.

அதுவரை நிசி தேவியின் ஏக சக்ராதிபத்யத்தின் கீழிருந்து மேனி முழுவதும் சில்லென்று குளிர்ந்திருந்த பூமிதேவி, தன் பிரேம புருஷன் சூரிய தேவன் எழுந்தருளும் நேரம் நெருங்கி விட்டது என்பதை அறிந்ததும் புதியதொரு சோபையைப் பெற்றாள். பனித் துளிகள் முத்து முத்தாய் வியர்த்துக் கொட்டியிருந்த உடலின்மீது கதிரவனது கிரண ஸ்பரிசத்தை ஆவலுடன் எதிர் நோக்கினாள்.

"ஆதவா! நினை வாழ்த்திட வந்தேன்,
அணிகொள் வான்முகம் காட்டுதி சற்றே!"

என்று அன்னையின் பிரஜைகள், கதிரவன் வரவைத் துரிதப்படுத்தும் நியமங்களில் ஈடுபட்டார்கள்.

திடீரென்று அடிவானத்திலிருந்து ஒரு புதிய ஜோதி மேலேறிப் பரவியது. புட்கள் அந்த ஜோதியின்பத்தை நுகர்ந்து இனிய கீதங்களை எழுப்பின. நீலக் கடலும் தன் ஒவ்வொரு நீர்த்துளியும் விழியாக ஆதவன் வடிவை உட்கொண்டு, அலையோசையாம் சுருதியைப் பாடிப் புகழ்வதில் முனைந்தது.

உடனே அன்னை பூமியின் முகத்தில் மலர்ச்சி அரும்பியது. ஆதவன் தன் நாயகியை முதன் முதல் சந்திக்கும் வேகத்துடன் அவளை நெருங்கித் தன் கிரணக் கரங்களை நீட்டினான்; கண் பிறழ்வு இல்லாமல் நோக்கினான். பூமிதேவியும் மண்டிய காதலுடன், சூரிய தேவனைக் கண்டு புதியதோர் புன்னகை பூத்தாள்! உலகம் எங்கும் மலர்ச்சி நிறைந்தது; ஒளி படர்ந்தது.

கவிஞர் பாரதியார் இக் காட்சியைச் சிருங்கார ரஸத்துடன் கலந்து அற்புதமாய்ச் சித்திரிக்கிறார் :—

"காதல் கொண்டனை போலும் மண் மீதே
கண்பிறழ் வின்றி நோக்குகின் றாயே!
மாதர்ப் பூமியும் நின்மிசைக் காதல்
மண்டி னாளிதில் ஐயம் ஒன் றில்லை;
சோதி கண்டு முகத்தில் இவட்கே
தோன்று கின்ற புதுநகை என்னே!
ஆதித் தாய்தந்தை நீவிர் உமக்கே
ஆயிரம் தரம் அஞ்சலி செய்வேன்."

# மாலை சூடும் கோதை

"சூடிக் கொடுத்த சுடர்க் கொடியே! தொல்பாவை
பாடி அருளவல்ல பல் வளையாய்!"

பெண்ணின் இயல்பாகிய கம்பீரமும், தன்னடக்கமும் தெய்விகம் பெற்றுப் பிரகாசிக்கின்றன இந்தத் திருவுருவத்தில். அன்னவயற் புதுவை ஆண்டாள், பக்திக் காதல் தன் முகத்திலே சுடரொளி வீசப் பெண் மணிகளின் திலகமாகத் திகழ்கிறாள்.

"மானிடவர்க் கென்று பேச்சுப் படில்
வாழகில்லேன் கண்டாய் மன்மதனே!"

என்று கம்பீரமாகப் பேசிச் சாதித்தும் விட்ட வீராங்கனைதான் இப் பூங்கோதையாள்; எம்பெருமான் கண்ணனை ஆடிப் பாடி அடைந்து மகிழும் பாக்கியத்தையும் பெற்றுவிட்ட நாய்ச்சியார்.

பெரியாழ்வாரின் குலவிளக்காய்த் தோன்றினாள் கோதை. கண்ணன் மீது பிள்ளைப் பருவத்திலிருந்தே தெய்விகப் பிரேமை கொண்டாள். ஆழ்வார் எம்பிரானுக் கென்று குடலையில் தொடுத்து வைத்திருந்த மலர் மாலையைத் தான் அணிந்து பார்த்துப் பரீட்சை செய்து, 'அது கண்ணன் மேனியை நன்றாக அலங்கரிக்கக் கூடியதா?' என்று ஆராய்ந்து, பின்பு பழையபடியே குடலையில் வைத்து விடுவாள். ஒரு நாள் இதைப் பார்த்து விட்ட ஆழ்வார் பதறி, அன்று பரந்தாமனுக்கு மாலையை சூட்டாமல், 'அபசாரம் இது!' என்று இருந்து விட்டார்.

அப்பொழுதுதான் ஆண்டாளின் மகிமையை ஆழ்வார் உணரும்படியான சந்தர்ப்பம் வாய்த்தது. 'கோதை சூடிக் கொடுக்கும் மலர் மாலையே எமக்கு வேண்டும்' என்று கண்ணனே கனவில் வந்து ஆழ்வாருக்கு ஓர் ஆக்ஞையை விதித்து விட்டார் என்றால், கோதையின் தெய்விகப் பிரேமை சாமானியமான வர்ணனைக்குள் அடங்குமா? அப் பிரேமையில் கனிந்த திருப்பாவைப் பாடல்கள் வேதத்தின் வித்தாக ஒளிர்வன அல்லவா?

ஆண்டாள் மலர் போன்ற தன் கைகளிலே மலர்மாலையை ஏந்திக் கண்ணனையே மனத்தில் கொண்டு, சிந்தனை லோகத்தில் பரவசமாய் ஐக்கியப்பட்டு நிற்கும் இத் தோற்றத்தில் எத்தகைய பாவம் பரிணமிக்கிறது!

ஓவியரின் கைவண்ணம் கலை வண்ணமாகி, ஆண்டாளின் மனோ பாவத்தைத் தத்ரூபமாய்ச் சித்திரித்திருக்கிறது.

# திருக்கல்யாண பவனி

சராசரங்கள் அனைத்துக்கும் மூலகாரணப் பொருளான இறைவன் அன்று தம்மை அலங்காரம் செய்து கொண்டார்.

ரௌத்ர மூர்த்தியாய்த் திரிபுரத்தை ஸம்ஹரித்த ஆதிதேவன் அன்று தம் முகத்தில் ஒரு சிங்காரப் புன்னகையை வரவழைத்துக் கொண்டார்.

மாறனைக் கொன்ற ஜிதேந்திரியர் அன்று மாறன் கைக் கணைக்குக் கட்டுப்பட்டு மாது உமையாளைத் தேடிப் புறப்பட்டு விட்டார்!

புலித்தோலாடை பீதாம்பரமாக மாறியது. நாகாபரணத்தோடு பொன்னாபரணமும் கூடியது. விபூதி களப கஸ்தூரியுடன் கலந்தது. கண்டத்தில் கண்டிகையும், காதில் குழையும், முடியில் பிறை படிந்த கிரீடமும் ஒளி வீசின. சங்கபுஷ்பம் கரத்திலே சுடர்விட்டது.

இப்படி மகேசன் மாப்பிள்ளைக் கோலம் கொண்டு கைலயங்கிரியிலிருந்து புறப்பட்டதும் தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். வானவீதியின் வண்ண விதானம் மேலே கவிந்திருக்க, முகிலை ஊடுருவிக் கொண்டு விருஷபாரூடராய்ப் பவனி வரும் இறைவன் கோலத்தைக் கண்டதும் ஈரேழு உலகங்களும் இணையில்லாத ஆனந்தத்தில் மூழ்கித் திளைத்தன.

அன்னை உமாதேவி ஒரு கன்னியாகி மதுராபுரியின் மாளிகை உப்பரிகையில் ஒவ்வொரு விநாடியும் யுகமாகச் செல்லத் தம் வரவை எதிர் நோக்கியிருக்கிறாள் என்பது சுந்தரமாறனுக்குத் தெரியாதா? அதனால்தான் அந்த ரிஷபம் மேக மண்டலங்களுக்கிடையில் அவ்வளவு வேகமாய்ச் செல்லுகிறது. தொடர்ந்து செல்லும் கின்னர கந்தர்வ தேவ ஸ்திரீ புருஷர்கள் தம் முகங்களில் மந்தஹாஸம் தவழ ஆடிப் பாடிக் கொண்டு செல்கிறார்கள்.

மாலையும் கையுமாய் ஒரு தேவ கன்னிகை செல்கிறாள். கமல மலரைக் கையில் ஏந்திப் பின் தொடர்கிறாள் ஒரு கந்தருவ வனிதை. பரமன் சூடும் மலர்மாலை பாண்டியகுமாரி மீனாட்சியின் திருமார்பை அலங்கரிக்கப் போகிறது. அதற்கு இன்னும் அதிக நேரம் இல்லை என்று சங்கமும் முழங்குகிறது.

தேவர்கள் தேவன் வந்தான், தென்னவர் கோமான் வந்தான்,
மூவர்கள் முதல்வன் வந்தான், முக்கண் எம் பெருமான் வந்தான்!'

என்று முழங்கும் சங்கநாதம் கேட்டுப் பாண்டிய குமாரி மனம் மகிழ்ந்து பூரித்திருப்பாள் என்பதில் சந்தேகம் என்ன?

ஓவியர் தத்ரூபமாக இறைவனையும், அவருடைய தோற்றப் பொலிவையும் பரிணமிக்கச் செய்து, அந்தப் பவனி மார்க்கத்தில் நம்மையும் மாப்பிள்ளை வீட்டாராகச் செல்லும்படி செய்து விடுகிறார்!

கல்கி
தீபாவளி மலர்
1950

